# பிரிட்டன் வரலாறு

(கி. பி. 1399 வரை)

இரா. அண்ணாமலை



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த.பா.நி. (க. வெ.) வரிசை எண் —846

# பிரிட்டன் வரலாறு

## (கி. பி. 1399 வரை)

(மேற்பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்

இரா. அண்ணாமலை, எம்.ஏ.,பி.டி.,
துணைப் பேராசிரியர்,
வரலாற்றுத் துறை,
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—March, 1979
Number of Copies — 1000

T.N.T.B.S. (C.P.) No. 846



# HISTORY OF BRITAIN (UPTO 1399 A. D.)

R. ANNAMALAI

Price Rs. 13-30

Published by the Tamilnadu Text-book Society under the Centrally Sponsored Scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed on concessional paper made available by the Government of India.

*Printed by:*
Jayamaliga Achakam,
1, H. K. Colony Road,
Nandambakkam, Madras - 600 089,
Phone : 431871.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினெட்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டுசெய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல். மெய்ப்பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதவியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூலநூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான பிரிட்டன் வரலாறு (கி. பி. 1399 வரை) என்னும் இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 846 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 881 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கலையியற் பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளரவேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழக ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரித்தாகுக!

செ. அரங்கநாயகம்

# பொருளடக்கம்

# 1. தோற்றுவாய்

பிரிட்டிஷ் தீவுகளின் எழுதப்பெற்ற வரலாறு ஈராயிரம் ஆண்டு களுக்குட்பட்டதாகும். ஐரோப்பியர்களுக்குத் தெரிந்திருந்த அன்றைய உலகின் ஓர் ஓரத்தில் கவனிப்பாரற்ற நிலையில் தொடங்கி, வாணிகம், தொழில், ஆட்சிக்கலை, கடலாதிக்கம் மற்றும் பேரரசு என்று பல துறைகளிலும் பெருகி வளர்ந்து உலகின் தலையாய இடத்தைப் பெற்றுள்ளன இத் தீவுகள்.

இயற்கையமைப்பு : இத் தீவுகளின் நில நூலின் சில அடிப் படை அமைப்புகள் அவற்றின் வரலாற்றைப் பெருமளவுக்குப் பாதித்ததோடன்றி அதனைத் தீர்மானிக்கும் திறனையும் பெற் றுள்ளன. மிகக்குளிர்ந்த நிலப்பகுதிகளைப் போன்று அதே அட்சாம்சத்தில் இத் தீவுகள் அமைந்திருந்தாலும் கடுங்குளிர் இங்கு வாழும் மக்களைப் பாதிப்பதில்லை. காரணமென்ன? வட அட்லான்டிக் பெருங்கடலிலிருந்து வீசும் வெப்ப நீரோட்டத்தால் இத் தீவுகளின் குளிரின் தன்மை குறைந்து, வெதுவெதுப்பான தட்ப வெப்பநிலை நிலவுகிறது. பிரிட்டனின் வடக்கிலும், மேற் கிலும் 3000 அடி முதல் 4000 அடி வரை உயர்ந்துள்ள மலைகளைக் காண்கிறோம். கிழக்கிலும் தெற்கிலும் மலைத்தொடர்கள் அருமை; அப்பகுதிகளில் 700 அடிக்கு மேலான மலைக்குன்றுகளே இல்லை யெனில் அது மிகையாகாது. எக்ஸிடாரிலிருந்து யார்க் நகரம் வரை ஒரு கோட்டினை வரைந்தோமானால் அதுவே உயர்ந்த மலைப்பகுதியையும் தாழ்நிலப் பகுதிகளையும் பிரிக்கும் எல்லை எனக் கொள்ளலாம். ஐரோப்பிய நிலப்பரப்பை எதிர்நோக்கியுள்ள பிரிட்டனின் பகுதிகள் ஓரளவு தட்டையானவை; இருப்பினும், அதனை அடுத்துள்ள கடற்கரையில் எண்ணற்ற இயற்கைத் துறை முகங்கள் அமைவதற்கான வாய்ப்பினைக் கொண்டவையாயிருப்ப தாலும், அக்கடற்கரைப் பகுதிகளில் அகன்ற பல ஆறுகள் மெள்ள நடைபோட்டுக் கடலில் கலப்பதாலும் அந் நாட்டிற்குள் எளிதாக மக்கள் நுழைய இயலும். எனவேதான் ஐரோப்பாவிலிருந்து வரும் மக்களை இத் தீவுகள் வாவாவென் வருந்தி அழைத்தன எனின் அது தவறாகாது.




படம்-1
பிரிட்டிஷ் தீவுகள்—இயற்கையமைப்பு

பிரிட்டனில் வரலாறு பிறந்தது வடகடல்களின்தான். நார்வேயின் வடமுனையிலிருந்து ஸ்பெயினிலிருக்கும் ஃபினிஸ்ட்டர் வரையிலுள்ள கடற்பகுதியை ஓர் அரைவட்டமாக வரைந்தால் அவ் வரைவட்டத்தின் நடுவில் பிரிட்டிஷ் தீவுகள் அமையும். ஐரோப்பாவை அடுத்து நிற்கும் பெருந்தீவு அறுநூறு மைல்கள் நீண்டும் நூறிலிருந்து முன்னூறு மைல்கள்வரை அகன்றுமுள்ளது. இப் பெருந்தீவின் தென்பகுதி இங்கிலாந்தென்றழைக்கப்படுகிறது. மலைகள் சூழ்ந்த வடக்கு மேற்குப் பகுதிகளை முறையே ஸ்காட்லாந்து, வேல்ஸ் என்றழைப்பர். அயர்லாந்து மற்றொரு தீவாகும். அது பெருந்தீவின் பரப்பளவில் ஏறத்தாழப் பாதி அளவினைக் கொண்டது; பெருந்தீவிலிருந்து மேற்கில் ஐம்பது மைல்கள் தள்ளியுள்ள இதனை அட்லான்டிக் பெருங்கடலின் நீலமேகங்கள் இடையறாது தாக்குகின்றன.

பிரிட்டிஷ் தீவுகள் ஒரு காலத்தில் ஐரோப்பாவுடன் இணைந்திருந்தன. அக்காலத்தில் ஐரோப்பிய ஆறுகளின் கழிமுகங்களாக இன்றைய ஆங்கில, ஐரீஷ் கால்வாய்கள் இருந்திருக்க வேண்டும். அக்காலத்தில் ஐரோப்பிய ஆறுகள் அட்லான்டிக் பெருங்கடலிலேயே கலந்திருக்கவேண்டும்; அப்போது தேம்ஸ் ஆறும் ரைன் ஆற்றின் துணை ஆறாக வடதிசையில் ஓடி இன்று வடகடல் எனப்படும் ஆர்க்டிக் சமவெளியில் பாய்ந்திருக்க வேண்டும். இஃது எண்ணாயிரம், ஒன்பதனாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கதையாகும்.

பிரிட்டனின் வரலாற்றுக் காலம் தொடங்கி, ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகளாகும். வரலாற்றுக் காலம் தொடங்கும் முன்னரே அது தீவுக்கூட்டமாயிருக்க வேண்டும். மனித சஞ்சாரம் தொடங்கிய பின்னர்தான் அத் தீவுகள் மனிதனுக்குப் பயன்படலாயின. தொடக்க காலத்தில் மனிதன் நிலத்தை உழுது விதைவிதைத்து வேட்டையாடி, காட்டுமிராண்டியாக வாழ்ந்தான். காலமோ, கடிகாரமோ, வரைபடமோ அல்லது நாள்காட்டியோ அவன் அறியாதவையாம்.

# 2. வரலாற்றுக்கு முற்பட்ட காலம்

இங்கிலாந்தின் தொன்மையான குடிமக்களைப் பற்றி நமக்குக் கிட்டியுள்ள சான்றுகள் ஒருசிலவே. எழுத்துவாயிலான சான்றுகள் இல்லாத காலத்திலிருந்தே மக்கள் அங்கு வாழ்ந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள. அப்படிப்பட்ட காலத்தை 'வரலாற்றுக்கு முற்பட்ட காலம்' (Pre-Historic Period) என்பர். வரலாற்றுக்கு முற்பட்ட கால மக்களின் வாழ்க்கையைத் தொல்பொருள் ஆராய்ச்சியின் மூலம் அறியலாம். இங்கிலாந்தின் தொன்மையான குடிமக்கள் வாழ்ந்த வீடுகள், பயன்படுத்திய கருவிகள், வழிபட்ட கோவில்கள், சவக்குழிகள் முதலியன புதைபொருள்களாகத் தோண்டியெடுக்கப் பெற்றுள்ளன. புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர்கள் அங்ஙனம் கிடைத்த பொருள்களைப் பகுத்து ஆராய்ந்து அவற்றின் காலத்தை ஒருவாறு நிர்ணயித்துள்ளனர்.

வரலாற்றுக்கு முற்பட்ட காலமக்கள் பெரிதும் கற்களாலான கருவிகளையே பயன்படுத்தினமையால் அக்காலத்தைப் பொதுவாகக் கற்காலம் என்று கூறுவர். பழைய கற்காலம், புதிய கற்காலம் எனக் கற்காலத்தைப் பிரிப்பர். கற்காலத்தை அடுத்து வெண்கலக் காலமும் அதனை அடுத்து இரும்புக் காலமும் வந்தன.

பழைய கற்காலம் : பழைய கற்காலத்தில் மனிதன் வேட்டையாடி வாழ்ந்தான்; அவன் தோல்களை ஆடையாக உடுத்தான்; கரடுமுரடான கற்கருவிகளைப் பயன்படுத்திய அவன் குகைகளில் வாழ்ந்தான். பிரிட்டனில் பழைய கற்கால மக்கள் வாழ்ந்த குகைகளை இன்றும் காணலாம். பழைய கற்கால மக்கள் வீடு கட்டத் தெரிந்திருக்கவில்லை; அவர்களுக்கு வேளாண்மை செய்யவும் தெரிந்திருக்கவில்லை. குகைகளில் வாழ்ந்தமையால் அவர்களைக் குகைவாழ் மக்கள் என்றும் கூறுவர். அவர்கள் எண்ணிக்கையால் பல்கிப் பெருகியிருக்கவில்லை; ஒருசிலராக இருந்த அவர்கள் காட்டுமிராண்டிகள் போன்று நாகரிகமற்றவர்களாக வாழ்ந்தனர். பழைய கற்காலத்தில் பிரிட்டனின் தென்கிழக்குத் தாழ்நிலங்களைப் பெரும்பாலும் காடுகளே மூடியிருந்தன. அக்காடு

களில் கொடும் விலங்குகள் வாழ்ந்தன. ஓநாய், பழுப்புநிறக் கரடி, காட்டுப்பூனை, கவரிமான், காட்டுப் பன்றி போன்ற விலங்குகள் அக்காடுகளில் வாழ்ந்திருக்க வேண்டும். வரலாற்றுக் காலத்தில் கூட அவை வாழ்ந்திருந்தன.

**புதிய கற்காலம் :** பழைய கற்காலத்தை அடுத்துப் புதிய கற்காலம் பிறந்தது. புதிய கற்காலத்தில்தான் பிரிட்டன் ஒரு தீவுக்கூட்டமாக ஆகியிருக்க வேண்டும். புதிய கற்காலம் கிறித்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பிறந்திருக்கலாம். ஐரோப்பிய நாகரிகத்தின் தோற்றமும் இக்காலத்திலிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டும். ஐரோப்பாவில் தோன்றிய இந் நாகரிகம் அட்லான்டிக் பெருங்கடல் வழியாகப் பிரிட்டனை வந் தடைந்தது. பெருங்கற்களாலான நினைவுச்சின்னங்கள் (Megaliths) இக்காலத்தில் சிறப்பாக எழுந்தன.

புதிய கற்கால மக்கள் வழவழப்பான கற்கருவிகளையும் ஆயுதங்களையும் பயன்படுத்தினர். இவ் வாயுதங்கள் பழைய கற்காலக் கருவிகளைவிட மாறுபட்டிருந்தன; வேறுபட்டிருந்தன; அவை பல்வகையாகப் பல்கியிருந்தன. புதிய கற்கால மக்கள் கல்லுளிகள், கத்திகள், கோடரிகள் முதலியவற்றை வைத்திருந் தனர். கோடரிகளுக்குக் கைப்பிடிகளைச் சமைக்கவும் புதிய கற்கால மக்கள் அறிந்திருந்தனர்.

புதிய கற்கால மக்கள் பிரிட்டனில் குடியேறிய ஆயிரமாண்டுக் கால்கட்டத்தின் போதுதான், ஐரோப்பாவிலிருந்து பிரிட்ட னுக்குள் பல்வேறு பயனுள்ள கலைகள் தொடங்கப்பெற்றன. இக் காலத்தில்தான் குதிரை, பசு, ஆடு, செம்மறியாடு, நாய் போன்ற விலங்குகள் பழக்கப்படுத்தப்பெற்று, வீட்டு விலங்குகளாய் மாறின. வேளாண்மை செய்யத் தொடங்கப்பட்டதும் இக்காலத்தில்தான். வேட்டையாடித் திரிந்த மனிதன் இடையனாகவோ அன்றிப் பயிர்த்தொழில் செய்பவனாகவோ புதிய கற்காலத்தின்போது தான் முன்னேறியிருக்க வேண்டும். பட்டடைக் கற்கள், தீட்டும் கற்கள் போன்றவை அவர்கள் பயன்படுத்திய பிற கருவிகளாம்.

புதிய கற்காலத்தின் பிற்பகுதியில் இம் மக்கள் நிலத்தை உழுது பயிரிடவும் தொடங்கினர். எனினும், சாகுபடி செய்யும் முறை மிகவும் பின்தங்கியதாக இருந்தது. மட்பாண்டங்கள் வனைதல், மரத்தாலான வீடு கட்டுதல், நெய்யும் தொழில் போன்

றவை இக்காலத்தில் தொடங்கின. சுருங்கக்கூறின், புதிய கற் காலத்தில்தான் மக்கள் நிலையான சமூக வாழ்க்கையை வாழத் தொடங்கினர். இறந்தவர்களைப் புதைத்த மணல்மேடுகள் பிரிட் டனில் வில்ட்ஷயர், டார்செட், சாமர்செட், கிளஸ்டர்ஷயர் போன்ற பகுதிகளில் மிகுதியாகத் தென்படுகின்றன.

**வெண்கலக் காலம் :** புதிய கற்காலத்தின் இறுதியில் வட கடல் பகுதியிலிருந்து பீக்கர் ஃபோக் (Beaker Folk) என்று புதை பொருள் ஆராய்ச்சி வல்லுநர்களால் அழைக்கப்படும் மக்கள் ஏறத்தாழக் கிறித்து பிறப்பதற்கு 2000 ஆண்டுகளுக்கு முன்னர் இங்கிலாந்தின் மீது படையெடுத்தார்கள். அவர்களுடைய சவக் குழிகளில் ஒரு வகையான மட்பாண்டங்கள் தென்பட்டன. மண்ணிலான ஒருவகைப் பருகு கலங்களை பீக்கர் என்பர். இவ் வகைப் பருகுகலங்களை அவர்களின் சவக்குழிகளில் காண்பதால் அவர்களைப் பருகுகல மக்கள் அல்லது பீக்கர் ஃபோக் என்றனர். அத்தகைய சவக்குழிகள் இங்கிலாந்து, ஸ்காட்லாந்து பகுதிகளின் கீழ்க்கரையோரங்களில் சிறப்பாகக் காணப்படுகின்றன. சாலிஸ்பரி சமவெளிப் பகுதிகளிலும் அவற்றைக் காணலாம். பருகுகல மக்கள் வாழ்ந்த காலத்தில்தான் வெண்கலத்தால் ஆன ஆயுதங்கள் ஒரு சில தென்படத் தொடங்கின. பின்னர்தான் உண்மையான வெண்கலக் காலம் கி.மு. 2000-த்திற்கும் கி.மு. 500-க்கும் இடைப் பட்ட காலத்தில் தொடங்கலாயிற்று.

வெண்கலக் கால நாகரிகத்தின் தொடக்கத்தைச் சுட்டிக் காட்டும் ஏராளமான சான்றுகள் பிரிட்டனில் கிடைத்துள்ளன. ஸ்டோன்ஹெஞ்சிலும், ஆவ்பரியிலும் தென்படும் வட்டக் கற்கள் பெரும்பாலும் இக்காலத்தைச் சார்ந்தவையாயிருக்கக் கூடுமென அறிஞர்கள் கருதுகின்றனர். ஆவ்பரி கல்வளையங்கள், ஸ்டோன் ஹெஞ்ச் கற்களைவிட உருவத்தில் பெரியவை; ஆவ்பரி கோயில் பெருங்கட்டடமாகத் திகழ்ந்திருக்க வேண்டும். அதற்கான சான்றுகளை இன்றும் அதனைச் சுற்றியுள்ள கிராமங்களில் கா்ணலாம்.

வெண்கலக் காலத்தைக் குறிப்பாகச் சுட்டிக்காட்டும் பல்வேறு கல்வட்டங்களைச் சாலிஸ்பரி சமவெளி, டெவன், கார்ன் வால் பகுதிகளிலும், அதனை அடுத்துள்ள மேலைக் கடற்கரைப் பகுதிகளிலும் பெம்புரோக்ஷயர், ஆங்கில்சி, கார்னர்வன், மேலை மேட்டுநிலங்கள், ஹெப்ரீடீஸ் ஆகிய பகுதிகளிலும் இன்றும் காண்கிறோம். ஏராளமான கல்வட்டங்களை மற்ற எந்தவோர் ஐரோப்பிய நாட்டையும்விடப் பிரிட்டனில் அதிகம் காணலாம்.

ஸ்பெயினிலிருந்து ஸ்காண்டிநேவியா வரையிலுள்ள ஐரோப்பிய நாடுகளில் பெருங்கற்களாலான நினைவுச் சின்னங்கள் பல இருப்பினும்; இங்கிலாந்தில் அவை ஏராளமாக உள்ளன.

வெண்கலக் கால மக்கள் வட்ட வடிவமான தலையினர்; அழகான முடிகள் அவர்தம் தலைகளை அலங்கரித்தன. இறந்தவர்களை ஆழமான வட்டக்குழிகளில் புதைத்தனர். வெண்கலத்தால் கருவிகளைச் செய்தனர். இவர்களை ஆல்பைன் இனமக்கள் என்று இனவியல் வல்லுநர்கள் கூறுவர். வெண்கலக் கால மக்கள் பிரிட்டிஷ் தீவுகளில் பரவி, ஐபீரிய இனமக்களை வென்று, காலப்போக்கில் அவர்களுடன் கலந்தும் போயினர். அவர்களே பிரிட்டிஷ் இனத்தவர்களின் மூதாதையர். வெண்கலக் காலத்தில் பிரிட்டிஷ் மக்கள் ஐரோப்பாவுடன் நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தனர். கடலைக் கடந்து ஐரோப்பா செல்லுவது அவ்வளவு எளிதாயில்லையாயினும் அவர்கள் தொடர்புகொண்டனர். வெண்கலக் காலத்தில் மக்கள் ஓரளவு பயிர்களைச் சாகுபடி செய்தனர்.

**இரும்புக் காலம்** : ஏறத்தாழ கி. மு. 500 ஆம் ஆண்டுவாக்கில் இரும்புக் காலத்தின் தொடக்கம் பிரிட்டனில் ஏற்பட்டிருக்க வேண்டும். ஐரோப்பாவிலிருந்து வந்த விதவிதமான நாகரிகப் படிவங்களைக் கொண்டிருந்தது இவ்விரும்புக் காலம். பிரிட்டனின் மீது கெல்ட்டுகள் படையெடுத்தபோது இரும்புக்காலம் முடிவுற்றது. இக்காலத்தில் மலைக்கோட்டைகளைக் கட்டும் பழக்கம் பொதுவாக இருந்தது. மெய்டன் கோட்டையிலும் (டோர்செஸ்டருக்கருகில்) பிற இடங்களிலும் அகழ்ந்தெடுக்கப்பட்ட சான்றுகளைக் கொண்டு அக் கோட்டைகளின் திறனையும் பருமனையும் ஊகிக்கலாம். இரும்புக் கால மலைக்கோட்டைகளின் அழிவுச்சின்னங்களை இங்கிலாந்தின் பல பகுதிகளில் காணலாம். எடுத்துக்காட்டாக, கோட்ஸ்வால்ட்ஸ் செங்குத்தான மலைச்சரிவிலும், வில்ட்ஷயர், சாமர்செட் குன்றுகளிலும் இத்தகைய அழிவுச் சின்னங்கள் இன்றும் தென்படுகின்றன.

மேற்கூறிய விளக்கத்திலிருந்து வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட பிரிட்டனில் பல்வேறு வகையான மக்கள் குடியேறினார்கள் என்பதையும், ஐரோப்பாவிலிருந்து குடியேறிய ஒவ்வோர் இனத்தவரும், இங்கிலாந்தின் நாகரிகத்திற்கு அவர்தம் நன்கொடையைச் சேர்த்தார்கள் என்பதையும் உணரலாம். தொன்மையான சவக்குழிகளையும், மலைக்கோட்டைகளையும் அகழ்ந்தறிந்ததன் மூலமே புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர்கள் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தைக் கணித்திருக்கிறார்கள்.

**சுண்ணும்புக் குன்றுகள்** : அதிக எண்ணிக்கையில் நல்ல முன்னேற்றத்துடன் வாழ்ந்த மக்கள் கூட்டம் தென் இங்கிலாந்திலுள்ள சுண்ணும்புக் குன்றுகளைச் சார்ந்த பகுதிகளில் வாழ்ந்தனர். அதற்குக் காரணமென்ன? சுண்ணும்புமிக்க பகுதிகளில் காடுகள் வளரா. எனவே, வனவிலங்குகள் அப் பகுதியில் வாழமாட்டா. தொன்மைக் கால மக்கள் காட்டு விலங்குகளைக் கண்டஞ்சினர். அது மட்டுமன்று; சுண்ணும்புத் தரையில் புற்கள் நன்கு செழித்து வளரும். ஆதலால் அங்கு ஆடுகளையும் கால்நடைகளையும் வளர்க்க முடியும். இங்கிலாந்தில் சுண்ணும்புக்கல் கொண்ட பகுதியின் மயமாகச் சாலிஸ்பரி சமவெளி அமைகிறது. அங்கிருந்து தான் சுண்ணும்புக்கற்கள் சுவடுவிட்டுப் பிரிகின்றன. இக்காரணத்தால் தான் புதிய கற்காலத்திலும் சரி, வெண்கலக் காலத்திலும் சரி, இங்கிலாந்தின் செழுமை மிக்க பகுதியாக வில்ட்ஷயர் விளங்குகிறது. ஆவ்பரி, ஸ்டோன்ஹெஞ்ச் போன்ற இடங்களும் இப் பகுதிக்கு அருகிலேயே தென்படுகின்றன.

கற்கால மக்களும், வெண்கலக் காலத்தவரும் பயன்படுத்திய ஒற்றையடிப்பாதைகள் ஆவ்பரியில் சந்திக்கின்றன. இவ்வொற்றையடிப்பாதைகளைப் பின்பற்றிச் சென்று மகிழ்ச்சி அடையலாம். ஒரு பாதை வில்ட்ஷயரிலிருந்து கென்ட் வரை செல்கிறது. இடைக் காலத்தில் இப் பாதையே பயணிகளின் பாதையாயிற்று. நார்ஃபோக்கிலிருந்து டோர்செட் வரை செல்லும் பிறிதொரு பாதை புகழ் பெற்ற வழியாகும். இதை இக்னீல்டு பாதை (Icknield Way) என்பர். சில்டன் குன்றுகளை ஒட்டிச் செல்லும் இப் பாதை கோரிங் என்னுமிடத்திற்கருகில் தேம்ஸ் ஆற்றைக் கடக்கிறது. பின்னர் அது பெர்க்ஷயர், வில்ட்ஷயர் தாழ்நிலங்கள் வரை பல மைல்கள் நீண்டு செல்கிறது. மக்கள் நடமாட்டம் குறைந்த இப் பகுதிகளில் தொன்மைக்கால நினைவுச் சின்னங்களைப் பயணிகள் இன்றும் பார்த்து மகிழலாம். அவற்றுள் ஒற்றையடிப்பாதை முதலாவது; தொன்மைக் கால மக்கள் தலைவர்களின் சவக்குழிகள் இரண்டாவது. இச்சவக்குழிகள் குன்றுப் புறங்களுக்கு அருகில் தென்படுகின்றன.

# 3. கெல்ட்டுகள்

வெண்கலக்காலம் முடிவுறும் தருணத்திலோ அன்றி இரும்புக் காலம் தொடங்கின தருணத்திலோ—சற்றேறக்குறைய கி. மு. 600ஆம் ஆண்டு வாக்கில்- கெல்ட்டுகள் ஐரோப்பாக் கண்டத்திலிருந்து பிரிட்டன் மீது படையெடுக்கத் தொடங்கினர். கெல்ட்டுகளில் பல பிரிவினர்கள் இருந்தனர். அவர்களில் ஒரு பிரிவினரைத்தான் பிரிட்டன்கள் (Britons) என்றனர். அவர்களின் பெயரே பின்னர் இங்கிலாந்துக்கும் சூட்டப்பெற்று, அது பிரிட்டன் என்று வழங்கப்படலாயிற்று. வட இத்தாலியிலும், ஃபிரான்ஸிலும் படையெடுத்துக் குடியேறிய காலியர்கள் சார்ந்த இனத்தினையே கெல்ட்டுகளும் சார்ந்தவர்கள்; வட இத்தாலியில் குடியேறியவர்கள் ரோமாபுரியைச் சூறையாடினர். பண்டைக்கால காலியர் (Gauls) எந்த மொழியைப் பேசினரோ, அதே போன்றதொரு தொன்மையான மொழியைத்தான் பிரிட்டன்களும் பேசினர். அம் மொழியிலிருந்து பிறந்ததுதான் தற்கால வெல்ஷ் மொழியாகும். பதினெட்டாம் நூற்றுண்டுவரை நீடித்திருந்த கார்னிஷ் மொழியும் அம் மொழியிலிருந்து பிறந்ததே. படையெடுத்துக் குடியேறிய கெல்ட்டுகள் தம் மொழிகளை பிரிட்டிஷ் தீவுகளில் வாழ்ந்து வந்த மக்களின்மீது திணித்திருக்க வேண்டும். ஐரிஷ், வெல்ஷ், கார்னிஷ் மொழிகள் கெல்ட்டிய வழி வந்தவை என்று விவரிப்பது சரியன்று என்ற கருத்தும் நிலவுகின்றது. கெல்ட்டுகள் இங்கிலாந்தில் எந்த மக்களைத் தோற்கடித்து வெற்றி கண்டனரோ அந்தப் பண்டைய மக்களின் மொழிகளே இவை என்ற கூற்று பொருத்தமானதாகும். கெல்ட்டுகள் உருவத்தால் உயர்ந்தும், அழகான முடியையும் கொண்டவர்கள்; அவர்கள் பருத்த எலும்பினர். ஐரிஷ், கார்னிஷ் மற்றும் ஸ்காட்டிய மேட்டுநில மக்கள் குறுகிய தோற்றத்துடன் கருத்த உடலினர். அவர்களைப் புதிய கற்காலத்து மக்களோடாவது வெண்கலக்கால மக்களோடாவது இணைப்பதுதான் பொருத்தமானது என்ற ஆராய்ச்சி வல்லுநரின் கூற்றையும் நினைவிற்கொள்வது நலம்.

கெல்ட்டுகள் கி. மு. ஆறும் நூற்றுண்டிற்கும் மூன்றும் நூற்றுண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் கிரேக்க, இத்தாலிய

மக்கள் வாழ்ந்த பகுதிகளிலிருந்து படையெடுத்திருக்க வேண்டும். அவர்களில் ஒரு பிரிவினர் வட ஜெர்மனி, நெதர்லாந்து, பிரிட்டிஷ் தீவுகள் ஆகிய பகுதிகளில் குடியேற வடபால் வழியொன்றின் மூலம் வந்திருக்கக்கூடும். ஆனுல், அதற்கான சான்றுகள் கிடைத்தில. அலை அலையாகப் படையெடுத்த அவர்கள் கி. மு. முதல் நூற்ருண்டின் இறுதிக்குள் ரைன், ஆல்ப்ஸ் பகுதிகளை வந்தடைந்தார்கள். பின்னர் இவர்கள் கெல்ட்டிய காலில் (Gaul) நுழைந்திருக்க வேண்டும்.

கெல்ட்டுகள் மூன்று கூட்டமாக அடுத்தடுத்து வட மேற்குத் திசையிலிருந்து பிரிட்டிஷ் தீவுகளின்மீது படையெடுத்தார்கள். அதற்கான பூகோளச் சான்றுகள், மொழி வேறுபாடுகள், இறுதியாக வரலாற்றுச் சான்றுகள் ஆகியவை உள்ளன. முதல் அலையாக வந்த கெல்ட்டியப் படையெடுப்பாளர்களை வரலாற்ருசிரியர்கள் கெய்தல்கள் (Goidels) என்பர். இவ் வினத்தவர்களின் முன்னேர்கள் பிரிட்டிஷ் தீவுகளில் பின்னர்ப் பேசிய மொழியை அயர்லாந்தில் அயர்ஸ் (Erse) என்றும், ஸ்காட்டிய மேட்டு நிலப்பகுதிகளில் கெய்லிக் (Gaelic) என்றும், மற்றும் மங்க்ஸ் (Manx) என்றும் கூறினர். ஐரோப்பாவில் பிக்டோனியரிடத்திலும், மேற்குக் காலில் வாழ்ந்த ஒருசில மக்களும் இந்த இனவழித் தோன்றல்களே; அவர்கள் பேசிய மொழியும், பிரிட்டிஷ் தீவுகளில் கெய்தல்கள் பேசிய மொழியும் ஒன்ருனதெனக் கருதப்படுகிறது. இரண்டாவது அலையாக வந்த பெருங்கூட்டத்தினர் மத்திய, கிழக்குகால் (Gaul) பகுதியிலிருந்து வந்தவர்கள். அவர்களைத்தான் சீசர் உண்மையான கெல்ட்டுகள் என்று கருதினுர். இங்கிலாந்தில் இவர்கள் படையெடுத்து பிரிட்டிஷ் தீவுகளின் மத்திய, மேற்குப் பகுதிகளில் வாழ்ந்தனர். அவர்கள் பேசிய மொழியிலிருந்து பிறந்ததுதான் வெல்ஷிய மொழி. இம் மொழி இன்றும் பேசப்பட்டு வருகின்றது. கெல்ட்டுகளில் மூன்ருவது அலையாகப் படையெடுத்தவர்கள் கி. மு. இரண்டாம் நூற்ருண்டு வாக்கில் பிரிட்டனை வந்தடைந்தார்கள். பெல்ஜே இனமக்கள் இம் மூன்ரும் அலையைச் சார்ந்தவர்களே. சீசர் இங்கிலாந்தின்மீது படையெடுப்பதற்கு முன்னர் பெல்ஜே இனமக்கள் வட காலியப் பகுதியிலும், பெல்ஜியத்திலும், தென்கிழக்குப் பிரிட்டனில் சாமர்செட்ஷயரிலிருந்து கென்ட் வரையிலும், வடக்கே தேம்ஸ் ஆற்றுப் பள்ளத்தாக்கு வரையிலும் பரவியிருந்தனர். மேற்கூறிய தகவல்களிலிருந்து கெல்ட்டுகள் ஏறத்தாழ கி.மு.600ஆம் ஆண்டுவாக்கிலோ அல்லது அதற்குச் சற்றுப் பின்னரோ பிரிட்டன்மீது படையெடுத்திருக்க வேண்டுமெனக் கொள்ளலாம்.

தொடக்க காலத்தில் வந்த கெய்தல்கள் பேசிய மொழிக்கும், பின்னர் வந்த பிரிட்டன், பெல்ஜே இன மக்கள் பேசிய மொழிக்கும் நெருங்கிய தொடர்பிருந்தது.

**பிதியஸ் என்பாரின் பயணம் :** பிரிட்டனைப் பற்றிய தெளிவான இலக்கியச் சான்றுகளைப் பிதியஸ் என்னும் கிரேக்கப்பயணி எழுதி வைத்துள்ளார். பிதியஸின் கருத்துகள் நேரிடையாகக் கூருவிட்டாலும், ஓரளவு கெல்ட்டுகளைப்பற்றி அவர் கூற்றிலிருந்து அறிகிறோம். அவர் அரிஸ்டாடிலின் காலத்தவராயினும், இளைய தலைமுறையைச் சார்ந்தவர். பிதியஸின் இதழ்கள் அரிஸ்டாட்டிலின் மரணத்திற்குப் பின்னர் எழுதப்பட்டன. அட்லான்டிக் பெருங்கடலின் வழியாக வாணிப முன்னேற்றத்திற்கு வாய்ப்புண்டா என்பதை ஆராய அவரை மஸ்ஸிலியாவைச் சார்ந்த வணிகர்கள் அனுப்பினர். எனினும், அவருடைய நூல்களில் வாணிகம் பற்றிய செய்திகளைவிட நில நூலைப் பற்றிய செய்திகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. பிதியஸின் நூல்கள் அழிந்துபட்டாலும் அவருடைய நூலிலிருந்து எடுத்தாண்ட எண்ணற்ற செய்திகளைப் போலிபியஸ், ஸ்ட்ராபோ, டைடோரஸ், சைடுலஸ், பிளினி மற்றும் பல்வேறு பிற்கால எழுத்தாளர்கள் தத்தம் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர்.

பிதியஸ் ஜிப்ரால்டர் கடற்காலின் வழியாகக் கப்பற்பயணம் மேற்கொண்டு, ஸ்பானிய கடற்கரை வழியாக அட்லான்டிக் பெருங்கடலில் நுழைந்தார். பிஸ்கேவிரிகுடா வழியாகக் கார்பலோ என்ற துறைமுகம் வரை பயணம் செய்தார். உஷாண்ட் முனையைச் சுற்றிக் கொண்டு, அங்கு வாழ்ந்த மக்களையும் அவர் குறிபிட்டுள்ளார். அங்கிருந்து ஆங்கிலக் கால்வாயைக் கடந்து அவர் பெலிரியம் (Belerium) என்னுமிடத்தை வந்தடைந்தார். கார்ன்வால் பகுதியில் உள்ள அந்த ஊரில் நாகரிகம் மிகுந்த மக்களையும் தகர வாணிபம் நடைபெற்று வந்ததையும் அவர் கண்டறிந்தார். அவர் அங்கிருந்து பிரிட்டனின் தென் கடற்கரையை ஒட்டிப் பயணம் செய்து கென்ட் போய்ச் சேர்ந்தார். தான் பயணம் செய்த தூரம் 833 மைல்கள் என்று குறிப்பிட்டுள்ளார் பிதியஸ். உண்மையில் அந்தத் தூரம் அதில் பாதிதான் இருக்கும்.

கென்டிலும் அதனை அடுத்திருந்த பகுதிகளிலும் ஏராளமான தானியங்கள் சாகுபடி செய்யப்பட்டிருப்பதைக்கண்டார். எனினும், குளிர்ந்த தட்பவெப்ப நிலையின் காரணமாக அவற்றைத் திறந்த வெளியில் புடைக்க முடியாமல் மூடப்பட்ட களஞ்சியங்களில் புடைத்தார்கள். தென்பாகத்தில் கோதுமை பொதுவாக விளை

விக்கப்பட்டது. வடபால் வாழ்ந்த மக்கள் ஓட்ஸ் என்னும் தானியத்தை விளைவித்தனர். தட்பவெப்பநிலை கோதுமையைவிட ஓட்ஸ் விளைச்சலுக்கு ஏற்றதாக இருந்ததே அதற்குக் காரணம். தேனில் கரைத்து புளிப்பேற்படுத்தப்பட்ட தானியத்திலிருந்து ஒரு வகையான மதுவை அவர்கள் தம் தேசிய பானமாகத் தயாரித்தனர். இம் மதுபானமே கெல்ட்டுகளுக்குப் பிடித்தமான பானமாக இடைக்காலம் வரை கருதப்பட்டது. அலைகளற்ற மத்திய தரைக்கடல் பயணியான காரணத்தால், அலைகள் நிறைந்த கடலைக் குறித்து அச்சப்படும்படியாக இருக்கிறதெனப் பிதியஸ் குறிப்பிட்டுள்ளார்.

கென்டிலிருந்து பிதியஸ் அம்பர் (Amber) வாணிகத்தை நாடி வடகடல் வரை சென்றார். அம்பரைக் கிரேக்கர் பெரிதும் விரும்பினார்கள். வடகடலை அடுத்த பகுதிகளில் எந்தெந்த நாடுகளுக்குச் சென்றார் அவர் என்பதைத் திட்டவட்டமாகக் கூற முடியவில்லை. அங்கிருந்து பிரிட்டனின் வடபகுதியைச் சுற்றிக்கொண்டு அவர் திரும்பினார்.

இறுதியாக பிதியஸ் அயர்லாந்தைக் காணாமலேயே ஆங்கிலக் கால்வாய்க்குத் திரும்பி வந்தார். பின்னர் காலிலிருந்து நில வழியாக அவர் மார்செல்ஸ் சென்றடைந்து தம் பயணத்தை முடித்துக் கொண்டார்.

**கெல்ட்டுகளின் வாணிபப் பழக்க வழக்கங்கள் :** தென் பிரிட்டனில் வாழ்ந்த கெல்ட்டுகளின் வாணிபப் பழக்கவழக்கங்களுக்குச் சீரிய சான்றாக அவர்கள் பயன்படுத்திய நாணயமுறையைக் (Coinage) கூறலாம். கிறித்தவ சகாப்தம் தொடங்குவதற்கு சற்றேறக்குறைய இரு நூற்றாண்டுகளுக்கு முன்னரே அவர்கள் நாணய முறையைக் கையாண்டனர். அவர்கள் தொடக்கத்தில் தங்க நாணயங்களையே பயன்படுத்தினர். வெள்ளி, வெண்கலம், தகரம் போன்ற உலோகங்களிலிருந்து தொடக்க காலத்தில் நாணயங்கள் தயாரிக்கப்படவில்லை.

**கெல்ட்டுகளின் பண்பாடு :** நாணய முறையையே கையாண்ட கெல்ட்டுகள் பிரிட்டனில் குடியேறியபோது அவர்கள் சீரிய பண்பாட்டையும், நாகரிகத்தையும் பெற்றவர்களாயிருத்தல் வேண்டும் என்று எதிர்பார்க்கலாம். அவர்தம் அணிகலன்கள் வெண்கலத்தாலும், இரும்பாலும், பொன்னாலும் ஆனவை. அவர்தம் நுண்ணிய கலைத்திறனுக்கு எடுத்துக்காட்டாய் அமைந்தன. அவர்களுடைய அணிகலன்கள் அவர்களுக்கு முந்தைய மக்களின் அணிகலன்களிலிருந்து பெரிதும் மாறுபட்டவை.

இருப்பினும், அவர்களிடத்தில் தொன்மையான காட்டு மிராண்டித்தன்மையும் தொத்தி வந்தது. பிரிட்டனில் குடியேறிய கெல்ட்டுகளிடையே பச்சைக் குத்திக் கொள்ளும் முறை பெரும் பாலும் அனைவரிடத்திலும் இருந்தது எனில் அது மிகையாகாது. அவரிடத்தில் நரபலி கொடுக்கும் கொடும் பழக்கமும் இருந்தது. இறைவனுக்குப் பலி கொடுக்கும் நோக்குடனேயோ அன்றி வெற்றி பெற்றபோது அதன் நிமித்தம் நன்றி செலுத்தவோ உயிருடன் தீயிலிட்டு எரித்து நரபலி கொடுத்தார்கள்.

சமயம் : கெல்ட்டுகளின் சமயக் குருமார்களை ட்ரூயிடுகள் (Druids) என்பர். அவர்கள் மிகுந்த செல்வாக்கு படைத்தவர்கள். ஆரியர்களின் இனத்தோடு அவர்களுக்கு நெருங்கிய தொடர்பிருந் ததைப் போன்று, ஆரியர்களைப் போன்று கெல்ட்டுகளும் பல தெய்வ வழிபாட்டினர் (Poly-theists). எனினும், அவர்தம் வழி பாட்டு முறை இனத்திற்கு இனம் வேறுபட்டிருந்தது. காலில் (Gaul) இருந்த கெல்ட்டுகளின் தெய்வங்களைப் பிரிட்டனில் காண முடியவில்லை. அதைப் போன்று பிரிட்டனில் இருந்த தெய்வங்களைக் காலில் காணமுடியவில்லை. அவர்கள் 'கலைத் தெய்வத்'தை வழிபட்டார்கள் என்பது சீசரின் கருத்தாகும்.

போர்-தெய்வம் என்று போற்றப்பட்ட பெலுடுகாட்ரஸ், காமுலஸ் அல்லது கோகிடியஸ் ரோமானியரின் மார்ஸ் என்னும் தெய்வத்துடன் ஒப்பிடப்பட்டது. அடுத்து வந்தது சுலிஸ் (Sulis) என்னும் நீராடும் தேவதையாகும். அதை மினர்வா என்னும் தேவதையுடன் ஒப்பிட்டார்கள். அப்போலோ என்னும் சூரிய தேவனை பிரிட்டனில் மாபோன் (Mabon) என்றழைத்தனர். ஜூபிடர் என்னும் தேவதையை ரோமானிய பிரிட்டனில் வெகு வாகப் போற்றி வழிபட்டனர். இத்தேவதைகளுக்கு மேடை கட்டி வழிபட்டார்கள். இவற்றைத் தவிர வேறு தெய்வங்களையும் அவர்கள் வழிபட்டனர். பெலோனு அல்லது வெற்றித் திருமகள் போர் தேவதையாகப் போற்றப்பட்டது. நாட்டின் பல்வேறு பகுதி களில் ஆறுகள், சுனைகள், காடுகள் போன்றவற்றையும் வழி பட்டனர்.

பிரிட்டிஷ் தெய்வங்களைப்பற்றி நமக்குக் கிட்டியுள்ள செய்தி கள் அனைத்தும் சரியானவை என்று ஏற்றுக்கொள்ளமுடியாது. அவர்களின் தெய்வங்களும் வழிபாடுகளும் இனத்திற்கு இனம் மாறுபட்டிருந்தன. ட்ரூயிடுகள் என்னும் கெல்ட்டிய குருமார்கள் நன்கு இணைந்து கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தனர் என்று கூறலாம். கெல்ட்டுகளில் நைட்வீரர்கள், ட்ரூயிடுகள் என்னும் இரு வகுப்பி

னரை மட்டும் நம் கருத்திற்கொள்ள வேண்டும் என்று கருதுகிருர் சீசர். ட்ருயிடுகள் வழிபாட்டுத் துறையின் தலைவர்களாய் பொதுவானதும் தனிப்பட்டதுமான யாகங்களை நிர்வகித்தனர். புனித சகுனங்களை விளக்கிக் கூறியும், சமயச் சடங்குகளை எடுத்து விளக்கியும் அவர்கள் கடமையாற்றினர். இளைஞர்கள் கூட்டங்கூட்டமாக அவர்களிடம் பயிற்சிபெறக் குழுமினர்; ட்ருயிடுகளை அவர்களின் மாணவர்கள் பயபக்தி விசுவாசத்துடன் போற்றி வணங்கினர். ஏனெனில், விவகாரங்கள் அனைத்திலும்— அது பொதுப்படையான விவகாரமாயினும் சரி, அல்லது தனிப்பட்டவரின் விவகாரமாயினும்சரி—அவர்களின் தீர்ப்பே முடிவானதாகக் கருதப்பட்டது. எடுத்துக்காட்டாக, கொலைக் குற்றமோ அல்லது மரபுவழிச் செயல்குறித்தோ அல்லது எல்லைத் தகராறு குறித்தோ சச்சரவு எழுந்தபோது அவர்களே தீர்ப்புக் கூறினர். குற்றத்திற்கான அபராதத் தொகையையும் அல்லது நட்ட ஈட்டையும் அவர்களே குறிப்பிட்டனர். அவர்களுடைய தீர்ப்பை ஏற்றுக் கொள்ள மறுக்கும் தனி நபராயினும் சரி அல்லது எந்தவொரு வகுப்பாயினும் சரி, அவர்களை யாகங்களில் பங்கு கொள்ளக் கூடாதென்று தடுக்கும் உரிமை அவர்களிடம் இருந்தது. அத்தகைய தண்டனை மிகக் கடுமையானதாகக் கருதப்பட்டது. அத்தகைய தண்டனை பெற்றவர்கள் தூய்மையற்றவர்களென்றும் சாபத்திற்கு ஆளானவர்களென்றும் கருதப்பட்டனர்; அவர்களுடன் மனிதர்கள் சேரமாட்டார்கள்; அவர்களைச் சந்திக்கக்கூட மறுப்பார்கள்; அவர்களுடன் பேசுவதுகூடப் பாவம் என்று கொள்ளப்பட்டது. அவர்களுடன் தொடர்புகொண்டால் அவர்தம் பாவம் தம்மைச் சாரும் என்று கருதப்பட்டது. மேலும், தள்ளிவைக்கப்பட்டவர்கள் நீதி வழக்காடுவதினின்றும் தவிர்க்கப்பட்டதுடன், பொதுவான பதவிகளைப் பெறவும் கூடாதெனத் தடைவிதிக்கப்பட்டனர். ட்ருயிட் குருமார்கள் அனைவரும் தலைமைக் குருமார் ஒருவரால் கட்டுப்படுத்தப்பட்டார்கள். தலைமை குருவுக்கு அனைத்து குருமார்களிடமும் உயர்ந்த அதிகாரமும் மரியாதையும் கிடைத்தன. தலைமைக் குரு காலமானபோது ஏனையோரில் மதிப்பு மிக்கவராகக் கருதப்பட்டவர் தலைமைக் குருவாகப் பதவியேற்ருர். மதிப்பு மிக்கவர் என ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் கருதப்பட்டால், அத் தகராறைத் தீர்க்க ட்ருயிட் குருமார்கள் வாக்கெடுத்தோ அல்லது போரிட்டோ தீர்த்துக் கொண்டார்கள். ஆண்டிற்கு ஒரு பருவத்தில் அவர்கள் புனித மாநாடொன்றைப் புனித இடம் என்று கருதப்பட்ட பகுதியில் கூட்டினுர்கள். கார்ன்யூட்ஸ் (Carnutes) என்ற இடம் காலின் மையத்திலிருந்தது. அவ்விடமே புனித இடமாகக் கருதப்பட்டது. கருத்துவேறுபாடு கொண்டவர்கள், சச்சரவுக்கான விவகாரங்

களைக் கொண்டவர்கள் ஆகிய அனைவரும் இங்குக் கூடி ட்ரூயிடு களின் தீர்ப்பைப் பெற்றார்கள். இம்முறை பிரிட்டனிலேயே கண்டு பிடிக்கப்பெற்று, பின்னர் அங்கிருந்து காலிற்கு (Gaul) கொண்டு வரப்பட்டது என்று பொதுவாக நம்பப்படுகிறது. ட்ரூயிடுகளின் ஞானத்தைத் தெளிவாகக் கற்றுக்கொள்ள ஆசைப்பட்டவர்கள் பிரிட்டனுக்குச் சென்று பெறலாம் என்றும் கருதப்பட்டது. ட்ரூ யிடுகள் போர்ப்பணிகளிலிருந்து விடுபட்டார்கள்; அவர்களுக்கு வரி விலக்கம் கொடுக்கப்பட்டது. மேற்கூறிய சலுகைகளால் கவரப்பட்ட பல இளைஞர்கள் அவர்களிடம் பயிற்சி பெற விழைந் தார்கள். பலர் தாமாகவே முன்வந்தனர்; பலரை அவர்களின் பெற்றோர்களோ அல்லது உறவினர்களோ அனுப்பி வைத்தனர். எண்ணற்ற புனித செய்யுள்களை அவர்கள் மனப்பாடம் செய்து கொண்டார்கள் என்று கருதினர். இத்தகைய பயிற்சியைப் பலர் இருபதாண்டுக் காலம் கற்றுக் கொண்டனர். அவர்கள் கற்றுக் கொண்டதை எழுத்துமூலம் வடித்துக்கொள்ள அவர்கள் அனு மதிக்கப்படவில்லை. ஏனைய விவகாரங்களைத் தனிப்பட்டதாயி னும் பொதுவானதாயினும் காலியர் கிரேக்க மொழியில் எழுதும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். தாம் கற்ற ஞானத்தை எழுத்துமூலமாக எழுதக்கூடா தென ட்ரூயிடுகள் கருத இரு காரணங்கள் இருந்தன. முதலாவது, தங்களுடைய ஞானச்செல்வத்தைப் பொதுமக்கள் அறிந்துகொள் வதை ட்ரூயிடுகள் விரும்பவில்லை. இரண்டாவது, யாரேனும் எழுதுவதில் நம்பிக்கை கொண்டவராயிருப்பின் அவர்கள் மனப் பாடம் செய்வதில் போதிய நாட்டம் செலுத்தமாட்டார்கள் என்று கருதினர். இதில் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது.

ட்ரூயிடுகளின் கோட்பாட்டின்படி ஆத்மா அழிவற்றது, ஆனால் மரணம் ஏற்படும்போது ஒருடல் அழிந்து மற்றொன்றில் ஆத்மா புகுந்து கொண்டதாகக் கருதப்பட்டது. இக் கோட்பாட் டின் பயனாகத் துணிச்சலாக இருக்கவழிபிறந்ததாக அவர்கள் கருதி னர். ஏனெனில் அழிவு ஏற்படும் என்ற அச்சத்திலிருந்து அவர்கள் விடுபட்டதே அதற்குக் காரணமாகும். விண்மீன்கள் அவற்றின் நட மாட்டங்கள், உலகத்தினதும், பிரபஞ்சத்தினதும் பருமன், இயற் கையின் தன்மை, அமரத்துவநிலையை அடைந்த கடவுளர்களின் சக்தி மற்றும் இயல்புகள் ஆகியன குறித்து அவர்கள் பல்வேறு வாதவிவாதங்களை நடத்தினர். காலிய மக்கள் அனைவரும் ஏராள மான மூட நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். அதன் காரண மாகத்தான் கடும் நோய்வாய்ப்பட்டவர்களும், போர் மற்றும் பிற இடுக்கண்களுக்கு ஆளானவர்கள் நரபலி கொடுத்தார்கள் அல்லது நரபலி கொடுப்பதாகச் சபதமேற்றார்கள். அத்தகைய சடங்குகளை

நடத்தும்போது ட்ரூயிட்டுகள் அவர்களின் பிரதிநிதிகளாக நின்றனர். ஒரு மானிட உயிரைக் காக்கப் பிறிதொரு மானிட உயிரைக் கொடுப்பதே தெய்வ சக்தியைச் சாந்தப்படுத்தும் உத்தியென்று அவர்கள் கொண்டார்கள். இந்த முறையிலேயே அவர்கள் பொதுவிடங்களில் யாகங்களை நடத்தினர். சில இனத்தைச் சார்ந்தவர்கள் பெரும் உருவங்களை நிர்மாணித்து, அவ்வுருவங்களின் உடலுறுப்புகளைப் பிரம்பு வேலைப்பாடுகளுடன் பின்னிப் பலியிடப்படும் மனிதர்களையும் அவற்றுடன் திணித்துப் பின்னர் அவ் உருவத்தின் அடியில் தீயிட்டுக் கொளுத்தி உயிர்ப்பலி கொடுத்தார்கள். திருடர்கள், வழிப்பறிக் கொள்ளைக்கூட்டத்தினர் மற்றும் ஏனைய குற்றம்புரிந்தவர்கள் முதலியோரை இவ்வகையாக உயிர்ப்பலி கொடுப்பதே தெய்வத்திற்குப் பிடித்தமான செயல் என்று அவர்கள் கருதினர். அவ்வண்ணம் குற்றமிழைத்தவர்கள் கிடைக்காதபோது குற்றமொன்றும் இழைக்காத அப்பாவிகள்கூட இத்தகைய நரபலிக்காளாயினர். ஜெர்மானியர் இத்தகைய பழக்கவழக்கங்களைக் கையாளவில்லை. எனவே ஜெர்மானியர் காலியரிடமிருந்து மாறுபட்டிருந்தனர். அவர்களுக்கு ட்ரூயிடுகளைப் போன்ற குருமார்களைப் பற்றியோ யாகம் செய்யும் முறை பற்றியோ தெரிந்திருக்கவில்லை.

சீசரைத் தவிர பிறர் குறித்து வைத்துள்ள குறிப்புகளிலிருந்து ட்ரூயிடுகள் அதிர்ஷ்ட நாள்கள், அதிர்ஷ்டமில்லா நாள்கள் என்று சகுனம் பார்த்த செய்தியை அறிகிறோம். வெண்கலத்தாலான காலிய நாட்காட்டி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டதனால் இதனை நம்மால் அறிய முடிந்தது. மேலும் ஓக் மரத்தின் மீது புல்லுருவி வளர்ந்தால் அதைப் போற்றினார்கள். அப்படிப்பட்ட காட்சியைக் கண்டவுடன் ட்ரூயிடுகளின் தலைமைக் குருவானவர் வெள்ளைக் காளையை ஓக் மரத்தின் அடியில் பலியிடுவார். பின்னர் அவர் மரமேறிப் புல்லுருவியைப் பொன்னாலான அரிவாளால் வெட்டுவார். புல்லுருவி மரத்தின்மீது முளைப்பது தெய்வ சக்தியால்தான் எனக் கருதப்பட்டுப் போற்றப்பட்டது.

காட்டுமிராண்டித் தன்மையிலிருந்து கெல்ட்டுகள் படிப்படியாக நாகரிகத்தில் முன்னேறி ஐபீரியக் காட்டுமிராண்டிகளைவிடப் பல்வேறு வகைகளில் உயர்நிலை பெற்றிருந்தார்கள். அழகான முடியையும், உயர்ந்தும், ஒளிவீசும் கண்களையும் கொண்டிருந்த அவர்கள் கட்டையானதும் கருநிற இனத்தைச் சார்ந்தவர்களுமான மக்களை வெற்றிகண்டபோது, அவர்களினின்றும் கெல்ட்டுகள் வெகுவாக மாறுபட்டிருந்தனர். ஏற்கெனவே கண்டபடி, சமயத்தில் அவர்கள் பல தெய்வ வழிபாட்டில் நம்பிக்கைத்

கொண்டிருந்தார்கள். தம் தெய்வங்களைச் சாந்தப்படுத்த அவர்கள் அச்சந்தரத்தக்க சடங்குகளைச் செய்தார்கள்; அவசிய மேற்பட்டபோது நரபலியும் கொடுத்தார்கள். அவர்களின் சமய குருமார்கள் ட்ருயிட்டுகள் என்றழைக்கப்பட்டனர். இக் குருமார்கள் மக்களிடத்தில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந் தனர். அதனால் அவர்கள் மக்களுக்கு மந்திரவாதிகளாகவும், பில்லி சூனியக்காரர்களாகவும் செயல்பட்டார்கள். ட்ருயிட்டுகள் இளைஞர்களுக்கு ஆசிரியர்களாயிருந்தனர்; அவர்கள் ஆத்மா அழி வில்லாதது; அமரத்துவம் வாய்ந்தது என்னும் கொள்கையில் நம்பிக்கைக் கொண்டிருந்தார்கள்.

**பிரிட்டனில் கெல்ட்டிய இனங்கள் :** அரசியல் அமைப்பின்படி கெல்ட்டுகள் பல இனங்களாகப் பிரிந்திருந்தனர். அவர்களின் தலைவர் அரசர் எனப்பட்டார். அவர்கள் ஒருவரோடொருவர் தமக்குள் சண்டையிட்டுக் கொண்டனர். போர்க்களம் சென்ற போது இரதங்களில் ஏறிச் சென்று வெண்கலத்தாலான போர்க் கவசமணிந்து கொண்டனர். ஆனால் போர் புரியும் தருவாயில் இரதங்களை விட்டிறங்கி நேருக்கு நேர் நின்று பொருதார்கள். இங்கிலாந்தில் வாழ்ந்த கெல்ட்டிய இனங்களை ஒருவாறு வகைப் படுத்திக் கூறமுடியும். தென்பாகத்தில் காண்டி (Cantii) என்று பெயர் பெற்ற கெல்ட்டிய இனத்தவர் தற்கால கென்டில் குடியேறி னர். திரினோபண்டியர் என்ற இனத்தவர் தேம்ஸ் ஆற்றின் வட பகுதி நிலங்களில் வாழ்ந்தனர்; அய்சினி இனத்தவர்கள் நார் ஃபக்கிலும் சப்போக்கிலும் குடியேறியிருந்தனர்; காட்டுவெலானி இனத்தைச் சார்ந்தவர்கள் திரினோபண்டியர் வாழ்ந்த பகுதிக்கு மேற்கில் வாழ்ந்தனர். இவ்வினத்தவர் அனைவரும் பெரும்பாலும் பெல்ஜே இனப்பிரிவுகளேயாம். இவர்களைத்தவிர ஏனையோரும் இருந்தனர். அவர்களின் சக்தி வாய்ந்தவர்களாகக் கருதப்பட்ட தாம்னோனி (Damnonii) இனத்தவர்கள் கார்ன்வாலிலும், டெவனிலும் வாழ்ந்தமையால் அப்பகுதியை தாம்னோனியா என்றனர். கொரிடானி (Coritani) இனத்தவர் டெர்பிஷயரிலும், லின்கனிலும், பிரிகாண்டியர் யார்க்ஷயரிலும், ஓர்டோவிசியரும், சில்லூயிரியரும் முறையே வடக்கு தெற்கு வேல்ஸிலும் வாழ்ந் தனர். கெல்ட்டியரால் ஒன்றிணைந்து வாழ இயலாமையால் அவர்களிடத்தே பொறாமையும், குடும்பச்சண்டை சச்சரவுகளும் குடிகொண்டிருந்தமையால் காலப்போக்கில் வேறு படையெடுப் பாளருக்கு இரையாகினர்

**சமூகப் பழக்கவழக்கங்கள் :** சமூகப் பழக்கவழக்கங்களை ஆராயும்போது கெல்ட்டுகள் பெரும்பாலும் பண்பாடற்ற நிலையி லேயே வாழ்ந்தார்கள் எனக் கொள்ளலாம். கெல்ட்டுகள் தம்

தோல்களின்மீது பளிச்சிடும் நீலச்சாயத்தைப் பூசிக் கொள்ளும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். வடபகுதிகளில் வாழ்ந்த இனத்தவர் இப்பழக்கத்தை நீண்டகாலம் கடைப்பிடித்து வந்தமையால் அவர்களை சாய வர்ணத்தவர் என்ற காரணப் பெயரைக்கொண்டு பிக்டி (Picti) கள் என்றழைத்தனர். ஆனால் காலஞ் செல்லச் செல்ல அவர்களிடத்திலும் நாகரிக முதிர்ச்சி வெளிப்படலாயிற்று. அவர்கள் பயன்படுத்திய கவசம் மற்றும் ஆயுதங்கள் ஆகியவற்றிலிருந்து அவர்களுக்கு உலோகங்களைப் பற்றிய ஞானம் தெளிவாகியிருக்க வேண்டும். தங்க நாணயங்கள் தென்பகுதிகளில் புழக்கத்தில் இருந்ததையும் அறிகிறோம்.

கெல்ட்டுகள் நகரங்களை அமைத்துக் கொள்ளவில்லை. மாறாக அவர்கள் பெரும்பாலும் தொடர்பற்ற குடிசைகளில் வாழ்ந்தார்கள். காடுகளையும், மேட்டு நிலங்களையும் அழித்துவிட்டு சீர்ப்படுத்தப்பட்ட இடங்களில் அவர்கள் தம் குடிசைகளைக் கொண்டார்கள். இங்கு அவர்கள் வயல்களை உழுது பயிரிட்டதுடன், கால்நடைகளையும் வளர்த்தார்கள், அவர்கள் தாம் குடியிருந்த இடங்களைச் சுற்றிலும் மரங்களை வெட்டி வேலி அமைத்துக் கொண்டு, உயர்ந்த மண்சுவர் கோட்டைகளைச் சுற்றி கட்டினார்கள். அக்கோட்டைச் சுவர்கள் எளிமையானவை. ஸ்டோன் ஹெஞ்ச் போன்ற கல்கட்டிடங்களைக் காணும்போது, அவர்களுக்கு உறுதிவாய்ந்த மதில்களையும் கட்டத் தெரிந்திருக்க வேண்டுமென்பது தெளிவு. பிரித்தானியர்கள் இது மாதிரியான உறுதி வாய்ந்த கட்டிடங்களைக் கட்டியிருக்கலாம். அதுவும் ட்ருயிட் குருமார்களின் தூண்டுதலினால் என்று கொள்ளவும் இடமுண்டு.

கெல்ட்டுகள் பிற உலக நாடுகளுடன் ஓரளவு வாணிபத் தொடர்புகளைக் கொண்டிருந்தார்கள். டெவன்ஷயரிலும், கார்ன் வாலிலும் தகரச்சுரங்கங்கள் இருந்தன. தீவின் தென்கிழக்கு மூலைக்கு அத்தகரம் கொணரப் பெற்று அங்கிருந்து காலுக்கு (Gaul)ஏற்றுமதி செய்யப்பட்டது. தாம்னோனியாவுடன் ஃபினீஷியர்கள் நேரிடையாகப் பண்டமாற்று வாணிபத்தில் ஈடுபட்டார்கள் என்று முன்னர் கருதப்பட்டது. ஆனால் இதனை ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

இங்கிலாந்தில் வரலாற்றுக்காலம் தொடங்கியபோது கெல்ட்டுகள்தான் பிரிட்டிஷ் தீவுகளில் வாழ்ந்த குடிமக்கள். இங்கிலாந்தின் தொடக்க கால பெயர் அல்பியன் (Albion) எனப்பட்டது. அல்பியன் என்னும் சொல் கெல்ட்டிய சொல்லன்று. ஏனவே

கெல்ட்டியர் வருகைக்கு முன்னரே இங்கிலாந்து அல்பியன் என்று தான் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் கெல்ட்டிய நாகரிகம் இங்கிலாந்தில் நுழைவுற்ற காலத்தில் அதனை பிரிட்டானியா என்று அழைத்தனர். பிரித்தானியர் அல்லது பிரிட்டன்கள் என்ற இனத்தவரின் பெயரால் இங்கிலாந்தைப் பிரிட்டானியா என்று தொடர்புபடுத்திக் காரணப் பெயரால் அழைத்தனர்.

# 4. பிரிட்டனில் ஜூலியஸ் சீசர் [கி. மு. 55-54]

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னர் பிரிட்டனுக்கு வருகை தந்தவர் இருவர்; ஒருவர் கிரேக்கர்-பிதியஸ் என்னும் பெயரினர். அவருடைய குறிப்புகளை முன்பாடத்தில் அறிந்திருக்கிறோம். சற்றேறக் குறைய மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின்னர் ரோமானியரான ஜூலியஸ் சீசர் பிரிட்டன் மீது படையெடுத்தார். இவ்விருவரின் வருகைக்கான இடைப்பட்ட காலத்தில் ரோமாபுரியின் அதிகாரமும் செல்வாக்கும் பெருகி வளர்ந்திருந்தன. ரோமானியப் பேரரசில் இருந்த பல்வேறு நகர-அரசுகளில் ஒன்றாக ரோமாபுரி வளர்ந்திருந்தது. ரோமாபுரியின் ஆதிக்கமும் செல்வாக்கும் வளரப் பல காரணங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று ரோமாபுரியின் அதிர்ஷ்டவசமாக நிகழ்ந்த சம்பவமாகும். மற்றொன்று ரோமானியரின் குணவியல்பாகும். அதன் பயனாக ரோமாபுரி நகரின் ஆதிக்கம் முதலில் இத்தாலி முழுதும் பரவியது. பின்னர் மத்தியதரைக் கடலையடுத்த நாடுகளில் அது பரவிப் பெருகலாயிற்று. ரோமாபுரி செல்வாக்கடைவதற்கு முன்னர் இத்தாலியில் நூற்றுக் கணக்கான நகர-அரசுகள் அமைந்திருந்தன. அவ்வனைத்தும் வெற்றி காணப்பெற்று ரோமாபுரியின் நகர-அரசில் அவை இணைக்கப் பட்டது ரோமாபுரியின் மாபெரும் சாதனையாகும். வெற்றி கண்ட அப்பகுதிகளில் ரோமானிய சட்டமும், கட்டுப்பாடும் நிலைநாட்டப் பெற்றதிலிருந்து ரோமானிய ஆதிக்க வளர்ச்சியை அக்கால நாகரிக உலகம் முழுதும் அறிந்திருந்தது.

ரோமானிய பண்பாட்டை இத்தாலியிலிருந்து வடபாலும், மத்திய தரைக் கடலைச் சுற்றியிருந்த நாடுகளிலும் பரப்பிய பெருமை ஜூலியஸ் சீசரைச் சாரும். அவர் தான் ரோமானிய கால் நாட்டை உருவாக்கியவர். கால் நாடே பின்னர் பிரான்ஸ் என்னும் பெயரால் அழைக்கப் பெறலாயிற்று.

கி. மு. 58க்கும் 50க்கும் இடைப்பட்ட எட்டாண்டு காலத்தில் சீசர் கால் நாட்டை வெற்றி கண்டார். அது பற்றிய வரலாற்றை தாம் எழுதிய 'டி பெல்லோ காலிகோ' (De Bello Gallico)

என்னும் நூலில் எழுதியுள்ளார். கால் நாட்டு இனத்தவர்களுக்கும் பிரிட்டிஷ்கெல்ட்டியருக்குமிடையே இருந்த நெருங்கிய தொடர்பின் விளைவே ஜூலியஸ் சீசர் பிரிட்டன் மீது படையெடுக்கக் காரண மாகும். தாம் புதிதாகப் பெற்ற கால் நாட்டை அடுத்து நின்ற பகுதி யில் பகைவர்கள் இருந்தார்கள் என்பதை சீசர் நன்கு அறிந்திருந் தார். ஏறத்தாழ இருபது கல் தொலைவில் தீவாக இருந்த பிரிட் டனில் காலியமக்களின் உறவினர்கள் வாழ்ந்து வருவதை சீசர் காணத்தவறவில்லை. அதைச் சிறு விஷயமாகக் கருதாமல் தீவிர மான விவகாரமாகக் கருதினார் சீசர். அதன் பயனாகவே அவர் பிரிட்டன் மீது படையெடுத்தார்.

சீசர் பிரிட்டன் மீது படையெடுக்கக் காரணமாய் அமைந்தது அங்கு உடனே ரோமானிய ஆதிக்கத்தை நிலை நாட்டும் ஆர்வமன்று. அதற்குத் தேவையான படைபலமோ அன்றி நேரமோ சீசருக்குக் கிட்டவில்லை ரோமாபுரியில் அப்போது அவருடைய செல்வாக்கு தாழ்நிலையிலிருந்தது. எதிர் கட்சித் தலைவராயிருந்த ஜூலியஸ் சீசர் தம் செல்வாக்கை உறுதிப் படுத்திக் கொள்ள பிரிட்டன் மீது படையெடுப்பைப் பயன் படுத்திக் கொண்டார். எனவே சீசர் தாமே பிரிட்டனுக்கு நேரிடை யாகச் சென்று அதனைப் பார்வையிடத் தீர்மானித்தார்.

முதல் படையெடுப்பு :- ஜூலியஸ் சீசர் தம் முதல் படை யெடுப்பின்போது 10,000 பேர் கொண்ட ரோமானியப் படைகளு டன் சென்றார். ஏழு அல்லது எட்டாயிரம் காலாட்படை வீரர் களுடன் சீசர் கப்பலில் புறப்பட்டார். கலே நகரத்திற்கருகில் உள்ள போர்டஸ் இடியஸ் (Portus Itius) என்னுமிடத்திலிருந்து கி. மு. 55 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 26ஆம் நாள் அவருடைய கப்பல் புறப்பட்டது. அடுத்த நாள் காலைப்பொழுது வந்தது. இங் கிலாந்தில் கென்டிய மலைச்சிகரங்கள் அவர் கண்களுக்குத்தெரிந் தன. தாழ்நிலக் கடற்கரையில் கரையிறங்க தீர்மானித்த சீசர் டீல் (Deal)நகருக்கருகில் இறங்கினார். ரோமானியப் படைவீரர் களுக்கு அலைகளையோ அன்றிக் கரையில் நின்றிருந்த பிரிட்டிஷ் போர் இரதங்களையோ காணப் பிடிக்காமையால், தத்தம் படகு களை விட்டு இறங்கத் தயங்கினர். இறுதியாக கொடி மரக்காவ லன் பின்வருமாறு கட்டளையிட்டுவிட்டு படகை விட்டிறங்கி வழி காட்டினான். அவன் கூறிய சொற்களைக் கேளுங்கள் :- வாருங் கள் வீரர்களே! கரையிலிறங்கி வாருங்கள்! பகைவனுக்கு நம் கழு குக்கொடியைக் காட்டிக் கொடுக்க விரும்பாத வீரர்களே! கரை இறங்குங்கள்! என்னுடைய குடியரசிற்கும் என் தளபதிக்கும் ஆற் றும் கடமையெனக்கொண்டு நான் கரையிறங்குகிறேன்! நீங்களும்

வாருங்கள்.' இக் கூற்றை 'டிபெல்லோ காலிகோ' என்னும்நூலில் காணலாம். கரையிறங்கியதுதான் தாமதம்! ரோமானியர்கள் வெகு எளிதாக பிரிட்டானிய இன மக்களைப் படுதோல்வி அடையச்செய்தனர். சீசர் படை வீடு (முகாம்) ஒன்றை அமைத்தார். பின்னர் ரோமானியர் எதிர் பார்த்தபடி ஒன்றும் நடக்கவில்லை. குதிரைப் படையினர் புறப்படவே இல்லை. ஏனெனில் அப்போது அடித்த புயலினால் படகுகள் அடித்துத் தள்ளப்பட்டன. புயலினால் சீசரின் படகுகளும் சேதமுற்றன. சிறிதுநேரம் சீசரின் நிலை பரிதாபகரமாயிருந்தது. இதற்குள் பிரிட்டானியர் சீசரின் நிலையை அறிந்து கொண்டனர். ரோமானியர் புறமுதுகு காட்டப்போகிறார்கள் என்பது அவர்களுக்குப் புலனாயிற்று. ஆனால் சீசர் திரும்பவும் அவர்களைத் தாக்கினர்; உடனே பிரிட்டானியர் ஓடலுற்றனர். இதனிடையில் போதுமான அளவிற்குக் கப்பல்கள் பழுது பார்த்தல் முடிவுற்றமையால், சீசர் காலிற்குத் திரும்பிச் சென்றார். இப்படியாக முடிவுற்றது சீசரின் முதல் படையெடுப்பு.

**இரண்டாம் படையெடுப்பு கி. மு. 54 :-** அடுத்த ஆண்டு அதாவது கி.மு. 54 இல் சீசர் தம் இரண்டாம் படையெடுப்பைத் தொடங்கினார். இம்முறை அவர் ஏறத்தாழ 25,000 பேர் கொண்ட படையுடன் பிரிட்டன் மீது படையெடுத்தார். முதலில் கரையிறங்கிய அதே இடத்தில் சீசர் இறங்கினார். ஆனால் அவரை எதிர்க்க பகைவர்களைத்தான் காணவில்லை. ஆச்சரியமுற்றார் சீசர்! பிரிட்டானியர் தேம்ஸ் ஆற்றுக்கு வடபால் தம் பாதுகாப்பரண்களை அமைத்துக் கொண்டிருந்ததை அவர் தெரிந்து கொண்டார். அவர்கள் காசிவெலானஸ் என்ற அரசரின் தலைமையில் அணிவகுத்து நின்றனர். ரோமானியப் படையை எதிர்க்க அவர்கள் ஆயத்தமாயிருந்தனர். எஸ்ஸெக்ஸில் வாழ்ந்திருந்த திரினோபண்டியர்கள் காசிவெலானஸின் பகைவர்கள். அவர்கள் சீசரின் நண்பர்களாய், அவருடன் சேர்ந்து கொண்டனர். ஏனைய இனத்தவர்களும் அவர்களைப் பின்பற்றி சீசருடன் சேர்ந்து கொள்ளவே, காசிவெலானஸ் தனித்து நின்று போராடவேண்டியவரானார். சீசர், காசிவெலானஸின் தலைநகரைத் தாக்கவே, காசிவெலானஸும் சீசருக்குக் கீழ்ப் படிந்தார். கீழ்ப்படிந்த அவர்களிடம் கப்பம் வசூலித்துக் கொண்டு, சீசர் திரும்பவும் ஆங்கிலக் கால்வாயைக் கடந்து கால் போய்ச் சேர்ந்தார். தம் படையெடுப்பு தோற்றுவிட்டதாகவே சீசர் கருதியிருக்கக் கூடும்; உண்மையும் அதுதான். ரோமானியர் எதிர்பார்த்த வெற்றி கிட்டவில்லை.

**பிரிட்டனைப் பற்றி சீசரின் வருணனை:-** கூர்ந்த மதியினரான ஜூலியஸ் சீசர் தாம் பிரிட்டனில் கண்டவற்றைக் குறித்து

வைத்துள்ளார். அக்குறிப்புகளைக் காணும் எவரும் சீசரின் உற்று நோக்கும் சீரிய குணத்தைப் பாராட்டத் தவறமாட்டார்கள். பிரிட்டனில் தாம் பார்த்தவற்றையும், கேட்டறிந்தவற்றையும் அவர் எழுதி வைத்துள்ள குறிப்புகள் சுவையானவை. கென்டில் பிரிட்டானியரின் வீடுகளையும் பண்ணைகளையும் சீசர் தாம் பார்த்த வண்ணம் எழுதி வைத்துள்ளார். பிரிட்டிஷ் தீவுகளின் பிறிதொரு பகுதியில் தகரமும், இரும்புத் தாதுக்களும் கிடைப்பதாகத் தாம் கேட்டதையும் சுவைபட குறித்துள்ளார் அவர். பிரிட்டானிய போர்வீரர்கள் தம் உடல்களை ஒருவகையான சாயத்தின் துணை கொண்டு நீலவர்ணத்தால் தீட்டிக் கொண்டிருந்தார்கள் என்பதையும் அவர் குறித்து வைத்துள்ளார். இக்குறிப்பின் அடிப்படையால் தான் பிரிட்டானியருக்கு முன்பிருந்தவர்கள் ஆடையணியாமல் காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்தார்களோ எனப் பலரை எண்ணத் தூண்டியது. அவர்களுக்குப் போரிடுவதைத் தவிர ஏனைய தொழிலொன்றும் தெரியாதென்ற கருத்தும் இதன் விளைவாகவே எழுந்தது. ஆனால் போர்க்காலங்களில் மக்களின் இயல்புகளைக் கொண்டு அவர்களைக் குறை கூற முற்படுவது முறையாகாது. இக் காலத்தில் வாழ்ந்த பிரிட்டானியர் சில வகைகளில் நாகரிக முதிர்ச்சி கொண்டவர்களாகவே இருந்தனர். போர்க்கவசங்கள், வீடுகளில் பயன் படுத்திய தட்டுமுட்டுச் சாமான்கள், அணிகலன்கள், ஆகியவற்றை ஆராயுங்கால் அவர்களுக்கு உலோகத் தொழிலில் இருந்த கலையார்வத்தை நன்கு உணர முடியும்.

**சீசரின் படையெடுப்பினால் விளைந்த விளைவுகள்:-** ஜூலியஸ் சீசரின் படையெடுப்புகளால் உடனடியாக பலன் ஒன்றும் நிகழவில்லையாயினும், அவை வருங்காலத்தில் சிறப்பான விளைவுகளைக் கொண்டிருந்தன. பிரிட்டனுக்குச் செல்லும் வழியைக் காட்டியவர் அவரே. அப்படையெடுப்பினால் பலன் ஏற்பட்டதாக எந்தவொரு சாமானிய ரோமானியன் கூட கருதவில்லை. சிசரோ (Cicero) என்னும் பிறிதொரு அறிஞர் தாம் எழுதிய கடிதங்களில் பிரிட்டன் மீது படையெடுத்த ரோமானியருக்குப் பொருள் ஒன்றும் கிட்டவில்லை என்றும், கிடைத்ததெல்லாம் பிரிட்டானிய அடிமைகள்தான் என்றும், அவ்வடிமைகள் கடினமான எடுபிடி வேலைகளுக்குப் பயன் படுத்தப் பட்டனர் என்றும் குறிப்பிட்டுள்ளார். இதிலிருந்து பிரிட்டானியரில் படித்த அறிஞர்களோ அல்லது இசைஞானிகளோ இருக்கவில்லை என்பது தெளிவாகிறது. ஏனெனில் ரோமானியரது சந்தையில் அவர்கள் விலைக்குக் கிட்டவில்லை. ரோமாபுரியில் மூண்ட உள்நாட்டுப் போர்களின்போது ரோமானியப் படைவீரர்களும் அரசியல்ஞானிகளும் பிரிட்டன் ரோமானியருக்கு அடிமைப்

பட்டதென்னும் நினைவினையே மறந்து விட்டனர். அகஸ்டஸ் சீசரின் காலம் வரை பிரிட்டனைக் குறித்த பிரச்சினை ரோமானியரிடையே எழவில்லை.

சீசர் பிரிட்டனை நிலையாக வெற்றி கொள்ளாவிடினும், அவர் பிரிட்டானியரைக் குறித்து எழுதி வைத்துள்ள குறிப்புகள் பிற்காலப் படையெடுப்பாளர்களுக்குப் பெரிதும் பயன் பட்டன. ஏறத்தாழ நூறாண்டு காலம் பிரிட்டன் ரோமானியரின் தாக்குதலுக்கு இரையாகாமல் போனதற்குக் காரணம் சீசருக்கு காலில் ஏற்பட்ட கலகங்களும், ரோமாபுரியில் மூண்ட உள்நாட்டுப் போர்களுமேயாகும். இத்தருணத்தில் ரோமானியப் பேரரசு வடதிசையிலும், கீழ்த்திசையிலும் காட்டு மிராண்டிகளின் தாக்குதலுக்கு ஆளாகவே, நாட்டைக் காக்கும் கடமையில் பிரிட்டனைத் தாக்க சமயம் கிட்டவில்லை.

# 5. ஜூலியஸ் சீசரின் படையெடுப்பிற்கும் கிளாடியஸின் படையெடுப்பிற்கும் இடைப்பட்ட கால பிரிட்டன்

**[கி. மு. 54லிருந்து கி. பி. 43 வரை]**

கி. மு. 54 க்கும் கி. பி. 43 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலகட்டத்தில் பிரிட்டனின் நிலையை ஆராய்வோம். ஜூலியஸ் சீசர் இருமுறை பிரிட்டன் மீது படையெடுத்த போதிலும், அங்கு நிலையான ரோமானிய ஆட்சியை நிறுவ முயலவில்லை. தம் இரண்டாம் படையெடுப்பிற்குப்பின் பத்தாண்டு காலம் சீசர் உயிர் வாழ்ந்தார். பத்தாண்டுகளுக்குப் பிறகு அவர் ரோமாபுரியில் கொலை செய்யப்பட்டார். அவருடைய இறப்பிற்குப் பின்னர் ரோமாபுரியில் பல உள்நாட்டுப் போர்கள் தொடர்ந்தன. இறுதியாக ஜூலியஸ் சீசரின் உடன் பிறந்தாரின் பேரனான அகஸ்டஸ் சீசர் ரோமானியப் பேரரசை நிலைநாட்டினார் (கி. மு. 30). அகஸ்டஸ் அரசாண்ட காலத்தில் இரு சிறப்பான வரலாற்று சம்பவங்கள் நிகழ்ந்தன. அவருடைய ஆட்சியின்போது தான் ஜூதேயாவில் ஏசுநாதர் பிறந்தார். அப்போது ஜூதேயாவில் அகஸ்டஸ் சீசரின் நண்பரான மாவீரன் ஹெராட் என்பார் அப்பகுதியை ஆண்டு வந்தார். இரண்டாவது சம்பவம், ரோமானியப் பேரரசு நிலை நாட்டப் பெற்றதாகும். இவ்விரு காரணங்களால் அகஸ்டஸின் ஆட்சிக் காலம் சீரும் சிறப்பும் மிக்கதென உலக வரலாற்றில் கருதப்படுகிறது.

ரோமானியப் பேரரசு கொடிகட்டிப் பரந்து விரிந்திருந்ததைக் காணும் எவருக்கும் அவ்வளவு பெரிய பேரரசை எங்ஙனம் அவ்வளவு சிறிய இராணுவத்தால் கட்டுப்படுத்த முடிந்தது என்பது வியப்பாகத் தோன்றும். வடக்கில் பிரிட்டனிலிருந்து தெற்கில் சஹாராப் பாலைவனம் வரையிலும், மேற்கில் அட்லாண்டிக் பெருங்கடலிலிருந்து கிழக்கில் பாரசீக வளைகுடாவரையிலும் பரவியிருந்த ரோமானியப் பேரரசில் அமைதியை நிலைநாட்டி அதன் எல்லைகளைக் காக்க குறைந்த அளவில் இரண்டரை இலட்சத்திலிருந்து மூன்றரை இலட்சம் வரையிலான போர்வீரர்கள் இருந்திருந்தால் அது ஒருவேளை போதுமானதாக இருந்திருக்கக்கூடும்,

இப்பகுதிகளில் இப்போது அமைந்திருக்கும் சுதந்திர நாடுகளை யும் அவை வைத்திருக்கும் படைவீரர்களின் எண்ணிக்கையையும் ஆராய்ந்தால் பேரரசு பரவியிருந்த காலத்தின் சிறப்பை நம்மால் போற்றாமலிருக்க இயலாது. தென் அய்ரோப்பிய நாடுகளுக்கும் மேற்கு ஆசியா நாடுகளுக்கும் இடையே அந்நாடுகளின் வரலாறு தொடங்கிய காலம் முதல் இன்று வரை நீடித்து வரும் பகைமை உணர்வினைக் காணுந்தோறும், ரோமானியப் பேரரசின் போது நீண்டகாலம் நிலை நாட்டப் பெற்றிருந்த அமைதி நம் மனக்கண் முன்னர் வரத்தான் செய்யும். பண்டைய ரோமாபுரிப் பேரரசாட்சிக் குட்பட்ட நாடுகளில் நிலை நிறுத்தப்பட்ட அமைதியை Pax Romana என்பர். ரோமானிய பேரரசாட்சிக்குட்பட்ட பகுதிகள் அனைத்திலும்ஒரே வகையான சட்டம் அமுலாக்கப்பட்டது. அதே போல் ஒரே மொழி அதாவது இலத்தீன் மொழி புழக்கத்தி லிருந்தது. ரோமானியப்பேரரசுப் பகுதியில் நூற்றுக்கணக்கான பிற மொழிகளும், பல்வேறு பேச்சு மொழிகளும் வழக்கில் இருந்தபோ திலும், இலத்தீன் மொழியே அப்பேரரசின் பொது மொழியாகவும், வாணிப மொழியாகவும், பண்பாட்டு மொழியாகவும், செல்வாக் குற்ற மொழியாகவும் கருதப்பட்டது. பேரரசின் பல்வேறு பகுதி களில் வாழ்ந்த விதவிதமான மக்கள் பேரரசில் இரண்டறக்கலந்து இணைந்தபோது, ரோமானிய சட்டதிட்டங்களின் பயன்களை அனுபவிக்க அவர்கள் அனைவரும் பாகுபாடின்றி ஒருமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டனர். ரோமானியப் பேரரசிற்கு உட்படாத பகுதிகளில் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளின் ஆட்சி நடந்த போது, அதனை ரோமானியப் பேரரசினோடு ஒப்பிடுங்கால், ரோமானியப் பேரரசர்களால் வெற்றி கொள்ளப் பெற்ற ஸ்பானி யரும், காலியரும் தாம் இழந்த சுதந்திரத்தைக் கூட மறந்துவிட்டு ரோமாபுரியின் நல்லாட்சியில் வாழ்ந்ததாகக் கருதினர். இஃது ரோமானியப் பேரரசின் சிறப்பினைச் சுட்டிக்காட்டும் சீரிய எடுத்துக்காட்டாகும்.

இக்கால கட்டத்தின்போது பிரிட்டன் ரோமானிய ஆட்சி எல்லைக்குள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. கால் பகுதியைச் சார்ந்த வணிகர்கள் பிரிட்டனில் வாழ்ந்தவருடன் நட்புற வினைக் கொண்டிருந்தனர். ரோமானிய அதிகாரிகள் பிரிட்டிஷ் அரசர்களின் அரண்மனையில் ஊடுருவியிருந்தனர். அத்தகைய அரசர்களில் ஒருவரான கனோபிலைன் அல்லது சிம்பலின் என் பாரைக் குறித்து ஷேக்ஸ்பியர் என்னும் நாடகாசிரியர் ஓர் அழ கான நாடகம் எழுதியுள்ளார். சிம்பலின் என்ற அவ்வரசரின் தலைநகராக கோல்செஸ்டர் இருந்தது. ரோமானிய வரலாற்றா சிரியர் ஒருவர் அவரை பிரிட்டானோரம் ரெக்ஸ் அதாவது, 'பிரிட் டனை ஆளும் அரசர்' (Brittanorum Rex) என்று குறித்துள்ளார்

# 6. பிரிட்டனை ரோமானியர் வெற்றி கொளல்

கி. பி. 41 ஆம் ஆண்டில் கலிகுலா என்ற பேரரசர் கொலையுண்டதால் அவருடைய மாமன் கிளாடியஸ் பேரரசராக வேண்டியவரானார். அவர் பலவீனர். பதவி வேண்டாம் என்ற நோக்குடன் ஓடி மறைந்திருந்த அவரைக் கலகக்காரர்கள் பிடித்து வந்து பேரரசராக்கினர். பிரிட்டனை ரோமானியப் பேரரசுடன் இணைத்த பெருமை இப்பேரரசர் கிளாடியஸையே சாரும். விதி வசத்தின் வேடிக்கை தான் என்னே! வேண்டாதவருக்குப் பேரரசுப் பதவி. பலவீனருக்கு பிரிட்டன்வரை ஆட்சியைப் பெருக்கிய பெருமை. இதுதான் காலத்தின் கோலம் போலும்!

கிளாடியஸ் நிலையான சிந்தனையற்றவர்; அருவருப்பான தோற்றமுடையவர்; ஆட்டங்கொடுக்கும் தலையினர்; தடுமாறும் திக்குவாயர் எனினும் அவருடைய திறமை வெளிப்படத்தான் செய்தது. தமக்கு முன்பு ஆட்சி நடாத்திய தம் மூதாதையர்களான பேரரசர்களின் வரலாற்றைக் குறித்தும், தம்முடைய ஆட்சியைக் குறித்தும் அவர் எண்ணற்ற நூல்களை எழுதி வைத்துள்ளார். அவருக்கு எட்ரஸ் மொழியில் மிகுந்த ஈடுபாடிருந்தது. அம்மொழி இன்று அழிந்து விட்டது. அம்மொழியில் படைக்கப்பட்டிருந்த ஆய்வுக்கட்டுரைகளை அவர் மொழி பெயர்த்தார். ஓஸ்டியா துறைமுகத்தைத் துப்புரவு செய்தவரும் அவரே. எண்ணற்ற குடியேற்றங்களை அவர் நிலை நாட்டினார். ரோமாபுரிக்குக் குடிதண்ணீர் கொணர்ந்த பெருமைக்கும் கிளாடியஸே பொறுப்பானவர். அக்குவெயின் குன்றுகளிலிருந்து கால்வாய் கட்டி அதன் மூலம் ரோமாபுரிக்குத் தண்ணீர் கொண்டு வரப்பட்டது. அவர் மட்டும் தம்மைத் தாமே நம்பி, தம்முடைய சொந்த இயல்பூக்கத்தால் செயல்பட்டிருப்பாராயின் ஒருவேளை ரோமாபுரியின் தலைசிறந்த பேரரசர்களுள் அவரும் ஒருவர் என்றுபோற்றப்பட்டிருக்கக் கூடும். தம் மனைவிமார்களைச் சார்ந்தும், அவரை அடுத்து நின்ற சுதந்திரக் குடிமக்களின் சொற்கேட்டும் நடந்த அவருடைய ஆட்சியை அந்தப்புரத்தவரின் ஆட்சி என்ற அவச்சொல்லிட்டு அழைத்தனர். அதன் பயனாக அவருடைய ஆட்சி

யின் பெருமை வருங்காலத்தில் சுடர்விட்டு ஒளிராமல் அழியக் காரணமாயிற்று.

கிளாடியஸ் பேரரசரான அதே ஆண்டோ அன்று ஓராண்டிற்குப்பின்னரோ பிரிட்டனில் கனோபிலினஸ் அல்லது சிம்பலின் அரசர் மாண்டு போனார். அவருக்குப் பின்னர் அவருடைய மக்களிருவர் கரடகஸ் (Caratacus) என்பாரும் (அவரை கரக்டகஸ் என்றும் அழைப்பர்) டோகோடம்னஸ் என்பாரும் அரசுரிமை பெற்றார்கள். அவர்களுக்கெதிராக பேரிகஸ் (Bericus) என்ற பெயர் கொண்டவர் ஒருவரும் ரோமானிய உதவியுடன் தம்மை பிரிட்டனின் அரசுரிமைக்கு உரிமை கொண்டவர் என்று அறிவித்தார். அவர் கனோபிலினஸின் மக்களில் ஒருவரா என்பதை அறிய வரலாறோ அன்றி நாணயங்களோ நமக்கு உதவவில்லை. உதவி கோரிய பேரிகஸின் விண்ணப்பத்தைக் கிளாடியஸ் ஏற்றுக் கொண்டு, பிரிட்டனின் மீது படையெடுப்பதென முடிவு செய்தார். பேரிகஸ்ஸை பதவியில் அமர்த்தவே பிரிட்டன்மீது படையெடுக்கப்போவதாக அறிவித்தாலும், உண்மையில் அது பிரிட்டனை ரோமானியப் பேரரசுப்பகுதியாக ஆக்குவதில் முடிவுற்றது (கி. பி. 43 ஆம் ஆண்டு). படையெடுக்கும் பொறுப்பு அவுலஸ் பிளாடியஸ் (Aulus Platius) என்பாரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் உயர்தர செனட்டர். அவர் பேரரசர் கிளாடியஸின் நெருங்கிய உறவினர். அவருடைய ஆணைப்படி நான்கு அணிகள் பிரிட்டனை வெற்றி காண அணிவகுத்துச் சென்றன :-

| அணியின் எண் | தளபதியின் பெயர் |
|---|---|
| இரண்டாம் அணி : | அகஸ்டா |
| ஒன்பதாம் அணி : | ஹிஸ்பனா |
| பதினான்காம் அணி : | ஜெமினா மார்ஷியா |
| இருபதாம் அணி : | வேலாரியா விக்ட்ரிக்ஸ் |

[ஒரு அணியில் ஏறத்தாழ 5000 படைவீரர்கள் இருந்தனர்] இவற்றுள் ஒன்பதாம் அணி ஜெர்மனியில் போர்ப்பணியிலிருந்து விலக்கிக் கொள்ளப்பட்டது. இரண்டாம் அணியும் இருபதாம் அணியும் இங்கிலாந்தில் நிலையாக நின்றுவிட்டன. பதினான்காம் அணி இங்கிலாந்தில் இருபதாண்டுகள் பணியாற்றிய பின் இத்தாலிக்குத் திரும்பிச் சென்றது. பிளாடியஸின் படையின் எண்ணிக்கையைப் திட்டவட்டமாகக் கூற இயலாது. ஏறத்தாழ 20,000 பேர் கொண்ட காலாட்படையுடனும், குதிரைப் படையினரும் ரோமானியருக்கு உதவிய பிற நேசப்படையினரும் சற்றேறக் குறைய 40,000 பேர் இருப்பர். பிரிட்டன் மீது படையெடுத்த

ரோமானியப்படை 50,000 வரை இருக்கக் கூடும் என்றால் அது தவறாகாது. எனினும் திட்டவட்டமாகக் கூறுவதில் கருத்து வேறுபாடு எழத்தான் செய்கிறது.

ரோமானியப் படை காலிலிருந்து பிரிட்டனுக்குப் புறப்பட்டது வாழத் தகுதி வாய்ந்த உலகிலிருந்து வெளியிடத்திற்குப் போர்ப் பணியாற்ற வேண்டிய நிர்ப்பந்தத்தால் போர் வீரர்கள் முணு முணுத்தனர். கிளாடியஸ் தம் அமைச்சர் நர்ஸியஸ் (Narcisous) என்பாரை அனுப்பி அவர்களின் தயக்கத்தைப் போக்கமுயன்றார். நர்ஸியஸ் மேடையேறி அவர்கள் போருக்குக் கிளம்புவதன் அவசியத்தை எடுத்துரைத்தார். போர் வீரர்கள் அவரைப் பேச வொட்டாமல் கூச்சலிட்டு நையாண்டி செய்தனர். பின்னர் பிளாடியஸுடன் திரும்பி அவர் அழைத்துச் செல்லுமிடம் எதுவாயினும் அவருடன் வர ஆயத்தமாக இருப்பதாகவும், அவருக்காக அதைச் செய்யப் போவதாகவும் அறிவித்தார்கள். இத்தகைய தயக்கத்தின் விளைவாக பிரிட்டன் மீது ரோமானியப் படையெடுப்பு தாமதப் பட்டது. இறுதியாக போர்ப் படைகள் கப்பலில் புறப்பட்டன. எனினும் சுழன்றடித்த காற்றும் அலைகளும் பிரிட்டனில் கரையிறங்க முடியாமல் செய்தன. எனவே அவர்கள் புறப்பட்ட இடத்திற்கே திரும்பிச் செல்ல தீர்மானித்த வேளையில் சுடர் விட்டுப் பிரகாசித்த விண்மீன் ஒன்று கிழக்கிலிருந்து மேற்காகத் தோன்றவே அதை நல்ல சகுனம் எனக் கொண்டு ரோமானியப் படைகள் மீண்டும் பிரிட்டனில் கரையிறங்க முடிவு செய்தன. ரோமானியப் படைகள் வராதெனக் கொண்டு பிரிட்டானியர் போர் ஆயத்தங்களைக் கைவிட்ட போது திடீரென அப்படைகள் கரையிறங்கியதைக் கண்ணுற்ற அவர்கள் காடுகளுக்கும், சதுப்பு நிலங்களுக்கும் ஓடி மறைந்தனர். ஜூலியஸ் சீசரின் படை வீரர்கள் வெறுங்கையுடன் திரும்பியவாறே இப்படையெடுப்பும் பயனற்று விடும் என்று அவர்கள் நம்பினார்கள் போலும்!

பிளாடியஸ் கரக்டகஸையும் டோகோதுமனஸையும் வெற்றி கண்டார். டோகோதுமனஸ் முதல் போரிலோ அல்லது அதனை அடுத்த மோதலிலோ இறந்து விட்டார். எனினும் கரக்டகஸ், ரோமானிய தளபதிக்கு அமைதியைக் கொடுக்காமல் தொடர்ந்து தொல்லைகளைக் கொடுத்தார். போதுனி (Boduni) என்னும் பிரிட்டானிய இனத்தவர் பிளாடியஸிடம் சரணடைந்தனர். அவர்கள் கட்டவெலானி இனத்தவரிடம் அடிமைப்பட்டிருந்தனர். பிளாடியஸ் அவர்களிடையே படையொன்றை விட்டு விட்டு, மேலும் முன்னேறினார். காலியப் படை வீரர்களின் முன்னேற் றத்தைத் தடுத்த ஆறொன்றில் தம் தளவாடங்களுடன் நீந்தி மறு

கரை சேர்ந்தனர். ஆயத்தமில்லாதிருந்த காட்டுமிராண்டிகள் மீது அப்படையினர் ஏவப்பெற்று, ரோமானியர் வெற்றி கண்டனர். இருப்பினும் பிரிட்டானியர் எதிர்த்துப் போரிட்டனர். ஆயினும் அவர்களால் வெற்றி காண இயலவில்லை.

பேரரசர் கிளாடியஸும் அதே ஆண்டில் (கி. பி. 43) பிரிட்டன் வந்து சேர்ந்தார். அவருடைய நேர் தலைமையில் ரோமானியப் படை தேம்ஸ் ஆற்றைக் கடந்து கோல்செஸ்டரைக் கைப்பற்றியது. பின்னர் ரோமானியப் படைகள் மேலைத் திசை நோக்கி முன்னேறின. இலண்டனிலிருந்து அவை அலை அலையாக முன்னேறித் தாழ்நிலங்களின் பெரும் பகுதியை வெற்றி கண்டன. ஆஸ்டோரியஸ் ஸ்காபுலா என்னும் புதிய தளபதி லிங்கனிலிருந்து எக்ஸிடார் வரை நாட்டின் குறுக்கே தற்காலிக எல்லையொன்றை அமைத்தார். (பின்னர் அதை பாஸ் வழி [Fosse Way] என்றழைத்தனர்.)

**கரடகஸ்(Caratacus) :** பாஸ்ஸிலிருந்து படைகள் செவர்ன் ஆறுவரை முன்னேறி அங்கே தங்கலாயின. அப்படைகள் பெரும்பாலும் கோல்செஸ்டரிலோ அன்றி விரோகோனியம் (வொரொக்ஸிடார்) என்னுமிடத்திலோ தங்கியிருக்கக்கூடும். கி.பி. 50ஆம் ஆண்டு வாக்கில் அவை டி (Dee)ஆற்றங்கரை வரை போய்ச் சேர்ந்தன. தாழ்நிலங்கள் இப்போது ரோமானியரால் கவரப் பட்டன. எனினும் அவர்தம் பணி முழுமை அடையவில்லை. சொல்லொணா தொல்லைகள் நிறைந்த பணி இனிமேல் தான் வரவிருந்தது. வேல்ஸை வெற்றிகாண சற்றேறக்குறைய முப்பதாண்டுகளாயின. இங்கு தான் சிம்பலின் என்ற பிரிட்டானிய அரசரின் மகனான கரடகஸ் என்னும் பெயருடையார் ரோமானியரைக் கடுமையாக எதிர்த்துப் போரிட்டார். அவர் கோல்செஸ்டரிலிருந்து தப்பியோடியவர். தென்வேல்ஸில் குடிபெயர்ந்திருந்த சில்லூரியர்களைக் கொண்டு கரடகஸ் கடுமையான எதிர்ப்பினை உருவாக்கியிருந்தார். மத்திய வேல்ஸிலோ அன்றி வடவேல்ஸிலோ காடுகள் நிறைந்த நாட்டுப்புறங்களில் போரிட்டுக் கொண்டிருந்த வேளை அவர் சிறைப்படுத்தப் பெற்று, கைதியாக ரோமாபுரிக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவருடைய வருகையை ரோமானியர் வெற்றித் திருநாளாக விழாக் கொண்டாடும் வேளையில், சிறையான கரடகஸையும் அவருடைய குடும்பத்தினரையும் காட்சிப் பொருளாக்கினர். தம்முடைய விவகாரங்களை முறைபிசகாக நடத்தியிராமலிருந்திருந்தால் அவர் ரோமாபுரிக்குச் சிறைக் கைதியாக வராமல் ரோமானியப் பேரரசரின் நண்பராக வந்திருப்பார் என்று கரடகஸ் பேரரசரிடமே

வாதித்தார். கரடகஸின் அஞ்சா நெஞ்சத்தையும் துணிச்சலையும் கண்ணுற்ற கிளாடியஸ், அவரைக் கொல்லாமல் விட்டு விட்டார். ரோமாபுரியின் சீரையும் சிறப்பையும் கண்டபோது கரடகஸ், பேரரசரிடம் கூறியவாசகம் குறிப்பிடத்தக்கதாகும். 'பொன்னையும் மணிகளையும் உரிமை கொண்டாடும் தாங்கள் பிரிட்டனின் குடிசைகளைக் கவர்ந்திருக்கிறீர்கள். இது நியாயமாகுமா?'

கரடகஸின் தோல்விக்குப்பின், ரோமானியர் பல்லாண்டுகளைச் செலவழித்து நத்தை வேகத்தில் வேல்ஸ் பள்ளத்தாக்குகளின் வழியாக கடற்கரை வரை முன்னேறினர். சுடோனியஸ் பாலினஸ் (Suetonius Paulinus) என்பார் கி. பி. 61ஆம் ஆண்டு வாக்கில் ஆங்கில்ஸி வரை சென்று, அங்கு கணக்கற்ற ட்ரூயிட்டுகளைக் கொன்று குவித்தார். அவர் பிரிட்டிஷ் தீவுகளில் இருந்த போதே அதிர்ச்சிதரும் செய்தியொன்று அவரை வந்தடைந்தது. தொலைதூரத்திலிருந்த கிழக்கு பிரிட்டனில் அய்சினி என்னும் இனத்தவர்கள் ரோமானியருக்கெதிராக போர்க்கொடி உயர்த்தினர். அய்சினி இனத்தவர் அனைவரும் கீழ்ப் படிந்து விட்டதாக ரோமானியர் எண்ணி இறுமாந்திருக்கும் வேளையில் கிளர்த்தெழுந்த இக்கிளர்ச்சிக்கு உள்நாட்டினரைக் கொடுமையாக நடத்திய ரோமானிய கவர்னரின் செய்கையே காரணமாகும். உள்நாட்டினர் அவர்தம் அரசியார் பொடீஷியா என்பாளின் தலைமையில் ரோமானியரை எதிர்த்தனர். ரோமானிய கோல்செஸ்டரில் அப்பாவிகளான குடிமக்களை அவர்கள் கொன்று குவித்தனர். இச்செய்தியைக் கேள்வியுற்றதும், சுடோனியஸ் பாலினஸ் கீழ்த் திசைக்கு இராணுவத்துடன் விரைந்தார். ஆனால் அவரால் விருலம் (செயின்ட்ஸ் ஆல்பன்ஸ்)மற்றும் இலண்டன் போன்ற நகரங்களைக் காக்க இயலவில்லை. அந்நகரங்கள் தீக்கிரையாயின. எனினும் சுடோனியஸ் கலகக்காரர்களின் சேனையையும், பொடீஷியாவையும் முறியடித்துத் தோற்கடித்தார். அனைத்தும் பறி போனதை அறிந்த பொடீஷியா தீரமாகப் போரிட்டு தற்கொலை செய்து கொண்டாள். கலகத்தை ரோமானியர் ஈவிரக்கமில்லாத முறையில் அடக்கினர். கோல்செஸ்டர், விருசலம் (செயின்ட் ஆல்பன்ஸ்) இலண்டன் நகர மக்கள் மடிந்ததைப் போன்று எண்ணற்ற கலகக்காரர்களும் படுகொலை செய்யப்பட்டனர்.

**அக்ரிகோலா (கி.பி. 77 முதல் 85 வரை):** அடுத்த பதினேழு ஆண்டுகள் வேல்ஸைக் கைப்பற்ற ரோமானியர் பயன்படுத்தினர். அதே காலகட்டத்தில் அவர்கள் வட பிரிட்டனில் பிரிகாண்டியர் வாழ்ந்த பகுதியின் மீதும் படையெடுத்துக் கைப்பற்றினர். கி.பி. 75ஆம் ஆண்டு வாக்கில் வட பிரிட்டனில்




படம்-2

ரோமானிய பிரிட்டன்

இபுராகம் (Eburacum) என்ற நகரையும் அவர்கள் நிர்மாணித்தனர். அந்நகரே பின்னர் யார்க் நகரம் எனப் பெயர் பெற்றது. பின்னர் பேரரசர் வெஸ்பாஸியன் என்பார் கி.பி.77 ஆம் ஆண்டில், ஜூலியஸ் அக்ரிகோலா என்பாரைப் பிரிட்டனுக்கு ரோமானிய கவர்னராக அனுப்பிவைத்தார். பிரிட்டனுக்கு வந்துபோன ரோமானிய ஆட்சியாளர்கள், போர்வீரர்கள்-ஆகியோரில் மிகுந்த திறமைசாலி அக்ரிகோலா. அவருடைய மருமகன்தான் வரலாற்றுசிரியரான டாசிடஸ் என்பார். அவர் தாம் எழுதிய குறிப்புகளில் அக்ரிகோலா நடாத்திய போரைக் குறித்து விவரமாக வருணித்துள்ளார். அத்துடன் அக்ரிகோலாவின் குணப்பண்புகளை வெகுவாகப் பாராட்டி எழுதியுள்ளார்.

**அக்ரிகோலாவின் பணிகள்:-** அக்ரிகோ்லா முதன் முதலில் வடவேல்ஸை வெற்றி கண்டார். பின்னர் வட இங்கிலாந்தில் வாழ்ந்த பிரிகாண்டியரின்பால் தம் கவனத்தைத் திருப்பினார். ஓராண்டு கால படையெடுப்பிற்குள் அவர் சால்வேபோர்த் (Solway Forth) வரை முன்னேறிச் சென்றார். நாட்டைப் பாதுகாக்க அவர் கோட்டைகளைக் கட்டினார். மேலும் பின்னர் மலைத்தொடருக்குக் குறுக்கே சாலையொன்றினையும் அமைத்தார். பிற சாலைகளைப் பற்றிய விவரம் நமக்குக் கிடைத்தில பின்னர் அக்ரிகோலா ஸ்காட்லாந்திற்குள் நுழைந்தார். தாழ் நிலங்களை வெற்றி கண்டதோடு அவர் போர்த்துக்கும்(Forth) கிளைடிற்கும் இடையே மற்றுமொரு கோட்டைத் தொடரைக் கட்டி முடித்தார். பெர்த்ஷயரில் மோன்ஸ் கிரௌபியஸ் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் அவர் வெற்றி கண்டார். (கி. பி. 84 ஆம்ஆண்டு). அதனையடுத்து ஸ்காட்லாந்தின் மேட்டு நிலப்பகுதிகளை அவர் வெற்றி காண முடிவெடுத்தபோது ரோமாபுரிக்குத்திரும்பி அழைக்கப் பட்டார்.

அக்ரிகோலாவின் பணி சீரிய முறையில் அமைந்திருந்தது. அவர் இராணுவ நடவடிக்கைகளை மட்டும் மேற்கொள்ளவில்லை. பிரிட்டானியரை ரோமானிய மயமாக்கிய பெருமையும் அவரையே சாரும்.

அக்ரிகோலாவின் பணிகளைப் பற்றி டாசிடஸ் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :—

"தனித்தனியே பிரிந்து நின்ற பிரிட்டானிய மக்கள், கலைத் திறமையற்று, போர் புரிவதில் ஆர்வம் மிக்கவர்களாயிருந்தனர். அவர்களை ஆடம்பரமான வாழ்க்கையைச் சுவைக்கச் செய்

வதன் மூலம் அமைதியும் சமாதானமும் கொண்ட முறைக்கு பழக்கப்படுத்த வேண்டும் என்னும் நோக்கோடு, கோவில்கள் கட்டிக் கொள்ளுமாறும், நீதி மன்றங்களை அமைத்துக் கொள்ளுமாறும், வாழ வசதியான வீடுகளைக் கட்டிக் கொள்ளுமாறும் அக்ரிகோலாவே நேரிடையாகத் தூண்டினர். பிரிட்டானிய இனத்தலைவர்களின் பிள்ளைகளுக்குப் பரந்த கல்வியைப் புகட்டவும் அவர் வழிகோலினர். அதன் விளைவாக ரோமானிய மொழியை வெறுத்து ஒதுக்கியவர்கள் இப்போது அதன் இலக்கியத்தைக் கற்கப் பேரார்வம் காட்டினர். அப்போதிருந்து, அவர்கள் ரோமானிய பாணியில் உடை உடுக்கவும் விழைந்து டோகா என்னும் ரோமானிய அங்கியை உடுத்து நாகரிகமிக்கவர்கள் போன்று காட்சியளித்தனர். படிப்படியாக அவர்கள் நாகரிக வளர்ச்சிக்கு வழிகாட்டப்பெற்று, சோம்பல், குளியல், நல்விருந்து போன்ற தீயப்பழக்கங்களுக்கு இரையாஞர்கள். அறியாமையால் அவர்கள் இவற்றையெல்லாம் நாகரிகம் என்று நம்பினர். அடிமைத்தளைக்கு அவை அவர்களை ஆட்படுத்தும் என்ற உணர்வே அவர்களுக்கு மழுங்கி விட்டது போலும்.

ஸ்காட்லாந்தைக் கட்டிக் காப்பது அவ்வளவு எளிதான செயலாகத் தோன்றவில்லை. பேரரசர் ஹாட்ரியன் என்பாரின் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்தில் வடபகுதியில் பெருங் கலகமொன்று மூண்டது. இக்காலத்தில்தான் ரோமானியப் படையின் ஒன்பதாம் அணி மாயமாய் மறைந்தது. ஸ்காட்டிய தாழ்நிலங்களை ரோமானியர் ஏற்கனவே கைவிட்டனர். புதிய கோட்டை கொத்தளங்கள் கட்டப்பட்டன. வல்லம் (Vallum) என்னும் பெயரால் அழைக்கப்படும் ஆழ்ந்த பள்ளம் ஒன்றினை பர்க்-ஆன்-சான்ட்ஸ் (Burgh-on-sands) முதல் நியூகாசில் வரை தோண்டினர். அங்கு டைன் ஆற்றிற்குக் குறுக்கே பொன்ஸ் ஆலியஸ் என்னும் பாலமொன்றும் கட்டப்பட்டது.

**ஹாட்ரியனின் வருகை கி. பி. 121:—** கி. பி. 121 ஆம் ஆண்டில் பேரரசர் ஹாட்ரியன் பிரிட்டனுக்கும் வருகை புரிந்தார். தமது ஆட்சியின் பெரும் பகுதியான இருபதாண்டுகளில் அவர் பேரரசின் புகழ்மிக்க பயணமென்று கருதப்படும் யாத்திரையை மேற்கொண்டார். பிரிட்டனில் அவர் பெயரால் அழைக்கப் பெறும் மதிள் சுவரைக் கட்டும் திட்டத்தைத் தீட்டியவரும் அவரே. ரைன், டான்யூப் ஆறுகளின் எல்லைப் புறங்களில் கட்டப் பெற்றிருந்த சுவர்களைப் போன்றே பிரிட்டனிலும் 'ஹாட்ரியன் சுவர்' என்னும் பெயரில் கட்டப்பட்டது.

**ஹாட்ரியனின் சுவர்:-** நார்த்தம்பர்லாந்து குன்றுகளினூடே எடுப்பாகக் கட்டப்பட்டுள்ள ஹாட்ரியனின் சுவர் வடக்கு நோக்கி யுள்ளது. அதன் நீளம் 73 மைலாக இருந்தது. மேற்குக் கடலி லிருந்து கிழக்குக் கடற்கரை வரை நீண்டிருந்தது இச்சுவர். இச் சுவர் அடுத்தடுத்திருந்த 17 மலைக்கோட்டைகளை இணைத்தது. 78 மைல்நீளத்திலும் ஒவ்வொரு ரோமானிய மைல் இடைவெளிவிட்டு சிறுகோட்டைகளும் கட்டப்பட்டிருந்தன. அதை மைல்கோட்டை என்பர். ஒரு ரோமானிப மைல் என்பது சற்றேறக் குறைய 1618 கஜமாகும். ஒரு மைல் கோட்டைக்கும் மற்றொரு மைல் கோட்டைக்கும் இடையில் இரு மணிக் கூண்டுகளும் (Turrets) கட்டப் பெற்றிருந்தன. சுவர் உச்சியின் மீது காவல் துறையினர் ரோந்து பார்த்தனர், அக்காவலாளிகள் அந்த மைல் கோட்டை களுக்குள்ளேயே தங்கி வாழ்ந்தனர். இவை அவர்களின் நிலை யான இருப்பிடமாயின, இராணுவத்தின் முக்கிய காப்புப்படை யினர் பெரிதாகயிருந்த 17 கோட்டைகளில் வாழ்ந்தனர். அச்சுவர் நீண்டதொரு காவல் அரணாக இருந்ததுடன், படையெடுத்து வரும் கூட்டங்களைத் தடுத்து நிறுத்தும் தடுப்புச் சுவராகவும் இருந்தது. ரோமானிய பிரிட்டனைக் காண விரும்புவோர் இன்றும் நிலைத்து நிற்கும் ஹாட்ரியன் சுவரினைக் கண்டு களிக்கலாம். ஒரு காலத்தில் அச்சுவர் இருபதடி உயரம் இருந்தது; ஆனால் இன்று பெரும்பாலும் அது நான்கு அல்லது ஐந்தடி உயரத் திற்குள்ளேயே நிற்கிறது. அழிவுற்ற நிலையிலும் அச்சுவர் பார்ப் பதற்கு அழகாகத் தென்படுகிறது. நார்த்தம்பர்லாந்து முட்புதர்க் காடுகளின் குறுக்காக அச்சுவர் செல்லுமிடத்தில் அதைக் காண் பது மகிழ்ச்சியூட்டும். அங்கு இன்றும் கூட முட்புதர்களிடையே நடந்து சென்றால் மக்கள் நடமாட்டமே இல்லாதிருப்பதை உணர லாம். சுவரும், அழுகுரலெழுப்பும் வளை மூக்குள்ள பறவைகளுமே நம் தோழர்களாகத் தொடர்ந்து வரும். இங்கு தான் ஒரு காலத் தில் ரோமானியப் பேரரசினைச் சார்ந்த போர்வீரர்கள் காவல் காத்து நின்றனர். இங்கு கட்டப் பெற்றிருந்த கோட்டைகளில் தான் காவல் படையினர் தங்கியிருந்து ரோமானியப் பேரரசின் வடவெல்லையைக் காவல் காத்தனர்.

**அந்தோனியஸின் சுவர், கி. பி. 140 -** ஹாட்ரியனை அடுத்து வந்தவர் அந்தோனியஸ் பயஸ் என்பாராகும். அவர் ரோமானிய பிரிட்டனின் எல்லைகளை மேலும் விரிவடையச் செய்யும் நோக்கத்தைக் கொண்டவர். ஹாட்ரியனைப் போலவே, அவரும் சுவர் ஒன்றைக் கட்ட ஆணையிட்டார். அக்ரிகோலாவின் காலத் தில் வட எல்லையாயிருந்த பகுதியில் அச்சுவர் எழுப்பப் பெற்றது. அதனை அந்தோனைன் சுவர் (Antonine wall) என்பர். அச்சுவர்

போர்த் ஆற்றுக் கழிமுகத்திலிருந்து கிளேடு ஆற்றுக் கழிமுகம் வரை நீண்டு சென்றதற்கான அடையாளங்களை இன்றும் காண லாம். அச்சுவர் கற்களினுல் கட்டப்படவில்லை; மாருக புல் லார்ந்த மண்கட்டிகளால் கட்டப்பட்டது. அதனுல் தான் அச் சுவர் நிலைத்து நிற்கவில்லை. அச்சுவரின் நீளத்தையொட்டி அதன் இடையிடையே கோட்டைகள் கட்டப் பெற்றன. ஸ்காட் லாந்து தாழ்நிலங்களை ரோமானியப் பேரரசிற்குள் அடக்க முயன்ற முயற்சி இம்முறையும் வெற்றி பெறவில்லை. காலப்போக்கில் ரோமானியர் ஹாட்ரியன் சுவர் வரை துரத்தப்பட்டனர். போர் வெறி கொண்ட பேரரசர் செவிரஸ் கலிடோனிய இனத்தையே அழித்தொழித்து விடுவதாகச் சூளுரைத்து அவர்களை மேட்டு நிலங்கள் வரை துரத்தியடித்து அபர்டீன் என்றும் நகர் வரை முன்னேறினுர். ஆனுல் அவர் நோய்வாய்ப்பட்டதின் விளை வாக திரும்ப வேண்டியவரானுர். கி. பி. 211 ஆம் ஆண்டில் அவர் யார்க் நகரில் காலமானுர். ஸ்காட்டிய மேட்டு நிலங்களை யும் வெற்றி காண விழைந்த ரோமானியரின் முயற்சி இவ்வகை யாக முடிவுற்றது. செவிரஸ் அறுபத்தைந்தாண்டுகள் வாழ்ந்தார். ஆனுல் பேரரசராகப் பதினேழாண்டுகள் பதவி வகித்தார். இங்கிலாந்தில் ரோமானியரின் நடவடிக்கைகளை விவரமாக அவர் காலம் வரையில் தான் அறிகிருேம். செவிரஸின் மரணத் திற்குப் பின்னர் அவருடைய பிள்ளைகள் கலிடோனியரைப் பழி வாங்கும் பகைமை உணர்ச்சியைக் கைவிட்டனர்; குளிர் நிறைந்த வடவெல்லையைப் புறக்கணித்து விட்டு ரோமாபுரியில் நடை பெற்றளியாட்டங்களில் பங்குகொள்ள நாடு திரும்பினர். பிள்ளை களுக்கிடையே மூண்டிருந்த பகைமை உணர்வு இப்போது தலை தூக்கலாயிற்று. இறுதியாக கரகல்லா (Caracalla) என்பார் பதவி யைக் கைப்பற்றினுர்.

கி. பி. 217ஆம் ஆண்டுவாக்கில் அவர் படுகொலை செய்யப் பெற்ருர். ஆனுல் அவருடைய உறவினர்கள் கி. பி. 235ஆம் ஆண்டுவரை பேரரசுப் பதவி வகித்தனர். இவ்வாருக செவிரஸின் வம்சத்தினர் நாற்பதாண்டுகளுக்கு மேலாக ஆட்சி நடாத்தினர். இவ்வம்சத்தினர் காலத்தில் பிரிட்டனில் நடைபெற்ற ரோமானி யரின் ஆட்சியைக் குறித்து ஏராளமான நாணயங்களையும், சாசனங்களையும் விட்டுச் சென்றனர். கி. பி. 235 முதல் 284 வரை ஏறத்தாழ அரை நூற்ருண்டுகாலம், ரோமானியப் பேரரசில் பெருங்குழப்பமான சூழ்நிலை நிலவியது. பேரரசு சீர்குலைந்து போகும் அவலநிலை தலைதூக்கியது. அதன் எல்லைப் புறங் களில் காட்டுமிராண்டிகள் தாக்கலாயினர். இக்காலகட்டம் தான் கோத்திய படையெடுப்புகள் மூண்ட காலமாகும் (244-270).

கோத்திய படையெடுப்பினுல் இருதரத்திலும் சொல் லொணு இழப்புகளுக்குப் பின்னர், போரின்போது மூண்ட கொள்ளைநோயால் ரோமானியப் பேரரசர் ஒருவர் காலமானுர். காட்டுமிராண்டிகள் டாஷியா (Dacia) என்ற பெரும் மாநிலத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். போர் ஓய்ந்தது. ட்ராஜன் பேரரச ரானபோது அப்பகுதியை மீண்டும் வெற்றி கண்டார். இக்கால கட்டத்தில்தான் பாரசீகர்களால் ரோமானியப் பேரரசர் ஒருவர் தோற்கடிக்கப்பெற்று, பாரசீகப் பேரரசிரின் கால்மணையான அவலநிலை ஏற்பட்டது. அதைவிட உள்நாட்டில் ஏற்பட்ட அமைதியின்மையின் விளைவாக நாட்டில் சீர்கெட்ட நிலை மூண்டது. 235க்கும் 284க்கும் இடைப்பட்ட நாற்பத்தொன்ப தாண்டு காலத்தில் ரோமாபுரியில் பதினைந்து பேர் பேரரசர்களா யிருந்தனர் என்பதிலிருந்தே நாட்டின் சீர்குலைந்த நிலையை உணர முடியும். சராசரியாக ஒவ்வொரு .பேரரசரும் மூன்ருண்டு காலத்திற்குச் சற்று அதிகம் பேரரசராயிருந்தனர். ஒவ்வொரு பேரரசரின் காலத்திலும் கலகமும் கொலையுமே நீடித்து நிலைத் தன என்ருல் அது மிகையாகாது. அடிக்கடி ஏற்பட்ட ஆட்சி மாற்றத்தினுல் நாட்டில் சட்டமும் அமைதியும் சீர் குலைந்தன. இக்காலத்திற்கான எழுத்துவாயிலான சான்றுகள் இல்லாது போனதில் வியப்பொன்றும்மில்லையன்ருே? ஐயமற ரோமானியரின் செல்வாக்கு பிரிட்டனில் வற்றத்தொடங்கியது. இக்காலத்தில் ஹாட்ரியன் சுவருக்கும், அந்தோனியஸின் சுவருக்கும் இடைப்பட்ட பகுதியில் காட்டுமிராண்டிகள் நிலை யாக வாழ்ந்ததால் ரோமானியரின் செல்வாக்கு குறைந்துவிட் டதை உறுதியாக உணரலாம். நார்த்தம்பிரிய படைவீடுகள் கூட சூறையாடப்பட்டிருக்கக்கூடும். கி. பி. 284 ஆம் ஆண்டுவாக்கில் ரோமானியப் பேரரசின் அவலநிலை முடிவுற்று, ரோமானியரின் செல்வாக்கு மீண்டும் உயரலாயிற்று. அவ்வாண்டில் டயகிளி ஷியன் (Diocletian) ரோமானியப் பேரரசரானுர். அவரை இரண்டாம் அகஸ்டஸ் என்றும் கூறுவர்.

பேரரசர் டயகிளிஷியன் எளிய குடும்பத்தில் உதித்தவர். ஆனுல் அவர் சீர்குலைந்து அழிவுற்ற நிலையிலிருந்த பேரரசை சீர்திருத்தி நாட்டில் அமைதியை நிலைநாட்டினுர். அதன் பயனுக அடுத்த நூருண்டுகள் பேரரசில் அமைதி நிலவியது. அவர் காலத்தில்தான் பேரரசின் அதிகாரங்கள் நான்காய்ப் பிரிக்கப்பட்டு பிரிஃபெக்ட் என்ற தலைவர்களிடம் ஒப்படைக்கப் பட்டது. பல்கிப் பெருகி, பரந்து விரிந்திருந்த பேரரசை ஒருவரே ரோமாபுரியிலிருந்து ஆள்வது சரியல்ல என்பதை உணர்ந்தறிந்த டயகிளிஷியன் பேரரசை நான்கு பிரிவுகளாகப் பிரித்தார். கீழ்த்

திசைப் பகுதியை ஆளும் பொறுப்பை டயகிளிஷியனே ஏற்றுக் கொண்டார். எகிப்து, சிரியா, ஆசியா மைனர், திரேஸ் ஆகிய பகுதிகளைக் கொண்டிருந்தது இக்கீழ்த்திசைப்பகுதி. அவருடைய சமகாலத்தவரான மாக்ஸிமியன் என்பார் இத்தாலி, தென் ஜெர்மனி, பெரும்பாலான ரோமானிய ஆப்பிரிக்காவின் பகுதி ஆகியவற்றின் அதிபர் ஆனார். ஏழாண்டுகாலம் பேரரசராக ஆட்சி நடத்திய பின், டயகிளிஷியன் இளந்தலைமுறையினர் இருவரை ஆட்சிப் பொறுப்பில் இணைத்துக் கொண்டார். அவ்விருவரும் சீசர்கள் எனப்பட்டனர். இல்லிரியப் பகுதிகளை கேலரியஸ் (Galerius) என்பார் ஆண்டு வந்தார். அனைவரையும் விட வயதில் இளையவரான கான்ஸ்டண்டியஸிடம் குளோரஸ் (Canstantius Chlorus) மேற்குத்திசைப் பகுதிகளை ஆளும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. மேற்கு ஆப்பிரிக்கா, ஸ்பெயின், கால், பிரிட்டன், ஆகியவை மேற்குத் திசையில் இருந்த ரோமானியப்பேரரசுக் பகுதிகளாம். மேற்கத்திய சீசருக்கு மாபெரும் மனக்குறை ஒன்று இருந்தது. பேரரசின் பிற பகுதிகளில் அமைதி நிலவியிருந்தது. ஆனால் பிரிட்டனில் அமைதி நிலவவில்லை. மற்றும் அது பேரரசில் இணைந்த பகுதியாகவும் கருதப்படவில்லை. இதற்குக் காரணம் இருந்தது. பேரரசர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரி ஒருவர் துரோகியாய், கடற்கொள்ளைக் காரர்களுடன் சேர்ந்து கொண்டு, பிரிட்டன் சென்று அங்கு சுதந்திரமான பேரரசர் போன்று ஆள எண்ணினார். பேரரசர் மாக்ஸ்மியன் ஐயுறவு கொண்டு கரசியஸ் என்ற அத்தலைவனைக் கட்டுப்படுத்த எண்ணித் தம்மைக் காண வேண்டுமென அவருக்குச் செய்தி அனுப்பினார். ஆனால் பேரரசர் தன்னைக் கூப்பிடுவதின் நோக்கத்தை அறிந்த கரசியஸ் (Carausius) போலோனிலிருந்து பிரிட்டனுக்குக் கப்பலேறிச் சென்று பிரிட்டனைத் தம் வசமாக்கிக் கொண்டார் கட்டுப்பாடற்ற நிலையில் இருந்த ரோமானிய அரசாட்சியை அவரால் கட்டுப்படுத்த முடிந்ததில் வியப்பொன்றுமில்லை. கி. பி. 287 முதல் 293 வரை ஆறு ஆண்டுகள் கரசியஸ் பிரிட்டனின் பொறுப்பினை வகித்து 'பிரிட்டனின் பேரரசர்' போன்று காட்சியளித்தார். எனினும் அவருடைய நிர்வாகத்தை அறிவதற்கான சான்றுகள் பெரும்பாலும் இல்லையென்றே கூறிவிடலாம். அவருடைய ஆட்சிக்குச் சான்று பகரும் ஒரு சில நாணயங்கள் கிடைத்துள்ளன. இறுதியில் கரசியஸ் கொலையுண்டார்.

கரசியஸின் ஆட்சிக்குப் பின்னர் அலெக்டஸ் என்பார் மூன்றாண்டுகள் ஆட்சி நடத்தினார். இறுதியாக கி. பி. 296 ஆம் ஆண்டில் கான்ஸ்டண்டியஸ் அலெக்டஸைப் பதவியிலிருந்து

விரட்டினார். மீண்டும் பிரிட்டனை பேரரசர் கான்ஸ்டண்டியஸ் கைப்பற்றினார்.

பத்தாண்டுகளுக்குப் பின்னர் நோய்வாய்ப்பட்ட பேரரசர், தாம் இன்னும் நீண்ட காலம் வாழப் போவதில்லை என்பதை அறிந் தவராய், தம் அன்புக்குரிய மகன் கான்ஸ்டன்டைனின் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்தார். கான்ஸ்டன்டைன் அவருடைய வைப்பாட்டியான ஹெலீனா என்பாளின் மகன்; துணிச்சல் மிக்கவர்; கைதேர்ந்த போர் வீரர். டயகிளீஷியனும், மாக்ஸ்மியனும் பேரரசின் முடியைத் துறந்திருந்தனர். கான்ஸ்டண்டியஸ் சீசர் என்ற விருதிலிருந்து உயர்த்தப் பெற்று அகஸ்டஸ் என்னும் உயரிய விருதினைப் பெற்றிருந்தார். இருப்பினும் அவரும் கேலரியஸும் ஒரு வித மரியாதை பெற்றவர்களாகக் கருதப் பெற்று, இருவரும் சீசர் என்ற பெயரினைச் சூட்டிக் கொள்ள அனுமதிக் கப்பட்டிருந்தனர். இவ்விரு இளந் தலைமுறையைச் சார்ந்த பொறுப்பேற்ற பங்காளிகளுள் கான்ஸ்டன்டைன், ஒருவரல்ல. மேலும் கான்ஸ்டன்டைன், கேலரியஸின் பிணைப் பொருளாகக் கருதபெற்று பிதினியன் மாளிகையில் வைக்கப்பட்டிருந்தமையால், கான்ஸ்டன்டைனைப் சந்திக்க தந்தைக்கு வாய்ப்பு கிட்டுவதும் ஐயமாக இருந்தது. ஆனால் பலவீனமான தொரு சூழ்நிலையில் கான்ஸ்டன்டைனை போகுமாறு அனுமதித்தார் கேலரியஸ். அரண்மனையிலிருந்து சொல்லிக் கொள்ளாமலேயே ஐரோப்பாவில் போலோனிலிருந்த தம் தந்தையைக் காண விரைந்தார் கான்ஸ்டன்டைன்.

கான்ஸ்டன்டைன் நலமாக போலோன் நகர் போய்ச் சேர்ந்தார். அந்நகரமே அவருடைய தந்தையாரின் தலைநகராக இருந்தது. கான்ஸ்டன்டைன் தந்தையாருடன் பிக்டுகளுடன் நடந்த சிறுபோர் ஒன்றில் பங்கு கொண்டனர். இப்போருக்குப் பின்னர் உடல் மெலிந்து, நோய்வாய்ப்பட்டிருந்த கான்ஸ்டன்டியஸ் கி. பி. 306 ஆம் ஆண்டு ஜூலை 25ஆம் நாள் உயிர் துறந்தார். தந்தையாரின் மரணத்திற்குப் பின் கான்ஸ்டன்டைனையே போர்வீரர்கள் அகஸ்டஸ் என உற்சாகமாக வரவேற்று, தந்தை இறந்த அதே இடத்தில், அவருடைய மகன் முடி சூட்டப் பெற்றார். கான்ஸ்டன்டைன் விரைவில் பிரிட்டனிலிருந்து ரோமாபுரி சென்று அங்கு நடை பெற்ற பேரரசினைக் கைப்பற்றும் போட்டா போட்டிகளில் பங்கு பெற வேண்டியவரானார். அங்கு நடைபெற்ற அரசியல் சதுரங்கத்தில் பலர் மாறி மாறி பதவி பெறவும் சிலரது தலைகள் உருளவும் நேர்ந்தது. பதினெட்டாண்டுகளுக்குப் பின்னர் கான்ஸ்டன்டைனே பேரரச

ராகப் பதவியேற்ருர். கான்ஸ்டன்டைன் தான் பிற்காலத்தில் கிருஸ்தவ சமயத்தைத் தழுவி, ரோமானியப் பேரரசர்களும், குடி மக்களும் கிருஸ்தவர்களாக மதம் மாற உதவி செய்தவர். அது மட்டுமன்று. பாஸ்போரஸ் என்னும் இடத்திற்குத் தம் புதிய தலை நகரை மாற்றி அமைத்த பெருமையும் அவரையே சாரும். அவ ருடைய பிற்கால வரலாற்றுச் சம்பவங்களுக்கும் பிரிட்டனுடன் தொடர்பில்லாமையால் அவற்றை நாம் ஆராயத் தேவையில்லை. இருப்பினும் ஒரு விஷயத்தை மட்டும் மறக்கக் கூடாது. பிற்கால ஐரோப்பாவின் வரலாற்றில் சீரிய இடத்தைப் பெற்று, உலகுக்கு வழிகாட்டின ஒரு பெரியாரின் வரலாறு இங்கிலாந்தில் தொடங்கியது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். ஒரு வகையில் யார்க் நகரமே கான்ஸ்டான்டிநோபிலின் தாய் நகரம் என்ருல் அது மிகையாகாது. பாஸ்போரஸ் நகரம்தான் பின்னர் கான்ஸ்டான்டி நோபில் என்றழைக்கப்பட்டது. (இன்று அதனை இஸ்டான்புல் என்பர்).

ரோமானிய பிரிட்டனின் அடுத்த அரை நூற்றுண்டு வரலாற்றை இனிக் காண்போம். கி. பி. 337-க்கும் 350-க்கும் இடைப்பட்ட காலத்தில் கான்ஸ்டன்டைனின் மகன் பேரரசர் கான்ஸ்டன்ஸ் என்பார் பிரிட்டன் வந்திருந்ததாகக்கூறும் ஓரிரு குறிப்புகளைத் தவிர, கி. பி. 306க்கும் 367க்கும் இடைப்பட்ட காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றி அறிய நமக்குச் சான்றுகள் கிடைத்தில. கி. பி 306 ஆம் ஆண்டில் ன்ஸ்டன் டைன் பேரரசராக அறிவிக்கப்பட்டார். கி. பி. 367 ஆம் ஆண்டில் மூத்த தியோடோசியஸ் பிரிட்டனுக்கு அனுப்பப்பட்டார். இவரு டைய மகனே பிற்காலத்தில் பேரரசர் தியோடோசியஸ் என்ற பெயருடன் புகழுடன் விளங்கியவர். பிரிட்டனில் அமைதியை நிலை நாட்டும் பொருட்டு மூத்த தியோடோசியஸ் பேரரசர் வேலன்டினியன் என்பவரால் அனுப்பப்பட்டார். பேராசை மிகுந்த ரோமானிய கவர்னர்களின் கொடுங்கோன்மையால் பிரிட் டன் சொல்லொணுத் துயரில் ஆளுண்டது.

மூன்று ஆண்டு காலம் தியோடோசியஸ் பதவி வகித்த ஞான்று, வடபாலிருந்த பிரிட்டனைத் தாக்கிய படையெடுப்பாளர் கள் மலைப் பகுதிகளுக்கு விரட்டியடிக்கப் பட்டனர். தொன்மை யான நகரான லண்டனியம் படையெடுப்பாளரின் கொடுமை களிலிருந்து காக்கப்பட்டு, அதனைச் சுற்றியிருந்த பகுதிகள் பேரரசின் பெயரைக் குறிக்கும் வகையாக 'வேலண்டியா' என்றழைக்கப் பெற்றது. பிரிட்டனில் ரோமானிய அமைதி நிலை நாட்டப்பட்டது. எனினும் அது நீண்ட காலம் நீடிக்கவில்லை.

கி. பி. 383 ஆம் ஆண்டில் மாக்ஸிமஸ் என்ற தளபதியை இராணுவத்தினர் பேரரசராக அறிவித்தனர். அவர் கால் பகுதியில் நுழைந்தபோது அவருடன் இராணுவத்தின் பெரும்பாலான பகுதி இருந்ததென்னவோ உண்மைதான். அவர் கிரேஷியனின் படை வீரர்களிடையே துரோக எண்ணத்தை வளர்த்து விடவே, படைவீரர்களுக்கிடையே பெரும் கலகம் மூண்டது. கிரேஷியன் உயிருக்கஞ்சி தப்பியோடவே அவர் பின் தொடரப்பட்டு வியன்னே (Vienne) என்னும் நகரத்திற்கருகில் கொலையுண்டார். அடுத்த ஐந்தாண்டுகள் தியோடோசியஸ் மாக்ஸிமஸுடன் சேர்ந்து ஆள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. கி. பி. 388ஆம் ஆண்டில் மூண்ட கலகத்தில் மாக்ஸிமஸ் தோற்கடிக்கப் பெற்று அக்விலியா (Aquileia) என்ற இடத்தில் கொலையுண்டார். அக்விலியா ஏட்ரியாடிக் கடலின் வடகரையில் உள்ளது. இரண்டு நூற்றுண்டுகள் கழித்து நிலவிய மரபுவழிச் செய்திகளின்படி, மாக்ஸிமஸ் பதவியைக் கைப்பற்றியதும், அதன் விளைவாக பிரிட்டனிலிருந்த ரோமானியப் படைகளைத் தம்முடன் அழைத்துச் சென்று பேரரசர் பதவியைக் கைப்பற்ற முயன்றதுமே பிரிட்டனில் ரோமானிய ஆதிக்கம் நிலை குலையக் காரணங்களாயின.

எனினும் பிரிட்டிஷ் தீவுகளில் இன்னமும் பெரும்படை தங்கியிருந்தது. ஒருவேளை இது ஏட்டளவிலிருந்ததோ என்றலும் மிகையாகாது. கி. பி. 402 ஆம் ஆண்டுவாக்கில் வெளியிடப் பெற்ற 'நோட்டிஷிய இம்பீரி' (Notitia Imperii) என்ற பேரரசர் குறிப்பேடுகளிலிருந்து பிரிட்டனில் ரோமானிய காலாட்படையினரும், குதிரைப் படையினரும் இருந்ததற்கான சான்றுகளை அறிகிறோம். எனினும் 402ஆம் ஆண்டுவாக்கில் ஹாட்ரியன் சுவர் வரையிலான பிரிட்டனின் பகுதிகளை ரோமானிய படைவீரர்கள் காத்தனரா என்பது ஐயமாகவே உள்ளது. அதற்கான சான்றாக நாணயங்கள் கூட கிடைத்தில.

# 7. ரோமானிய பிரிட்டனில் வாழ்க்கை முறை

**மூன்று படை அணி நகரங்கள் :-**

உண்மையிலேயே ரோமானிய பிரிட்டன் என்பது இரு நாடுகளைக் கொண்டதெனலாம். பிரிட்டனை வெல்லும் நோக்குடன் நான்கு ரோமானிய படை அணிகள் தொடக்கத்தில் அனுப்பப்பட்டன. அவற்றில் மூன்று மட்டும் பிரிட்டனில் நீடிக்கப் பட்டன. நான்காம் அணி அக்ரிகோலாவுடன் திரும்பிச் சென்று விட்டது. இம் மூன்று அணிகளும் யார்க் (ஈபூராகம் Eburacum) செஸ்டர் (தேவா-Deva), உஸ்க் ஆற்றங்கரை நகரான கெய்ர்லியான் (Caerlen - on - Usk) அதனை இஸ்கா Isca என்றும் கூறுவர்) ஆகியஇடங்களில் படைவீடுகள் அமைந்திருந்தன. மேற் கூறிய மூன்று நகரங்களையும் இணைத்து கோடிட்டால், அது ரோமானிய பிரிட்டனை இரு பகுதிகளாகப் பிரிக்கும். இக் கோட்டிற்குத் தெற்கிலும், கிழக்கிலும் இருந்த நாட்டுப் பகுதியில் இராணுவ ஆதிக்கம் ஏற்படவேயில்லை; அது மட்டுமன்று இப் பகுதியில் பேரரசின் இறுதி நாட்கள் வரை போர் பற்றின சிந்தனையே எழவில்லை. இருநூற்றைம்பதாண்டுகள் இவ் வாய்ப்பினை இப்பகுதி பெற்றிருந்தது. இக்காலத்தை ஆங்கில வரலாற்றிலேயே அமைதியான காலகட்டம் என்று கூடக் கூற லாம். ஆனல் வட பகுதியிலும், மேற்குப் பகுதியிலும் நிகழ்ந்த கதையே வேறு விதமானது. இதற்குக் காரணம் இப்பகுதிகளின் பூகோள அமைப்பும் அதன் பயனாக வரலாற்றில் விளைந்த விளைவுகளுமாகும். வேல்ஸும், வடக்கு பிரிட்டனும் மலைப் பிரதேசங்கள்; எனவே அப்பகுதிகளை வெற்றி காண்பது கடின மாகும். வெற்றி காணினும் நிலையாக அவற்றை ஆட்சிக்குள் நிலை பெறச் செய்வது அதை விடக் கடினமாகும். இம் மாவட்டங் களில் வாழ்ந்த மலைவாழ் மக்கள் நாகரிக முதிர்ச்சி பெருதவர் கள்; அவர்களை ரோமானியரால் திருத்தி நாகரிகமுள்ளவர் களாக்க முடியவில்லை. யார்க் நகருக்கு வடபாலும், செஸ்டருக்கு மேற்கிலும் இராணுவ நகரங்கள் கூட அமையவில்லை எனலாம்.

வடக்கிலும் மேற்கிலும் அமைந்திருந்த மாவட்டங்கள் அனைத்திலும் நகரங்கள் இருப்பது அருமையிலும் அருமை; கிராமப்புறங்கள் பெரும்பாலும் இருக்கவில்லை என்றால் அது தவறாகாது. அப்பகுதிகளைக் கட்டிக் காக்க பல்வேறு இராணுவக் கோட்டைகளும் அவற்றை இணைக்கும் சாலைகளுமே அமைக்கப்பட்டன. இக் கோட்டைகளின் பின்னணியாக ரோமானியப் படை அணிகளைக் கொண்டிருந்த மூன்று நகரங்கள் அமைந்தன.

**ரோமானிய கோட்டைகள் :—** பிரிட்டனில் ரோமானியர் விட்டுச் சென்றவற்றுள் இன்று பெருமளவில் நிலைத்திருப்பவை ரோமானிய படைவீடுகளாகும். அவற்றை கோட்டைகள் எனக் கூறுவது பொருந்தும். மூன்று பெருங் கோட்டைகள் ஏற்கனவே நாம் கூறிய மூன்று படை அணிகளின் கேந்திரங்களாயின. அவை யார்க், செஸ்டர், உஸ்க் ஆற்றங்கரை நகரான கெய்ர்லியான் என்பனவாம். ஆனால் ரோமானியரின் துணைப்படைகளைக் கொண்ட எண்ணற்ற சிறு கோட்டைகள் ஏராளமாக இருந்தன என்பதனை நினைவிற் கொள்ள வேண்டும். அவை பாதுகாப்பிற்கும் பயன்பட்டன. வட பிரிட்டனிலும் வேல்ஸிலும் முக்கியமாக அவை அமைக்கப்பட்டன. வேல்ஸில் சற்றேறக் குறைய 20 கோட்டைகளும் வட இங்கிலாந்தில் 70 கோட்டைகளும் ஹாட்ரியன் சுவருக்கு வடக்கில் 30 அல்லது 40 கோட்டைகளும் இருந்தன. ஹாட்ரியன் சுவரை அடுத்துள்ள கோட்டைகள் நன்கு கண்காணிக்கப்படும் கோட்டைகளெனக் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, கம்பாக்லாண்ணு (பார்ட்ஸ்வாஸ்ட்), சிலூர்நம் (செஸ்டர்ஸ்), போர்கோ விசியம் (ஹௌஸ் ஸ்டெட்ஸ்) முதலானவற்றைக் கூறலாம். அக் கோட்டைகள் பொதுவானதொரு திட்டப்படி கட்டப் பெற்றன. கோட்டைகள் நீண்ட சதுரமானவை. நான்கு வாயில்கள்; ஒவ்வொரு வாயிலிலும் நேராக நீண்டு செல்லும் பாதையொன்று கோட்டையின் மையம் வரை போடப்பட்டிருந்தது. கோட்டையின் நடுவில் பிரட்டோரியம் எனப்படும் தலைமைச் செயலகம் அமைக்கப்பட்டது. அதுவே தளபதியின் தலைநகராகும். அருகில் படைத்தளபதியின் வீடும், உணவுக் களஞ்சியங்களும் இருந்தன. ஏனைய கட்டிடங்கள் படைவீரர்கள் வாழும் படைவீடுகள் ஆகும்.

**சிவில் மாவட்டங்கள் :—**தென்கிழக்கிலும், மத்திய நிலங்களிலும் ரோமானிய ஆட்சி எளிதாகப் பரவியிருந்தது; அவை வெற்றி கொள்ளப்பட்டன. இங்கெல்லாம் போக்குவரத்து சாதனங்களை சுலபமாக அமைக்க முடிந்தமையால், நகரங்கள் உருவாக்கப்பட்டன. அந்நகரங்களில் ரோமானிய பழக்க வழக்கங்களும்,

சட்டமும் புகுத்தப்பட்டன. ரோமானிய ஆட்சிக்குட்பட்ட இப் பகுதியைத்தான் உண்மையான ரோமானிய பிரிட்டன் எனலாம். அங்கு வாழ்ந்த மக்கள் அனைவரும் ரோமானிய மயமாக்கப்பட்டனர். ரோமானியர் வெற்றி பெற்ற நாடுகளையெல்லாம் ரோமானிய அதிகாரிகளே கட்டி ஆண்டார்கள் எனக் கொள்வது தவறான கருத்தாகும். மாறாக அப்பகுதிகளில் அடிமைகளாகக் கருதப்பட்டவர்களைத் தவிர ஏனைய குடி மக்கள் எளிதாக ரோமானிய குடிமகன் என்ற தகுதியைப் பெற முடியும். நகரத்தில் வசித்தவர்களும் நாட்டுப்புறத்தில் இருந்த பண்ணைகளிலும் குக்கிராமங்களிலும் வாழ்ந்தவர்களும் கெல்ட்டிய இனத்தவர்களே; ஆனால் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் வாக்கில் அவர்கள் பேச்சுமுறைகளாலும், பழக்க வழக்கங்களாலும் முழுமையாக ரோமானிய மயமாயினர். அவர்களைத்தான் ரோமானோ - பிரிட்டானியர் என்கிறோம். எடுத்துக்காட்டாக, மொசைக் தளமமைத்தல், சுவரில் வண்ணச்சாந்து பூசுதல், வீடு முழுமைக்கும் மைய இடத்திலிருந்து கதகதப்பிற்கான சாதனமமைத்தல், குளியல் அறை ஆகியவற்றைக்காணுமிடத்து, பிரிட்டிஷ் நிலச்சுவான்தாரர்கள் ரோமானிய முறைகளை விருப்பத்துடன் ஏற்றெடுத்து கொண்டதை அறியலாம்.

**இலண்டன் மாநகர் :—** ரோமானிய பிரிட்டனில் வாழ்க்கை முறையை அறிய உதவும் சான்றுகள் புதைபொருள் ஆராய்ச்சியின் மூலம் கிடைத்தவையேயாம். முதலாவதாக நகரங்களைக் குறிப்பிடலாம். இலண்டன் நகரமே அக்காலத்தில் மிகப்பெரும் நகரமாக இருந்தது. அதன் பரப்பளவு ஏறத்தாழ 300 ஏக்கர்களாம். ஆல்ப்ஸ் மலைக்கு வடபால் ஐரோப்பா கண்டத்தில் இலண்டனே பெரும் நகரமாகக் கருதப்பட்டது. ரோமானிய இலண்டன் தற்கால லட்கேட் ஹில் (Ludgate Hill) என்ற இடத்திலிருந்து இன்றைய நகரத்தையும், செயின்ட்பால் திருச்சபை, கில்ட்ஹால், இங்கிலாந்து வங்கி ஆகியவை இருக்கும் இடங்களையும் தன்னகத்தே கொண்டிருந்தது. ரோமானிய நகரம் தேம்ஸ் ஆற்றுக்கு வடபால் அமைந்திருந்தது. தென்பகுதியிலிருந்து ஊருக்குள் செல்ல பாலமொன்று அமைக்கப்பட்டது. இன்றைய இலண்டன் பாலம் இருக்குமிடத்தில் அப்பாலம் இருந்தது. நகரத்தைச் சுற்றி சுவர் எழுப்பியிருந்தனர். புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர்கள் அச்சுவர் இருந்ததற்கான சான்றுகளைத் தெளிவாகக் கண்டுபிடித்து நிலைநாட்டியுள்ளனர். இன்றுங்கூட செயின்ட் கெல்ஸ் திருச்சபை முற்றத்திலும், கிரிப்பில் கேட் போன்ற இடங்களிலும் ரோமானிய சுவரின் பகுதிகளைக் கண்டு மகிழலாம். சான்றாக, இன்றும் இலண்டன் சுவர் என்ற பெயரில் தெருவொன்றிருப்பதைக் காணலாம்.

ஏனைய ரோமானிய நகரங்கள் : இலண்டன் நகருக்கு அடுத்தபடியாக பிரிட்டனில் ரோமானியர் அமைத்த பெருநகரங் களில் சிரன் செஸ்டரைக் கூறலாம் (Cirencester) அதனை கோரிணியம் என்று அழைத்தனர். கோட்ஸ்வெஸ்ட்ஸ் பகுதியில் இந்நகரமே முக்கியமானதாகும். மற்றொரு நகரம் வெருளா மினியம் (செயிண்ட் ஆல்பன்ஸ் நகருக்கருகில்). அங்கு நிலத்தை அகழ்ந்தெடுத்து சமீப காலத்தில் ரோமானிய நகரம் ஒன்றினைக் கண்டுபிடித்துள்ளனர். அங்கு சிம்பலினின் தந்தையால் கட்டப் பட்ட ரோமானிய காலத்திற்கு முந்தைய நகர் ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. விரோகோனியம், சில்செஸ்டர் அகழ்ந் தெடுக்கப்பட்ட பிற நகரங்களாகும். லிங்கன் என்னுமிடத்தில் இன்றும் ரோமானிய நுழைவாயில் இருப்பதைக் காணலாம். கோல்செஸ்ட்ரில் அதைப்போன்றே ரோமானிய சின்னம் ஒன்று இருக்கிறது. பாத் என்ற நகரில் ரோமானியர் வெந்நீர் ஊற்று களைக் கண்டுபிடித்தனர். அவ்வூற்றுகளை இன்றும் அந்நகரில் காணலாம்.

நாட்டுப்புற வீடுகள் அல்லது வில்லாக்கள் (Villas) : நாட்டுப் புறங்களில் சாலைகளைத் தவிர வில்லாக்கள் அல்லது நாட்டுப் புற வீடுகள் ரோமானியரின் சின்னங்களாகக் காட்சியளிக் கின்றன. அவை நாட்டுப்புற வீடுகளேயாயினும், வாழ வசதி யானவை; ஆடம்பர அழகு கொண்டவை. பல வில்லாக்கள் தோண்டியெடுக்கப்பட்டுள்ளன. கிளஸ்டர்ஷயரில் செட்வொர்த் என்னுமிடத்தில் உள்ள வில்லா மிக மிக நேர்த்தியானதென்று கருதப்படுகிறது. கட்டிடத்தை எப்படி அமைத்தார்கள் என்பதை யும், அதை எப்படி நிறுவியிருக்க வேண்டுமென்பதையும், கட்டி டத்தின் தரையை எவ்வாறு மொசைக் போட்டு அழகுபடுத்தினர் கள் என்பதையும் இன்றுகூட காணலாம். அங்கு பொருத்தப்பட்டி ருக்கும் சூடாக்கும் யந்திரம் அறைகளையும் கதகதப்பாக வைக்கப் பயன்பட்டதுடன், வெந்நீர் ஊற்றிக்கொள்ளும் வசதியையும் குளியல் அறையில் இணைத்திருந்தனர். ரோமானியர்களின் குளியல் அறை மிகப்பெரியது. அவர்கள் நீரில் குளிப்பதற்கு மாறாக ஆவியில் குளித்தனர். சூடாக்கும் யந்திரம் குழாய்களின் மூலமாக சூடான காற்றையும் ஒரு சில அறைகளுக்குள் செல்லும் வசதி யையும் பெற்றிருந்தது. வீடுகளில் மூன்று அறைகள் விதவித மான தட்பவெப்பநிலைகளைக் கொண்டிருந்தன. சூடாக்கும் யந்திரம் வீடு முழுமைக்கும் பொதுவானதாக மையமானதொரு இடத்தில் பொருத்தப்பட்டிருந்தது.

**ரோமானிய பண்ணை முறை:-** பெரும்பாலும் அனைத்து ரோமானிய வில்லாக்களிலும் பெரும் பண்ணைகள் இருந்தன. அப்பண்ணைகளில் அடிமைகள் உழுது பயிரிட்டனர். வேளாண்மையே அவர்களின் முக்கிய தொழிலாக அமைந்தது. வில்லாக்கள் சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும்படியாக அமைந்திருந்தன. அங்கு வாழ்ந்த மக்களுக்குத் தேவையானவற்றை அவர்களே தம் உழைப்பினால் உற்பத்தி செய்து கொண்டனர். செட்வொர்த்தில் சாயப்பத்திரங்களைக் காண்பதிலிருந்து அவர்கள் தம் துணிமணிகளுக்குச் சாயம் போடும் வசதியையும் தம் வீடுகளிலேயே கொண்டிருந்தனர் என்பதை அறியலாம். ஆப்பிள், செர்ரி, பியர் போன்ற பழமரங்களை இங்கிலாந்தில் ரோமானியர் பயிரிடத் தொடங்கினர். பிரிட்டிஷ் தோட்டங்களில் அழகுறக் காட்சி கொடுக்கும் பிசண்ட் என்னும் பறவையையும் ரோமானியரே கொண்டு வந்தனர். காட்டுப் பறவையை அவர்கள் வீட்டுப் பறவையைப்போல் பழக்கப்படுத்தியிருந்தனர். ரோமானியர் பிரிட்டனை விட்டகன்ற போது பிசண்ட் பறவைகளும் காடுகளுக்குப் பறந்து போய் காட்டுப் பறவைகளாகி விட்டன.

**சாலைகள்:-** ரோமானிய பிரிட்டனை அறிய உதவும் மற்றொரு எடுத்துக் காட்டு சாலைகளாகும். சாலைகளை முதன் முதலில் இராணுவப் போக்குவரத்திற்காக அமைத்தார்கள் எனவே அவை இராணுவகேந்திரங்களை இணைக்கும் நோக்குடனேயே அமைக்கப்பட்டன. இச்சாலைகளை அமைத்த ரோமானிய பொறியியல் வல்லுநர்கள் அவற்றைத் மிகுந்த திறலாற்றலுடன் அமைத்திருந்தனர். இயற்கையான முட்டுக் கட்டைகளைக் கூட அச்சாலைகள் எளிமையாகக் கடக்கும் திறன் பெற்றிருந்தன. அச்சாலைகள் லிங்கனுக்கும், செஸ்டருக்கும், சிரென்செஸ்டருக்கும் பின்னர் தென் மேற்குப் பகுதிகளுக்கும் இலண்டனிலிருந்து தனித் தனியாக அமைக்கப்பட்டன. ஓரளவு அவை தற்கால இரயில் பாதைகளை ஒத்திருக்கின்றன. வெற்றிக்கு முன்னர் இராணுவ நோக்குடன் அமைக்கப்பட்ட அச்சாலைகள் உள்நாட்டு நகரங்களுக்கிடையே போக்கு வரத்துக்கும் பயன் பட்டன. வடபால் அமைக்கப்பட்ட சாலைகள் இராணுவப் போக்குவரத்திற்கே பயன் பட்டதால் அவை இராணுவ தளங்களாக இருந்த கோட்டைகளை இணைத்தன.

ரோமானியரின் சாலைகள் நேராய் செல்லும் அமைப்புடன் நிலையான முறையில் அமைக்கப் பெற்றமையால் அவை இன்றும் நிலைத்துள்ளன. ரோமானிய ஆட்சி பரவியவிடங்களில் எல்லாம் இத்தகைய சாலைகள் அவர் தம் பேரரசு முழுவதிலும் தென்பட்

டன. ரோமானிய சாலைகள் பலவற்றைத் திருத்தியமைத்து தார்போட்ட சாலைகளாக மாற்றி நவீனமாக்கியுள்ளனர். நாட்டுப் புறங்களுக்குச் செல்லும் சாலைகள் போக்குவரத்து இன்மையால் இன்று புல்முளைத்துப் பயன் படாமல் உள்ளன. எனினும் அச்சாலைகள் இன்றும் ரோமானியப் பேரரசின் நேர்த்தியைப் பறை சாற்றுகின்றன.

# 8. ரோமாபுரியின் வீழ்ச்சி

## ரோமாபுரியின் வீழ்ச்சிக்கான காரணங்கள்

கி. பி. மூன்றும் நூற்ருண்டிலிருந்து ரோமானியரின் ஆதிக்கம் சீர்குலையத்தொடங்கியது. மத்திய ஆட்சியின் பலவீனமே சீர்குலைவுக்கான காரணங்களில் ஒன்ருகும். ரோமானிய அரசாங்கம் கொடுங்கோன்மைக்கு ஆளாக நேரிட்டது. கொடுங்கோலாட்சியில் அரசாங்கங்களின் வெற்றி அவற்றை ஆட்சி நடத்தும் கொடுங்கோலர்களின் திறமையைப் பொருத்த தாகும். துரதிருஷ்டவசமாக ரோமாபுரியின் ஆட்சியை நடத்த திறமையானவர்கள் தொடர்ந்து கிட்டவில்லை. போதாக் குறைக்குப் பேரரசர்கள் அடுத்தடுத்து கொலையுண்டதால், உண்மையான அதிகாரம் திறமைமிக்க தளபதியின் கையிலேயே இருந்ததென்று கண்டு கொண்டார்கள். அதன் விளைவாக பேரரசில் இடையருது பல உள்நாட்டுப் போர்கள் மூண்டமை யால், பேரரசு வீழ்ச்சியடையத் தொடங்கியது.

**கோத்தியப் போர்கள்:-** அதே சமயத்தில் மூண்ட கோத்தியப் போர்கள் அவ்வீழ்ச்சிக்கு அறிகுறியான எச்சரிக்கையின் உருவக மாக அமைந்தன, ரைன், டான்யூப் ஆறுகளுக்கு வடபால் அமைந்திருந்த பகுதிகள் ரோமானியரின் ஆதிக்கத்தின் கீழ் ஒருபோதும் கொண்டு வரப்படவில்லை. எனினும் அகஸ்டஸின் காலத்திலிருந்து ஜெர்மானியப் போர்களில் அவர்கள் ஈடுபட்டிருந் தனர். பின்னர் ஏனைய காட்டுமிராண்டி இனத்தவர்கள் ரோமானிய எல்லைகளை ஒட்டி குடியேறி இருந்தனர் பேரரசின் செல்வ வளத்தைக் கண்டு அதில் பங்கு பெற அவர்கள் பேராசை கொண்டதில் வியப்பொன்றும் இல்லையன்ருே? அப்படி சச்சரவுகள் விளைந்த காலத்தில் காட்டுமிராண்டிகளை அடக்கி யொடுக்க முடியாமல், அவர் தம் தொல்லையிலிருந்து விடுபட ரோமானியர் தகுந்த விலை கொடுத்து வந்தனர். அவர்களுக்கு நிலங்களைக் கொடுத்தனர்; மாநிலங்களில் குடியேற ஆயிரக் கணக்கானவர்களுக்கு அனுமதிவழங்கினர்; பல்லாயிரவர் ரோமா னியப் படைகளிலேயே சேர்ந்திருந்தனர். படிப்படியாக இக்காட்டு மிராண்டிகள் ஊடுருவியபோது அது ரோமானியப் பேரரசிற்குத்

தொல்லைகளைக் கொடுத்தது. காட்டுமிராண்டிகளின் உறவினர்கள் எல்லைகளில் வாழ்ந்து வந்தனர். அவர்களும் எல்லைப்புறங் களில் சொல்லொணுத் தொல்லைகளைக் கொடுத்து வந்தனர்.

டயாகிளீஷியன் (284-305) பேரரசராக விளங்கிய போது அவருடைய தீவிரக் கொள்கைகளின் விளைவாக பேரரசின் சீர் குலைவு சிறிது காலத்திற்குத் தள்ளி வைக்கப்பட்டது. ஏனெனில் அவர் அரசாங்கத்தைத் திருத்தி அமைத்ததோடு,இராணுவத்தை யும் கட்டுப்படுத்தி உள் நாட்டுப் போர்களைத் தடுத்து நிறுத்தினுர். ஆனல் இதே பேரரசர்தான் கிறிஸ்தவர்களை ஒறுக்கக் காரண மாயிருந்தவர். அக்காலத்தில் பேரரசின் மக்கள் தொகையில் பத்தில் ஒரு பங்காக இருந்தனர். எனவே அவர்களை ஒழித்துக் கட்டுவதும் முடியாத செயலாக இருந்தது. எனினும் அவர்கள் பத் தாண்டுக் காலம் (303-313) கடுமையான சமய ஒறுத்தலுக்கு இலக் காயினர். திருச்சபைகள் கலைக்கப்பட்டு ஆண்களும் பெண்களு மாக கொடுமையான சித்திரவதைக் காளாயினர். பிரிட்டன், கால், ஸ்பெயின் போன்ற மாநிலங்களை ஆண்ட கான்ஸ்டன்டி யஸ் குளோரஸ் என்பார் கிறிஸ்தவராயினும் நேர்மையானவராத லின் கிறிஸ்தவ சமய ஒறுக்கத்தை அங்கெல்லாம் அவ்வளவு தீவிரமாக்கவில்லை. செயின்ட் ஆல்பன் என்பார் (304) வெரு லாம் என்னுமிடத்தில் கொலையுண்டார். அவரது நினைவாகத் தான் செயின்ட் ஆல்பன்ஸ் என்னும் நகரம் எழுந்தது. பிரிட் டனில் அவரைப் போன்று உயிர் துறந்தவர்கள் பலர்.

கான்ஸ்டன்டியஸ் 306ஆம் ஆண்டில் யார்க் நகரில் கால மானபோது அவருடைய மகன் கான்ஸ்டன்டைனைப் படை வீரர்கள் பேரரசராக அறிவித்தனர். கான்ஸ்டன்டைன் கிறிஸ்தவராக மதம் மாறினுர். அதற்குப் பின்னர்தான் கிறிஸ்தவ சமய ஒறுத்தல் நிறுத்தப்பட்டது. ஞானஸ்நானம் செய்யப்பட்ட கிறிஸ்தவராக அவர் இறக்கும்போதுதான் ஆனுர். எனினும் பேரரசரின் அன்புக்குக் கிறிஸ்தவர்கள் ஆளானது அவர் காலத் தில்தான். அவருக்குப் பின்னர் பதவியேற்ற பேரரசர்கள் கிறிஸ்தவ சமயத்தைப் பேரரசின் அதிகாரபூர்வமான சமயமாக அறிவித்தனர். எனினும், திருச்சபை உட்பூசல்களுக்கு இரை யாகிச் சிதறுண்டது. நான்காம் நூற்றுண்டில் பேரரசு முழுதும் மீண்டும் காட்டுமிராண்டியரின் படையெடுப்புகளுக்கு ஆளாகியது.

**பிரிட்டனில் ரோமாபுரியின் வீழ்ச்சிக்கான காரணங்கள் :**

பிரிட்டனில் ரோமானிய அதிகாரம் வீழ்ச்சியுறக் காரணமா யிருந்தவை இரண்டு : முதலாவது அதிருப்தியுற்றிருந்தவர்கள்

விளைவித்த கலகம் அல்லது பேராசைமிக்க தளபதிகளுக்கே மூண்ட பூசல்களாகும்; இரண்டாவது காட்டுமிராண்டிகளின் படையெடுப்புகளாகும். மூன்றும் நூற்றுண்டின் இறுதிவாக்கிலேயே இத்தொல்லைகள் தோன்றலாயின. அவற்றில் முதலாவது படையெடுப்பாக பெல்ஜிய நாட்டைச் சார்ந்த கராசியஸ் என்பானின் படையெடுப்பைக் கூறலாம். அவனை ரோமானிய கடற்காவலனுக கப்பற்படையுடன் அனுப்பினர். அவனுடைய தலைநகர் போலோனுவில் (Boulogne) இருந்தது. டோவர் நீர்ப்பிரிவின் இரு கரைகளிலும் அமைதியைக் காக்கும் பணி அவனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும், அவன் பிரிட்டனைக் கைப்பற்றி ஆட்சி செய்வதையே விரும்பினுன். கி. பி. 287ஆம் ஆண்டில் அவன் பிரிட்டனின் பேரரசர் என்ற பட்டத்தையும் சூட்டிக் கொண்டான். ரோமானியப் பேரரசரின் அதிகாரத்தைப் பொருட்படுத்தாமல், அவரை எதிர்த்து ஆறு ஆண்டு காலம் அவன் இப்பதவியிலேயே இருந்தான்.

அவனுக்குப் பின் முடிசூட்டிக் கொண்ட அலெக்டஸ் என்பான் அவனைக் கொலை செய்துவிட்டுப் பதவியைக் கைப்பற்றிக் கொண்டான். அவனும் ரோமானியப் பேரரசருக்கெதிராக, பதவியை மூன்றுண்டு காலம் எப்படியோ காப்பாற்றிக் கொண்டான். இறுதியாக(கான்ஸ்டன்டைனின் தந்தையாரான) கான்ஸ்டன்டியஸ் (Constantius) கி. பி 296ஆம் ஆண்டில் அவனைத் தோற்கடித்தார். பிரிட்டன் மீண்டும் ரோமானியர் வசமாகியது. சாக்சானியரின் படையெடுப்புகளை தடுத்து நிறுத்தும் நோக்குடன் தான் கான்ஸ்டன்டியஸ் புதுவகையான கடற்கரைக் கோட்டைகளை நிர்மாணித்தார். லிங்கன்ஷயரிலிருந்து வைட் தீவுவரை இருந்த கடற்கரையைச் சுற்றிலும் அக்கோட்டைகள் கட்டப்பட்டன. அக்கோட்டைகளைக் காத்துநிற்கும் தளபதியாக ஒரு அதிகாரி நியமிக்கப்பெற்றுர். அவரை சாக்சானிய கடற்கரைப் பிரபு என்று அழைத்தனர். அப்படி ஆறு கோட்டைகள் கட்டப்பெற்றன. அக்கோட்டைகளின் அழிவுச்சின்னங்களைக் காணுந்தோறும் அவற்றின் சீரும் சிறப்பும் தெற்றென விளங்கும்.

**பிக்டுகளும் ஸ்காட்டுகளும் :** சாக்சானிய கடற்கரை கோட்டைகள் ஓரளவு பயனளித்தன. அதன் விளைவாக சாக்சானிய கொள்ளைக் கூட்டத்தினரின் கொம்மாளத்திலிருந்து ஒரு சிறிது விடுதலை கிட்டியது. ஆயினும் என்? பிறிதொரு தொல்லை பிரிட்டனை எதிர்நோக்கியது. வட எல்லைப்புறங்களில் பிக்டுகளும் ஸ்காட்டுகளும் படையெடுக்கலாயினர். பிக்டுகள் ஸ்காட்லாந்தைச் சார்ந்த பழங்குடிமக்கள்; ஆனுல் ஸ்காட்டியரோ தொடக்கத்தில்

அயர்லாந்திலிருந்து வந்தவர்கள். எனினும் அவர்களின் பெயராலேயே அவர்களால் கைப்பற்றப்பட்ட பகுதி ஸ்காட்லாந்து என்று அழைக்கப்பட்டது. அவர்கள் கி. பி. 367ஆம் ஆண்டுவாக்கில் ஹாட்ரியன் சுவரையும், வடபால் அமைக்கப் பெற்றிருந்த பாது காப்பரண்களையும் தகர்த்தெறிந்து விட்டு, புற்றீசல்கள் போல அடுத்தடுத்துப் படையெடுத்து பிரிட்டனின் நாகரிகப் பகுதிகளைத் தாக்கினர்.

**பிரிட்டனின் ரோமானிய ஆட்சியின் அழிவு :** ரோமானியரின் மாநிலமாக இருந்த பிரிட்டனின் அழிவை விரைவுபடுத்தக் காரணமாயிருந்தவர்கள் பதவியைப் பறிக்கும் நோக்குடன் இருந்த தளபதிகளே ஆவர். பிரிட்டனிலிருந்த ரோமானியப் படை அணிகளை அவர்கள் பயன்படுத்திப் பேரரசுப் பதவியையே கைப்பற்ற முயற்சித்தனர். மாக்ஸிமஸ் என்னும் தளபதியொருவன் பிரிட்டனில் இருந்த ரோமானியப் படையணிகளின் பெரும் பகுதியை ஆங்கிலக் கால்வாய்க்கப்பால் கொண்டு சென்று ரோமானியப் பேரரசர் கிரேஷியன் என்பாருடன் போருக்கேகினன் (383). அவனுக்குப் பின்னால், மற்றொருவனும் அதே போல் முயன்றான். பிரிட்டனில் இருந்த ரோமானியப் படைக்கு ஏற்பட்ட நட்டத்தை ஈடு செய்ய ஒருவரும் முயற்சிக்கவில்லை. அவர்களின் முயற்சிக்குப் பின்னர், ரோமானிய பிரிட்டன் பாதுகாப்பின்றி பெரும்பாலும் கைவிடப்பட்டதெனில் மிகையாகாது.

**மேற்கத்தியப் பேரரசு சிதறுறல் :** இதனிடையில், கோத்துகள், பிராங்கியர், வாண்டலர், ஆங்கிலர், சாக்சானியர் போன்ற காட்டுமிராண்டியர் புற்றீசல் போல கால், ஸ்பெயின், இத்தாலி, பிரிட்டன் ஆகிய பகுதிகளின் மீது படையெடுத்துத் தாக்கினர். தாக்கிக் கைப்பற்றிய பகுதிகளிலெல்லாம் அவர்கள் நிலையான குடியேற்றங்களை நிறுவிக் கொண்டனர். ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்-அதாவது ரோமாபுரி நிறுவப்பெற்ற ஆயிரமாண்டுகளுக்கு மேலானபின்-அழிவின் இறுதிக்கட்டம் தென்படலாயிற்று. அலாரிக் என்பானின் தலைமையில் மாபெரும் கோத்திய படையெடுப்பாளர்கள் கலகம் விளைவித்ததோடன்றி கி. பி 410 ஆம் ஆண்டில் ரோமாபுரியைச் சூறையாடினர். ரோமாபுரி சூறையாடப் பெற்ற அதே ஆண்டில் ஹோனோரியஸ் என்ற பேரரசர் பிரிட்டிஷ் குடிமக்களைத் தம்மால் காக்க இயலாதென்றும், அவர்கள் தங்களைத் தாங்களே காத்துக் கொள்வதற்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ள வேண்டுமென்றும் கூறிவிட்டார்.

கிழக்கிலிருந்து சாக்சானியர் புதியக் கொள்ளைக் கூட்டத்தினராகப் படையெடுத்து வந்த போது, பிக்டுகளும் ஸ்காட்டியரும்

வடபாலிலிருந்து தாக்கி பிரிட்டனை சீர்குலைத்தனர். பிரிட்டானியர் போருக்கு ஆயத்தமாக இருந்தபோதிலும், அவர்களால் வெற்றி பெற இயலாதென்பதும் வெள்ளிடைமலையாயிற்று. எனினும் செயின்ட் ஜெர்மானஸ் என்ற காலிய பிஷப்பின் தலைமையில் பிரிட்டானியர் போர்க் கொடி உயர்த்தி படையெடுத்து வந்த காட்டுமிராண்டிகளை அச்சுறுத்தினர். அவர் மதப்பிரசாரராக வந்தவர். எனினும் ஐந்தாம் நூற்றாண்டின் மத்தியில் பிரிட்டிஷ் மக்களால் தாக்குப் பிடிக்க முடியாதநிலை ஏற்பட்டது. அவர்கள் இன்னும் தங்களை ரோமானியர் என்றே கருதி வந்தனர். எடுத்துக் காட்டாக, அவர்கள் ரோமானிய அமைச்சர் ஏடியஸ் என்பாருக்கு விடுத்த வேண்டுகோளைச் சுட்டிக்காட்டலாம். சிஸ்டாஸ் துறவியார் கீழ்க்கண்டவாறு குறித்து வைத்துள்ளார் :—

"ஏடியஸின் பதவியின் மூன்றும் ஆண்டில் பிரிட்டானியர் எழுப்பிய கூக்குரல் ரோமாபுரியை எட்டியது. காட்டுமிராண்டிகள் எங்களைக் கடலை நோக்கி விரட்டுகிறார்கள். கடல் எங்களைக் காட்டுமிராண்டிகளை நோக்கி விரட்டுகின்றது... நாங்கள் கொல்லப்படுகிறோம் அல்லது நீரில் மூழ்கிச் சாகிறோம்". பழைய வரலாற்று குறிப்பேடுகளிலிருந்து சான்றாக செய்தியொன்றினை அறிகிறோம். பிரிட்டிஷ் தளபதிகளில் ஒருவரான வொர்டிஜெர்ன் என்ற பெயர் கொண்டவன் சாக்சானியரில் ஹென்ஜிஸ்டு, ஹோர்ஸா என்பவர்களின் உதவியுடன் பிக்டுகளையும், ஸ்காட்டுகளையும் எதிர்த்த செய்தியை அறிகிறோம். திருடனைப் பிடிக்கத் திருடனை வேண்டிய கதை போலாயிற்று. எனினும் சாக்சானியர் தமக்கு வந்த வாய்ப்பினை நழுவவிடாமல், பிரிட்டன் மீது படையெடுக்கத் தொடங்கினர்.

# 9. இங்கிலாந்து உருவாக்கப் பெறல்

## 1. சாக்சானிய குடியேற்றம்

கி. பி. 400க்கும் 600க்கும் இடைப்பட்ட இருநூறுண்டுகள் ஆங்கில மக்கள் உருவான காலமாகும். ரோமானிய படைவீரர்கள் இங்கிலாந்திலிருந்து வீலகிச் சென்றதும், ரோமானிய சமயப் பிரசாரகர்கள் இங்கிலாந்துக்கு வந்துசேர்ந்ததும் நிகழ்ந்த இக்கால கட்டம் வரலாற்ருசிரியருக்கு முக்கியத்துவம் வாய்ந்த காலமெனில் மிகையாகாது. இக்காலத்தில்தான் ஆங்கில மக்கள் உருவாக்கப் பெற்றனர். இக்காலகட்டத்தை அறிந்துகொள்ள சரியான சான்றுகள் கிடைக்காமையால், ஊகத்தைக் கொண்டு வரலாற்றை நிர்ணயிக்க வேண்டிய நிலையில் நாம் இருக்கிருேம். இவ்வூகங்கள் இருவகைச் சான்றுகளை ஆதாரமாக கொண்டவை. முதலாவது, இலக்கியச் சான்றுகள்; இவை அரைகுறையானவை. எனவே ஐயப்பாடுடையவை. மற்றென்று புதைபொருள் சான்றுகளாக அகழ்ந்தெடுக்கப்பட்டவை. கில்தாஸ் (Gildas) இலக்கியச்சான்று களை ஆராயுங்கால் நமக்கு அழியாமல் கிட்டியுள்ளது ஒரே ஒரு சான்றுதான்—அக்காலத்தில் எழுதப்பெற்றது—நமக்குக் கிட்டி யுள்ளது. கில்தாஸ் எனும் பெயர் கொண்ட கிறிஸ்தவ சமயத் துறவியொருவர் எழுதிவைத்துள்ள குறிப்புகள் ஐந்தாம் நூற்ருண் டில் நிகழ்ந்த அழிவுகளை நேரிடையாக அனுபவித்து வாழ்ந்தவர். கில்தாஸ் பாதிரியார் ஹீப்ரு தீர்க்கதரிசியைப் போன்று தென் பட்டார் என்பது வெள்ளிடைமலை. தம் நாட்டுக் குடிமக்களின் பாவங்களைக் கண்டித்தார் அவர். அவர்தம் துன்பங்களைச் சுட்டிக் காட்டி இன்பச்சுவையில் திளைத்த இப்பாதிரியார், அத்துன்பங் களுக்கு பரம்பொருளின் சீற்றமே எனக் காரணம் கொண்டு பல செய்திகளை மிகைப்படுத்திக் கூறியுள்ளார். அவற்றை அவர் ஜோசியர் போன்று முன்கூட்டியே கூறியிருக்கிருர்.

அதனை அடுத்து பிற்காலத்தில் எழுதப்பெற்ற சான்றுகளாக கிடைத்துள்ளவை புனிதர் பீடு (Venerable Bede 673-735) என்ற பெரியாரின் வரலாற்றையும் ஆங்கில-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேடுகளையும் குறிப்பிடலாம். ஆல்பிரட் மாமன்னரின் காலத்தில் தொடங்கப்பெற்றவை ஆங்கில சாக்சானியவரலாற்று

குறிப்பேடுகளில் காணப்பெறும் தேதிகள், விவரங்கள் மற்றும் நபர்கள் ஆகியவை உண்மையானவை என பல்லாண்டுகள் கருதப்பட்டன. ஆனால் அவற்றுள் ஒரு சில கற்பனையானவை என்று இப்போது கூற இயலும்.

**ஆங்கில சாக்சானிய படையெடுப்பாளர்கள் :—** ஆங்கில-சாக்சானிய இனத்தவர்கள் அனைவரும் ட்யூடானிய மக்கள். பிராங்கியர், கோத்தியர், வாண்டலர் ஆகியவரைப் போன்று ரோமானிய பேரரசின்மீது படையெடுத்தவர்கள் தம் உறவினர் களைப் போன்றே அவர்களும் கடலை வீடாகப் போற்றும் ஆற்றல் பெற்றிருந்தார்கள். பின்னர் அவர்களைநார்ஸ் மக்கள் என்றழைத் தனர். ஷெல்ஸ்விக் என்ற பகுதியின் கிழக்குப் பகுதியில் இரண்டு படகுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவை இக்காலத்தைச் சார்ந்தவை எனக் கருதுகிறார்கள். அப்படகுகள் எழுபது அடி நீளம் கொண்டவை. ஆங்கிலரும், சாக்சானியரும் தென் டென் மார்க்கிலிருந்தும், வட ஜெர்மானியிலிருந்தும், ஹாலந்திலிருந்தும் பிரிட்டனின் தாழ்நிலக் கடற்கரைகளுக்கு வந்திறங்கினர். ஆங்கிலர் என்ற இனத்தவரின் பெயரிலிருந்துதான் அவர்கள்வந்து குடியேறிய புதுத்தீவினுக்கு (ஆங்கில்-லாந்து) இங்கிலாந்து என்ற பெயர் வந்தது. கடுமையான தட்பவெப்ப நிலையில் வடகடலைக் கடப்பது அவ்வளவு எளிதான செயலன்று. ஆனால் அவர்கள் கடலையொட்டியே பயணம் செய்து பிரிட்டன் வந்து சேர்ந்திருக்க வேண்டும் எனக்கொள்வது பொருத்தமுடையதாம். இடைவெளி விட்டு விட்டு, ஒரு நூற்றாண்டு காலத்திற்கு மேலாக, அவர்கள் வட ஐரோப்பாவிலிருந்து கடலைக் கடந்து இங்கிலாத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

சாக்சானியர்கள் பிரிட்டனின் கிழக்குக் கரை வாயிலாக உள் நுழைந்தனர்; அப்பகுதி பாதுகாப்பற்றிருந்தது காரணமாகும். அவர்கள் பெருத்த எண்ணிக்கையில் வந்திறங்கியிருக்கக்கூடும். ஆனால் தனித்தனி விடுபட்ட கூட்டங்களாக அவர்கள் வந்தார்கள். புதிதாகக் குடியேறிய படையெடுப்பாளருக்கும், ரோமானிய பிரிட் டானியருக்கும் நீண்ட காலம் போர் மூண்டது. இக்காலத்தில்தான் ஆர்தர் என்ற அரசர் காலத்து வீர தீரச் செயல்கள் நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். ஆர்தரின் பெயரினை நினைவிற் கொள்ளும் வகையாக எடின்பரோவுக் கருகில் 'ஆர்தரின் ஆசனம்' என்ற நினைவுச் சின்னமும், வேல்ஸில் 'ஆர்தரின் நாற்காலி' என்னும் நினைவுச்சின்னமும் நமக்குச் சுட்டிக் காட்டு கின்றன. ஆர்தர் ரோமானிய பிரிட்டிஷ் தலைவராவார். ஏழாம் நூற்றாண்டினைச் சார்ந்த 'ஹிஸ்டோரியா பிரிட்

டோனம்' (பிரிட்டன் வரலாறு) என்ற நூலில் குறிப்பிட்டுள்ள படி ஆர்தர் சாக்சானியரைப் பன்னிரு இடங்களில் தோற்கடித்து பெரும் வெற்றி கண்டதாகவும், இறுதியில் நடந்த 'மோன்ஸ் படோனிஸ்' போர் குறிப்பிடத்தக்கதாகவும் கருதப்படுகிறது. சம காலத்தவரான கில்தாஸ் பாதிரியார், இப்போருக்குப் பின்னர் அரைநூற்றுண்டுகாலம் சாக்சானியர் இங்கிலாந்தின்மீது படையெடுக்கத் துணியவில்லை என்று குறித்து வைத்துள்ளார். ஆர்தர் கடைசி ரோமானியராக இருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். இதற்குப் பின்னர் ரோமானியப் பேரரசு மரபுகளைக் கொண்ட பிறிதொரு தலைவர் முன்வரவில்லை என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

மத்திய பிரிட்டனை வெற்றி கொள்ள சாக்சானிய படையெடுப்பாளருக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகள் பிடித்தது (449-6I3). பிரிட்டனின் கீழ்க்கரை மாவட்டங்களில்தான் அவர்கள் முதன் முதலில் வந்திறங்கியதால் அங்கு தத்தம் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டது இயற்கையன்றோ! கீழ் இங்கிலாந்தில் பாய்ந்தோடும் ஆறுகளைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் முன்னேறினர். எனவேதான் அவர்களின் குடியேற்றங்களை ஆற்றங்கரைகளிலோ அல்லது ஆற்றங்கரைகளுக்கருகிலோ காண்கிறோம். அவர்களின் குடியேற்றப்பகுதிகளை இனி ஆராய்வோமாக. (படத்தின் மூலம்)

**கென்ட்:-** இங்கிலாந்தின் மீது தொடக்கத்தில் படையெடுத்தவர்களை ஜுட்டுகள் என்கிறார் பீடு பெருமகனார். அவர்களே காண்ட்வேர்(Cantware)என்றும் அழைக்கப்பெற்றனர். அவர்களே காண்டர்பரிக்கு அப்பெயர் வரக் காரணமாயிருந்தனர். கென்ட் இராச்சியத்தை உருவாக்கியவர்களும் அவர்களேயாவர். ஆங்கில-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேடுகளிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், ஹெஞ்சிஸ்டு மற்றும் ஹோர்ஸா என்னும் பெயரினைக் கொண்ட இரு தலைவர்களின் தலைமையில் அவர்கள் தானட்டில் உள்ள எப்ஸ்ஃபிளீட் (Ebbsfleet) என்னுமிடத்தில் கி. பி. 449 ஆம் ஆண்டு வந்து இறங்கினர். தானட்டிலிருந்து அவர்கள் கென்ட்டைக் கைப்பற்றினர். மேற்படி மக்கள் பிறிதொரு குடியேற்றத்தைப் பின்னர் வைட் தீவிலும் மற்றும் தென் ஹாம்ப்ஷயரிலும் நிலைநாட்டினர்.

**சஸ்ஸெக்ஸ் (Sussex):-** மேற்கூறிய இரு குடியேற்றப் பகுதிகளுக்கிடையிலுள்ள நாட்டினை தென் சாக்சானியர் கைப்பற்றினர். அதை சஸ்ஸெக்ஸ் என்றழைத்தனர். எல்லா (AELLA) என்பார்

சஸ்ஸெக்ஸை நிலைநாட்டியவர் என்று மரபுவழிச் செய்தியாகக் கூறுவர். ஹெஞ்சிஸ்டு-ஹோர்ஸா ஆகியோர் இங்கிலாந்துக்கு வந்த ஏறத்தாழ முப்பதாண்டுகளுக்குப் பின்னர் அவர்கள் படைவீரர்களுடன் மூன்று கப்பல்களில் வந்திறங்கினர் என்று சொல்வர். பன்னிரண்டு ஆண்டு காலம் போராடிய பின்னர் ரோமானிய-பிரிட்டானியர் தோற்கடிக்கப்பட்டனர் என்றும், எதிர்த்தவர் அனைவரும் பின்னர் கொல்லப்பட்டனர் என்றும் வரலாற்றுக் குறிப்பேடு பகர்கின்றது. சஸ்ஸெக்ஸ் இராச்சியத்தை அடுத்து வடக்கில் பெரும் காடுகள் உள்ளதால் அது மற்ற இராச்சியங்களைச் சார்ந்திராமல் தனித்து நின்றது. எனினும் சாக்சானிய இங்கிலாந்தின் அரசர்களுள் சஸ்ஸெக்ஸின் அரசரே சிறப்பானவர் என்கிறார் பீடு பெருமகனார். அதிலிருந்து சஸ்ஸெக்ஸின் அரசரே சாக்சானிய இனத்தவர்களின் இராணுவத் தலைவராக இருந்திருக்கக்கூடும் என்று கருதலாம்.

**மிடில்செக்ஸ் :-** தேம்ஸ் ஆற்றின் கழிமுகத்தில் மத்திய சாக்சானியர் என்னும் மக்கள் அவ்வாற்றின் வடபால் மிடில்செக்ஸ் என்றும் இராச்சியத்தையும், தென் மாவட்டம் என்னும் பொருள் படும் சர்ரே என்ற இராச்சியத்தையும் அமைத்தனர். மிடில்செக்ஸ் இராச்சியத்தின் வடகிழக்கில், எஸ்ஸெக்ஸ் என்னும் இராச்சியத்தையும் நிலைநாட்டினர். இலண்டனும் அதன் தாயகமாயிருந்த மிடில்செக்ஸும் காலப்போக்கில் எஸ்ஸெக்ஸ் இராச்சியத்திற்கு அடிமைப்பட்டன.

**தாழ்ந்த சேற்று நிலங்கள்:-** வெலாந்து, அவுஸ் மற்றும் அவற்றின் துணையாறுகளடங்கிய தாழ்ந்த சேற்று நிலங்கள் ஆங்கில-சாக்சானிய படையெடுப்பாளர்கள் முன்னேறுவதற்கு வசதியாக அமைந்திருந்தன. சதுப்பு நிலங்களைக் கொண்ட இவ்வாறுகளின் தாழ்நிலப் பகுதிகளில் அவர்களால் குடியேறி வாழ இயலவில்லை. எனவே அப்பகுதிகளை விட்டு விட்டு முன்னேறி, வாழ வசதியான நிலங்களை நாடிச் சென்றனர். இவ்வகையாக குடியேறிய மத்திய ஆங்கிலர்கள் நார்த்தம்ப்டன்ஷயர், லெஸ்டர்ஷயர், பெட்ஃபோர்ட்ஷயர், கெம்பிரிஜ்ஷயர் முதலான இடங்களில் தம் இராச்சியங்களை அமைத்துக் கொண்டனர்; கிழக்கத்திய ஆங்கிலர்கள் நார்ஃபக், சப்ஃபக் ஆகிய பகுதிகளில் குடியேறினர். ஹிவிக்கஸ் (Hwiccas) என்னும் பெயர் தாங்கிய பிறிதொரு இனத்தவர் நாட்டின் குறுக்கில் முன்னேறி இராச்சியம் ஒன்றினை அமைத்துக் கொண்டனர். அவான், செவர்ன் ஆறுகளுக்கிடைப் பட்ட இதனை வார்விக்ஷயர், வொர்செஸ்டர்ஷயர் என்பர். கவெண்டரி, ரக்பி, ஸ்டாஃபோர்ட்-ஆன்-அவான் ஆகிய பகுதி

களுக்கருகில் இம்மக்களின் கல்லறைகளையும், இடுகாடுகளையும் நாம் இன்றும் காணலாம்.

வெஸ்ஸெக்ஸ்:. மேற்கத்திய சாக்சானியரின் இராச்சியம் காலப்போக்கில் வளர்ச்சியுற்றுப் பின்னர் இங்கிலாந்து இராச்சியம் எனப் பெயர் பெற்றது. தேம்ஸ் ஆற்றின் மேலைப் பள்ளத்தாக்கு களில் இந்த இராச்சியம் உருப்பெற்றிருக்க வேண்டும். இங்கு தான் தேம்ஸ் ஆற்றங்கரையில் அமைந்த டோர்செஸ்டரில் தான் முதன் முதலாக மேலைச்சாக்சானிய பிஷப்மண்டலம் உருவாகியது. டோர்செஸ்டர் ஆக்ஸ்போர்டிற்கு நேர் கீழே அமைந்துள்ளது. ஆனல் பெர்க்ஷயர், வில்ட்ஷயர், ஹாம்ப்ஷயர், டோர்செட் ஆகிய பகுதிகளைக் கொண்ட வெஸ்ஸெக்ஸ் இதற்கு முன்னரே மேலைச்சாக்சானியரின் வசமாகியது.

மெர்சியா:- வடக்கில் ஹம்பர் துணையாற்று வடிநிலப் பகுதி களிலும் குடியேற்றங்கள் எழுந்தன. டிரெண்ட், யார்க்ஷயர், அவுஸ் போன்றவை இக்குடியேற்றங்களாம். டிரெண்ட் பள்ளத் தாக்கில் மெர்சியர்கள் குடியேறி, மேலைச்சாக்சானியரைப் போன்று அருகிலிருந்த வலிமை குறைந்த மக்களையும் நிலங்களையும் இணைத் துக் கொண்டு வலிமைமிக்க இனமாக மாறினர். மெர்சியா என்ற பெயர் தொடக்கக் காலத்தில் 'எல்லைப்புறப் பகுதியாக இருந்தது. அவர்கள் பிரிட்டானியரை அடுத்திருந்த எல்லைப்புறப் பகுதிகளைக் கைப்பற்றினர். டிரெண்டிற்குக் கிழக்கில் லிண்ட்சே (வடலிங்கன் ஷயர்) அமைந்தது. அங்கிருந்த மேட்டு நிலப்பகுதிகளில் லிண்டிஸ்வரர் என்னும் இனத்து மக்கள் குடியேறியிருந்தனர். யார்க்ஷயரில் குடியேறிய பகுதிகள் வோல்ட்ஸ் எனப்பட்டன. அதுவே பின்னர் டெய்ரா இராச்சியம் அமைய நிலைக்களனாகியது. டெய்ராவையும் டர்ஹாமையும் பிரித்துக் கொண்டு அமைந்திருக் கிறது பெர்னீஷியா (நார்த்தம்பர்லாந்து). யார்க்ஷயரிலிருந்து கடல் வழியாக வந்து குடியேறியவர் இந்த பெர்னீஷியா இராச்சி யத்தை அமைத்தார்கள். பெர்னீஷியாவும், டெய்ராவும் பின்னர் இணைந்து நார்த்தம்பிரியா என்னும் வலிமை மிக்க இராச்சிய மாயிற்று.

கீழ் இங்கிலாந்தில் தொடக்கக் கால சாக்சானிய படையெடுப் பாளர்கள் அமைத்துக் கொண்ட ஒரு சில குடியேற்றங்கள் மேற் குறிப்பிடப்பட்டவை. பண்டைக்கால வரலாற்றுக் குறிப்புகள் இப்படையெடுப்பாளர் வந்த காலத்தில் காணப்பெற்ற இராச்சிய மற்ற சூழ்நிலைகளிலிருந்து பத்து இராச்சியங்கள் எழுந்தன. எனக் குறிக்கின்றன. பின்னர், இந்தப் பத்து இராச்சியங்களும் ஒருங் கிணைந்து ஏழு இராச்சியங்கள் என்று பெயர்படும் ஹெப்டார்க்கி




படம்—3

எட்டாம் நூற்றுண்டில் பிரிட்டன்—71

(நார்த்தம்பிரியா, மெர்சியா, வெஸ்ஸெக்ஸ், கென்ட், சஸ்ஸெக்ஸ் கிழக்கு ஆங்கிலியா, எஸ்ஸெக்ஸ்)எழுந்தது. பின்னர் ட்ரையார்க்கி அல்லது மூன்று இராச்சியங்கள் நார்த்தம்பிரியா, மெர்சியா, வெஸ்ஸெக்ஸ் ஆகியவை உருவாகின.

சாக்சானியப் படையெடுப்பாளர் வெற்றி கண்டமையால் ரோமானிய நாகரிகத்தின் கதி என்னவாயிற்று என்ற கேள்வி இயற்கையாக எழலாம். ரோமானியரின் வெற்றி காலிய நாட்டில் ஏற்பட்டதை விட இங்கிலாந்தில் முழுமையாக வெற்றி கண்டது. கால் நாட்டில் இலத்தீன் மொழி அறவே ஒழிக்கப்படவில்லை; ஏனெனில் அதன் செல்வாக்கு இன்றும் தற்கால பிரெஞ்சுமொழியில் நீடித்து நிற்பதைக் காணலாம். இங்கிலாந்தில் அதற்கு மாறுக ஆங்கில சாக்சானிய மொழியின் செல்வாக்கு ஏற்பட்டதேயன்றி, இலத்தீன் மொழி பேச்சு வழக்கில் அடிபட்டு போய் விட்டது. அதே போன்று ரோமானிய வில்லாக்களும் சாக்சானியரால் பயன் படுத்திக் கொள்ளப்படாமல் கைவிடப்பட்டு, சீரழிந்ததை அகல் வாராய்ச்சிகளில் இன்றும் காணவியலும்.

சாக்சானியர்களுக்கு நகர வாழ்க்கையின் அருமை தெரியவில்லை. பின்னர் ரோமானிய நகரங்கள் எழுந்திருந்த இடங்களில் பல்வேறு புதிய நகரங்கள் அமைக்கப்பட்ட போதிலும், அந்நகரங்களில் ரோமானிய மரபுகள் போற்றிக் காக்கப்படவில்லை.

சாக்சானியர் கெல்ட்டுகளை அழிக்கவில்லை. அவர்கள் விரும்பியிருந்தால் கூட கெல்டிய இன ஆண்-பெண் இருபாலரையும் அவர்களால் பூண்டறுக்க இயலவில்லை. சாக்சானிய படையெடுப்புகள் மேற்கிலிருந்து தொடங்கி, வலிமைமிக்கதாய், கெல்ட்டியரால் எதிர்க்க முடியாத அளவிற்குச் சென்றபோது கெல்ட்டிய மக்களில் பெரும்பாலோர் காலப்போக்கில் ஆங்கில எஜமானர்களுக்கு அடிமைகளாய் மாறி நிலைத்து விட்டனர். ஒரு சிலர் பிரிட்டானிக்கு ஓடிச் சென்றனர்; பலர் வடதிசைக்கோடிச் சென்று மேட்டு நிலங்களில் வாழத் தொடங்கினர். ஒரு சிலர் வேல்ஸ் பகுதிக்குச் சென்று அதனைக் கைப்பற்றி நீண்டகாலம் உடைமையாக்கிக் கொண்டனர். வேல்ஸில் ரோமானிய நாகரிகம் ஒரு போதும் முழுமையாக செல்வாக்கினைப் பெறவில்லை. அதன் விளைவாக கெல்ட்டிய மொழி வழக்கில் இருக்க வழி பிறந்தது. இதற்குச் சான்றாக மேற்கு இங்கிலாந்தில் பல்வேறு இடங்களுக்குக் கெல்ட்டிய பெயர்கள் சூட்டப் பெற்றிருப்பதை இன்றும் காணலாம். இங்கிலாந்தின் பல்வேறு பகுதிகளில் பழைய மொழியின் செல்வாக்கினை அங்கு பாயும் ஆறுகளுக்கும், குன்றுகளுக்கும் சூட்டப் பெற்றுள்ள பெயர்களிலிருந்து அறியலாம்.

சாக்சானியர் பிரிட்டானியரை அந்நியர் என்று பொருள்படும் வகையான வெல்ஷ் என்று பெயரிட்டழைத்தனர். பிரிட்டானியர் அவர்களை சிம்ரி (Cymry) என்று கூறினர். சிம்ரி என்றால் தோழர் கள் என்று பொருள். பல நூற்றாண்டுகள் வேல்ஸ் சுதந்தரமாகவே இருந்தது. சாக்சானிய படையெடுப்பாளர்கள் பலகாலம் வரை செவர்ன் ஆற்றைக் கடக்கத் துணியவில்லை. தென்பகுதியில் சாமர்செட்டிலும், ஏடவனிலும் குடியேறியிருந்த கெல்ட்டுகள் மேலைச் சாக்சானியரை திக்குமுக்காட வைத்தனர். ஆனால், 577ஆம் ஆண்டில் நடைபெற்ற டியோர்ஹாம் (Deorham) போரில் மேலைச் சாக்சானியர் செவர்ன் ஆற்று முகத்துவாரம் வரை கைப் பற்றியமையால், வேல்ஸில் இருந்த பிரிட்டானியர், தென்மேற் கிலிருந்த தம் உறவினர்களுடன் தொடர்பு அறுபட வேண்டியவரா யினர். ஏரி மாவட்டம் பல நூற்றாண்டுகள் கெல்ட்டியரின் நிலைக் களனாக அமைந்தது. பின்னர் மலைத்தொடர்கள் லங்காஷயரையும் மேற்கு யார்க்ஷயரையும் படையெடுப்பாளரிடமிருந்து தப்ப வைத்தன. கி.பி. 613ஆம் ஆண்டு வரை அவர்களால் செஸ் டரைக் கைப்பற்ற முடியவில்லை. இவ்வெற்றியின் பயனாக வேல்ஸி லிருந்த பிரிட்டானியர்கள் லங்காஷயர், கம்பர்லாந்து முதலான பகுதிகளில் உறைந்திருந்த தம் உறவினர்களுடன் சேர்ந்து வாழ முடியாதவர்களாய் தனித்து வாழ வேண்டியவராயினர். இறுதி யாக, ஆங்கிலக் கால்வாயைக் கடந்து பிரிட்டானியில் (பிரான்ஸ் நாட்டில்) கெல்ட்டியர் தம் குடியேற்றங்களை அமைத்துக் கொண் டனர். அங்கு பிரிட்டானியர் பேசிய பிரிட்டன் (Breton) என்னும் மொழி வேல்ஷ் கார்னிய மொழிகளைப் போன்றது. இன்றும் பேச்சு வழக்கில் உள்ளது.

**(அ) ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்தின் நிலை:-** ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் பிரிட்டனுக்கு ரோமானிய கிறிஸ்துவப் பாதிரியான செயின்ட் அகஸ்டின் என்பார் வந்து சேர்ந்தார். அவருடைய குறிப்புகளிலிருந்து நாம் இங்கிலாந்தின் நிலையை அறியலாம். இங்கிலாந்து கெல்ட்டியர் சாக்சானியர் ஆகிய இரு இனத்தவர்களாலும் சமமாகப் பங்கிடப்பட்டிருந்தது. சாக்சானியப் பகுதிகளில் கெல்ட்டிய இனத்தவர்கள் இன்றும் வாழ்ந்திருந்தனர். கிழக்குக் கோடியில் மட்டும் கலப்பினம் ஏற்படவில்லை. கிழக்கு ஆங்கிலியா, எஸ்ஸெக்ஸ், மற்றும் சஸ்ஸெக்ஸ் போன்றவை கள் தனித்து நின்ற சிறு இராச்சியங்களாம். கென்டில் ஆட்சி நடாத்திய அரசர் இங்கிலாந்து தீவின் மீது முழு உரிமை பாராட்டி யதாக அறிகிறோம். வெஸ்ஸெக்ஸ் ஆங்கிலக் கால்வாயிலிருந்து தேம்ஸ் ஆறுவரை நீண்டிருந்தது. அதில் ஆக்ஸ்போர்ட்ஷயரும் சேர்ந்திருந்தது. மத்திய நிலங்கள் மெர்சியாவில் இணைந்திருந்தன.

செவர்ன் ஆற்றுப் பள்ளத்தாக்கில் இருந்த ஹிவிக்சாஸ் வெஸ் ஸெக்ஸின் ஆதிக்கத்திற்குட்பட்டது. மெர்சியா, வெஸ்ஸெக்ஸ் நார்த்தம்பிரியா போன்ற பகுதிகளில் வாழ்ந்த கெல்ட்டியர் மேற்குப் புறமாக விரட்டப்பட்டனர்.

(ஆ) கிராமம், நூற்றுவர் சபை, ஷயர் ஆகியவை:- தற்கால கிராமங்கள் ஆங்கில-சாக்சானியர்களால் அமைக்கப் பெற்றவை யாம். அவையே இங்கிலாந்தின் தொன்மையான நிறுவனங்கள் என்றுல் மிகையாகாது. அவற்றை இனி ஆராய்வது நம் கடமை யன்றோ? அவர்கள் வாழ்ந்து வசித்து வந்த நிலம், குன்றுகள், பள்ளத்தாக்குகள் ஆகியவற்றை இன்றும் காணலாம். அங்கெல் லாம் அவர்கள் தம் இல்லங்களை அமைத்துக் கொண்டார்கள். அவர்களின் இடுகாடுகளைப் புதைபொருள் ஆராய்ச்சி வல்லுநர்கள் கண்டுபிடித்துள்ளார்கள். அவர்களின் சமூக பழக்கவழக்கங்களை ஆதாரமாகக் கொண்டுதான் ஆங்கில மக்கள் வாழ்க்கை உருவாக்கப் பெற்றுள்ளது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

சாக்சானியர் தம் கிராமப்புறங்களை உருவாக்கிக் கொண்ட நாட்களில் இங்கிலாந்தின் நிலை எப்படியிருந்தது? சாக்சானியர் நிலத்தைப் ஃபென் (Fen) [சேறும் சகதியும் நிறைந்த தாழ் நிலத்தைப் பென் என்பர்] என்றும், காடுகள் (Wood) என்றும் ஃபெல்டு (Feld) என்றும் வர்ணித்தனர். ஆனுல் ஃபெல்டு என்பது தற்கால பீல்டு (Field) என்னும் சொல்லிலிருந்து எதிரிடையான பொருளில் பயன்படுத்தப்பட்டது. ஃபெல்டு என்ற சொல் பரந்த வேலிக்குள் அடைபடாத நிலத்தைக் குறித்தது. இங்கிலாந்துத் தீவின் பெரும்பகுதிகளில் காடுகள் நிறைந்திருந்தன. இன்று காணப்பெறும் குள்ளநரிக் கூட்டங்களைப் போன்று அக்காலத்தில் கரடிகளும், ஓநாய்களும் பொதுவாக அக்காடுகளில் வாழ்ந்தன. பல கவுண்டிகளில் இருந்த காடுகள் வெட்டப்பட்டு அவை வாழ் வதற்கேற்றபடி அமைக்கப்பட்டன என்பதனை அக்கவுண்டிகளின் பெயர்களை ஆராய்ந்தால் விளங்கும்.ஹென்றி, ஆல்டர்லி போன்ற கவுன்டிகள் இங்ஙனம் உருவானவையே.

வீடு என்ற சொல்லை ஆங்கில சாக்சானிய பெயரில் பலவித மாக அழைப்பர். ஹேம்(பண்ணை), டேன் (Tun)-(பண்ணை வீடு) காட் (குடிசை) மற்றும் ஸ்டெட் (Stead)-(வாழும் வீடு) ஆகியவை வழக்கிலிருந்த சில சொற்கள். இச்சொற்கள் ஊர் பெயர்களின் முடிவில் பெரும்பாலும் வந்தன. சில சமயம் அப்பெயர்கள் தனிப் பட்ட மனிதர்களின் பெயர்களுடன் இணைந்தோ அன்றி அவர்தம் வீடுகள் இருந்த நிலப்பகுதியை வர்ணிக்கும் சொற்களாகவோ

அவை அமைந்திருந்தன. ஆங்கில-சாக்சானியர் சொற்கள் ஆங்கில மொழியில் சேர்ந்திருப்பதற்கு எடுத்துக்காட்டாக பல ஊர் பெயர்கள் -'ing' என்று ஆங்கில எழுத்துக்களுடன் முடிவடையும். (எ. கா) வோக்கிங் ஹாம் (Woking ham).

இங்கிலாந்தில் ஏற்பட்ட சாக்சானிய குடியேற்றங்கள் குடும்பங்களாலும், இனங்களாலும் ஏற்பட்டிருக்க வேண்டும். எனினும் இவ்வினத்தவர்களிடையே அனைவரும் சமமான அந்தஸ்தைப் பெற்றிருக்கவில்லை. ஐரோப்பாவில் வாழ்ந்த ஞான்று கூட சாக்சானியர் அடிமைகள் சிலரைக் கொண்டிருந்தனர். அதே போன்று இங்கிலாந்தில் குடிபேறியபோது சாக்சானியர் பிரிட்டானியரைத் தம் அடிமைகளாக்கிக் கொண்டனர். மேலும் சாக்சானிய சுதந்திர குடிமக்கள் அனைவரும் சமமாக நடத்தப் படாமல் அவர்களிடையே ஏற்றத்தாழ்வுகள் பல இருந்தன. அவர்கள் உயர்குடிமகன்-சாதாரணமானவன் என்று பொருள்படும் eorls என்றும் ceorls என்றும் பிரிந்திருந்தனர். அவை ஆங்கிலத்தில் (Gentle) என்றும் (Simple) என்றும் பொருள்படும். காலப் போக்கில் Ceorl எனப்படும் சாதாரணவன் சமூக அமைப்பில் அந்தஸ்து குறைந்தவனாகக் கருதப்பட்டான். மாறாக உயர்குடி மகன் என்னும் eorl என்பானின் அந்தஸ்து உயரத் தொடங்கியது. பின்னர் உயர்குடிப் பிறப்பினைக் குறிக்கும். 'தேனர்' (Thgner) என்ற சொல் பழக்கத்திற்கு வந்தது. தேனர் என்ற சொல்லும் தொடக்க கால eorl என்ற சொல்லும் ஒரே பொருளைச் சுட்டின.

**திறந்த வயல் முறை;-** (The open field system) சாக்சானியர் காலத்தில் அவர்கள் குடியேறிய பல நூற்றுண்டுகளுக்குப் பின்னரும் கிராமப் புறத்திலிருந்த உழுநிலம் மூன்று பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. அவை 'திறந்த வயல்கள்' எனப்பட்டன. அவ்வுழு நிலங்களைச் சுற்றி வேலியோ வரப்போ இல்லாமையால், அவற்றை திறந்த வயல்கள் எனப் பெயரிட்டழைத்தனர். இம் மூன்று பிரிவான வயல்களில் ஒன்றில் குளிர்காலத்தில் கோதுமையையோ அல்லது ரை என்னும் தானிய வகையையோ விதைத்தார்கள். (ரொட்டி சுடுவதற்கு ஏற்றது இத்தானியம்) வசந்த காலத்தில் பிறிதொரு வயலில் பார்லியை விதைத்தனர் (பார்லியிலிருந்து பானங்களைத் தயாரித்தனர்). மூன்றுவது வயல் தரிசு நிலமாக விடப்பட்டது. தரிசு நிலத்தில் எதையும் அவர்கள் பயிரிடவில்லை. இந்நிலங்களில் மாறி மாறி உழுது பயிரிட்டார்கள். நிலத்தை செயற்கை முறையில் உரமிட்டுப் பயிரிடும் முறையை அறியாத அவர்கள் ஒரு வயலை தரிசாக ஓராண்டு விட்டு விட்டனர். அடுத்தாண்டு பிறிதொரு வயல் தரிசாக விடப்படும். தரிசாகவிடப்

பட்ட நிலத்தை உழுது பயிரிட்டனர். இவ்வகையாக பயிர் மண்டலிப்பு முறையாக உழுது பயிரிடும்போது, ஒவ்வொரு வயலும் மூன்றாண்டுகளுக்கொரு முறை தரிசு நிலமாக விடப்பட்டது. பின்னர் திறந்த வயல்கள் ஏக்கர்களாகவும், அரை ஏக்கர் துண்டுகளாகவும் பிரிக்கப்பட்டன. அவற்றைத் தாழ்ந்த சுற்றி வரப்புகள் கட்டப்பட்டன. இத்தகைய துண்டு துண்டாக்கப்பட்ட வயல்களைக் கிராம மக்களுக்கு விநியோகித்தார்கள். ஒரு கிராமப் புறத்தானுக்குச் சொந்தமாகக் கருதப்பட்ட துண்டு நிலங்கள் அடுத்தடுத்துக் கொடுக்கப்படாமல், பயிரிடத் தகுதி வாய்ந்த நிலப்பகுதிகள் இங்கொன்றும் அங்கொன்றுமாக சிதறியிருக்கும்படி கொடுக்கப்பட்டன. இத்தொன்மையான பண்ணை வேளாண்மை முறையின் மூலம் எப்படித் தொடங்கியது என்பதனை அறிவது கடினமாகும். இம்முறை வழக்கத்திற்கு வரக் காரணமாக அமைந்தது நல்ல சாகுபடி நிலம் ஒருவருக்கும், சாகுபடிக்கு உதவாத நிலம் பிறிதொருவருக்கும் போகக் கூடாமல்தடுப்பதற்காக எழுந்த முறையாகும். அத்தகைய பண்ணைகளில் ஒன்றினை நாம் இன்றும் நாட்டில் ஹாம்ஷயரிலுள்ள லாக்ஸ்டன் என்னுமிடத்தில் காணலாம். மூன்று வயல் முறை நடைமுறையில் இருப்பதையும், அவை திறந்த வயல்களாக இருப்பதையும் காணும்போது நமக்கே வியப்பேற்படும். அங்கிருக்கும் துண்டு நிலங்களை முப்பது பண்ணைக்காரர்கள் பங்கு போட்டுக் கொண்டுள்ளனர்.

நூற்றுவர் வட்டம்:- ஆங்கில-சாக்சானிய அமைப்பு முறையில் பிற்காலத்தில் எழுந்தது நூற்றுவர் வட்ட அமைப்பாகும். பல கிராமங்கள் ஒன்றுகத் தொகுக்கப்பட்டு பெரும் தொகுதியாகக் கருதப் பட்டதைத் தான் நூற்றுவர் வட்டம் என்கிறோம். நூற்றுவர் வட்டம் நம் காலம் வரை தொடர்ந்து வந்திருக்கின்றன. ஆங்கில சட்டங்களில் ஒரு சிலவற்றில் இன்றும் நூற்றுவர் வட்ட மக்கள் என்ற சொல்லைக் காணலாம். நூற்றுவர் வட்டம் என்ற பெயரின் தோற்றத்தைக் குறித்து நமக்குத் திட்டவட்டமாக ஒன்றும் தெரியவில்லை. ஒரு காலத்தில் நூறு குடும்பங்களைச் சார்ந்தவர்கள் வாழ்ந்த நிலத்தை இது குறித்திருக்கக் கூடும். ஒரு சில வழக்குப்படி தூற்றுவர் வட்டம் என்பது சரியாக நூறு ஹைடு (Hide) என்னும் நிலப்பரப்பின் அளவினைக் குறிப்பதாகும் (ஒரு ஹைடு என்பது 120 ஏக்கர் நிலப்பரப்பினை குறிக்கும்). நூற்றுவர் வட்டத்தில் மாதமொரு முறை கூடும் நீதி மன்றம் ஒன்றுமிருந்தது. அம்மன்றத்திற்கு தலத்தைச் சார்ந்த தேனர்களும், ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் தேர்ந்தெடுக்கப் பெற்ற பெருமனிதர்கள் நால்வரும் வந்தனர். வட இங்கிலாந்தில் நூற்றுவர் வட்டம் என்ற பெயர் மாறி வேபன்டேக் (Wapentake)என்ற பெயரால் அழைக்கப்பட்டது, அது டேனியப் பெயராகும்.

ஷயர் : கிராமங்கள் தொகுதிகளாக்கப் பெற்று நூற்றுவர் வட்டங்களாயின. பிற்காலத்தில் நூற்றுவர் வட்டங்களின் தொகுதிகள் 'ஷயர்' என்றழைக்கப் பெற்றன. இங்கிலாந்தின் தல ஆட்சி நிறுவனத்தின் முக்கிய கேந்திரங்களாக இவை இன்றும் வழக்கில் உள்ளன. எஸ்ஸெக்ஸ், சஸ்ஸெக்ஸ், கென்ட் போன்ற ஷயர்கள் தொடக்கத்தில் சிறு சிறு இராச்சியங்களாக இருந்தன. கிழக்கு ஆங்கிலியா என்ற இராச்சியத்தின் இரு பிரிவுகள் நார்பக் மற்றும் சப்பக் என்னும் ஷயர்களாயின. வெஸ்ஸெக்ஸும் தொடக்க காலத்திலேயே ஷயர்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆனல் மெர்சியா என்ற இராச்சியம் மட்டும் மூத்த எட்வர்டின் காலம் வரை ஷயர்களாகப் பிரியவில்லை. மூத்த எட்வர்டு மகா ஆல்பிரட்டின் மகனுவார்.

ஷயரின் நிர்வாகத்தை ஷயர்ரீவு (Shirereeve) என்னும் அதிகாரி கவனித்தார். ஷயர்ரீவ் என்ற தொடரே பின்னர் ஷெரீப் என்ருயிற்று. ஷயர்ரீவு என்ற அதிகாரிகள் அரசரால் நீதித் துறையைப் பராமரிக்கும் பணியுடன் நியமிக்கப்பட்டார்கள். அவருடைய நீதிமன்றத்தை ஷயர்மூட் என்றனர். அவரின் பதவிக்காலம் ஈராண்டுகளாகும்.

நார்மானியரின் ஆட்சிக் காலத்திலும் ஷயர் என்ற பாகுபாடுகள் நீடித்தன. கவுன்டி என்ற சொல் காம்டி (Comte) என்ற ஆங்கில–பிரஞ்சிய சொல்லிலிருந்து பிறந்ததாகும்.

(இ) விட்டான் (Wittan) சபை:- சாக்சானிய இராச்சியத்தில் மிக உயர்ந்ததெனக் கருதப்பட்ட அவையைத்தான் 'விட்டான்' என்றழைத்தனர். அந்த அவையின் தலைவர் அரசரே யாகும். அரசர் தமக்கு விருப்பப்பட்டபோது தம் இராச்சியத்தின் பிரமுகர்களைக் கூடுமாறு ஆணை விடுத்தார், சட்டங்களை உருவாக்கவும், புது அரசரைத் தேர்ந்தெடுக்கவும் விட்டான் சபையினை அரசர் கலந்தாலோசித்தார். தரங்கெட்ட அரசர்களைப் பதவி நீக்கம் செய்யவும் அச் சபையால் முடியும்.

**ஆங்கில சாக்சானிய சட்டங்கள்:-** சாக்சானிய இங்கிலாந்து நாட்டின் சட்டங்கள் கிறிஸ்தவ சகாப்தம் தொடங்கிய காலத்திலிருந்து வந்தன எனில் மிகையாகாது. அக்காலத்தில் சட்டத் தொகுப்புகள் இரண்டாகும். முதலாவது சட்டத் தொகுப்பு கென்டின் அரசரான எதல்பர்ட் என்பாராலும்- அவர் செயின்ட் அகஸ்டின் என்பவரால் கிருஸ்தவராக்கப்பட்டவர். இரண்டாம் தொகுப்பு வெஸ்ஸெக்ஸின் அரசர் இன் என்பவராலும் தொகுக்கப்பட்டன. முதல் தொகுப்பு பழங்காலத்திலிருந்து செயல் முறையில்

இருந்த சட்டங்களைக் கூட தொகுத்திருந்தது; அவை ஜெர்மானிய மூலத்தைக் கொண்டவையேயன்றி, ரோமானிய மூலத்தையன்று. அச் சட்டங்களின்படி குற்றம் புரிந்தவர்களை மூன்று வகையாக தண்டித்தனர். முதலாவது அபராதங்கள், இரண்டாவது சண்டையில் பங்கு கொள்ளச் செய்தல், மூன்றாவது, நாடுகடத்தப் படுதல். முதலாம் முறைப்படி தண்டனைக்கான ஆதாரத்தை கென்டிய அரசர் எதல்பர்ட்டின் சட்டத் தொகுப்பில் காணலாம். எடுத்துக் காட்டாக, ஒருவர் மற்றொருவரின் மூக்கை கையால் குத்தி உடைத்தால், அபராதத் தொகையாக மூன்று ஷில்லிங்குகள் கட்ட வேண்டும். கண் நோண்டப் பட்டால் 50 ஷில்லிங்குகள் அபராதமாக விதிக்கப்பட்டது. கொலை குற்றத்திற்கும் இத்தகைய சாதாரண அபராதமே வசூலிக்கப்பட்டது.

அரசர் இன் என்பாரின் சட்டத் தொகுப்பிலிருந்து கொலை குற்றம் புரிந்தவன் நட்ட ஈடு கொடுத்தான் என அறிகிறோம். இத்தகைய நட்ட ஈட்டுத் தொகையைத் தான் வெர்கெல்டு என்பர். (வெர்-மனிதன், கெல்டு-பணம்). நட்ட ஈட்டுத் தொகை இறந்தவரின் உறவினர்களுக்குக் கொடுக்கப்பட்டது. நட்ட ஈட்டுத்தொகையைத் திட்டவட்டமாக நிர்ணயிக்கும் அளவு கோல் இருந்ததையும் நாம் அறிகிறோம். நட்ட ஈட்டுத்தொகை இராச்சியத்திற்கு இராச்சியம் வேறுபட்டது. மெர்சியாவில் பிரபுவைக் கொன்றவனுக்கு நட்டஈடாக 200 ஷில்லிங்குகள் வெர் கெல்டாக விதிக்கப்பட்டது. கொல்லப்பட்டவன் தேனராயின் தொகை 1200 ஷில்லிங்குகளாம். அரசரைக் கொன்றவன் தேனருக்கு விதிக்கப்பட்ட நட்ட ஈட்டைப் போல் ஆறு மடங்கு கட்ட வேண்டியவனானான்.

அபராதம் விதிக்கும் முறைக்கு முன்னர் கொல்லப்பட்டவரின் குடும்பத்தினர் கொன்றவரின் குடும்பத்தோடு சண்டையிட்டு பழி தீர்த்துக் கொண்ட முறை அமுலிலிருந்தது. அதன் விளைவாக நாட்டில் அராஜகம் மூண்டிருக்க வேண்டும். இறுதியாக பெயர் போன குற்றவாளிகள் நாடு கடத்தப்படும் வழக்கம் வந்தது. நாடு கடத்தப்பட்டவர் சட்டங்களுக்குப் புறம்பானவராகக் கருதப்பட்டார். சட்ட திட்டங்களுக்கு அடங்கி நடந்த குடிமக்கள் நாடு கடத்தப் பட்டவரின் "நிலங்களை அழித்து, வீட்டினைக் கொளுத்தி அவனைத் தொடர்ந்து விரட்டி, தலையில் அடித்துக் கொல்ல முயலலாம்."

**ஆங்கில-சாக்சானிய வீரர்களும் தெய்வங்களும்:-** உண்டு, குடித்து மகிழ்வதில் ஆங்கில-சாக்சானிய மூதாதையர்களுக்கு

எவ்வளவு ஆர்வம் இருந்ததோ, அதனைப் போன்றே அவர்களுக்குப் போராடுவதிலும் ஆர்வமிருந்தது. இரவு வேளைகளில் நெருப்பு மூட்டி அதனை வட்டமிட்டு களியாட்டங்களை நடாத்திய அவர்கள், போர் பற்றிய கதைகளை அவர்கள் மூதாதையர்கள் சொன்னதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். யாழ்ப்பாணர்கள் அரசருடைய மன்றங்களில் பண்டைய கதைகளைப் பாடக் கேட்டு இன்புற்றார்கள். வாழையடி வாழையாக, தலைமுறை தலைமுறையாக வந்த இக் கதைப் பாட்டுகள் ஆங்கில இனத்தின் மரபு வழக்கங்களாக உருவாயின. அவற்றுள் மிகுந்த சிறப்புமிக்கதாகக் கருதப் படுவது பியோவுல்ஃப் என்பார் இயற்றிய நீண்ட கதைப் பாட்டுகளாம். தொன்மையான ஆங்கிலத்தின் நிலையான சின்னமாக அமைந்துள்ள அக்கதைப்பாட்டு மேற்கத்திய சாக்சானியரின் கருவூலமாக கி. பி. 1000 வரை போற்றப் பட்டு வந்துள்ளது. அதில் கூறப்பட்டுள்ள கதைகள் தொன்மையானவை; கிறிஸ்தவ சமயத்தைச் சாராத காலத்தவை; ஸ்காண்டிநேவிய தீபகற்பத்தைப் பற்றிய கதைகளாகும். பியோவுல்ஃப் இரண்டு பூதங்களுடனும் ஒரு அரக்கனுடனும் போராடிய வீரதீரங்களை அக் கதை வர்ணிக்கிறது. பிற கதைகளை சாக்சானியர் அவர் தம் ஐரோப்பிய குடியிருப்புகளிலிருந்து கொண்டு வந்தனர். இங்கிலாந்தில் குடியேறிய பிறகு பல்லாண்டுகள் வரை அக் கதைகள் வழக்கத்திலிருந்தன.

பியோவுல்ஃபின் வீரகாவியம் வீர உணர்ச்சியின் நிலைக்களனும். வீர உணர்ச்சியே கிறிஸ்தவரல்லாத சாக்சானியரின் உயரிய வாழ்க்கை மூல்யமாகும். (value-வாழ்க்கை மூல்யம்). ஜெர்மனியிலும், ஸ்காண்டிநேவியாவிலும் இத்தகைய நம்பிக்கை உயிர் நாடியாக இருந்தது. ஆங்கில சாக்சானிய தெய்வங்களைப் பற்றி அறிந்து கொள்ள நமக்குச் சான்றுகள் அருமை வார நாட்களில் சிலவற்றின் பெயர்கள் அவர் தம் தெய்வங்களைக் குறிப்பன. எடுத்துக் காட்டாக புதன்கிழமை என்பது வோடன் (Woden) என்ற தெய்வத்தின் நாளாகும். வோடன் ஆங்கில-சாக்சானிய தெய்வங்களில் சிறப்பானதாகக் கருதப்படும் தெய்வமாகும். செவ்வாய் கிழமை தீவ் (Tiw) என்ற சொல்லிலிருந்து பிறந்ததாகும். தீவ் என்ற பெயர் போர்க் கடவுளைக் குறிப்பதாகும். வியாழக்கிழமை தூனர் (Thunar) என்ற கடவுளைக் குறிக்கும் நாளாகும். தூனர் இடியோசையை நினைவு படுத்தும். இடியோசையைக் கேட்டு சாதாரண மக்கள் வெகுவாக அச்சமுற்றார்கள். எனவே அவர்கள் இடியோசையையும் கடவுளாக உருவகப் படுத்தினர்.

கிறிஸ்தவ சமயத்தினர் கொண்டாடும் ஒரு சில விழாக்கள் கிறிஸ்தவரல்லாத ஆங்கில சாக்சானிய பழக்கங்களிலிருந்து

பிறந்தவையே எனலாம். கிறிஸ்துமஸ் பண்டிகையையொட்டிக் கொண்டாடும் ஒரு சில பழக்க வழக்கங்கள் யூலிடைடு என்னும் கிறிஸ்தவரல்லாதார் கொண்டாடியதொரு விழாவாகும். டிசம்பர், ஜனவரி மாதங்களில் இவ்விழாவை அவர்கள் கொண்டாடுவது வழக்கம். வருகின்ற ஆண்டு நல்ல அதிர்ஷ்டத்துடன் பிறக்க வேண்டி அதற்காக யாகங்களைச் செய்யும் பருவத்தை இவ் விழா நினைவூட்டும். ஈஸ்டர் என்ற பெயர் கிறிஸ்தவல்லாதாரின் எஸ்ட்ரீ (Eostre) என்ற தேவதையைக் குறிக்கும். இத்தேவதை ஒவ்வொரு ஏப்ரல் மாதமும் வந்து வசந்த காலத்திற்கு நல்வரவு கொடுப்பாள்.

தொன்மையான தெய்வங்களின் பெயர்களைத் தாங்கி நிற்கும் ஒரு சில ஆங்கில ஊர்ப்பெயர்கள் இன்றும் நிலைத்திருக்கின்றன. வோடன் வெட்னஸ்பரி என்ற ஊர்ப் பெயரை நினைவு படுத்தும் வென்ஸ்டைக் (வோடன் அணை) என்ற மண்ணால் கட்டப் பட்டுள்ள தடுப்புச்சுவர் வோடனுக்குப் புனிதமானதாகக் கருதப் படுகிறது. எஸ்ஸெக்ஸிலுள்ள தன்டர்ஸ்லி என்ற கிராமப்பெயர் தூனர் என்ற கடவுளிலிருந்து பிறந்ததாகும். சாக்சானியரின் கோவிலையோ அன்றி புனித ஊரையோ குறிக்கும் 'ஹியரா' (Hearh) என்ற சொல்லிலிருந்து 'ஹார்ரோ' (Harrow) என்ற பெயர் வந்தது. பூதங்களையும் அரக்கர்களையும் கூட அவர்கள் மறந்தார்களில்லை. டெர்பிஷயரில் இருக்கும் டிரேக்லோ (Drakelow) என்ற பெயர் பூத மணல்மேடு என்று பொருள்படும்.

கிறிஸ்தவ சமயம் வந்த பின்னர் மேற்படி பழக்க வழக்கங்கள் மறையத்தொடங்கின. இருப்பினும் பலகாலம் அப்பழக்க வழக்கங் கள் யாதேனும் ஒரு வழியாக பழயதை நினைவு கூரத்தக்க முறை யில் நீடித்தே வந்தன என்பதை மறக்கக்கூடாது. காலப்போக்கில் கிறிஸ்தவ சமயம் முன்னேறி அனைவரும் கிறிஸ்தவர் களாயினர்.

ஈ. **கிறிஸ்தவ சமயம் மீண்டும் நிலைநாட்டப் பெறல்:-** பிரிட்ட னுக்கு ரோமானியப் பேரரசு ஈந்த மாபெரும் நன்கொடையாகக் கருதப்படுவது கிறிஸ்தவ சமயம் பற்றிய ஞானத்தை விட்டுச் சென்றதுதான் எனில் அஃது மிகையாகாது. ஆனால் பிரிட்டனில் ரோமானிய நாகரிகத்தை சாக்சானிய படையெடுப்பாளர்கள் வெற்றி கண்டபோது, கிறிஸ்தவ சமயம் பெரும்பாலும் அழிக்கப் பட்டுவிட்டது என்றால் தவறாகாது. நாட்டின் மேலைப்பகுதிகளில் சுதந்திரத்துடன் வாழ்ந்த கெல்ட்டிய மக்களிடம் மட்டும் அச் சமயம் அழிந்து படாமல் நீடித்து வந்தது. இக்கெல்ட்டிய கிறிஸ்தவர்கள் தம் சாக்சானிய பகைவர்களை வெறுத்தபடியால் அவர்களை மதம் மாற்றி கிறிஸ்தவர்களாக்க வேண்டும் என்னும் ஆசையைக் கூட அறவே விட்டுத் தொலைத்தனர். மேலும் அவர்களுக்கு

ரோமாபுரிய திருச்சபையுடன் இருந்த தொடர்பும் அறுபட்டிருந்தது. இத்தருணத்தில் ரோமாபுரியில் திருச்சபை அமைப்பு முறையில் திருத்தி அமைக்கப்பட்டிருந்ததை நினைவிற் கொள்ள வேண்டும்; கெல்ட்டிய கிறிஸ்தவர்கள் தனித்து வாழ்ந்தனர். அவர்களிடையே கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்த பல தல ஞானிகள் தோன்றியிருந்தனர் எனினும் அவர்களைப் பற்றி ஐரோப்பாவில் யாருக்கும் ஒன்றும் தெரிந்திருக்கவில்லை.

**செயின்ட் பாட்ரிக் :-** செவர்ன் ஆற்றுத் தாழ்நிலப் பகுதியில் பிறந்தவர் எனக் கருதப்படும் செயின்ட் பாட்ரிக் என்ற பெரியார் ரோமானிய பிரிட்டிஷ் வழித் தோன்றலாகும். பதினாறும் வயதில் அவரைக் கடற்கொள்ளைக்காரர்கள் கவர்ந்து சென்று அயர்லாந்துக்கு ஏகினர். அங்கு அவர் ஆறு ஆண்டுகள் அடிமையாக வாழ்ந்தார். அங்கிருந்து தப்பியோடிய அவர் காலிய நாட்டிற்குச் (பிரான்ஸ்)சென்று அங்கு மத்திய தரைக்கடலைச்சார்ந்த மடாலயம் ஒன்றில் சேர்ந்தார். அங்கு அவரைக் கவர்ந்த இரு கோட்பாடுகள் அவருடைய வாழ்வைத் திருத்தியமைக்கக் காரணமாய் அமைந்தன. முதலாவது மடாலய இலட்சியங்கள் அவரைக் கவர்ந்தன. இரண்டாவது, ரோமானிய அரசாங்கத்தின் அமைப்பு முறைகளால் அவர் கவரப்பட்டார். அக் காலத்தில் ரோமானிய அரசாங்க அமைப்பு முறைகள் பிரிட்டனில் மறையத் தொடங்கி இருந்தன. பல்லாண்டுகளுக்குப் பின்னர் அவர் தம் பெற்றோர்களைப் பார்க்க பிரிட்டனுக்கு வந்திருந்தபோதுதான், அவர் ஐரிஸ்காரர்களைக் கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்றம் செய்யவேண்டுமென உறுதி பூண்டார். தம் வாழ்நாளின் எஞ்சியிருந்த காலத்தை அவர் அயர்லாந்தில் கழித்தார். திருச் சபையையும் மடாலயத்தையும் அவர் ஆர்மக் (Armagh) என்னுமிடத்தில் நிலைநாட்டி அதனுடைய முதல் பிஷப்பாகவும் ஆனார். ஐரிஸ் துறவிகள் ஆர்வத்துடன் கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கினர். அவர்களுக்கு ரோமானிய இலக்கியத்திலும் பாண்டித்யம் இருந்தது. ரோமானிய இலக்கியம் மேற்கு ஐரோப்பாவில் மறையத் தொடங்கியது அக்காலத்தில் தான்.

**ஐரிஸ் பாதிரிகள்:-** ஐரிஸ் துறவிகள் சிறந்த பாதிரிகளாகத் திகழ்ந்தனர். அவர்கள் மடாலயங்களை இத்தாலி, ஸ்விட்சர்லாந்து போன்ற வெளி நாடுகளிலும் நிலைநாட்டி வெற்றி கண்டார்கள். பிரிட்டனுக்கும் கடல் கடந்து சென்று, வேல்ஸில் இருந்த கெல்ட்டிய திருச்சபைகளில் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டிக் கொண்டனர். பின்னர் கார்ன்வாலிலும் கிறிஸ்தவசமயத்தைத் அவர்கள் நிலைநாட்டினர். கார்ன்வால் கிறிஸ்தவரல்லாத

சாக்சானியரின் ஆளுகைக்குட்பட்டடிருந்தது. அங்கிருந்த ஐரிஸ் கிறிஸ்தவ பாதிரிகள் சீரிய பணியாற்றினர்.

**செயின்ட் கொலம்பா:-** ஸ்காட்லாந்தின் மேலைக்கடற்கரையை யொட்டியிருந்த ஐயோனு என்னும் சிறு தீவில் செயின்ட் கொலம்பா என்னும் ஐரிஸ் பாதிரியார் ஒருவர் தான் கிறிஸ்தவ மடாலயம் ஒன்றை நிலை நாட்டக் காரணமாயிருந்தார். அங்கு அவர் ஆர்கைல்ஷயரிலும் அதனை அடுத்திருந்த தீவுகளிலும் அயர்லாந்திலிருந்து வந்து குடியேறியிருந்த ஸ்காட்டிய கிறிஸ்த வர்களுடன் நெருங்கிய உறவு கொண்டார். ஸ்காட்லாந்தின் வடக்கிலும் கிழக்குப் பகுதியிலும் வாழ்ந்த கிறிஸ்தவரல்லாத பிக்டுகளை மதம்மாற்றிக் கிறிஸ்தவர்களாக்கிய பெரும் சாதனையைச் செய்தவர் செயின்ட் கொலம்பாவேயாகும்.

மடாலய முறையை ஐரோப்பாவில் மறுமலரச் செய்த பெருமை செயின்ட் பெனிடிக்ட் என்ற பெரியாரைச் சாரும். அவர் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பக் காரணமாயிருந்ததுடன், சாக்சானிய இங்கிலாந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மதம்மாறினமைக்கும் வழி வகுத்தவராவார்.

செயின்ட் பெனிடிக்ட் (480-543) என்ற பெரியார் இத்தாலி யில் பிறந்தவர். செயின்ட் பாட்ரிக்கின் காலத்திற்கு ஏறத்தாழ நூருண்டுகளுக்குப் பின்னர் பிறந்தார் அவர். தம்முடைய பதினைந்தாம் ஆண்டில் அவர் தனியாக குகையொன்றில் வாழ்ந் தார். பிறர் அறியாதபடி மலை இடுக்கிலும், காடுகளிலும் இருந்த அக் குகையில் அவர் வாழ்ந்து வந்ததை அறிந்த பயணிகள் அவருடைய தூய்மையானதும், எளிமையானதுமான வாழ்வினுல் கவரப் பட்டனர். பின்னர் அவர் நேபில்ஸ் நகரத்திற்கு அருகில் மாண்டிகாஸினே என்னும் பெயரில் மடாலயம் ஒன்றை நிறுவினர். அங்கு வாழ்ந்த துறவிகள் கடுமையான கட்டுப் பாட்டைப் போற்றிக் கடைப் பிடித்தனர். அவர்கள் கடைப் பிடித்த ஒழுக்க நெறிகளை 'சட்ட திட்டம்' (Rule) என்று பெனிடிக்ட் விளக்கம் செய்தார்.

**பெனிடிக்ட்டின் சட்டதிட்டம்:-** பெனிடிக்ட்டின் சட்ட திட்டம் துறவிகளிடம் பல நல்ல குணங்களை எதிர் பார்த்தது. அவர்கள் கீழ்ப்படிதல், கற்பு, ஏழ்மை ஆகிய மூன்று விரதங்களை கடைப் பிடிக்க வேண்டும். மற்றும் அத் துறவிகள் தமக்கிருந்த நேரத்தை யும் மூன்ருகப் பிரித்து கொண்டிருந்தனர். முதல் பிரிவில் அவர்கள் தம் தோட்டத்திலோ அன்றிப் பண்ணையிலோ பணியாற்ற

உடலுழைப்பை நல்க வேண்டும். அடுத்த பிரிவு படிப்பதற்கும், மூன்றும் பிரிவு தொழுகைக்கும் (ஜபத்திற்கும்) பயன் படுத்தப்பட வேண்டும். பெனிடிக்ட்டுக்கு முன்னர் இருந்த துறவிகள் காலம் முழுவதையும் தியானத்திற்கே பயன் படுத்தியிருந்தனர். பெனிடிக்ட் அதை மாற்றி உடலுழைப்பின் அவசியத்தையும் வலியுறுத்தினர். 'உடலுழைப்பு செய்வதும் ஒருவகையான தொழுகையேயாம்' என்பது அவர் போதனையாகும். செயின்ட் பெனிடிக்டின் 'சட்டதிட்டம்' ஐரோப்பாவின் அனைத்துப் பகுதி களிலுமிருந்த மடாலயங்கள் பின் பற்றத் தக்க முன் மாதிரியாயின மடாலய வாழ்க்கை அமைப்பிற்கு திட்ட வட்டமான வடிவத்தைக் கொடுத்தவர் அவர் தான் எனில் அஃது மிகையாகாது. பெனிடிக்டைன் சட்டதிட்டம் மடாலயத் தலைவருக்கு (ஆப்பட்) உள்ள அதிகாரங்களை விளக்காமல் விட்டு விட்டமையால் அதன் நெளிவும் சுழிவும் இத்தாலி, இங்கிலாந்து போன்ற தொலைதூர நாடுகளிலும் எளிதாகக் கடைப்பிடிக்க வழி கோலின.

**செயின்ட் கிரகரி;**-செயின்ட் பெனிடிக்ட் காலமான மூன்றுண்டு களுக்குப் பின்னர் பிறந்தவர் செயின்ட்கிரகரி என்றும் பெரியார். செயின்ட் பெனிடிக்ட் தொடங்கி நிறை வேற்ற முடியாமல் விட்டுச் சென்ற பணியைப் பூர்த்தி செய்த பெருமை செயின்ட் கிரகரியைச் சாரும். அவர் ரோமானிய உயர்குடியைச் சார்ந்த குடியொன்றில் பிறந்தார். அதனுல் அவருக்கு குறைவற்ற பொருட் செல்வமும் நிறைவான பாரம்பரிய மரபுகளும் ஒருங்கே கிடைத்தன. முப்பத் தைந்தாம் ஆண்டில் அவர் வாழ்வில் மாபெரும் மாற்றம் ஒன்று நிகழ்ந்தது. தம் வீடு ஒன்றைத் தவிர தம் சொத்துகள் அனைத்தை யும் விட்டொழித்து, அவற்றை செயின்ட் ஆண்ட்ரூஸ் மடாலயம் எனினும் பெயரில் மாற்றி அமைத்து விட்டு, செயின்ட் பெனிடிக்ட் டின் கொள்கைகளைக் கடைப்பிடிக்க அவர் முற்பட்டார். செயின்ட் ஆண்ட்ரூஸ் மடாலயத்தின் ஆபட் குருவாக கிரகரி இருந்த காலத் தில் தான் அவர் இங்கிலாந்தில் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப உறுதி பூண்டார்.

பீடு பெருமகனுரின் நூலிலிருந்து இங்கிலாந்து கிறிஸ்தவ மதத்திற்கு மாறின கதையைத் தெளிவாக உணரலாம். கதையின் கருத்து இதுதான். ''ஒரு நாள் சந்தைக்கடையில் விற்பனைக்கு வந்திருந்த பல பொருள்களுடன் சில சிறுவர்களையும் விற்பதற்காக விலை பேசக் கொண்டு வந்திருந்தனர். அவர்களைக் கண்ட கிரகரி அவர்கள் எந்த நாட்டைச் சார்ந்தவர்கள் என வினவினர். அவர்கள் வெண்ணிற உடலுடன் பார்வைக்கு அழகாக இருந்தனர். அவர் தம் முடி கருத்தைக் கவரும் தன்மை கொண்டிருந்தது.

அவர்கள் பிரிட்டன் தீவுகளைச் சார்ந்தவர்கள் என்பதை அறிந்த கிரகரி, அங்கு கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பத் திட்டமிட்டார்."

அவர்கள் ஆங்கில்கள் என்பதை அறிந்த கிரகரி பெரியார், அவர்களை பரமண்டலத்தில் இருக்கும் தேவதைகளுடன் ஒப்பிட்டார். அவர்களுடைய மாநிலத்தின் பெயரையும், அவர்களை ஆண்ட அரசரின் பெயரையும் தெரிந்துகொண்ட அம் மதகுரு, பிரிட்டனுக்குப் புறப்பட்டுச் சென்றார். ஆனால் சிறிது காலத்திற்குள அவர் ரோமாபுரிக்குத் திரும்ப அழைக்கப்பட்டார்.

பிற்காலத்தில் இக்கிரகரியே போப்பாண்டவராகத் திகழ்ந்தார். அவர் போப்பாண்டவராகப் பதவி வகித்த காலம் 590க்கும் 604க்கும் இடைப்பட்ட காலமாகும். இக் காலம் ஐரோப்பிய வரலாற்றில் சிறப்பானதொரு கால கட்டமாகும். இடைக்காலத்தில் சக்தி வாய்ந்த போப்பாண்டவரின் அமைப்பினை உருவாக்கின உண்மைப் பெரியார் கிரகரி எனில் அது தவருகாது. செல்வாக்கு மிக்க போப்பாண்டவர்களில் முதன்மையாளராகக் கருதப்படுகிருர். இக்காலத்தில் ரோமாபுரியும் இத்தாலியும் வலிமை குன்றி பலவீனமான நிலையில் இருந்தன. ரோமானியப் பேரரசின் தலைநகராக கான்ஸ்டான்டிநோபில் இத்தருணத்தில் விளங்கியது. பெயரளவிற்கு இத்தாலி ரோமானியப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்டதாகக் கருதப்பட்ட போதிலும், அந் நாட்டின் பெரும்பாலான பகுதிகள் லாம்பார்டுகளின் வசமிருந்தன. காலிய நாடும் ஸ்பெயின் நாடும் கிறிஸ்தவ நாடுகளாயினும், பேரரசிலிருந்து தனித்து நின்றன. இங்கிலாந்திலோ சாக்சானியர் ஆண்டனர்.மேற்கத்திய கிறிஸ்தவத்துடன் கத்தோலிக்கதிருச்சபையை மீண்டும் ஒன்ருக இணைத்த பெருமை கிரகரியையே சாரும். அத்துடன் ரோமாபுரியை உலகத்தின் மையமாக்கி மேற்கத்திய ஐரோப்பிய மக்களை அதன்பால் ஈர்த்த பெருமைக்கும் அவரே மூல காரணமாவார். தம் இறுதிக் காலம் வரை அம் முயற்சியை அவரே இடையருது செய்தார்; அவரது மரணத்திற்குப் பின்னரும் மேற்கத்திய கிறிஸ்தவ நாடுகள் திருச்சபையின் ஆதிக்கத்தின்கீழ் நிலையாக நீடித்தமைக்கு அவருடைய அரும்பணியே காரணமாகும்.

**இங்கிலாந்து கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுகொள்ளல்:-** போப்பாண்டவர் கிரகரியின் திட்டத்தில் இங்கிலாந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்றப்பட்டது மாபெரும் சாதனையென்பது நினைவு கூரத்தக்கது. கென்ட் இராச்சியத்தின் அரசரான எதெல்பர்ட் என்பார் அத்தருணத்தில் பிராங்கிய இளவரசியும் கிறிஸ்தவ சமயத்தைச்

சார்ந்தவளுமான பெர்த்தா என்னும் பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டிருந்தார். அத்தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டார் போப்பாண்டவர் கிரகரி. தம்முடைய நண்பரான செயின்ட் அகஸ்டின் என்பாரின் தலைமையில் நாற்பது துறவிகளை அப் பணிக்காக நியமித்தார். அவர்கள் ஐரோப்பாவிலிருந்து கடல் கடந்து, தானட் என்னுமிடத்திற்கருகில் இருந்த எப்ஸ்ஃபிளீட் என்ற இடத்தில் வந்துற்றனர் (597).

**கென்டில் கிறிஸ்தவத்துறவிகள்:-** கென்டில் கிறிஸ்தவ சமயம் பரவின கதையைச் சுவையாகக் கூறுவர்.

ஏதெல்பர்ட்டும் அவருடைய கிறிஸ்தவ மனைவியான பெர்த்தாவும் அகஸ்டினின் தலைமையில் வந்த துறவியர் குழுவை வரவேற்றனர். கிறிஸ்தவத் துறவிகளின் போதனைகளைச் செவிமடுத்த அரசர் அச் சமயத்தில் ஆர்வம் காட்டினர். ''உங்கள் கூற்று அழகாக இருக்கிறது.'' என்று கூறிய அரசர் ''இருப்பினும் அவை புதிய கருத்துக்களாகும். எனவே இத்துணை காலம் கடைப் பிடித்து வந்த புதுக்கருத்துக்களைக் கைவிடவும் என்னல் இயலவில்லை'' என்ருர். ஆனல் அரசர் வாழ்ந்த நகரமான கான்டர்பரியில் அவர்கள் தங்கிவாழ அனுமதி அளித்தார். அந்நகரில் குடியேறிய அகஸ்டினும் அவருடைய துணைவர்களும் அங்கு பாழடைந்திருந்த செயின்ட் மார்ட்டின் திருச்சபையைப் புதுப்பித்து 'நிர்மாணித்தனர்; அத்திருச்சபை ஊருக்கு வெளியே இருந்தது. ரோமானியரின் காலத்திலிருந்து வந்திருந்த அத்திருச் சபைக்குப் புதுவாழ்வு கொடுத்தனர். அவர்கள் முதலில் அரசரைக் கிறிஸ்தவராக மதம் மாற்றினர். பின்னர் கென்ட் இராச்சியம் முழுவதையும் மதம் மாற்றினர். எனினும் அகஸ்டினின் வெற்றி நீண்ட காலம் நீடிக்கவில்லை. அதற்குக் காரணம் அகஸ்டினுக்கு போப்பாண்டவர் கிரகரியிடம் காணப்பட்ட தீவிர உற்சாகமும் சக்தியும் இருக்கவில்லை. அவரால் ஏனைய ஆங்கில இராச்சியங்களை கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்ற முடியவில்லை. கெல்ட்டிய கிறிஸ்தவ பிஷப்புகளைச் சந்தித்து அவர்களை ரோமானிய திருச்சபையை ஏற்றுக் கொள்ள அவர் முயன்ருர். அக் கூட்டத்தில் அவர் உணர்ச்சி வயப்பட்டு பொறுமையையிழந்த தன் நிமித்தமாக. அவர் முயற்சி தோல்வியுற்றது. இருப்பினும் போப்பாண்டவர் இங்கிலாந்து தீவு முழுவதையும் மதம் மாற்ற தீவிர ஆவல் கொண்டார். அகஸ்டினை கான்டர்பரி ஆர்ச்பிஷப் என்னும் பதவியில் அமர்த்தினர் போப்பாண்டவர். அத்துடன் ரோசெஸ்டர், இலண்டன் ஆகிய மேலும் இரண்டு பிஷப் ஆட்சிப் பகுதிகள் நிலை நாட்டப் பட்டன.

நார்த்தம்பிரியாவைச் சார்ந்த எட்வின் (617-33) இதற்குப் பின்னர் சிறிது காலத்திற்குள் வட இங்கிலாந்தை மதம் மாற்றும் முதல் முயற்சி தொடங்கப்பட்டது. நார்த்தம்பிரியாவின் அரசரான எட்வின் என்பார் (617-33) அக்காலத்தில் இங்கிலாந்து தீவிலேயே சக்தி வாய்ந்தவரெனக் கருதப்பட்டவர். புதிதாக கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்றப்பட்ட கென்ட் அரசர் எதெல்பர்ட்டின் மகளான எதெல்பர்க்கா என்பாளை அவர் மணந்து கொண்டார். அவளும் ஒரு கிறிஸ்தவ மாதரசியாகும். வடபால் தம் கணவனைச் சேர வந்த ஞான்று அவள் தன்னுடன் பாலினஸ் என்ற ரோமானியப் பாதிரியாரை உடன் அழைத்துச் சென்றாள். பாலினஸின் முயற்சியால் எட்வினும் அவருடைய அரண்மனை ஊழியர்கள் அனைவரும் கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்றப் பட்டனர். கிறிஸ்தவரல்லாதவர்கள் கிறிஸ்தவ சமயத்தை மேற் கொண்டார்கள்.

எனினும் இம் மதமாற்ற முயற்சி நீண்ட காலம் நீடிக்கவில்லை. எட்டாண்டுகளுக்குப் பின்னர் எட்வின் கொலையுண்டார். மெர்சியாவின் அரசரான பெண்டா என்பாருடன் டோன்காஸ்டருக்கு அருகிலுள்ள ஹீத்ஃபீல்ட் என்னும் இடத்தில் நடந்த போரில் அவர் கொலையுண்டார். (633). நார்த்தம்பிரியாவில் குழப்பம் மூண்டது. பாலினஸ் பாதிரியாரும் அரசியாரும் நாட்டை விட்டுத் தப்பியோடினர். கிறிஸ்தவ சமயமும் மறையலாயிற்று.

செயின்ட் அய்டான்;- அடுத்த ஆண்டில் நார்த்தம்பிரியா அரச குடும்பத்தைச் சார்ந்த ஆஸ்வால்டு என்னும் இளவரசர் அயோனுவிலிருந்து திரும்பி வந்தார். அவர் ஒரு கிறிஸ்தவராக வளர்க்கப்பட்டவர். நார்த்தம்பிரியாவை பெண்டா தாக்கி அழித்த ஞான்று ஆஸ்வால்டு இளவரசர் உயிர் தப்ப ஓடிச் சென்று அயோனுவில் தஞ்சம் புகுந்திருந்தார். நார்த்தம்பிரியாவிற்குத் திரும்பிய ஆஸ்வால்டு மீண்டும் அந்த இராச்சியத்தை நிலைநாட்டினார். அது மட்டுமல்லாமல், ஆஸ்வால்டு நார்த்தம்பிரியாவில் கிறிஸ்தவ சமயத்தை மீண்டும் நிலைநாட்டும் நோக்கத்துடன் அயோனுவிலிருந்து கிறிஸ்தவப் பாதிரியார் ஒருவரையும் வரவழைத்தார். அய்டான் என்னும் பெயர் கொண்ட பாதிரியார் ஒருவர் அதன்படி வந்து சேர்ந்த பெரியாராகும். புனிதத் தீவு எனப்படும் லின்டிஸ்பார்ன் என்னுமிடத்தில் அவர்தங்கி கிறிஸ்தவ சமயத்தைப் பரப்ப முயன்றார். அய்டான் எளிமைக்கும் சீரிய பணிகளுக்கும் பெயர் பெற்றவர். இறைவனும், பொருள் படைத்தோரும் அளித்த பெருஞ் செல்வத்தை அவர் ஏழை எளியோருக்குக் கொடுத்து இன்பம் கண்டார். இங்கிலாந்தின் வடபகுதியையும்

மத்திய நிலங்களையும் கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்றிய மைக்கு அய்டானும் அவருடைய ஏனைய துறவிகளுமே காரண மானவர்கள் என்ருல் மிகையாகாது.

நல்லவரான ஆஸ்வால்டு வல்லவராக இருக்கவில்லை. அவருக் கும் எட்வின் அரசரின் கதியே ஏற்பட்டது. மேசர்பீல்டு என்னு மிடத்தில் நடந்த போரில் ஆஸ்வால்டை மெர்சியாவின் அரசரான பெண்டா கொலை செய்தார்.]ஆஸ்வால்டு கொலையுண்ட இடத்தை இன்றும் ஆஸ்வஸ்ட்ரி என்னும் பெயரிட்டழைப்பர் பெண்டா அத்துடன் நிற்கவில்லை. கிழக்கு ஆங்கிலியாவின் அரசர்களாக வந்த இரு அரசர்களையும் வெட்டிக் கொன்ருர். அவ்விருவரும் சமீபத்தில் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றெடுத்திருந்தார்கள். ஆனல் இறுதியாக தம் எண்பதாம் வயதில் அவரும் கொல்லப்பட்டார். கிறிஸ்தவ சமயத்தின் எதிரியான இவர் வின்விட்ஃபீல்டில் நடை பெற்றப் போரில் கொலையுண்டார். அப் போர்க்களம் லீட்ஸ் நகருக் கருகில் உள்ளது. அவரைக் கொல்லக் காரணமாயிருந்தவர் ஆஸ்வி என்பார் ஆவார். அவரே நார்த்தம்பிரியாவின் அடுத்த அரசராவார்.

அய்டானின் காலத்தில் கிறிஸ்தவ மடாலயங்கள் யார்க், ரிப்பன், ஹேக்ஸ்ஹாம், மெல்ரோஸ், ஆகிய இடங்களில் நிலை நாட்டப்பெற்றன. அவருடைய சீடரான செயின்ட் சாட் என்பார் பெண்டா காலமானபின் மெர்சியர்களின் சமயக் குருவானர். அவரு டைய தலைமைக் குருபீடம் லிச்பீல்டில் அமைக்கப்பட்டது. எஸ்ஸெக்ஸை மதம் மாற்றிய பெருமை அவரைச் சாரும். அவரும் வடக்கத்திய சமய குருவே என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். ரோமானிய சமயப் பிரசாரகர்கள் தெற்கிலும் கிழக் கிலும் இருந்த வெஸ்ஸெக்ஸ் மற்றும் கிழக்காங்கிலியா இராச்சியங் களை மதம் மாற்றி வெற்றி கண்டனர். சஸ்ஸெக்ஸை மதம் மாற்றிய பெருமை செயின்ட் வில்பிரிட்டைச் சாரும். அவர் ரிப்பனைச் சார்ந் தவர்; ஐரோப்பாவில் சமயப் பிரசாரகராயிருந்து பெயர் பெற்றவர் அவர். இப்படியாக ஏறத்தாழ ஒரு நூற்ருண்டு காலம் செய்த முயற்சிகளின் பலனுக இங்கிலாந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மதம் மாற்றப்பட்டது (567-681).

**விட்பி திருச்சபைக் கூட்டம் 664:-** கி. பி. 664 ஆம் ஆண்டில் ஆஸ்வி மன்னரால் கூட்டப்பெற்ற விட்பி திருச்சபைக் கூட்டத் திற்கு மூல காரணமாயிருந்தவர் செயின்ட் வில்ஃபிரிடுதான். இங்குதான் இறுதியாக கெல்ட்டிய, ரோமானிய சமயத்தினர் நேருக்கு நேர் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றனர். இங்கிலாந்தின்

வடபாகத்தையும் மத்திய நிலங்களையும் மதம் மாற்றி வெற்றி பெற்றிருந்த கெல்ட்டிய திருச்சபை துறவிகள் தொடக்கத்தில் ரோமானிய ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ள இணங்கவில்லை. ஆனால் கெல்ட்டிய கட்சியினரை வில்பிரிட் தம்முடைய சொல்லாற்றலினால் தோல்வியடையச் செய்தார். விட்பி திருச்சபைக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய அரசர் ஆஸ்வி இரு சமயக் கருத்துக்களுக்கும் இடையே இணக்கத்தை ஏற்படுத்த முயன்று வெற்றி பெற்றார். ரோமாபுரி திருச்சபையே கிறிஸ்தவ சமயங்களுக்கு வழி காட்ட வேண்டுமென்பது ஏற்றுக் கொள்ளப்பட்டது.

பலன்கள்:- விட்பி திருச்சபைக் கூட்டம் இங்கிலாந்திலிருந்த கெல்ட்டிய-ரோமானிய திருச்சபைகளை ஒன்றாக்கி இணைத்த பாடத்தை அடுத்த நூற்றாண்டில் அயர்லாந்து, ஸ்காட்லாந்து, வேல்ஸ் ஆகிய பகுதிகளும் பின்பற்றின. இம்முடிவு இங்கிலாந்து வரலாற்றின் எதிர்காலத்தில் பெரும் முக்கியத்துவம் வாய்ந்ததெனக் கருதப்பட்டது. ஏனெனில் இம்முடிவின் பயனாக ஆங்கில திருச்சபை தனியானதொரு நிறுவனமாக அமையாமல் கத்தோலிக்கக் கிறிஸ்தவ சமயத்துடன் இரண்டறக் கலந்துவிடக் காரணமாயிருந்தது. மற்றும் இம்முடிவால் அடுத்த ஒன்பது நூற்றாண்டுகளுக்கு ஆங்கிலத் திருச்சபை ரோமாபுரியுடன் அறுபடாத தொடர்பினைக் கொள்ளவும் வழி பிறந்தது. ஜூலியஸ் சீசரால் தொடங்கப்பட்ட தொன்மையான ரோமாபுரி—கிரேக்க நாகரிகத்தின் தொடர்பு செயின்ட் அகஸ்டினால் நிலைநாட்டப் பெற்று செயின்ட் வில்பிரிடினால் விட்பியில் மீண்டும் புத்துயிர் பெற்றது. பண்டைக்காலத்தில் கிறிஸ்தவரல்லாதாரின் உலகத்தின் கேந்திரமாகக் கருதப்பெற்ற சாசுவதநகரமான ரோமாபுரி சீசர்களின் அதிகாரக் கேந்திரமாயிருந்தைப் போன்று, இனி செயின்ட் பீட்டரின் வாரிசாகக் கருதப்பட்ட பொப்பாண்டவரின் கேந்திரமாகவும், உலகின் முதல் கிறிஸ்தவராகவும், முதல் கிறிஸ்தவ நகரமாகவும் கருதப்பட்டது: 'ரோமாபுரிக்கெதிராக போரிடுவது, உலகத்தையே எதிர்த்துப் போரிடுவதாகும்' என்றார் செயின்ட் வில்பிரிட்.

## 2. திருச்சபைகளும் மடாலயங்களும்

விட்பியின் திருச்சபைக்கூட்டத்தைத் தொடர்ந்து போப்பாண்டவர், டார்ஸஸ் நகரத்தைச் சார்ந்த தியோடார் என்னும் கிரேக்கப் பாதிரியாரை இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார். இங்கிலாந்தின் திருச்சபைகளை இணைக்கும் பொறுப்புடன் அவர் 668ஆம் ஆண்டு இங்கிலாந்து வந்துற்றார். அப்போது அறுபது ஆண்டுகளைக்

கடந்திருந்த அப்பெரியார் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பாக இருபதாண்டுகளுக்கு மேல் பதவியில் இருந்தார். அக் காலத்தில் தான் இங்கிலாந்தில் திருச்சபை மாவட்டங்களான டயோசிஸஸ் மற்றும் பாரிஷ் போன்றவை அமைக்கப் பெற்றன. தியோடார் இங்கிலாந்து வந்தபோது அங்கு எட்டு திருச்சபை மாவட்டங்களே (டயோசஸஸ்) இருந்தன. அவர் அவைகளை மேலும் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்து மாவட்டங்களின் எண்ணிக்கையைப் பதினைந்தாக உயர்த்தினர். அவர் காலமான சிறிது காலத்திற்குள் மேலும் இரு மாவட்டங்கள் சேர்க்கப்பட்டன; அவை செல்சி, ஷெர்பர்ன் என்பனவாம். தற்காலத்தில் இருக்கும் மாவட்டத் தலைமை கிறிஸ்தவக் கோயிலுடன் கூடிய திருச்சபைகளில் கான்டர்பரி, ரோசெஸ்டர், இலண்டன் ஆகியவற்றை செயின்ட் அகஸ்டின் என்ற பெரியார் நிலை நாட்டியிருந்தார். யார்க் மற்றும் லிச்பீல்டு திருச்சபைகள் பின்னர் நிலை நாட்டப்பட்டன. ஹெரிபோர்ட், வொர்செஸ்டர் திருச்சபைகளை தியோடார் நிலை நாட்டினர்.

**பாரிஷ் திருச்சபைகள்:-** திருச்சபை அமைப்பு முறையில் கிராமத்தை அடிப்படையாகக் கொண்டு நிறுவப் பெற்றது தான் பாரிஷ் முறையாகும். ஆனால் மடாலயங்களே அப்போதும் சமயத்தின் செல்வாக்குக் கேந்திரங்களாக அமைந்தன. தியோடாரின் காலம் வரை பாரிஷ் திருச்சபைகளுக்குச் சொந்தமான பாதிரிகளே இருப்பது அருமையிலும் அருமையாம்.

பாரிஷ் திருச்சபைகளின் பயனுக்காக தல தேனர்கள் ஒரு சில நிலங்களை ஒதுக்கிவைத்தார்கள். அதனை வைத்துக் கொண்டு தான் பாரிஷ் திருச்சபை குருமார்கள் வாழ்க்கை நடத்த வேண்டியவ ராயினர். காலம் செல்லச் செல்ல பாரிஷ்களின் எண்ணிக்கை பெருகி வளரவே, குருமார்களின் நிலையான வாழ்க்கைக்கு அவசியமான வசதிகளைச் செய்ய வேண்டுவது அவசியமாயிற்று. அதன் பலனாகவே கிறிஸ்தவ குடிமக்கள் அனைவரும் தம் வருவாயில் பத்திலொரு பங்கினை இறைப் பணியில் ஈடுபட்டிருந்த குருமார்களுக்கென ஒதுக்கி வைக்கும் வழக்கம் ஏற்பட்டது.

ஆர்ச்பிஷப் தியோடார் என்ற பெரியாரே திருச்சபை அரசாங்கத்தை ரோமானிய முறைப்படி நிலை நாட்டியவர் ஆவார். அம் முறைப்படி திருச்சபை மாநிலங்களை ஆர்ச்பிஷப்புகளும், அவர்களுக்குக் கீழ் திருச்சபை மாவட்டங்களை பிஷப்புகளும், பிஷப்புகள் தங்களுக்கு கீழ் பாரிஷ் திருச்சபைகளையும், அவற்றின் குருமார்களையும் பத்திலொரு பங்கு வருவாயைப் பெற்று காப்பாற்

றும் அமைப்புமுறை உருவானது. பாரிஷ் குருமார்களை ரெக்டர் என்றும் விக்கார் என்றும் கூறுவர் (Reetor and Vikar)போப்பாண்டவர் இவ்வனைவருக்கும் தலையாயவர் என்று கருதப் பட்டார். டயோசிஸ், பாரிஷ், பத்திலொரு பங்கு வருவாயான தைத் ஆகியவை சாக்சானியர் காலத்திலிருந்து இன்று வரை வழக்கத்தி திலிருப்பதைக் காணலாம். ஆங்கிலத் திருச்சபையின் அஸ்தி வாரத்தை நிலை நாட்டிய தியோடாரின் முயற்சியின் பலனாகவே ஆங்கில தேசியமும் ஒருங்கிணைந்து வளருவதற்கு வாய்ப்பேற் பட்டது. இங்கிலாந்தில் அப்போது அமைந்திருந்த ஏழு தனித் தனியான இராச்சியங்களை இணைத்த பெருமை திருச்சபையையே சாரும் எனில் மிகையாகாது.

கிராமத் திருச்சபைகள்:- கிறிஸ்தவ சகாப்தத்தின் தொடக்க நூற்றுண்டுகளில் கிராமப்புற இங்கிலாந்தில் திருச்சபையைச் சுற்றி எழுந்திருந்த குடிசைகளை ஆதாரமாகக் கொண்டு எழுந்தவை தான் கிராமத் திருச்சபைகள். கிராம, பாரிஷ் திருச்சபைகள் இங் கிலாந்தின் மிகத் தொன்மையான நிறுவனங்கள். இவையிரண்டும் ஒன்ருக வளர்ந்து இன்றும் நீடித்ததிருப்பதைக் காணுங்கால் இவற்றின் பெருமையை ஊகிக்கலாம். இருப்பினும் ஒன்றை நினைவிற் கொள்ள வேண்டும். இன்றைய திருச்சபைகள் சாக்சானி யர்களால் கட்டப்பட்டவையன்று. ஆனல் இன்றுள்ள பெரும்பா லான திருச்சபைகள் பழைய சாக்சானியரின் திருச்சபை இருந்த இடங்களிலேயே கட்டப்பட்டன. அத்துடன் ஒருசில பாரிஷ் திருச்சபைகளில் இன்றும் சாக்சானிய சின்னங்களை வெளிக் காட்டும் அமைப்பு முறைகளை அத்தகைய திருச்சபைக் கட்டிடங் களில் காண முடியும். அத்தகைய திருச்சபைக் கட்டிடங்கள் ஒன்பது, பத்தாம் நூற்றுண்டுகளைச் சார்ந்தவை என்பதையும் கருத்திற் கொள்க.

இங்கிலாந்து கிறிஸ்தவ சமயத்திற்கு மாறியதால் ஏற்பட்ட முக்கிய விளைவு என்ன?

விட்பி திருச்சபைக் கூட்டத்திற்குப் பின்னர் இங்கிலாந்து, கத்தோலிக்க ஐரோப்பாவுடன் இணைக்கப்பட்டதையும், தியோடா ரின் ஐக்கியமுயற்சியையும் குறித்து ஏற்கெனவே அறிந்துள்ளோம். இவற்றையன்றி தார்மீகமான விளைவொன்றையும் காணுதல் நன்று. ஆங்கில-சாக்சானியர் ரத்தவெறியர்கள். அவர்களின் கொடூரமான வாழ்க்கை முறையை துறவியர் போன்ற அகஸ்டின் மற்றும் அவருடைய சீடர்களின் தூய்மையான வாழ்க்கையோடு ஒப்பிடுங்கால், மடுவுக்கும் மலைக்குமுள்ள வேறுபாட்டை உணர

முடியும். சாக்சானிய இங்கிலாந்தில் கொலைக் குற்றம் புரிவது ஒரு சாதாரண சம்பவமாகும். அவர்கள் தங்களுக்குள் இடையுறாது போரிட்டுக் கொண்டனர். அப்படிப்பட்டவர்களின் இடையே நுழைந்த கிறிஸ்தவ சமயம் இங்கிலாந்து நாட்டிற்கு முதன் முதலாக தூய்மையான வாழ்க்கையை வாழ்ந்து காட்டிய பெரியார்களின் புனித எடுத்துக்காட்டான வாழ்க்கை முறையால் எளிமையே ஏற்றம் தரும்' என்ற இலட்சியத்தைச் சுட்டிக் காட்டுவதால் அமைந்தது. மடாலய முறையில் காணப்பெற்ற சீரிய இலட்சியத்தை செயின்ட் பெனிடிக்ட் போன்ற பெரியார்கள் காட்டிச் சென்றூர்கள். அத்தகைய உயர்ந்த இலட்சிய வாழ்க்கையைக் கண்ட சாதாரண மக்கள், அத்தகைய வாழ்வைத் தங்களால் நடாத்த இயலாது எனக் கொண்டு, அதனை நடத்தத் தகுதிபெற்றவர்கள் சமய குருமார்களே என்ற முடிவுக்கு வந்தனர். இதன் விளைவாகத்தான் துறவியர்கள் சீரிய இலட்சியத்துடன் வாழ்ந்த காலம் வரை மக்களின் மரியாதையையும் அன்பினையும் பெற்று வாழ்ந்தார்கள். நேரிய கல்வியையும் சீரிய புனிதமான வாழ்க்கையையும் ஒருங்கே கொண்ட மடாலயத் துறவிகள் மக்களின் இடையருத அன்பிணைப் பெற்றதில் வியப்பொன்றுமில்லையன்றோ?

**நார்த்தம்பிரிய மடாலயங்கள் :** நார்த்தம்பிரியாவின் ஆட்சி உச்சக்கட்டத்தில் சிறப்புற்று விளங்கிய காலத்தில் தான், மடாலய முறை சீரிய பலன்களை அளித்தது. ட்வீட் ஆற்றங்கரைப் பகுதிகளிலும் (யார்க் ஷயரில்) அல்லது வடகடலை அடுத்த கடற்கரையோரங்களிலும் எழுந்த மடாலயங்கள் ஐரோப்பாவிலேயே சிறப்பு மிக்கவையாய் கருதப்பட்டன. மெல்ரோஸ், ஜாரோ, ஹேக்ஸ்ஹாம், ரிப்பன், விட்பி, லின்டிஸ்பர்ன் போன்றவை அவற்றுள் ஒரு சிலவாம். பூஜ்யர் செயின்ட் கத்பர்ட் என்ற குருமாராய் இருந்தவர் பின்னர் லின்டிஸ்பர்னின் பிஷப்பானவர். அவர் தம் வாழ்நாளில் பெரும்பங்கினை வடகடலை அடுத்த கடற்கரையோரப் பகுதிகளிலிருந்த காட்டுப்புறத் தீவுகளில் கழித்தவர். ஏறத்தாழ எட்டாண்டுகள் அவர் பார்ன் தீவுகளில் தனியாக வாழ்ந்து பரலோக சிந்தினையில் கருத்தைச் செலுத்தி புகழ் பெற்றூர். தூய்மைக்கும் எளிமைக்கும், மென்மைக்கும் வாழ வேண்டுமென்ற இலட்சியத்தைக் கொண்ட மேன்மக்களுக்கு மடாலய வாழ்க்கை முறை கவர்ச்சி கேந்திரமாயிற்று எனில் மிகையாகாது. மடாலயங்கள் பாலைவனப் பசுஞ்சோலைகளாகும். மடாலயங்களில்தான் உண்மையான அமைதி நிலவியது. கல்வி கேள்விகள் உயர்ந் தோங்கி வளர்ச்சியுற்றதும் மடாலயங்களில் தான்; வாழ்க்கை அமைதியிலும், தியானத்திலும் ஈடுபட்டு அர்ப்

பணித்த பெரியார்களின் வாழ்விடமும் அத்தகைய மடாலயங்கள் தான்.

செயின்ட் பீடு (St-Bede):- எட்டாம் நூற்றாண்டில் நார்த்தம்பிரியாவின் மடாலயங்கள் ஐரோப்பாவின் தலைசிறந்த அறிவாளிகளை உருவாக்கின. அவர்களில் புகழ்மிக்கவர்தான் புனிதர் பீடு பெருமகனார் (673-735). அவர் ஜாரோவில் வாழ்ந்த ஞானியாம். இருண்ட காலத்தின் தலைசிறந்த அறிஞர் அவர். 'ஆங்கில மக்களின் திருச்சபை வரலாறு' என்னும் நூலை எழுதிப் புகழ் படைத்தவர் பீடு பெருமகனார். சாக்சானிய இங்கிலாந்தினைப் பற்றி அறிய உதவும் பெரும் கருவூலம் அந்நூலாகும். தம் வாழ் நாள் முழுவதும் அதே மடாலயத்தில் கழித்து புகழ்பெற்றவர் புனிதர் பீடு. கற்றல், கற்றதைச் சொல்லித்தரல், எழுதுதல் ஆகியவையே தம் பேரின்பம் என்று குறிப்பிட்டுள்ளார் பீடு பெருமகனார். கடைசி மூச்சு இருக்கும் வரை அவர் அம்முயற்சிகளிலேயே ஈடுபட்டுழைத்தார். 'இன்னும் ஒரேயொரு வாக்கியம் மட்டும் எழுதப் பட வேண்டும்' என்று அவருடைய சீடர்களில் ஒருவர் அவர் காலமான நாளன்று காலையில் குறிப்பிட்டார். பீடு பெருமகனார் செயின்ட் ஜான் அவர்களின் திருமறையை அச் சீடரிடம் அவர் சொல்லச் சொல்ல எழுதும்படி பணித்திருந்தார். 'விரைவாக எழுதுவாயாக' என்றார் பீடு பெருமகனார். 'இதோ எழுதி முடித்து விட்டேன்' என்றார் அச்சீடர். 'நீ உண்மையைத்தான் கூறுகிறாயா?' என்று வினவின அப்பெருமகனார் கூறியதாவது: 'எல்லாம் முடிந்துவிட்டதன்றோ!' என்று கூறிக் கொண்டே தாம் இருந்த இடத்திலேயே தம் கண்களை மூடிக் கொண்டார். இங்கிலாந்து வரலாற்றின் தந்தையாக கருதப்படும்பீடு பெருமகனார்.

காட்மன்:- நார்த்தம்பிரியாவிலிருந்துதான் ஆங்கிலக் கவிஞர்களில் ஒருவரான காட்மன் என்பார் வந்தார். அவர் விட்பி திருச்சபையின் துறவியரல்லாத கிறிஸ்தவராவார் (lay- brother). அவருடைய கவிதைகளை அக்காலத்தவர் இறையருளால் பிறந்தவையெனக் கொண்டனர். காட்மன் கவிதை யெழுதிய விதத்தைக் கதைகதையாகக் கூறுவார் செயின்ட் பீடு பெருமகனார்.

கிறிஸ்தவ சகாப்தத்தின் தொடக்க நூற்றாண்டுகளில் மடாலய முறை இங்கிலாந்திற்குக் கொடுத்த பலாபலன்களை எடுத் தியம்புவது கடினம். பாரிஷ் பாதிரியும் சாதாரண குடிமக்களைப் போன்று அறியாமையில் மூழ்கியவர்தான். ஆனால் மடாலயத் துறவிகள் கல்வி கேள்விகளின் நிலைக்கலன்களாகத் திகழ்ந்தனர்.

அவர்களும், அவர்களுக்கு மேலே இருந்த உயர்தர திருச்சபை குருமார்களுமே அன்றைய படிக்காத மக்களிடத்தே காணப் பட்ட படித்தமேதைகள். அதன் விளைவாகத்தான் அவர்கள் சக்தி படைத்தவர்களாய் அரசர்களின் ஆலோசனைச் சபைகளில் முதலிடம் பெற்றனர். போர்வீரர்கள் போராடிச் கொன்று குவித்து மடித்தநாள்களில், குடியானவர்கள் உழைத்து உழைத்து ஓய்ந்து போயிருந்த நாட்களில், திருச்சபைகளின் செவ்விய பணி தொடர்ந்து செயல்பட்டது என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். திருச்சபையின் சீரிய பணியே காலப்போக்கில் இங்கிலாந்தின் இடைக்கால நாகரிகத்தை உருவாக்கியதெனில் அது மிகை யாகாது.

# 10. சாக்சானியரும் டேனியரும்

செயின்ட் அகஸ்டின் காலத்திலிருந்து மகா ஆல்ஃபிரிட்டின் காலம் வரையிலான மூன்று நூற்றுண்டுகளை கவர்ச்சியில்லாக் காலம் எனக் கருதுவோருண்டு. எனினும், இம் மூன்று நூற்றுண்டுகள் தான் பிரிட்டன் உருவான காலம் எனக் கொள்ள வேண்டும். இக்கால கட்டம் ஐரோப்பிய வரலாற்றில் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. செயின்ட் அகஸ்டின், மகா கிகரெரி முதலான சமயப் பெரியார்கள் வாழ்ந்த அதே காலத்தில் தான் நபிகள் நாயகமும் வாழ்ந்தார். நபிகள் நாயகத்தின் வாழ்க்கை உலக வரலாற்றின் போக்கினை மாற்றியதும் இக்கால கட்டத்தில் தான். மேற்கு ஐரோப்பாவில் ரோமானியப் பேரரசை உயிர்ப்பித்த சார்லிமேன் என்பாரும் மெர்சியாவின் அரசரான ஆஃபாவும், வெஸ்ஸெக்ஸின் அரசரான எக்பர்ட் என்பாரும் சமகாலத்தவர்கள். முஸ்லிம்கள் ஐரோப்பாவை வெற்றி காண முயற்சித்ததும் இக் காலத்தில்தான். புனித ரோமானியப் பேரரசு உருவாக்கப் பெற்று ஐரோப்பாவின் பேரரசாக விளங்கியதும் இக்காலத்தில் தான். இத் தருணத்தில் இங்கிலாந்தின் நிலைமை என்ன என்பதையும் நாம் காண வேண்டும்.

இங்கிலாந்தில் போராட்டம் நிறைந்த சூழ்நிலை:- இக்கால கட்டத்தில் இங்கிலாந்து ஒருவகையான குழப்பமான சூழ்நிலைக்கு உள்ளாகி இருந்தது. இடையருத போராட்டமும், சண்டை சச்சரவும் மூண்டிருந்த இக்கால வரலாற்றை ஆராய்வது ஓரளவு கடினம். கிராமப்புற இங்கிலாந்து அமைதிக்கும் அழகுக்கும் பெயர் பெற்றிருந்தது என்பதுஎன்னவோ உண்மைதான். பல நூற்றுண்டுகள் நீடித்த உள்நாட்டு அமைதியே கிராமப்புற இங்கிலாந்து அமைதியாக அமைந்ததற்குக் காரணமாகும். ஆனல் சாக்சானியர் அரசாண்ட காலத்தில் இந் நிலை மாறிவிட்டது. நாடு முழுதும் மாபெரும் போராட்டக்களம் போன்று காட்சியளித்தது சாக்சானியரின் காலத்தில் தான். உட்பூசல்கள் மிகுந்திருந்த இக்கால கட்டம் தொடர்ந்து நீடிக்கலாயிற்று. போராட்டம் என்பதைலைத்துக்

கொண்டு அக்காலத்தை தற்கால போராட்டங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. ஏனெனில் அவை மாறுபட்ட காலத்தவையாம்; வேறுபாடு கொண்டவையாம்.

செயின்ட் அகஸ்டின் காலமான ஆண்டிலிருந்து மகா ஆல்ஃபிரட்டின் காலமான ஆண்டு வரையில் தொடக் கால இங்கிலாந்தில் மூண்ட போர்களைச் சௌகரியத்திற்காக மூன்று தொகுதிகளாகப் பிரிக்கலாம். முதலாவது, ஆங்கில இராச்சியங்களுக்கிடையே மூண்ட உட்பூசல்களாகும். அவை ஒவ்வொன்றும் ஆதிக்கம் பெற போட்டி போட்டுக் கொண்டன. நார்த்தம்பிரியா, மெர்சியா, மற்றும் வெஸ்ஸெக்ஸ் ஆகிய மூன்று இராச்சியங்களும் முறையே போட்டியிட்டு முதலிடத்தைப் பெற முயன்றன. இரண்டாவது தொகுதியில் கம்பர்லாந்திலிருந்து டேவன் வரை எல்லைப் புறங்களில் நடைபெற்ற வேல்ஸ் போர்களாகும். இதன் விளைவாக மேற்கத்திய நாடும் இங்கிலாந்தின் ஒரு பகுதியாகியது. மூன்ருவது தொகுதியில் டேனியப் படையெடுப்புகளின் விளைவாக மூண்ட போர்களாகும்.

ஏழாம் நூற்ருண்டில் நார்த்தம்பிரியாவின் ஆதிக்கம்:- கி. பி. 601க்கும் 700க்கும் இடையிலான ஏழாம் நூற்ருண்டில் நார்த்தம்பிரியா ஆதிக்கம்பெற்ற காலமாகும். இக்காலத்தில் தான் பாவியன் என்பாரின் முயற்சியால் எட்வின் என்ற அரசர் கிறிஸ்தவராக மதம் மாறினர். அவருடைய இராச்சியம் டிரெண்ட் ஆற்றங்கரையிலிருந்து போர்த் ஆறுவரை பரவியிருந்தது. செயின்ட் அய்டானின் கிறிஸ்தவ சமயப் போதனைகள் ஆஸ்வால்டு அரசரின் கீழ் பரவத் தொடங்கியதும், மெர்சியாவின் அரசரும் கிறிஸ்தவரல்லாதவருமான பெண்டா என்பாரால் ஆஸ்வி என்ற அரசர் தோற்றதும், செயின்ட் வில்ஃபிரிட்டின் வெற்றியால் விட்பி திருச்சபைக் கூட்டத்தால் மீண்டும் கிறிஸ்தவ சமயம் நிலை நாட்டப் பெற்றதும் ஏற்கனவே நாம் அறிந்து கொண்ட வரலாற்றுச் செய்திகள் தாம். கி பி. 685 ஆம் ஆண்டில் மூண்ட நெக்டன்ஸ்மியர் போரில் தோற்றபின் நார்த்தம்பிரியா வீழ்ச்சியுறலாயிற்று. எக்ஃபிரித் அரசர் பிக்ட்டிய போர் வீரர்களால் தொலைவிலிருந்த மேட்டு நிலப் பகுதிகளில் கொலையுண்டார்.

செயின்ட் பீடின் காலத்திற்குப் பின்னர் நார்த்தம்பிரியா படிப்படியாக வீழ்ச்சியுற்றது. உட்பூசல்களால் அந்த இராச்சியம் சிக்குண்டது. நார்த்தம்பிரியாவின் பிற்கால அரசர்களில் பலர் கொலையுண்டு அகால மரணமுற்ருர்கள்.

**மெர்சியாவின் ஆதிக்கம்:-** நார்த்தம்பிரியாவில் பீடு பெருமகனுர் வாழ்ந்திருந்த எட்டாம் நூற்றுண்டே மெர்சியா ஆதிக்கம் பெற்ற நூற்றுண்டாகும். அக்காலத்தில் எதல் பால்டு (716-57) மற்றும் ஆஃபா என்னும் இரு அரசர்கள் கோலோச்சியவர்கள். (757-96) ஆஃபாவின் ஆட்சிக் காலத்தில் வேல்ஸ் எல்லைப் புறத்தை வெற்றி காண்பதில் மெர்சியா வெகுவாக முன்னேறி இருந்தது. சாக்சானியர் மேற்குத் திசையில் முன்னேறி நிலையாகத் தங்களை நிலை நாட்டிக் கொண்டனர். அவர்கள் வேல்ஸ் நாட்டு எதிரிகளுடன் இடையருது போரிட்டுக் கொண்டிருந்தனர். போவீஸ் அரசரை செவர்ன் ஆற்றுக்கப்பால் வடவேல்ஸில் ஆஃபா விரட்டி அடித்தார். அவரிடமிருந்து பெங்குவிர்ன் (Pengwyrn) என்ற நகரைக் கைப்பற்றிக் கொண்டார். வேல்ஸிய பெயராயிருந்த அந்நகரின் பெயரை ஸ்கோப்ஸ்பர்க் என்னும் ஆங்கிலப் பெயராக மாற்றினுர். அதே பின்னர் ஸ்ரூஸ்பரி என்ற நகரமாயிற்று. ஆஃபா பின்னர் தென் வேல்ஸ் மீது பாய்ந்தார். அவர்களை வை(Wye) என்ற ஊர் வரை விரட்டியடித்தார். பின்னர் அவர் 130 மைல் நீளமுள்ள கால்வாயொன்றைத் தோண்டினுர். வை ஆற்று முகத்துவாரத்திலிருந்து டீ ஆற்று முகத்துவாரம் வரை நீண்ட இக் கால்வாயே அவருடைய இராச்சியத்தின் புது எல்லையாயிற்று. ஆஃபாவின் டைக் என்னும் இக் கால்வாயின் சின்னங்களை இன்றும் காணலாம்.

**சாமர்செட் மற்றும் டெவன் கைப்பற்றப்படல்:-** வெஸ்ஸெக்ஸின் அரசரான ஐன் (Ine) என்பார் சாமர்செட்டை வென்ருர். டான்டன் என்றும் நகரை கி. பி. 710 ஆம் ஆண்டில் உருவாக்கியவரும் அவரே. பின்னர் டெவன் கைப்பற்றப்பட்டது. கார்ன்வாலைக் கைப்பற்றுவது பெரும் பிரச்சனையாகிவிட்டது. வெஸ்ஸெக்ஸின் அரசரான எக்பர்ட் அரசர் (802-839) தமரைத் (Tamar) தாண்டிச் சென்று மேலேவேல்ஸ் மாநிலத்தைப் படிந்து போகுமாறு வலியுறுத்தினுர். எனினும் சாக்சானியரால் கார்ன்வாலின் எல்லாப் பகுதிகளையும் கைப்பற்றுவது இயலாது போய்விட்டது. பிற்காலத்தில் கார்னிஸ் மக்கள் ஆல்ஃபிரட் அரசருக்கெதிராக டேனியருக்கு உதவினர். அதன் விளைவாக அரசரின் பேரன் அவர்களை எக்ஸ்ஸிடாரிலிந்து விரட்டியடித்தது தான் மிச்சம்.

**வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம்:-** எக்பர்ட் அரசரின் ஆட்சிக் காலந்தொட்டு வெஸ்ஸெக்ஸ் ஆதிக்க முறை தொடங்கியது (825-1066). எக்பர்ட் மெர்சியர்களை வில்ட்ஷயரில் எல்லன்டின்

எனுமிடத்தில் தோற்கடித்தார் (825). இவ்வெற்றியின் பயனாக மெர்சியா தன் ஆதிக்க நிலையை இழந்து வெஸ்ஸெக்ஸுக்குச் சரணடைந்து கென்ட், சஸ்ஸெக்ஸ் மற்றும் எஸ்ஸெக்ஸ் என்றும் அடிமை இராச்சியங்களாயின. நார்த்தம்பிரியா கூட எக்பர்ட்டின் தலைமையை ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. கார்ன்வாலையும் அவர் ஏற்கனவே வென்றிருந்தமையால் அவரை இங்கிலாந்தின் தலையாய தலைவர் என்றால் மிகையாகாது. எனினும் எக்பர்ட்டை ஐக்கிய இங்கிலாந்தின் முதல் அரசர் எனக் கொள்வது தவறாகும். ஏற்கனவே வெஸ்ஸெக்ஸ் வெற்றியடைந்ததைப் போன்று மெர்சியாவும் வெற்றி பெற்றிருந்தது. இந்த இராச்சியங்களுக்கிடையே மூண்ட போர்களைப் பற்றி நாம் கேள்வியுறாமைக்குக் காரணம் என்னவெனில் டேனியப் படையெடுப்புகளால் இங்கிலாந்து தாக்குற்றதேயாகும். வெஸ்ஸெக்ஸ் ஒன்று மட்டும் டேனியப் படையெடுப்புகளிலிருந்து தப்பிப் பிழைத்த இராச்சியமாகும். எக்பர்ட்டின் வாரிசுகள் டேனியரைத் தோற்கடித்த பொழுது அவர்களே ஆங்கில-சாக்சானிய இங்கிலாந்தின் ஐக்கியத்தை இறுதியாக உருவாக்கினவர்களாகும்.

# 11. முதல் டேனியப் படையெடுப்பு

டேனியப் படையெடுப்பினைக் குறித்து நமக்கு ஆதாரமாகக் கிடைக்கும் முதற் செய்தி ஆங்கில-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேடுகளிலிருந்து (Anglo-Saxon Chronicle) கிடைக்கிறது. கி. பி. 787 ஆம் ஆண்டில் என்று குறிக்கப்பெற்ற அச்செய்தி எக்பர்ட் அரசரின் முந்தையரின் ஆட்சியை விவரிக்கும் வகையாகக் குறிப்பிடுவதாவது : 'அவருடைய காலத்தில் வடவர் எனப்படும் நார்த்மன் என்பவர்கள் கள்ளர்கள். நாட்டிலிருந்து மூன்று கப்பல்களில் வந்தனர்' என்று காணப்படுகிறது. இக் குறிப்பு தான் டேனியரின் படையெடுப்பைக் குறித்த முதல் வரலாற்றுச் சான்றாகும். அதனை அடுத்து டேனியப் படையெடுப்புகளால் ஏற்பட்ட தொல்லைகளையும் அவற்றால் மக்கள் பட்ட சொல்லொணாத் துயர்களையும் வரலாற்றுக் குறிப்பேடு குறித்து வைத்துள்ளது.

வடவர் அல்லது நார்த்மன் என்னும் பெயரில் படையெடுத்த டேனியரை வைக்கிங்குகள் என்றும் கூறுவர். அவர்கள் கடல்வழிச் செலவுகளில் மிகுந்த ஆர்வம் காட்டியவர்கள். நார்வீஜிய கடற்கரைப் பகுதிகளிலிருந்தும் அதனை அடுத்திருந்த டென்மார்க் தீபகற்பத்திலிருந்தும் அவர்கள் படையெடுத்தனர். இங்கிலாந்தைத் தாக்கிய டேனியர்களுக்கும் மூன்றரை நூற்றாண்டுகளுக்கு முன்னர் ரோமானிய பிரிட்டனைத் தாக்கிய ஆங்கில சாக்சானியருக்கும் ஒரு வகையில் ஒற்றுமை இருந்தது. எனினும் அதன் விளைவோ எதிர்மறையாக இருந்தது. டேனியர் ஆங்கில சாக்சானியர்களின் சமயத்தையோ அன்றி மொழியையோ அழிக்க முற்படவில்லை.

உடல் வலிமை மிகுந்த இந்த டேனிய வடவர்கள் தம் திறந்த சிறு படகுகளில் உலகின் பல்வேறு மூலை முடுக்குகளுக்கெல்லாம் படையெடுத்துச் சென்றனர். நார்ஸ்மன் எனப்படும் இவர்கள் முதலில் ஐஸ்லாந்தில் குடியேறினர். பின்னர், அங்கிருந்து சிகப்பன் எரிக் (Eric the Red) என்பானின் தலைமையில் கிரீன்லாந்துக்குச் சென்றனர். கிரீன்லாந்திலிருந்து அவர்கள் வின்லாந்து என்னும் பகுதிக்குச் சென்றனர். இப் பகுதி பெரும்பாலும் இன்றைய லாப்ரடார் எனக் கொண்டால் வட

அமெரிக்காவில் காலடி வைத்த முதல் ஐரோப்பியர் டேனியரே ஆகும். வட இங்கிலாந்தையொட்டி இருக்கும் ஆர்கனீஸ் மற்றும் ஹெப்ரிடீஸ் தீவுகளிலும் அவர்கள் குடியேற்றங்களை அமைத்தனர். பின்னர் அயர்லாந்தில் நுழைந்து அங்கு டப்ளின், வெக்ஸ்போர்டு மற்றும் ஏனைய நகரங்களை உருவாக்கினர். மேன் தீவினை (Isle of man)அவர்கள் தம் கேந்திரமாக்கிக் கொண்டு, ஐரிஸ் கடலின் இரு மருங்கிலும் படையெடுக்கலாயினர். ஐரோப்பிய கடற்கரைகள் அனைத்தும் அவர்களின் தாக்குதல்களுக்கு இரையாயின. வால்கா ஆற்றங்கரை நகரான கீவ் (Kiev) என்ற நகரை அமைத்தவர் களும் இவ்வடவரேயாகும். அவர்தம் கப்பல்கள் கான்ஸ்டான்டி நோபில் வரை தென்பட்டன எனில் மிகையாகாது.

படையெடுப்பாளராகத்தான் முதன் முதலில் டேனியர் இங் கிலாந்துக்கு வந்தனர். அங்கிருந்த மடாலயங்கள் அவர்தம் தாக்குதலுக்கு முதலில் இரையாயின. கொள்ளையும் கொலையும் ஒன்றிணைந்தன. கீழ் இங்கிலாந்திலிருந்த திருச்சபைகள் தீக்கிரை யாயின. அது போலவே செயின்ட் கொலம்பாவில் உருவாக்கப் பெற்ற அயோனு மடாலயமும், டப்ளினுக்கு அருகில் இருந்த செயின்ட் பாட்ரிக் மடாலயமும் சூறையாடப்பெற்றன. டேனியரின் தாக்குதலிலிருந்து தப்பிய மடாலயங்கள் தம் குருமார்கள் கொலை செய்யப்பட்டு மடிந்ததையும், தன் திருச்சபைகளிலிருந்த பொன்னும் வெள்ளியும் பறிபோனதையும் எண்ணியெண்ணி துயர் பட்டனர்.

ஐம்பதாண்டுகள் அனுபவித்த இத்தொல்லைகளை அடுத்து பயங்கரத் தாக்குதல் ஒன்று கி. பி. 851 ஆம் ஆண்டில் ஏற்பட்டது. அவ்வாண்டில் டேனிய இராணுவம் முதல் முறையாக இங்கிலாந் தின்மீது படையெடுத்தது. படையெடுத்த டேனிய இராணுவம் இங்கிலாத்தைக் கைப்பற்றும் பணியிலும் நாட்டம் செலுத்தியது. தென்பாகத்திலிருந்து வெஸ்ஸெக்ஸ் தாக்கப்பட்டது; அங்கிருந்த கடற்கொள்ளைக்காரர்கள் கார்னிய கூட்டங்களுடன் இணைந்து கொண்டே கடற்கரையைத் தாக்கினர்.

# 12. மகா ஆல்பிரட்

ஆல்பிரட் இங்கிலாந்தின் வரலாற்றில் ஒரு விந்தை மனிதரெனப் போற்றப்படுகிருர். செயற்கரிய பணியைச் செய்த பெரியார்களைக் குறித்து வரலாற்றில் பலவகைப் புனை கதைகள் தோன்றுவது இயல்பேயாகும். ஆல்பிரடைப் பற்றிப் பிற்காலத்தில் அவ்வாறே பல கதைகள் தோன்றின. இங்கிலாந்திற்குப் பொதுவாகவும் வெஸ்ஸெக்ஸிற்குச் சிறப்பாகவும் அவர் ஆற்றிய பணிகளை நினைவு கூர்வது அவசியம். அது அவருக்கு வரலாற்றில் புகழ் தேடிக் கொடுத்தது. அது பற்றி அவரை மகா ஆல்பிரடு என்று ஆங்கில வரலாறு புகழ்கின்றது. நார்மானிய வெற்றிக்குப் பின்னர் ‘இங்கிலாந்தின் செல்வர்’ என்று மக்கள் அவரைப் புகழ்ந்தனர். ‘மேலைச் சாக்சானியரின் அசைக்க முடியாத கல்தூண்’ என்று வரலாற்று வல்லுநர் ஒருவர் அவரைப் பெருமிதத்தோடு வருணிக்கின்ருர். இத்துணைப் புகழுக்கும் பேறு பெற்றவரான ஆல்பிரட் தம் இருபத்து மூன்ரும் வயதில் முடிசூடினுர். அவர் பட்டம் எய்திய ஞான்று டேனியரை எதிர்க்கப் போதுமான பெரும் படையொன்றும் வெஸ்ஸெக்ஸில் இருக்கவில்லை. கான்டர்பரி முதலான திருக்கோயில்களில் திருச்சபைப் பணிகளைக் கண்காணிக்கப் போதுமான குருமார்கள் இல்லை. இந் நிலையில் ஆல்பிரடு தம் இருபத்தெட்டாண்டு ஆட்சி காலத்தில் பதினறு ஆண்டுகள் போரில் ஈடுபட்டிருந்தார். அவர் தம் முயற்சியாலும், போர்த்திறனுலும், சமாதான வேட்கையாலும், அரசியல் திறமையாலும் வெஸ்ஸெக்ஸை டேனியரிடமிருந்து காத்தார். ஆங்கில அரசை மீண்டும் நிலை நாட்டினுர். ஆங்கிலேயரிடம் தாங்கள் ஓர் இனம் எனும் தேசிய உணர்ச்சியைத் தூண்டினுர். ஆல்பிரடு தம் ஐம்பத்தோராம் வயதில் இறந்தார். எதெல்ரெட்டைத் தொடர்ந்து அவர் வெஸ்ஸெக்ஸின் மன்னராக முடிசூடியிராவிட்டால் இங்கிலாந்தின் நிலைமை மிக வருந்தத் தக்கதாக முடிந்திருக்கும். அவர் ஆங்கில அரசை மீண்டும் நிலைநாட்டினுர். ஆங்கிலேயர் ஒரு நாட்டினர் என்னும் தேசிய உணர்ச்சியையும் ஆல்பிரடு ஏற்படுத்தினுர். ஆல்பிரட்டின் ஆட்சி இங்கிலாந்தைக் காத்தது எனில் மிகையாகாது.

எஸ்ஸெக்ஸும் கிழக்கு ஆங்கிலியாவும் டேனியர் பகுதிகளாய் விட்டன. எனினும் எக்பர்ட் காலத்தில் இருந்ததைவிட ஆல்பிரட் ஆட்சி செய்த காலத்தில் ஆங்கில அரசு நன்கு வலுப்பட்டிருந்தது. ஆங்கில அரசு பல வகைகளில் முன்னேறலாயிற்று. அவருடைய மனைவி மெர்சியாவைச் சார்ந்தவள். எனவே டேனியரின் கைவச மாகாதிருந்த மெர்சிய மாவட்டங்களில் ஆல்பிரட்டின் செல்வாக்கு பெருகலாயிற்று. மெர்சியாவின் கடைசி அரசரான எதல்ரெட் என்பார் ஆல்பிரட்டின் மகளான எதல்பிளேட் என்பாளை மணந்து கொண்டார். அந்த அம்மையாரை 'மெர்சியாவின் அன்னை' என்று பின்னர் அழைத்தனர். எனவே இத் திருமண உறவு நற்பயனை விளைவித்தது எனலாம்.

ஆல்பிரட்டின் ஆட்சிக்காலத்தில் மெர்சியாவின் 'விட்டன்' அல்லது அறிஞர்சபை அவருடைய இச்சைப்படி நடை பெற்றது. கத்ரம் என்பாரிடமிருந்து கைப்பற்றப் பெற்ற இலண்டன்-தேம்ஸ் பகுதிகளை எதல்ரெட்டுக்கு மானியமாகப் பரிசளித்தார். அது அவரு டைய அரச பக்தியை மெச்சி அதற்காகக் கொடுக்கப்பட்டதாகும். எனினும் அவர் ஆல்பிரட்டின் அடிமைபோல் இருந்தார் என்று தான் கூறவேண்டும். இதனால் வெஸ்ஸெக்ஸின் எல்லை வேல்ஸின் எல்லைப்புறம் வரை பரவியது. குவெனீட் அதிபரான ராட்ரிமர் கி. பி. 878 ஆம் ஆண்டில் கொல்லப்பட்டார். டேனியரின் உறவை விரும்பாத அவருடைய மக்கள் ஆல்பிரட்டிடம் தஞ்சம் புகுந்தனர். அதனையடுத்துத் தென் வேல்ஸிலிருந்த அவருடைய பிற பகை வர்களும் ஆல்பிரட்டிடம் சரணடைந்தனர். ஆங்கில அரசருக்குத் தொண்டு செய்வது செயின்ட் டேவிட்டிற்குச் செய்யும் தொண் டினைப் போன்றதென ஆல்பிரட்டின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய அஸ்ஸர் என்னும் வேல்ஸ் திருச்சபைப் பாதிரியார் குறிப்பிடுகிறார்.

**ஆல்பிரட்டின் தொண்டுகள் :-** இங்கிலாந்துக்கு ஆல்பிரட் செய்த தொண்டுகள் அனைத்தும் போர்கள் மூலமாகவே செய்யப் பட்டன என்பதற்கான முத்திரைகளைக் காண்கிறோம். அவருடைய போர் நடவடிக்கைகள் பலதரப்பட்டவையாம். தம் படைகளை இரு பிரிவுகளாகப் பிரித்து அவற்றை மாற்றி மாற்றிப் போரில் ஈடு படுத்தினார் அவர். தம் தேனர்கள் மூன்று மாதங்களில் ஒரு மாதத் திற்கு அரசருக்குச் சேவை செய்தால் போதும் என்ற முறையை அவர் கடைப்பிடித்தார். கப்பல் கட்டும் முறையிலும் புது மாற் றத்தை ஏற்படுத்தினார். டேனியர்களின் கப்பல்களைவிட நீண்டதும் வேகமுமுள்ள கப்பல்களைக் கட்ட ஆல்பிரட் ஏற்பாடு செய்து அவற்றைப் ஃபிரிசியர்களைக் கொண்டு இயக்குவித்தார்,

டேனியப் படையெடுப்புகளை முறியடிக்க ஆல்பிரட் தேனர்களுடைய குதிரைப் படையையும் கோட்டைகள் மதிற் சுவர்கள் அமைந்த பல நகரங்களையும் ஏற்படுத்தினர். 'இறைவழிபாட்டினரும், போர்வீரர்களும், ஆக்கச் செயல்வீரர்களும், ஓர் அரசனுக்கு இன்றியமையாத தேவைகள்' என அவர் குறித்து வைத்துள்ளார். அவருடைய படைவீரர்கள் நிலப்பிரபுக்களிலிருந்து வந்தவர்களேயாவர். மற்ற வகுப்பினரால் போர்ப் பணியைச் செய்ய இயலாமைக்குக் காரணங்களிருந்தன. சாகுபடி செய்வதில் ஈடுபட்டுள்ளவர்களால் கழனிகளை விட்டுவர இயலவில்லை. மேலும், போர்க் கவசங்களை விலைகொடுத்து வாங்கும் பொருள் வளமையும் அவர்களுக்கிருக்கவில்லை. இதனுல் பொருள் வளம் படைத்த நிலப்பிரபுக்களில் இருந்தே போர்வீரர்கள் திரட்டப்பட்டதில் வியப்பில்லை. போர்வீரர்களுக்கு ஆல்பிரட் சம்பளம் கொடுத்தார். அவருடைய சட்டங்களிலிருந்தும் சாசனங்களிலிருந்தும் தேனர்கள் பெற்ற சலுகைகளை அறிகிறோம். தலைவருக்குத் துரோகம் செய்தவர்களை மன்னிக்கக்கூடாதென்ற வழக்கும் ஆல்பிரட்டின் காலத்தில் ஏற்படலாயிற்று. எளிய குடியானவன் கொடுத்ததைப் போல் ஆறுமடங்கு அதிகமாக அரசரின் தேனர்களுக்கு 'வெர்கில்டு' வழங்கப்பட்டது. போர்க்கால உதவிகளைச் செய்யத் தவறிய தேனர்களின் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. ஆல்பிரட்டும் அவருடைய சந்ததியினரும் பிஷப்புகள், மடாலயங்கள், பிரபுக்கள் ஆகியோருக்கு நிலங்களை மானியமாகப் பெறும் சலுகைகளைக் கொடுத்தனர். இவ்வகை மானிய நிலங்கள் புக்லண்டு (bookland) எனப்பட்டன.

புதுப் பரோக்கள் ஆல்பிரட்டின் காலத்தில் உருவாயின. இலண்டன் பெரியதொரு பரோவாயிருந்தது. சஸ்ஸெக்ஸிலிருந்து எக்ஸ்டார் வரை தென்பகுதியில் மட்டும் ஏறத்தாழ இருபத்தைந்து பரோக்கள் இருந்தன. அதைப்போல் பார்ன்ஸ்டேபிலிருந்து சவுத்வார்க் வரை இருந்த நிலப் பகுதிகளில் பல பரோக்கள் உருவாக்கப்பட்டன. பரோக்களின் கடமைகளை டூம்ஸ்டே நூலில் காணலாம். சில இடங்களில் மேனர்ப் பண்ணைக்காரர்கள் நகரத்தில் பல்வேறு வீடுகளை உரிமை கொண்டாடியதற்கும் குறிப்புகள் உள்ளன.

ஆல்பிரட் வரம்பிலா ஆட்சி நடத்தினர் எனில் மிகையன்று. அவருடைய சட்டங்களில் பாதிக்கு மேற்பட்டவை படைவீரர்களுக்கு ஆல்பிரட் கொடுத்த தண்டனைகளைப் பற்றியவை. இச் சட்டங்களிலிருந்து அக் கால அரசு பற்றிய கருத்துகள் அதற்கு முந்தைய காலத்தைவிடத் தெளிவாக இருந்ததை அறியலாம்,

அரசர் பிரபுக்களால் போற்றப்பட்டார். மன்னர் சபையின் விதிகளை மீறியவர்களும் படையிலிருந்து தப்பிச் சென்றவர்களும் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர். நாடு கடத்தப்பட்டவர்களை ஆதரித்தவர்களும், அரசருக்கெதிராக சதித் திட்டங்களில் ஈடு பட்டவர்களும் கொல்லப்பட்டனர். தம் முன்னர் விசாரணைக்கு வந்த வழக்குகளைத் தாமே விசாரித்துத் தீர்வு கண்டார் ஆல்பிரட். அவர் ஆல்டர்மன்களை நியமித்து நிலமானியங்களையும் தம் இச்சைப்படி கொடுத்தார். விட்டன் சபையும், திருச்சபைக் குழுக்களும் அவர் காலத்தில் வளர்ச்சியுறவில்லை. கென்ட், மெர்சியாப் பகுதிகளில் இருந்த சட்டங்களை வெஸ்ஸெக்ஸின் சட்ட மரபுகளுடன் இணைத்து ஆங்கிலச் சட்டங்களைத் தொகுத் தவர் அவரே. அவருடைய நற்பண்புகளும், அருஞ்செயல்களும் நாட்டின் அமைதியை நிலைநாட்டி, நீதியின் இருப்பிடமாயின.

ஆல்பிரட்டின் பெருமைக்குக் காரணங்களாய் அமைந்தவை அவர் இருபதாண்டு காலம் இடையறாது செய்த போர்களும், பண் பாட்டைப் பாதுகாக்க அவர் செய்த முயற்சிகளுமேயாம்.

போரினால் அழிக்கப்பட்டு நாசமாக்கப்பட்ட வெஸ்ஸெக் ஸெக்கு ஆல்பிரட் வெளியிலிருந்து உதவியை நாடினார். மேற்கு மெர்சியாவிலிருந்து பலர் அவருக்கு உதவினர். வேல்ஸிலிருந்து அஸ்ஸர் என்ற பெரியாரும் ஐரோப்பாவிலிருந்து பலரும் அவருக்கு உதவினர். அவர்தம் உதவியால் ஆல்பிரட் இலக்கியத்துறைக்கு பல நன்மைகளைச்செய்தார். பீடு பெருமகனார் எழுதிய வரலாற் றுக் குறிப்புகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க ஏற்பாடு செய்தார் அவர். ஒரோசியஸ் எழுதிய 'உலக வரலாறு' என்ற நூலும், இடைக் காலத்தில் ஆன்மீகச் செல்வாக்கு பெற்ற இரு நூல்களும், போப் பாண்டவர் கிரகரியால் எழுதப்பட்ட 'மக்கள் காப்பு' என்னும் நூலும், போதியஸ் என்பார் எழுதிய 'தத்துவ சாஸ்திர ஆறுதல்கள்' என்னும் நூலும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டன. அந் நூல்களில் ஆல்பிரட் தாம் கேட்ட கதைகளைப் பொருத்தமான இடங்களில் புகுத்தி அந் நூல்களை அழகுப்படுத்தினார். அவரு டைய இலக்கியத்தில் கவிதை நயத்தைக் காணலாம். அவருடைய அனுபவக் கூற்றுகள் ஆழ்ந்த கருத்துடையவையாம். அவருடைய காலத்தைப் பொற்காலம் என்று போற்றுவதுண்டு. இனிய வாழ்க்கை எளிய வாழ்க்கைக்குச் சமம் என்பது அவர் கருத்து.

விஞ்செஸ்டரில் அவர் புதியதொரு திருச்சபையை நிறுவினார். இங்கிலாந்தை எல்லாத் துறைகளிலும் முன்னேற்ற அவர் சிந்தித் தார் எனில் அஃது மிகையன்று. ஆட்சி நடத்தத் தகுதி படைத்த

வர்களைப் பழக்க அரசாங்க செலவில் பள்ளியொன்றை நிறுவி, தேனர்களுக்கு மக்கள் வேட்டைக்குச் செல்லும் முன் ஆங்கில மொழியைக் கற்கவேண்டியதன் அவசியத்தையும் அவர் நன்கு உணர்த்தினர். திருச்சபைக் குருமார்கள் இலத்தீன் மொழியையும் கற்க வேண்டுமென அவர் வற்புறுத்தினர்.

ஆல்பிரட்டின் அழியாப் புகழுக்கு அவர் எழுதி வைத்த 'வரலாற்றுக் குறிப்பேடுகள்' காரணமாய் இன்றும் இருக்கின்றன. கி.பி. 892ஆம் ஆண்டு வரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அவர் தொகுத்து எழுதியுள்ளார். தொடக்ககால இங்கிலாந்தின் வரலாற்றை அறிய விரும்புகிறவர்களுக்கு அக் குறிப்புகள் இன்றும் அருந்துணை புரிகின்றன. அக்குறிப்புகள் ஆங்கில உரைநடையின் தொடக்க காலத்திற்கு முந்தியவை எனலாம். வெஸ்ஸெக்ஸின் பெருமை, கிறிஸ்தவரல்லாதாரிடமிருந்து இங்கிலாந்தைக் காத்த வரலாறு, இங்கிலாந்தின் சட்டங்கள் உருவான வகை, அவற்றுடன் தேசிய உணர்ச்சியின் தாயகம் ஆகிய இவ்வகைச் செய்திகளை அக் குறிப்புகளிலிருந்து அறிகிறோம்.

ஆல்பிரட் கி. பி. 899 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ஆம் நாள் காலமானர். வான்டேஜ் என்னும் ஊரில் பிறந்து அதெல்னி என்னும் ஊரில் புகலிடம் பெற்று, இலண்டனைத் தமது புதிய தலை நகராக்கிக் கொண்ட ஆல்பிரட் வின்செஸ்டரில் அடக்கம் செய்யப் பட்டார். அவர் நிறுவிய அரசு சிறியதாயினும் 'சிறு உடலில் உறுதியும் வலிவும் வாய்ந்த இதயம்' போன்று ஆல்பிரட் இங்கிலாந்தின் எதிர் காலத்தை உருவாக்கினர். எனவே, அவரை மகா ஆல்பிரட் என்று வரலாற்று ஆசிரியர்கள் பெருமிதத்துடன் கூறுகிறர்கள்.

# 13. சாக்சானிய முடியாட்சி

கி. பி. 878-க்கும் 978-க்கும் இடைப்பட்ட காலம் சாக்சானியரது பொற்காலம் எனப்போற்றப் படுகின்றது. கி, பி. 878 ஆம் ஆண்டில் ஆல்ஃபிரட் டேனியரைத் தோற்கடித்து அவர்களுடன் வெட்மூர் உடன்படிக்கை செய்து கொண்டார் என்பதை ஏற்கனவே அறிந்துள்ளோம். வெட்மூர் உடன்படிக்கையிலிருந்து எதெல்ரெட் ஆன்ரெடி என்ற அரசர் முடிசூட்டிக் கொண்ட ஆண்டான 978 ஆம் ஆண்டு வரையிலான ஒரு நூற்றாண்டு சாக்சானியரின் வரலாற்றில் சிறப்பு மிக்க காலமாகும். மேலே சாக்சானிய முடியாட்சியின் கீழ் இங்கிலாந்து ஐக்கியமடைந்து கொண்டிருந்தது. அவர்களின் முயற்சியால் கி. பி. 955 ஆம் ஆண்டு வாக்கில் டேன்லா பகுதியும் வெற்றி கொள்ளப்பட்டு இங்கிலாந்துடன் இணைந்தது. ஆல்ப்ஃபிரட்டின் மூதாதையர்கள் வெறும் வெஸ்ஸெக்ஸின் அரசர்களாக மட்டும் இருந்தனர். ஆனால் அவருடைய பேரப்பிள்ளைகளும் அவர் தம் வாரிசுகளும் இங்கிலாந்தின் அரசர்களாயிருந்தார்கள். இனி அவர்களின் வரலாற்றினை ஆய்வோம்.

**மூத்த எட்வர்டு** (Edward the Elder), 900-925:-ஆல்பிரட்டின் மகனும், அடுத்து வந்த அரசருமான எட்வர்டை மூத்த எட்வர்டு என்றழைப்பர். அவர் சிறந்த போர்வீரர். எதெல்பீல்டா என்னும் பெயர் கொண்ட அவருடைய சகோதரியின் ஆதரவைப் பெற்ற மூத்த எட்வர்டு டேனியருடன் தொடர்ந்து போரிட்டு வந்தார். எதெல்பீல்டாவை 'மெர்சிய சீமாட்டி' என்பர். தம் கணவரின் மரணத்திற்குப் பின்னர் எதெல்பீல்டா டேனியருக்கெதிரான போராட்டத்தை உறுதியுடனும் தொடர்ந்தார். போராட்டத்தின் விளைவாக எதெல்பீல்டா லிங்கன், ஸ்டாம்போர்டு, நாட்டிங்ஹாம், டெர்பி, லிஸ்டர் என்றும் ஐந்து பரோக்களைக் கைப்பற்றினார். தம் பெற்ற முதல் வெற்றியின் பயனாக இவ்வைந்து பரோக்களை டேனியர் பெற்றிருந்தனர். டாம்வொர்த் காசில்(Tomworth Castle) என்னுமிடத்தில் அரசியாகவே வாழ்ந்து அங்கேயே எதெல்பீல்டா காலமானார். அவருடைய சகோதரரான மூத்த எட்வர்டு அவளுடையபணியைத் தொடர்ந்து டேனியருக்கெதிராக கோட்டை கொத்தளங்களைக் கட்டியும் அரண் செய்தும் ஆண்டு வந்தார்,




படம்-4

வெட்மூர் உடன்படிக்கைக்குப் பின் பிரிட்டன்

இத்தகைய கோட்டை கொத்தளங்களுடன் அரண் செய்யப் பட்ட இடங்களே 'பர்கள்' (Burhs) எனப்பட்டன. இத்தகைய பர்க் களின் எழுச்சியில் தான் நகரங்கள் தொடங்கப் பட்டிருக்க வேண்டுமென்பது வரலாற்றுசிரியர்களின் துணிபு. மூத்த எட்வர்டி னுல் அமைக்கப் பெற்ற மத்திய நிலங்களில் காணப்படும் புதிய ஷயர்களின் தலைநகரங்களாக இப் பர்கள் விளங்கின. பெர்க்ஷ யர், வில்ட்ஷயர் போன்ற ஷயர்கள் இதற்கு முன்னரே உருவாகி இருந்தமையால் அவை பர்க்கின் அடிப்படையில் அமையவில்லை. ஆனால் பின்னுல் அமைந்த மத்திய நில ஷயர்கள் கவுண்டி நகரங் களின் பெயரில் அமைந்திருப்பதைக் காணலாம். எடுத்துக் காட் டாக பெட்போர்டு, ஹெர்ட்போர்டு, ஹன்டிங்டன், கேம்பிரிட்ஜ், லீசெஸ்டர், டெர்பி, நாட்டிங்ஹாம், ஸ்டாபோர்டு, வார்விக் முதலான ஷயர்கள் கவுன்டி நகரங்களாக எழுந்து ஷயர் களானவை. மூத்த எட்வர்டு காலமாகும் முன், ஹம்பர் வரை யிலான டேன்லா பகுதியை அவர் மீண்டும் கைப்பற்றி வெற்றி கண்டார். டேனியர் மேலே சாக்சானிய அரசர்களை ஏற்றுக்கொண்டு இங்கிலாந்திலேயே தங்கலாயினர்.

**அதெல்ஸ்டன், 925-40:-** மூத்த எட்வர்டின் ஆட்சியை அடுத்து அவருடைய மூன்று குமாரர்கள் ஆட்சி புரிந்தனர். அதெல்ஸ்டன், எட்மண்ட், எட்ரெட் என்ற அந்த மூவரும் முறையே 15, 6, 9 ஆண்டுகள் அரசராகப் பதவி வகித்தனர்.

அதெல்ஸ்டன் பதினைந்து ஆண்டு காலம் ஆட்சி புரிந்தார். அவரை இங்கிலாந்தின் அரசர் எனக் கூறுவது சாலப் பொருந்தும். ஏனெனில் அவரது முயற்சியால் டேனிய நார்த்தம்பிரியா வெற்றி கொள்ளப் பெற்று இங்கிலாந்து ஐக்கியமடைந்து ஒரு குடைக்கீழ் வந்த தெனலாம். பிரிட்டனின் முடி அரசர் என்ற பட்டப் பெய ரையும் அவர் சூட்டிக் கொண்டார். ஆங்கில-சாக்சானிய வரலாற் றுக் குறிப்பேடுகள் அவரை தீவில் ஆண்ட அனைத்து அரசர் களையும் ஆண்டவர் என்று குறிப்பிடுகிறது. மேலே வேல்ஸின் அரசர், ஸ்காட்டுகளின் அரசர், மான்மத் அரசர், நார்த்தம்பிரியா வின் அரசர், ஆகிய அனைவரும் அவரால் ஆளப் பெற்றமையால் அவரை இங்கிலாந்தின் அரசருக்கெல்லாம் அரசர் எனக் கொள்ள லாம். ஸ்காட்டுகளின் அரசராய் இருந்தகான்ஸ்டன்டைன் என்பார் நயவஞ்சகர். அவர் அதெல்ஸ்டனுக் கெதிராகக் போர்க் கொடி உயர்த்தி ஸ்காட்டியர், டேனியர், வெல்ஷ், பிரிட்டானியர் ஆகிய மக்களைச் சார்ந்த கூட்டுப் படையொன்றினைத் திரட்டிப்பொருதார். ப்ருனன்பர்க் என்ற இடத்தில் கி.பி. 937ஆம் ஆண்டு நடைபெற்ற போரில் அதெல்ஸ்டன் அவரை முறியடித்துப் படுதோல்வி அடையச் செய்தார்.

**எட்மண்ட் (940—6):-** அதெல்ஸ்டனை அடுத்து ஆட்சி புரிந்த எட்மண்ட் சிறிது காலமே ஆண்டார். அவருடைய சொந்த விருந்தினர் மண்டபத்தில் திருடன் ஒருவன் அவரைக் கொலை செய்தான். எட்மண்டை அடுத்த அவருடைய இளைய சகோதரரான எட்ரெட்[a] ஆட்சிக்கு வந்தார். எட்மண்டுக்குப் பிள்ளைகள் இருந்த போதிலும் அவர்கள் இளம் பிராயத்தினராய் இருந்த காரணத்தால் எட்மண்டின் சகோதரர் எட்ரெட்டே அரசு கட்டிலேறினார். வாரிசுரிமையில் ஏற்பட்ட இம்மாற்றம் காலதேச வர்த்தமானத்திற்கேற்ப அவசியமானதெனக் கருதியே எட்மண்டின் பிள்ளைகள் ஆட்சிக்கு வருவதற்கு மாறாக அவருடைய சகோதரர் எட்ரெட் அரசரானார். அறிஞர் சபையான விட்டான் சபையே இத் தீர்மானத்தை ஏற்றெடுத்தது. எட்ரெட் காலமானபோது அவருடைய அண்ணனது இருகுமாரர்களான எட்வியும்,எட்காரும் இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொண்டனர். ஆனால் மேலும் நான்காண்டு காலமே எட்வி உயிர்வாழ்ந்தார். அவருக்குப் பின்னர் மீண்டும் இருஇராச்சியங்களும் ஒன்றிணைக்கப்பெற்று எட்காரினால் பதினாலு ஆண்டுகள் ஆளப்பட்டன. எட்காரை வரலாற்று வல்லுநர்கள் அமைதிக் காவலர் எட்கார் என்றழைப்பர்.

**அமைதிக் காவலர் எட்கார் (959—75):-** அமைதிக்காவலர் எட்கார் நினைவு கூரத் தக்கவர். அவர் தம்முடைய முக்கிய ஆலோசகராக செயின்ட் டன்ஸ்டன் என்பாரைத் தேர்ந்தெடுத்தார். டன்ஸ்டன் தூய வாழ்க்கை வாழ்ந்தவரென ஏற்கெனவே பேரும் புகழும் பெற்றிருந்தார். அவர் கிளாஸ்டன்பரிக்கருகில் பணக்காரத் தேனர் ஒருவரின் மகனாகப் பிறந்தார். சிறு வயதில் இசைக் கலையில் தேர்ச்சி பெற்று, செல்லுமிடங்களுக்கெல்லாம் ஹார்ப் (Harp) என்னும் இசைக் கருவியைச் சுமந்து சென்றார். பின்னர் அவர் அதெல்ஸ்டன் அவைக்கு சமயச் குருமாரின் பணியாளராக அனுப்பப் பெற்றார். எனினும் அவருக்கு அரண்மனை வாழ்க்கை ருசிக்கவில்லை. துறவியாக மாறத்தீர்மானித்து டன்ஸ்டன் கிளாஸ்டன்பரி திருச்சபையில் துறவியானார். டன்ஸ்டன் ஆர்வமிக்க படிப்பாளி; கிளாஸ்டன்பரியில் அவருக்கு ஐரீஷ் துறவிகளுடன் தொடர்பேற்பட்டது. அத்துறவிகள் இங்கிலாந்தின் பல பாகங்களுக்கும் பயணம் சென்று விலைமதிப்பற்ற கையெழுத்து நூற்பிரதிகளைத் தம்முடன் கொண்டு செல்லும் பழக்கத்தினர். மேலும் கிளாஸ்டன்பரி திருச்சபையில் தமுடைய கலையார்வத்தை வளர்த்து முழுமையாக்கும் பெரும் வாய்ப்பும் அவருக்குக் கிட்டியது. விரைவில் அவர் பொற்கொல்லராகப் பெரும் புகழ் ஈட்டினார். சாத்தானுடன் அவர் நேருக்கு நேர் வாத விவாதங்கள் புரிந்தார் எனக் கூறும் பல கதைகள் செயின்ட் டன்ஸ்டனைக்

குறித்து இருக்கின்றன. சஸ்ஸெக்ஸில் இருக்கும் மேபீல்டு மாளிகை காண்டர்பரி ஆர்ச்பிஷப்புகளின் தொன்மையான உறை விடமாகும். இன்றும் டன்ஸ்டன் சாத்தானின் மூக்கைக் கிள்ளு வதற்கு பயன்படுத்தப்பட்ட இடுக்கியைக் காட்சிப் பொருளாக அங்குக் காணலாம்.

**டன்ஸ்டன் ஆர்ச்பிஷப்பாதல்:-** எட்மண்ட் அரசர் டன்ஸ் டனை மீண்டும் அரச அவைக்கு வருமாறு பணித்தார். அவரை அரசர் கிளாஸ்டன்பரி திருச்சபையின் குருமாராக நியமித்தார். அப்போது அவருக்கு இருபது வயதுகூட ஆகியிருக்கவில்லை. எட்மண்டின் மகனுன எட்கார், டன்ஸ்டனின் இணைபிரியா வாழ் நாள் தோழர். டன்ஸ்டன் பின்னர் வொர்ஸ்டரின் பிஷப்பாகவும் இலண்டனின் பிஷப்பாகவும் நியமிக்கப்பட்டார். இறுதியாக 960ஆம் ஆண்டுவாக்கில் அவர் ஆர்ச்பிஷப்பாக்கப்பட்டார். அப் பதவியை டன்ஸ்டன் சற்றேறக்குறைய முப்பதாண்டுகள் வகித்தார். அக்காலத்தில் திருச்சபையிலும், அரசுப்பணிகளிலும் தீவிர பங்கு கொண்ட பெரியார் என்று டன்ஸ்டன் கருதப்படுகிறார். ஏன், அவரை இடைக்கால இங்கிலாந்தின் தலையாயசமய அரசியல் ஞானி என்றால் மிகையாகாது.

**மடாலய சீர்திருத்தம்:-** கிளாஸ்டன்பரியில் ஆர்ச் பிஷப்பாக டன்ஸ்டன் அருளாட்சி நடாத்திய காலம் இங்கிலாந்தில் மடாலய சீர்திருத்தம் தொடங்கப்பெற்ற காலமாகும். இத்தகைய சீர் திருத்தம் அவசியமானது; அவசரமானது என்று கருதப்பெற்ற வேளையில் டன்ஸ்டன் பொறுப்பேற்றிருந்தார். நாட்டை விட்டு ஐரோப்பாவிற்குப் பயணம் செய்த வேளையில் அவர் பர்கண்டியில் இருந்த கிளுனி(Cluny)திருச்சபையில் தங்கும் வாய்ப்பினைப் பெற்றி ருந்தார். மடாலய சீர்திருத்தத்திற்குப் பெயர்பெற்ற இடமாக கிளுனி திகழ்ந்தது. இம்மடாலய சீர்திருத்தம் கிளுனியிலிருந்து ஐரோப்பா முழுவதும் பரவத்தொடங்கியது. கிளுனியிலிருந்து இங்கிலாந்து திரும்பிய டன்ஸ்டன் இங்கிலாந்திலும் சமய சீர்திருத்தத்திற்கு ஆதரவு காட்டினார். இத்தகைய சமய சீர்திருத்த ஆர்வத்தால் உந்தப்பெற்று இங்கிலாந்திலிருந்த பெரும்பாலான திருச்சபைகள் துறவிகளின் ஆட்சியின் கீழ் வந்தன. அத்துடன் அனைத்து மடாலயங்களிலும் சமய சட்ட திட்டங்களின் ஆட்சிக்குட்படும் சீர்திருத்தம் தோன்றியது. மடாலயங்களில் செயின்ட் பெனிடிக்ட் என்பார் காட்டிச்சென்ற சட்டதிட்டங்கள் தீவிரமாக செயல் படுத்தப்பட்டன. அதன்படி துறவிகள் நாள்தோறும் ஏழுவகை யான தொண்டுகளைச் செய்யப் பணிக்கப்பட்டனர். அத்துடன் அவர்கள் நாள்தோறும் நான்கு மணி நேரத்தைக் கல்வி

கற்பதற்கும், ஆறு மணி நேரத்தை உடலுழைப்புக்கும் கொடுத்தனர்.மேற்கூறிய சீர்திருத்தங்கள் டன்ஸ்டன் உயிரோடு வாழ்ந்த காலம் வரை பெரிதும் போற்றப்பட்டு செல்வாக்குற்றன. டன்ஸ்டன் காலமான பின் நாட்டில் போரும், இம்சையும் கொடி கட்டிப்பறந்தநாட்களில் அவருடைய சமய சீர்திருத்த நற்பணிகள் புறக்கணிக்கப்பட்டு நலியலாயின.

எட்காரின் ஆட்சியில் ஏற்பட்ட செழுமைக்கும் வளமான வாழ்விற்கும் டன்ஸ்டனின் பங்கு சீரிய இடத்தைப்பெறுகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை. எட்காரின் ஆட்சிக்காலத்தை அமைதி நிரம்பிய காலம் என்று சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேட்டு வல்லுநர் வர்ணிக்கிறுர். செஸ்டரில் ஆறு அரசர்கள் சந்தித்தனர் என்றும், நீரிலும், நிலத்திலும் அவர்கள் எப்போதும் அவருக்குத் துணையாக நிற்பர் என்றும் அவர்கள் உறுதிமொழி ஏற்றனர் என்று வரலாற்றுக் குறிப்பேட்டாசிரியர் குறிப்பிடுகிறுர்.

பிற்கால வரலாற்றுக் குறிப்பேட்டாசிரியர் ஒருவரின் கருத்துப் படி எட்காரை ஆதரித்த அரசர்கள் எண்மர் என்றும், அவர்கள் எட்கார் அரசரை டீ ஆற்றில் படகேற்றி அக்கரை சேர்த்தனர் என்றும் குறிப்பிடுகிறுர்.

எட்கார் கி. பி. 975 ஆம் ஆண்டில் காலமானுர். டன்ஸ்டன் மேலும் பதின்மூன்றுண்டுகள் உயிர் வாழ்ந்தார். எட்காரின் குமாரர் களின் ஆட்சிக்காலத்தில் நாட்டில் நிகழப்போகும் கேடுகளைப் பற்றி டன்ஸ்டன் சோதிடம் கூறினுர். எட்காரை அடுத்து அவருடைய இளைய குமாரர் எட்வர்டு (தியாக சீலர்) மூன்றுண்டுகள் ஆட்சி புரிந்தார். அவருடைய மாற்றாந்தாயான எல்ஃபிரிடா என்பாள் அவரை டோர்செட் என்னுமிடத்தில் கொலை செய்தாள். தம் மகன் அரசராக வேண்டுமன்பதே எல்ஃபிரிடாவின்பேராசையாம். அதன் நிமித்தம் அவள் எட்வர்டின் மரணத்திற்கு காரணமானுள். அவளுடைய மகனுன எதெல்ரெட் பத்து வயது பாலகன் தேம்ஸ் ஆற்றங்கரை நகரான கிங்ஸ்டன் என்னுமிடத்தில் அரசராக முடி சூட்டப் பெற்றுன். `எதெல்ரெட்டை வரலாற்றில் எதெல்ரெட் தி ரீட்லெஸ் (Ethelred the Reedless) என்பர்.

எதெல்ரெட் அன் ரெடி முப்பத்தெட்டு ஆண்டுகள் அரசராக பதவி வகித்தார் (978-1016).இதில் முப்பத்தாறு ஆண்டுகள் டேனிய தாக்குதல்களுக்கும், படையெடுப்புகளுக்கும்

இங்கிலாந்து ஆளாகி தத்தளித்தது. டேனிய தாக்குதல்கள் 980ஆம் ஆண்டுவாக்கில் தொடங்கியபோது டோர்செட்டில் கடற் கொள்ளைக்காரர்களாக அவர்கள் இங்கிலாந்தில் காலூன்றினர். அடுத்து வந்த ஆண்டுகளில் நிகழ்ந்த சம்பவங்கள் துயரமிக்கவை என்று வரலாற்றுக் குறிப்பேடு எடுத்தியம்புகின்றது. கடற் கொள்ளைக் கூட்டத்தினராக வந்த டேனியரின் கப்பல்கள் எல்லா கடற்கரைகளையும் தாக்கின. அவை நுழையாத ஆறுகளே இல்லையெனலாம். நாட்டுப் புறங்கள் சூறையாடப் பெற்று பீதி யுற்று நடுங்கின. தொலைதூர இடங்களான பாம்பர்க், இப்ஸ்விச், கான்டர்பரி, எக்ஸிடார், பாத் போன்ற ஊர்கள் கொள்ளையிடப் பெற்றன. டேனியப் படைகள் ஆக்ஸ்போர்டு நகரம் வரை நாட்டிற் குள் ஊடுருவித்தாக்கின. இலண்டன் மாநகர் ஒன்று மட்டும் சீரிய பாதுகாப்பினை மேற்கொண்டு டேனியரை எதிர்த்து நின்றது. அரசர் டேனியருக்குக் கப்பங்கட்டுவதென முடிவு செய்து, அமைதியாக இங்கிலாந்தை விட்டு டேனியர் வெளியேற வேண்டு மென அவர்களைத் தூண்டினார். கப்பத்தொகை போதுமானதாக கருதப்படாதபோது அரசர் நேர்முக வரியொன்றை மக்களிடம் வசூலித்து டேனியரை விரட்டலாம் என்று எண்ணினார். இவ்வரி யைத் தான் டேன்கில்டு (Danegeld) என்பர். டேன்கில்டு வரியை பிற்கால அரசர்கள் டேனிய அச்சமில்லாத காலத்திலும் வசூலித்து பொருளீட்டும் கருவியாகக் கொண்டனர். எதெல்ரெட்டின் ஆட்சிக் காலத்தில் டேன்கில்டு வரி ஆறு முறை வசூலிக்கப் பட்டது. என்ற செய்தியிலிருந்து ஓர் உண்மை புலனாகும். பொருளாசை கொண்ட டேனியரை இவ்வரி வருக வருகவென விரும்பி அழைத் தது. எதெல்ரெட்டின் ஆட்சிக்காலத்தில் டேன்கில்டாக கொடுக் கப் பட்ட தொகையின் அளவு 1,58,000 பவுண்டு எடையுள்ள வெள்ளியாகும். தற்கால அளவு படி அது 85,00,000 பவுன் களாகும். முப்பது இலட்ச மக்கள் தொகையிருந்த அக்கால இங்கிலாந்திலிருந்து இவ்வளவு பெருந்தொகை வரி செலுத்தப் பட்டது.

**இங்கிலாந்தில் குழப்பம்:-** படையெடுத்து வந்த டேனியர் களை எதிர்த்து போரிட்ட சில நகரங்களில் இலண்டன் மாநகரைக் குறிப்பிடலாம். எனினும் நாடு நெடுகிலும் பேரச்சத்தால் மக்கள் நடுநடுங்கி சீர்குலைந்து போயினர். தன்னிகரில்லாத, தலைவ ரொருவர் இல்லாத குறை அன்று நாட்டில் தென்பட்டது. போர்ப் படைகள் திரண்டு போரிட ஆயத்தமாக இருந்த போதிலும் அவற்றை வழி நடாத்தி செயல்படுத்தும் தலைவன் இல்லாத குறையால் இங்கிலாந்து தவித்துத் தத்தளித்தது. இது பற்றிய

கதைகளை ஆங்கில-சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேடுகளில் காணலாம். அரசரின் நிலையற்ற கொள்கையைச் சுட்டிக் காட்டும் சம்பவம் ஒன்றினை வரலாற்றுக்குறிப்பேடு இவ்வாறு குறிப்பிடு கின்றது. கி. பி. 1002 ஆம் ஆண்டு. "இந்த ஆண்டில் அரசரும் அவருடைய ஆலோசனை சபையும் தாக்கவந்த டேனிய கப்பற் படைவீரர்களுக்குக் கப்பஞ்செலுத்தி விட்டு அமைதியை நிலை நாட்டுவதென ஒப்புக்கொண்டன." அவர்கள் மீண்டும் இங்கிலாந்தின் மீது படையெடுக்கக் கூடாதென கேட்டுக் கொள்ளப்பட்டார்கள்" ஆனால் அதே ஆண்டு 'செயின்ட் பிரைஸஸ்டே (St Brice's Day) என்ற நன்னாளன்று வெஸ் ஸெக்ஸில் குடியேறியிருந்த டேனியரைக் கொன்று குவிக்கும்படி எதெல்ரெட் கட்டளையிட்டார். அங்ஙனம் கொலையுண்டவர்களில் டென்மார்க் அரசரான ஸ்வைன் போர்க்பியர்டு என்பாரின் சகோதரியும் ஒருத்தி. எதெல்ரெட் செய்த இவ் வடாத செய்கை யினால் நிலைமை மேலும் மோசமடைந்தது. டேனிய படையெடுப்பு களை முன்னின்று நடாத்தும் முக்கிய பொறுப்பாளராக ஸ்வைன் போர்க்பியர்டே ஏற்றுக்கொண்டார். அவர் ஹெரால்டு ப்ளூடூத் (Harold Blue-Tooth) என்பாரின் மகன். அவர் ஒரு கிறிஸ்தவர். ஸ்வைன் போர்க்பியர்டு தம் தந்தை ஹெரால்டு ப்ளூடூத்தை கொன்று விட்டு கிறிஸ்தவரல்லாதவராக மாறிவிட்டார். கி. பி. 1013 ஆம்ஆண்டில் ஸ்வைன் போர்க்பியர்டு தம்மகன் கான்யூட்டை இங்கிலாந்திற்கு அழைத்து வந்தார். அதே ஆண்டில் எதெல்ரெட் அரசர் நார்மண்டிக்கு ஓடிப்போனார்; அவர் தம் நார்மானிய மனைவி எம்மாவையும் அவளுடைய இளம் குமாரர்களையும் அழைத்துக் கொண்டு சென்றார். ஸ்வைன்போர்க்பியர்டு இங்கிலாந்தின் பெரும் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டார். கி. பி. 1014ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஒரு நாள் ஸ்வைன் தம் குதிரையின் மீதிலிருந்து சுருண்டு கீழே விழுந்து துடிதுடித்துச் செத்தார். அவருடைய மரணத்திற்கு இறைவனே காரணமென்றும் மக்கள் கூறினர்.

**கான்யூட்:-** கான்யூட் தற்போது டென்மார்க்கின் அரச ரானார். அவர் இங்கிலாந்தையும் ஆள விழைந்தார். கி. பி. 1014 ஆம் ஆண்டுவாக்கில் எதல்ரெட் நார்மண்டியிலிருந்து இங்கிலாந்து திரும்பினார். எனினும் அவர் 1016ஆம் ஆண்டில் காலமானார். இங்கிலாந்துக்கும், டேனியருக்குமிடையே போர் தொடர்ந்து நீடித்தது. எதெல்ரெட்டின் மூத்த மகன் எட்மண்ட் அயர்ன்சைடு கீழ் ஆங்கிலியாவில் படையொன்றைத் திரட்டி டேனியரை எதிர்க்க முயன்றார். ஆனால் அவர் போரிட்ட அம் முதல் போரே அவருடைய இறுதிப்போராக முடிவுற்றது. எட்மண்ட் அயர்ன்

சைடை கான்யூட் கி. பி. 1016 ஆம் ஆண்டுவாக்கில் அஸன்டன் (Assandune) என்னுமிடத்தில் தோற்கடித்தார். எட்ரிக் ஸ்டீரியோன் எனப்பெயர் கொண்ட ஆங்கிலப் பிரபு ஒருவரால் காட்டிக்கொடுக்கப்பட்டு அயர்ன்சைடு தோற்றுப்போனர். அவ் வாங்கிலப் பிரபு தம் நாட்டு மக்களை முன்னரும் காட்டிக் கொடுத் தவர் எனத் தூற்றப்பெற்றவர். கரன்யூட்டும் எட்மண்டும் தற்போது இராச்சியத்தை பங்கிட்டுக்கொள்வதென முடிவுக்கு வந்தனர். ஏற்கனவே கத்ரமும் ஆல்ஃபிரடும் இராச்சியத்தைப் பங்கிட்டுக் கொண்ட வரலாற்றைக் கண்டுள்ளோம். ஆயினும் என்? அவ் வாண்டு குளிர்காலத்தில் எட்மண்ட் அயர்ன்சைடு காலமானர்-இவர் கொலைசெய்யப்பட்டிருக்கவும் கூடும். இங்கிலாந்தின் நம்பிக்கை யும் அவருடன் காலாவதி ஆகிவிட்டது கான்யூட்டிற்குச்சரணடை வதைத்தவிர வேறு வழி இன்மையால் விட்டன் சபை அவரையே இங்கிலாந்தின் அரசராகத் தேர்ந்தெடுத்தது.

# 14. டேனியரின் இரண்டாம் படையெடுப்பு

**கான்யூட்டின் ஆட்சி, 1016-35:** கான்யூட் சற்றேறக் குறைய இருபதாண்டுகள் ஆட்சி புரிந்தார். அவருடைய ஆட்சி யின் தொடக்கத்தின் போது எண்ணற்ற கொலைகள் நடை பெற்றன. அவ்வாறு கொலையுண்டவர்களில் எதெல்ரெட்டின் குமாரர்களில் ஒருவரும் இருந்தார். காலஞ் செல்லச்செல்ல கான் யூட் பக்திமானாக மாறிவந்தார். கிறிஸ்தவராக மதம் மாறி, மடாலயங்களைத் தீக்கிரையாக்குவதை தவிர்த்து மடாலயங்களை நிறுவி மகிழ்ந்தார். பின்னர் அவர் ரோமாபுரிக்கு புனித யாத்திரை செய்யப்புறப்பட்டார்.

ஆங்கில சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேட்டில் சொல்லப் பட்டுள்ள குறிப்பொன்றிலிருந்து அரசரின் குணாதிசயத்தில் ஏற் பட்ட மாறுதலை அறியலாம். ஆர்ச்பிஷப் அல்பேகே (Alphage) என்பாரின் பிணம் செயின்ட்பால் திருச்சபையிலிருந்து கான்டர் பரிக்கு அகற்றபட்டபோது மேன்மை தங்கிய அரசர் கான்யூட் உடன் இருந்தார். பதினேறு ஆண்டுகளுக்கு முன்னர் செயின்ட் அல்பேகேவை ஒருசில டேனியர்கள் சிறைப்படுத்தி, விருந் தொன்றில் குடித்து. கும்மாளமிட்டுக்கொண்டு செயின்ட் அல்பேகேவை கிண்டல் மொழிகளால் கேலி செய்தனர். மாட்டு எலும்புகளை அவர்மீது வீசினர். பின்னர் அவரைக் கொடூரமாகக் கொலை செய்தனர். ஆனால் இவை கடந்தகால கதைகள், இப்போது நடைபெறும் சம்பவங்களே அதற்கு முற்றிலும் முரணானவை. கோடைகாலம் கான்டர்பரி திருச்சபையின் கதவுகள் திறக்கப்பட்டு தியாகி செயின்ட் அல்பேகேயின் எலும்பு களைப் பெற்றனர். அரசியாரும் அவருடைய மகனும் அவ ருடைய அவ் ஊர்வலத்தைக் காண வந்திருந்தனர். பெருந் தன்மையுடன் ஆடிப்பாடி ஆனந்த பாடல்களுடன் காலம் சென்ற புனித ஆர்ச்பிஷப்பின் எலும்புகளடங்கிய சவப்பெட்டியை மரியாதையுடன் கான்டர்பரி திருச்சபைக்குள் எடுத்துச் சென்ற னர். செயின்ட் அல்பேகேவைக் கொன்றவர்களே அவருக்கு

மரியாதை செலுத்துவதில் ஏதோ முரண்பாடிருப்பதாக எண்ணத் தேவையில்லை. ஏனெனில் இடைக்காலம் இத்தகைய முரண் பாடுகளுக்குப் பெயர் பெற்றது. தொடக்கத்தில் தூற்றப்பட்ட செயின்ட் அல்பேகே பின்னர் புனிதராய்ப் போற்றப்பட்டார்.

**கான்யூட்டின் ஆட்சி:-** இங்கிலாந்தில் வந்த கான்யூட் தம் நிலைமையை வலியுறுத்திக்கொள்ள, எதெல்ரெட்டின் மனைவி யான எம்மாவைத் திருமணம் செய்து கொண்டார். எதெல் ரெட்டின் மனைவிக்குப்பின் விதவையான எம்மா நார்மண்டியில் இருந்தாள். தாம் இங்கிலாந்தில் தங்காத காலத்தில் அதனை ஆட்சி செய்யும் பொறுப்பைப் பெரும் பிரபுக்கள் நால்வர் இடத் தில் ஒப்படைத்துச் சென்றார். அவர்களில் கான்யூட்டின் நம் பிக்கைக்குப் பாத்திரரான வெஸ்ஸக்ஸின் பிரபுவான காட்வின் (Godvine, Earl of Wessex) ஒருவர். இங்கிலாந்தில் இருந்ததைவிட கான்யூட்டிற்கு டென்மார்க்கில் செல்வாக்கு மிகுதி, அவரை வலிமை மிக்க மன்னர் என்று கூறுவர். இங்கி லாந்து டென்மார்க் ஆகிய இரு அரியணைகளில் ஏறிய கான்யூட் (1016) பன்னிரண்டாண்டுகளுக்குப் பின்னர் நார்வேயையும் வெற்றி கண்டார். கான்யூட்டிற்குப் பின்னர் அரசு கட்டிலேறிய அவர்தம் வாரிசுகளும் அவரைப்போன்று திறல்மிக்கவராய் இருந்திருப்பின் இங்கிலாந்து, டென்மார்க் ஆகிய நாடுகளின் வரலாறே வேறு வகையாய் மாறியிருக்கக் கூடுமென்றோ?

கான்யூட் அரசரை ஆங்கிலக் குடிமக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டிருக்கவேண்டும். இங்கிலாந்தில் நல்லாட்சியை நிலவச் செய்தமையால் அவர்தம் கப்பற்படையின் பெரும்பகுதியை டென் மார்க்கிற்குத் திரும்பிச் செல்லுமாறு பணித்தார். டேன்கில்டு வசூலித்து அவர்களுக்கு ஊதியம் கொடுக்கப்பெற்றது. தம் முடைய பாதுகாப்பிற்கென கான்யூட் சிறுபடையொன்றை நிலை யாக வைத்துக் கொண்டார். அவர்களை அரண்மனைப் பிரபுகள் (House-earls) என்றழைத்தனர். அவர்கள் அரசனைக் காக்கும் போர்வீரர்கள் போன்று அவருக்குத் தொண்டுபுரிந்தனர். இங்கி லாந்திலிருந்து குறுநில மன்னர்களை கட்டுப்பாட்டின் கீழ்வைத்து, அவர்களை கான்யூட் நிலைநாட்டிய ஆங்கில சட்ட திட்டங்களுக்கு கீழ்ப்படிய செய்வதும் அவர்களின் பணியாயிற்று. கான்யூட் கி. பி. 1035ஆம் ஆண்டில் காலமானார்.

**கான்யூட்டின் வழித்தோன்றல்கள் :-** கான்யூட்டின் மரணத் திற்குப் பின்னர் அவருடைய மூத்த மகன் ஸ்வெயின் டென்மார்க்கின் அரசராக முடிசூட்டிக் கொண்டார். இங்கிலாந்தை கான்யூட்டின் ஏனைய இரு குமாரர்களான ஹெரால்டு ஹேர்புட்

என்பாரும் ஹார்டிகான்யூட் என்பாரும் பங்கு போட்டுக்கொண்டு அரசராயினர். ஆனால் முடிசூட்டிக் கொண்ட சிறிது காலத்திற்குள் ஸ்வெயின் காலமானபோது, ஹார்டிகான்யூட் டென்மார்க்கின் அரசரானார். அவருக்கு இங்கிலாந்திலிருந்து ஆட்சி புரியும் ஆசை இருந்ததாகத் தெரியவில்லை. எனவே இங்கிலாந்து மக்கள் ஹெரால்டையே இங்கிலாந்தின் அனைத்துப் பகுதிகளுக்கும் அரசராகத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, ஹார்டிகான்யூட்டைக் கை கழுவி விட்டனர். ஏனெனில் அவர் நீண்டகாலம் டென்மார்க்கை விட்டு அசைந்தார் இல்லை. பின்னர் ஹார்டிகான்யூட் இங்கிலாந்தின்மீது படையெடுத்தபோது (1040) ஹெரால்டு ஹேர்புட் கால மான செய்தியைக் கேட்டுக் கொண்டே காலடி வைத்தார். எனவே கார்டிகான்யூட்டே டென்மார்க், இங்கிலாந்து ஆகிய இரு நாடுகளின் அரசராக வேண்டியவரானார். இரண்டாண்டுகள் கழிந்தன. கி. பி. 1042ஆம் ஆண்டுவாக்கில் ஹார்டிகான்யூட் லாம்பெத் என்னுமிடத்தில் குடித்துக் கொண்டிருக்கும்போது துடிதுடித்துச் செத்தார். இவ்வகையாக கான்யூட்டின் மக்களது ஆட்சி குறுகியதாய், புகழற்றதாய் முடிவுற்றதுதான் வரலாற்றின் கதையாகும்.

**டேனிய ஆட்சியின் விளைவுகள் :-** சாக்சானியரின் பொற்காலம் எட்காருடனும் டன்ஸ்டனுடனும் முடிவடைந்து விட்டதென்பதை அறிந்துள்ளோம். எதெல்ரெட் அன்ரெடியின் உதவாக்கரை ஆட்சியினுல் இங்கிலாந்தின்மீது டேனியர் இரண்டாம் முறையும் படையெடுத்து வெற்றி கண்டார்கள். எனவே டேனிய ஆட்சியின் செல்வாக்கினை இன்றும் இங்கிலாந்தின் வரலாறு, மொழி, அரசு இனம் ஆகியவற்றில் பிணைந்துஇணைந்து காட்சியளிப்பதைக் காணலாம். இன்றும் கிழக்கத்திய கவுன்டிகளில் இருக்கும் பல்வேறு இடங்களின் பெயர்கள் டேனிய தொடர்பு கொண்டிருத்தலை அறியலாம். நிர்வாகத்துறையில் புதியதொரு அளவை முறையில் நிலத்தைப் பிரிக்கும் பழக்கம் டேனியரால் புகுத்தப்பட்டது. வேபன்டேக்குகள் எனப்படும் நிலப்பகுதிகள் நூற்றுவர் பகுதியைப் போன்றதெனக் கருதப்படுகிறது. யார்க்ஷயரில் உள்ள வேபன்டேக்குகள் பல டேனியப் பெயர்களைக் கொண்டுள்ளன. யார்க்ஷயரில் காணப்படும் பிறிதொரு நிலப் பிரிவினை ரீடிங்குகள் (மூன்றும் பகுதி) என்பர். இதுவும் டேனிய தொடர்புக்கு எடுத்துக்காட்டாகும்.

**நார்ஸ் குடியேற்றம்:-** மூத்த எட்வர்டும் அவரது குமாரர்களும் கீழ் இங்கிலாந்தில் டேனியருக்கு அடங்கிப்போன அதே தருணத்தில், பிறிதொரு நார்ஸ் குடியேற்றம் உருவாகிக் கொண்டிருந்தது. கம்பர்லாந்து, வெஸ்டுமூர்லாந்து, லங்காஷயர் முதலான

இடங்களில் மான் தீவிலிருந்தும் அயர்லாந்திலிருந்தும் படையெடுத்து வந்த நார்வீஜியர்களின் குடியேற்றமாகும் அது. ஏரி மாவட்டத்தில் மலையை ஃபெல் (Fell) என்றும், ஏரியை டார்ன் (Tarn) என்றும் அழைக்கிறார்கள். இவ்விரண்டும் நார்வீஜியப் பெயர்களாம். நார்வீஜியர்கள் டேன்லா பகுதியிலும் ஊடுருவிக் குடியேறினர். நார்மன்டி அல்லது நார்மன்டன் என்னும் பெயர் நார்வீஜிய கிராமத்தைச் சுட்டுவதாகும். இத்தகைய பெயர்களை இன்றும் யார்க்ஷயர், லிங்கன்ஷயர், டெர்பிஷயர் லெஸ்டர்ஷயர் நாட்டிங்ஹாம்ஷயர், மற்றும் ரட்லாந்து ஆகிய கவுன்டிகளில் காணலாம்.

**தேனர்களின் சிறப்பு:-** டேனியப் போர்களினால் இங்கிலாந்தின் சமூக வாழ்க்கையில் பெரியதொரு மாற்றம் ஏற்பட்டது. அமைதிக் காலத்தைவிட போர்க்காலங்களில் தான் அமைப்பு முறைகள் சரியாக இருக்க வேண்டுமென்ற ஆர்வம் பிறக்கும். போர்க்காலங்களில் அவசிய அவசரத் தேவை பாதுகாப்பாகும். இதன் காரணமாக இங்கிலாந்தில் டேனியப் போர்கள் நிகழ்ந்த காலத்தில் தேனர்கள் சமூகத்தில் சிறப்பு பெற்று விளங்கினர். தேனர்கள் யார்? அரசரின் போர்வீரர்கள் தேனர்கள் எனப்பட்டனர். இராச்சியத்தைப் பாதுகாப்பது அவர்களின் கடமையெனக் கருதப்பட்டது. காலப்போக்கில் அவர்கள் குடியானவர்களின் தலைவராயினர். இவ்வகையில் எழுந்தது தான் படைமானிய முறையாகும். இம்முறை நார்மானிய வெற்றிக்குப் பின்னர் இங்கிலாந்தில் நன்கு வளர்ச்சியுற்றது. சுதந்திரக் குடிமக்கள் எனப்படுவோர். (Free Ceorl) தம் சுதந்திரத்தை இழந்து,காடுகளை உழுது பயிரிட்டனர்.அதனால் சமூக அமைப்பிலும் தாழ்நிலைக்குத் தள்ளப்பட்டனர். நார்மானிய வெற்றிக்கு முன்னர் சுதந்திர குடிமக்கள் வில்லன் என்னும் பெயரில் அந்தஸ்தைப் பெற்று, பிரபுவின் நிலத்தில் உழுது பயிரிட வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டனர்.

மூத்த எட்வர்டும் அவருடைய மகனும் டேன்லாவை மீண்டும் வெற்றி கண்டபோது இங்கிலாந்தில் மற்றுமொரு வளர்ச்சி ஏற்படலாயிற்று. நாடு முழுதும் பெரும் மாவட்டங்களாக பிரிக்கப்பட்டு ஷயர்களின் தொகுதிகளாக அமைக்கப்பட்டன. அவை ஒவ்வொன்றையும் ஒரு ஏர்ல் பிரபு ஆண்டார். இப்படியாக ஏர்ல் பிரபு சமூகத்தில் முக்கியஸ்தராகக் கருதப் பெற்றார். ஷயர்களை ஷெரீப் என்பார் ஏர்ல் பிரபுவின் பிரதிநிதியாக நிர்வாகம் செய்யும் முறையும் நடை முறைக்கு வந்தது. இம்முறையை கான்யூட்டும் தொடர்ந்து பின்பற்றினர். சாக்சானியரின் இறுதி அரசரான எட்வர்டு அதிபத்தரின் ஆட்சிக் காலத்திற்குள் ஏர்ல்பிரபுக்களின் வல்லமை அச்சப்படுமளவிற்கு அதிகரித்தது.

# 15. எட்வர்டு அதிபத்தர், 1042-66

ஹார்டிகான்யூட் காலமானபோது அவருடைய ஒன்று விட்ட சகோதரர் எட்வர்டை விட்டன்சபை இங்கிலாந்தின் அரசராகத் தேர்ந்தெடுத்தது. ஹார்டிகான்யூட்டும், அதிபத்தர் எட்வர்டும் நார்மண்டி எம்மாவின் பிள்ளைகள். கீழ்க்காணும் பட்டியலைக் காண்க.

எதெல்ரெட் அன்ரெடி
திருமணம் (1) எல்பீல்டா (2)நார்மண்டி எம்மா

| (1) எல்பீல்டா | (2) நார்மண்டி எம்மா |
|---|---|
| எட்மண்ட் அயர்ன்சைடு | அதிபத்தர் எட்வர்டு |

டென்மார்க், நார்வே இங்கிலாந்தின் அரசர் கான்யூட்
திருமணம் (1) எல்சிவா (2) நார்மண்டி எம்மா

| (1) எல்சிவா | (2) நார்மண்டி எம்மா |
|---|---|
| ஹெரால்டு ஹேர்புட் | ஹார்டி கான்யூட் |

எட்வர்டு எதெல்ரெட்டின் கடைசி பிள்ளையாவார். அவரை எட்வர்டு அதிபத்தர் (Edward the Confessor) என்றும் கூறுவர். (அவர் இருபத்து நான்கு ஆண்டு காலம் ஆட்சி நடாத்தினர், 1042-66). ஆட்சிக்கு வந்த ஞான்று அவருக்கு வயது ஏறத்தாழ முப்பத்தேழு. தம் வாழ்நாள் முழுவதையும் தம் தாய்நாடான நார்மண்டியில் அவர் கழித்திருந்தார். நார்மண்டியின் மீது அவருக்கு அளவிலாப் பற்றிருந்தது. அப்பற்றின் விளைவாக இங்கிலாந்தின் வரலாற்றில் பல சங்கடங்கள் விளைந்தன. அவர் தலைசிறந்த பக்திமான். எனவே அவர் மடாலய வரலாற்றுக் குறிப்பேடுகளின் கதாநாயகர் போல் கருதப்படுகிறார். வெஸ்ட்மின்ஸ்டர் திருச்சபையை முதல் முதலில் நிலைநாட்டியவர் எட்வர்டு அதிபத்தரேயாகும். அவர் காலமாகும் முன்னர்தான் அத்திருச்சபை கட்டி முடிக்கப்பட்டு1065ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் நாளில் வெஸ்ட்மின்ஸ்டர் திருச்சபையாக பெயர் பெறலாயிற்று.

எட்வர்டு பக்திமானுக இருப்பினும் ஒருவகையில் மிக எளிமை யானவர்; ஆட்சி பொறுப்பை உறுதியாக ஏற்று நடாத்தும் பகுத் தறிவும், திண்ணிய உள்ளமும் அற்றவர். எனவே காலப்போக்கில் ஆட்சிப்பொறுப்பு வலிமை குறைந்த அவருடைய கைகளை விட்டு வலிமைமிக்கவரிடம் சார்ந்ததில் வியப்பொன்றுமில்லையன்றோ? அவர் ஆட்சியின்போது நாட்டில் இரு கட்சிகள் இருந்தன. அரசரின் அன்புக்கும், பற்றுக்கும் பாத்திரர்களான ஒரு கட்சி யினர்; அவர்கள் அனைவரும் நார்மானியர்கள். தேசிய கட்சியின் தலைவராக விளங்கிய குட்வின் பிரபு இங்கிலாந்து குடிமக்களின் அன்புக்கும் பற்றுக்கும் பாத்திரமானவர். இரண்டாம் கட்சி குட்வின் பிரபுவின் ஆட்சி என சுருங்கச் சொன்னல் தவருகாது.

குட்வின் திறமைசாலி; கான்யூட் அவரை வெஸ்ஸெக்ஸின் பிரபுவாக்கியிருந்தார். எட்வர்டு அதிபத்தரின் ஆட்சிக்காலத்தில் குட்வினின் குடும்பச் சொத்துக்கள் பல்கிப் பெருகி வளர்ந்தன. வெஸ்ஸெக்ஸ் பிரபுவாயிருந்த குட்வினின் சொத்துகள் தற்போது தேம்ஸ் ஆற்றுக்குத்தென்பால் அமைந்திருந்த இங்கிலாந்து முழு மையிலும் ஆட்கொண்டிருந்தது. அவருடைய மூத்த மகன் ஸ்பெயின் செவர்ன் ஆற்றுப் பள்ளதாக்குப் பகுதிகளின் பிரபு வாக்கப்பட்டார்; இரண்டாம் மகன் ஹெரால்டு கீழ் ஆங்கிலி யாவின் பிரபுவாக்கப்பட்டிருந்தார்; இறுதியாக, அவருடைய மருமான் பியோர்ன் (Beorn) என்பார் மத்திய ஷயர்களான டெர்பி, நாட்டிங்ஹாம், லெஸ்டர், லிங்கன் போன்ற பகுதிகளின் பிரபுவாக்கப்பட்டிருந்தார். இவ்வேற்பாடுகளினுல் மெர்சியாவின் பிரபுவான லியோபிரிக் என்பானின் அதிகாரம் கணிசமான அள விற்குக் குறைக்கப்பட்டிருந்தது. இங்கிலாந்தின் பெரும்பகுதியில் குட்வின் குடும்பத்தினர் கொடிகட்டிப் பறந்தனர். எனில் மிகை யாகாது. எட்வர்ட் அதிபத்தர் எட்வினை வெறுத்தார்; எனினும் அவரிடம் அரசருக்கு அச்சமிருந்தது. அதன் விளைவாக எட்வர்டு அதிபத்தர் குட்வினின் மகளை மணந்துகொண்டார்.

நார்மானிய கட்சியின் தலைவராக இருந்தவர் இராபர்ட் என்பாராகும். ஜுமிஜஸ் என்ற பகுதியின் மதகுருவான அவரே இங்கிலாந்தின் முதன் நார்மானிய பிஷப்பாக பொறுப்பேற்றவர். அவரை இலண்டனின் பிஷப்பாகவும் பின்னர் கான்டர்பரியின் ஆர்ச்பிஷப்பாகவும் ஆக்கினர். ரிச்சர்டு ஸ்க்ராட் (Richard Scrot) என்னும் பெயர் கொண்ட மற்ருெரு நார்மானியர் இங்கிலாந்தில் முதல் கோட்டையைக் கட்டியவர். அக்கோட்டை நார்மானியரின் பர்க்கைவிட உயர்ந்ததாகக் கருதப்பட்டது. மேற்கூறிய பெரும் புள்ளிகளும், நார்மானிய குலத்துதித்த பெருங்குடி மக்களும்

எட்வர்டு அதிபத்தரின் நண்பர்களாகக் கருதப்பட்டனர். நார் மானியர்கள் தங்களை ஆண்டபோது ஆங்கிலேயர்கள் 'நல்லரசர் எட்வர்டு' என்று பிற்காலத்தில் அவரை நினைவுகூர்ந்தனர் என்பதை நோக்கும்போது வரலாற்றின் வேடிக்கைதான் என்னே! என்னே!! பிற்காலத்தில் ஆங்கில அரசராகக் கருதப் பெற்ற எட்வர்டு அதிபத்தர் நார்மானிய வெற்றியை இங்கிலாந்தில் நிலைநாட்டப் பாடுபட்டவர்களில் ஒருவர் என்பதை நாம் மறத்தல் கூடாது.

கி. பி. 1051ஆம் ஆண்டில் போலானுவைச் (Boulogne) சார்ந்த எஸ்டூஸ் கவுன்ட் என்பார் இங்கிலாந்திற்கு வருகை புரிந்தார். அவர் எட்வர்டின் சகோதரியின் கணவர். ஊர் திரும்பும் போது அவர் படுமோசமாக நடந்துகொள்ளவே அவருடைய துணைவர்களுக்கும் டோவரில் வாழ்ந்த மக்களுக்குமிடையே சச்சரவேற்பட்டது. இதைக் கேள்வியுற்றவுடன், குட்வின் பிரபுவை ஏவி டோவர் நகர்மக்கள் புரிந்த குற்றத்திற்குரிய தண்டனை கொடுக்குமாறு எட்வர்டு அரசர் ஆணையிட்டார். ஆனால் குட்வின் பிரபு அத்தகைய செயலைச் செய்ய முடியாதென அறவே மறுத்துவிட்டார். நார்மானியருக்கு சலுகை காட்டும் இச்செயலை அனைத்து பிரபுக்களும் செய்ய மறுத்துவிட்டனர். கவுன்ட் எஸ்டூஸ் தமக்கு யாரும் உதவ மறுத்ததை எண்ணி கடுங்கோபங்கொண்டு, அரசரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு, போய் கலகம் செய்யவும் ஆயத்தமானர், ஆனல் மெர்சியாவின் பிரபுவான லியோபிரிக்கும் நார்த்தம்பிரியாவின் பிரபுவான சீவார்டும் அரசருக்கு உதவ வேண்டுமென அணி திரண்டனர். குட்வினின் வளர்ந்து வரும் அதிகாரப் பெருக்கத்தைக் கண்டு பொருமையுற்றமையால்தான் அவ்விருவரும் அரசருக்கு உதவமுன் வந்தனர் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நாட்டில் கலவரம் மூளும் அச்சநிலை தோன்ற லாயிற்று. உள்நாட்டுக் குழப்பம் மூளும் என்று நம்பாதவராயினும் குட்வினும் அவர் குடும்பத்தாரும் பிளாண்டர்ஸுக்குத் தப்பி ஓடினர். குட்வின் இங்கிலாந்தில் இல்லாததைப் பயன்படுத்திக் கொண்ட நார்மானிய கட்சி வெற்றி பெற்றது. இத் தருணத்தில் தான் நார்மண்டியின் ஏழாம் டியூக்கான வில்லியம் இங்கிலாந் திற்கு வருகை தந்தார். அவர் எட்வர்டு அரசரின் தூரத்து உறவினர்.

**நார்மண்டி டச்சியின் வரலாறு:-** சேன் ஆற்று கழிமுகத்தில் ஒரு சில நார்ஸ் கடற்கொள்ளைக்காரர்களால் கி. பி. 910 ஆம் ஆண்டில் நார்மானிய ஆதிக்கம் தொடங்கலாயிற்று. அந்த டச்சியின் முதல் டியூக்கான ரோலோ என்பார் கிறிஸ்தவரல்லாதவர்,

அவரும் அவருடைய துணைவர்களும் ஒரு வகை நாடோடிகள் (adventurers). ஆனால் அவருடைய வாரிசுகள் பிரெஞ்சு நாட்டு கிறிஸ்தவ சமயத்தை ஏற்றெடுத்துக் கொண்டு பிரெஞ்சிய நாகரிகத்தையும் ஒப்புக்கொண்டனர். இருந்த போதிலும், நாஸ் மக்களுக்கே இயல்பான போரிடும் குணமும், கொடூரமும் அவர்களை விட்டபாடில்லை. நார்மானிய நைட் வீரர்கள் திறமை மிகுந்த போர்வீரர்கள்; அவர்களுடைய தலைவர் களும் எதையும் சாதிக்கும் சாமர்த்தியம் மிக்கவர்கள். வெற்றிவீரர் வில்லியம் இந்தப் பரம்பரையைச்சார்ந்தவரே. நார் மண்டியில்தான் பெக்கின் மதகுருவான லான்பிராங்க் என்பவர் சமய சீர்திருத் தத்தில் தீவிரமாகப்பணிபுரிந்தார். அவர் க்ளுனி மடாலய முறை யைப் பின்பற்றிக் கிறிஸ்தவ சமயத்தைத் திருத்த முயன்றார். நார்மானிய கட்டிடக்கலை சீர்சிறப்பு மிக்கதாய் இருந்தமையால் நார்மண்டியில் எழிலுறு திருச்சபைகளும், கோட்டை கொத்த ளங்களும் எழலாயின. பிற்காலத்தில் அந்த மாதிரியைப் பின் பற்றியே இங்கிலாந்திலும் நார்மானிய கட்டிடக்கலை செல்வாக்கு பெறலாயிற்று.

**டியூக் வில்லியம்:-** அக்காலத்தில் தலைசிறந்த மனிதர்களுள் ஒருவராக டியூக் வில்லியம் விளங்கினார். அவருடைய மூதாதை யரில் ஒருவரான டியூக் ரிச்சர்டு என்பாரின் உதவியைப் பெற்று ஹியூ காபெட் (Hugh Capet) என்பார் பிரான்ஸ் நாட்டின் அரச-ரானார் (987). நார்மானிய டியூக்குகள் ஹியூ காபெட்டின் வாரிசு களின் நெருங்கிய நண்பர்களாக விளங்கியவர்கள். ஆனால் வில்லியம் டியூக்கானபோது நார்மண்டி டியூக்குகள் தம் சொந்த பகுதியிலேயே தற்காப்பு மிக்கவராயும், வலிமை மிக்கவராயும் இருந்தமையால் பிரெஞ்சு அரசரின் உதவி அவருக்குத் தேவைப் படவில்லை எனலாம். பெரும்பாலும் அவர் ஒரு சுதந்தர அரச ராகவே திகழ்ந்தார். பிரெஞ்சு அரசரின் கட்டுப்பாடு பெய ரளவுக்குத்தான். படைமானியத் திட்டத்தைச் செயல்படுத்தும் வகையான அவரே தனிப்பெரும் தலைவராக விளங்கினார். எனவே சுதந்தரமாக செயல்பட விழைந்த பாரன் பிரபுக்களை சுதந்தரமாக இருக்க அவர் அனுமதிக்காமல் அவர் களைக் கடுமையாக நடத்தினார். கி பி. 1047 ஆம் ஆண்டில் இளமைப்பருவத்தினராய் இருந்தபொழுதே அவர் தம் பாரன் பிரபுக்களால் மூண்ட கலகத்தை அடக்கியவர். அப்பொழு திருந்தே அவருக்கு அவர்கள் மதித்து மரியாதை கொடுத்ததுடன் அவரை எதிர்க்கத் துணியாதவர்களாகவும் இருந்தனர். கிறிஸ்தவராகவும். பிரெஞ்சுக்காரராகவும் பயிற்சி பெற்றிருந்த வராயினும், அவரிடத்தில் கொடூரமும் கடுமையும் சில வேளை

களில் வெளிப்பட்டன.. அவர் திடவெடுத்த தோளினர். திறல் வலி மிக்கதீரர்; பார்வைக்கு கொடூரமானவர். துணிச்சலுக்கு பெயர்பெற்றவர்; கோபமே உருவகமானவர்; பழிக்குப்பழிவாங்கும் பண்பினர் என்று கிரீன் என்னும் வரலாற்றறிஞர் அவரை வர்ணனை செய்கிறார்,

வில்லியமும் எட்வர்டு அதிபத்தரும்:- அக் காலத்தில் ஆங்கில மன்றம் என்று கருதப்பட்ட இங்கிலாந்து அரண்மனைக்கு அவர் வருகை புரிந்தபோது, ஆங்கில அரசரை நார்மானியர் சூழ்ந்திருந் தனர். வாரிசுரிமை கொண்டாட மகப்பேறு பெருத எட்வர்டு தம் இராச்சியத்தின் வாரிசுரிமை வில்லியத்தைத்தான் சேருமென அப்போது உணர்ந்து கொண்டார். எனினும் வில்லியத்துக்கு அத்தகைய உரிமை இருப்பதாக அவரே அன்று எண்ணியிருக்க மாட்டார் ஆனல் வில்லியம் இங்கிலாந்திலிருந்து திரும்பிச் சென்றபோது நார்மானியருக்கெதிராக எதிர்ப்புணர்ச்சிகள் கிளம்பின. குட்வின் பெரும் கப்பற் படையொன்றுடன் தேம்ஸ் ஆற்றில் வந்து சேர்ந்தார். விட்டன் சபை அவரை மீண்டும் பிரபு வாக்கி அவருடைய பழைய பதவியில் இருத்தியது. அரசரை அண்டியிருந்த நார்மானிய குடிமக்கள் நாடு கடத்தப்பட்டனர்.

ஹெரால்டு:- குட்வின் பிரபு அதிகாரத்தை மீண்டும் பெற்ற சிறிது காலத்திற்குள் காலமானுர். அவருடைய மகன் ஹெரால்டு வெஸ்ஸெக்ஸின் பிரபுவானுர். எட்வர்டின் எஞ்சிய ஆட்சிக்காலப் பகுதியான பதின்மூன்று ஆண்டுகள் ஹெரால்டு குட்வினே இங்கிலாந்தின் உண்மையான அரசர் போன்று காணப்பட்டார். நாட்டிலிருந்த முக்கியமான பிரபுத்துவ பகுதிகள் அனைத்தும் அவரிடத்திலோ அன்றி அவருடைய சகோதரர்களிடத்தோ இருந் தன. எட்வர்டின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் ஹெரால்டுவிற்கு ஏற்பட்ட அசம்பாவிதமான சம்பவம் ஒன்றில் சிக்கிக் கொண்டார். நார்மானிய கடற்கரைப் பகுதியில் அவர் கப்பலில் பயணஞ் செய்த போது கப்பல் உடைய, அவரை வில்லியத்தின் மன்றத்திற்குக் கொண்டு சென்றனர். அவர் சிறை செய்யப்பட்டார் என்றல் மிகையாகாது. சிறையிலிருந்து தப்பிச் சுதந்திரமடைய ஹெரால்டு டியூக் வில்லியத்திற்கு உறுதிமொழியொன்றைக் கொடுக்க வேண்டியவரானுர். அவ்வுறுதிமொழி என்னவாயிருக்கும் என்பது சரியாக விளங்கவில்லை, ஆனல் அவர் வில்லியத்தின் அடிமையாக இருக்க இசைந்து அதற்கான உறுதிமொழியைக் கொடுத்தாரா அன்றிவில்லியத்துக்கு ஆங்கில அரியணைக்கிருந்த வாரிசுரிமையை ஒப்புக்கொள்வதாக வாக்களித்தாரா என்பது புலனாகவில்லை.

ஆனால் ஹெரால்டு தாம் கொடுத்த வாக்குறுதியை மீறினர் என்பது வரலாறு.

சீவார்டு காலமானபோது ஹெரால்டின் சகோதரர் டாஸ்டிக் நார்ந்தம்பிரியாவின் பிரபுவாக்கப் பெற்றார். டாஸ்டிக்கிற்கெதிராக கி. பி. 1065 ஆம் ஆண்டுவாக்கில் கலகமொன்று மூண்டது. அதன் விளைவாக டாஸ்டிக்கின் பிரபுத்துவம் மெர்சியாவின் பிரபுவான எட்வினின் சகோதரரான மார்க்கர் என்பாருக்கு மாற்றப்பட்டது. டாஸ்டிக் கடல் கடந்து ஓடினர். தம்மை ஆதரிக்கத் தவறிய ஹெரால்டை பழிவாங்கப்போவதாக அவர் உறுதி கூறிக்கொண்டு தப்பி ஓடினர். பழிக்குப் பழி வாங்க எண்ணிய டாஸ்டிக்கின் எண்ணம் ஈடேறவில்லை. அது அவருடைய உயிரைப்பறிக்க வழிவகை செய்தது. இங்கிலாந்து சுதந்தரம் பெற்றது.

# 16. ஸ்காட்லாந்து உருவாதல்

இந்த அத்தியாயத்தின் தொடக்கத்தில் இங்கிலாந்து மூன்று இராச்சியங்களாகப் பிரிக்கப் பெற்று படையெடுத்து வந்த டேனியரின் படையெடுப்புகளுக்கு இரையான வரலாற்றைக் கண்டோம். பின்னர் ஆல்ஃபிரட்டும் அவருடைய சந்ததியினரும் டேனியப் பகுதிகளை திரும்பக் கைப்பற்றி வெற்றிகண்டு இங்கிலாந்து முழுமையையும் ஓர் அரசரின் கீழ் ஒன்றுக இணைத்து அதை ஒரே இராச்சியமாக்கினர் என்பதையும் அறிந்துள்ளோம். ஸ்காட்லாந்து இராச்சியத்தின் கதையும் ஏறத்தாழ இங்கிலாந்தின் கதையைப்போலவே இருக்கிறதென்பதை இவ்வத்தியாயத்தில் காண்போம்.

ஸ்காட்லாந்து என்ற பெயர் பத்தாம் நூற்றுண்டு வரை பழக்கத்தில் இருக்கவில்லை. அது பின்னர் தோன்றிய பெயராகும்.

ஸ்காட்லாந்தை இயற்கையாக மூன்று பிரிவுகளாகப் பிரிப்பர். அவையாவன:- (1) மேட்டு நிலங்கள், (2) மத்திய தாழ் நிலங்கள், (3) தென் பாகத்திலுள்ள மலைப்பகுதிகள். கிளைடு ஆற்றின் கழிமுகத்திலிருந்து அபர்டீன்வரை வடமேற்காக கோடு ஒன்றினை இழுத்தால் அப் பகுதியில் மேட்டுநிலங்கள் அடங்கியிருத்தலைக் காணலாம். பிரிட்டிஷ் தீவுக் கூட்டத்தில் காணப்படும் உன்னதமான மலைக்காட்சிகளை இங்கு கண்டு களிக்கலாம். அபர்டீனிலிருந்து ஆர்ஷபர்வரை பரவியுள்ள பரந்த சமவெளிப் பிரதேசத்தை மத்திய தாழ்நிலங்கள் எனலாம். நவீனகால தொழிற்சாலைகளைக்கொண்ட ஸ்காட்லாந்து பகுதி இதுவேயாம். மூன்றும் பகுதியான தென்மலைப்பகுதிகள் பெரும் மலைப்பாங்கானவையாதலால் இங்கிலாந்திலிருந்து படையெடுத்துவரும் ஒருவராலும் ஸ்காட்லாந்தைக் கைப்பற்றுவது கடினம். கடற்கரை வழியாக ட்வீட் ஆற்றங்கரை நகரான பெர்விக்கிலிருந்து வந்தால் ஒருவேளை ஸ்காட்லாந்தைக் கைப்பற்றக் கூடும். ரோமானியர் போர்த் ஆற்று கழிமுகத்திற்குத் தென்பால் அமைந்த ஸ்காட்லாந்தைக் கைப்பற்றி அதை பிரிட்டன் மாநிலத்தின் பகுதியாக்க முயன்று தோற்றனர்.

ஸ்காட்டிய மக்கள் பிரிவுகள்:- ஆரும் நூற்றுண்டின் இடைகாலத்தில் ஸ்காட்லாந்தின் நிலை என்ன? அப்போது ஸ்காட்

லாந்து நான்கு விதமான மக்களின் தாயகமாக அது விளங்கியது. முதலாவது பிக்டுகள். போர்த் ஆற்றுக்கு வடபாலிலுள்ள பெரும் பாலான பகுதி பிக்டுகளின் கைவசமிருந்தது. இரண்டாவது மக்கள் கூட்டத்தினர் அயர்லாந்திலிருந்து குடியேறிய ஸ்காட்டியர் அவர்கள் ஆர்கைல்ஷயரிலும் அதனை அடுத்திருந்த தீவுகளிலும் குடியேறியவர்கள். அவர் தம் இராச்சியத்தை டால்ரியாடா (Dalriata) என்பர். மூன்றும் மக்கள் இனத்தவர் ஆங்கிலேயர். அவர்கள் வடகடலை அடுத்த கடற்கரைகளில் குடியேறியவர்கள் போர்த் ஆற்றுக்கும் ட்வீட் ஆற்றுக்கும் இடையில் அமைந்துள்ள லோதியன் மாவட்டத்தில் குடியேறியவர்கள் இவ் வாங்கிலேயர். தற்காலத்தில் ஸ்காட்லாந்தின் பகுதியாக அமைந்துள்ள இது அக்காலத்தில் பெர்னீஷியா இராச்சியத்தின் பகுதியாய் இருந்தது. இறுதியாக வந்தவர்கள் பிரிட்டானியர்கள். இவர்களை ஆங்கிலேயர் கிழக்கு கடற்கரையிலிருந்து விரட்டி அடித்திருந்தார்கள். ஸ்விட்த் கிளைடு அல்லது கம்பிரியா இராச்சியத்தை பிரிட்டானியர் கைப் பற்றி இருந்தனர். கிளைடு ஆற்றிலிருந்து மெர்சி ஆறுவரை இந்த கம்பிரியா இராச்சியம் பரவியிருந்தது. பிக்குகள், ஸ்விட்த் பிரிட்டனியர் ஆங்கிலேயர் ஆகிய நானுவித மக்களினங்களும் ஒன்றிணைந்ததுதான் ஸ்காட்லாந்து இராச்சியமாகும்.

**பிக்டுகளும் ஸ்காட்டியரும் ஒன்ருக இணைதல்:-** பிக்டுகளும் ஸ்காட்டியரும் ஒன்றிணைந்தது ஸ்காட்லாந்தின் ஐக்கியத்திற்கு முதற்படியாகும். எட்டாம் நூற்ருண்டின் இறுதியாண்டுகளில் படையெடுத்த நார்ஸ் மக்களின் படையெடுப்புகள் இந்த ஐக்கியத் தைத் துரிதப்படுத்தின. நார்ஸ் கடற்கொள்ளை கூட்டத்தினர் மடா லயங்களைக் குறிப்பாக கொள்ளையிட்டனர். இம்மடாலயங்கள் பெரும்பாலும் கடற்கரையிலோ அன்றிக் கடற்கரை அடுத்த ஊர் களிலோ கட்டப் பட்டிருந்தன. கி. பி. 795ம் ஆண்டில் நார்ஸ் கூட்டத்தினர் அயோனுவைச் சூறையிட்டனர். இறுதி யாக 839ஆம் ஆண்டுவாக்கில் பிக்டுகளின் அதிகாரம் சீர்குலையலாயிற்று. அவ்வாண்டில் நடைபெற்ற போரில் நார்ஸ் மக்கள் பிக்டுகளின் அரசையும் அவருடைய படைவீரர்களில் பெரும்பாலோரையும் கொன்று குவித்தனர். பிக்டுகளின் வீழ்ச்சி யைப் பயன்படுத்திக்கொண்ட டால்ரியாடாவின் அரசர் கென்னத் மக் ஆல்பின் என்பார் தம் இராச்சியத்தை 843ஆம் ஆண்டில் பிக்டுகளின் நாட்டுடன் இணைத்துக் கொண்டார். இவ்வாறு இணைக்கப்பட்ட இவ்வைக்கியம் பின்னர் ஒருபோதும் சிதற வில்லை.

**நார்ஸ் மக்கள் வெற்றி:-** கென்னத்தாலும் அவருடைய சந்ததி யினராலும் நார்ஸ் மக்களை முறியடிக்க இயலவில்லை. ஒன்பதாம்

நூற்ருண்டின் இறுதிக்குள் படையெடுப்பாளர்கள் ஆர்க்கனீஸ், ஷெட்லாந்து பகுதிகள், ஹெப்ரிடீஸ் மற்றும் ஸ்காட்லாந்தின் முக்கியப் பகுதியான வடபகுதி ஆகியவற்றைக் கைப்பற்றி மோரே யாநிலம் வரையிலும், தென் கடற்கரையில் மோரே கழிமுகம் வரையிலும் வெற்றி கண்டனர். அதே சமயத்தில் ஏனைய நார்ஸ் மக்கள் கிளேடு ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதியை வெற்றி கண்டு டம்பார்டன் என்னும் நகரைக் கைப்பற்றிக் கொண்டனர். அப்போதுதான் பிரிட்டிஷ் இராச்சியத்தின் தலைநகராக கார்லைல் நகரம் கருதப்படலாயிற்று.

பத்தாம் நூற்ருண்டின் தொடக்கத்தில் நார்ஸ் மக்களின் படையெடுப்புகள் நலியத்தொடங்கின. ஸ்காட்லாந்தில் அவர்கள் தாம் ஏற்கனவே கைப்பற்றிய பகுதிகளைத் தவிர்த்து பிறபகுதிகளை வெற்றிகாண முயலவில்லை. இங்கிலாந்தில் நார்ஸ் மக்கள் தோற்று வந்தார்கள். மூத்த எட்வர்டும் அவருடைய குமாரர்களும் அவர்களைத் தோற்கடித்தார்கள். அதெல்ஸ்டன் டேனியரை நார்த்தம் பிரியாவிலும், அவருடைய சகோதரர் எட்மண்டு அவர்களை ஸ்டார்த்கிளைடை விட்டும் விரட்டியடித்தனர். என்பதை ஏற்கனவே அறிந்துள்ளோம். தொலைவிலிருந்த ஸ்காட்லாந்தைத் தம்மால் காக்க இயலாதென்பதை உணர்ந்த எட்மண்டு, முதலாம் மால்கம் என்பாரை ஸ்காட்லாந்தின் அரசராக்கினுர். மால்கமே ஸ்டார்த்கிளைடின் அரசரானுர்.

ஸ்காட்டியர் தொடர்ந்து தென்பாலில் வெற்றிகண்டு வந்தனர் கி. பி. 962 ஆம் ஆண்டில் முதலாம் மால்கம் காலமான பிறகு இன்டுல்ப் அரசரானுர். அவர் எடின்பரோவைக் கைப்பற்றிக் கொண்டார். பதினொன்ரும் நூற்ருண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தின் மீது டேனியர் இரண்டாம் முறையாக படையெடுத்தபோது, ஸ்காட்லாந்தில் கலவரமொன்றும் மூளவில்லை. ஆர்க்னியின் நார்ஸ் பிரபுவான சிகூர்டு என்பார் காலமானபோது (1014) அவ ராண்ட ஸ்காட்லாந்தின் வடபகுதிகள் ஸ்காட்டிய அரசர்இரண்டாம் மால்கத்தின் ஆட்சிக்குட்பட்டன. (1005-1034) இரண்டாம் மால்கம் மற்ருெரு வகையிலும் சிறப்புப்பெற்றவர். லோதியன் மாநிலத்தை நார்த்தம்பர்லாந்து பிரபுவினிடமிருந்து கைப்பற்றி ஸ்காட்லாந்துடன் இணைத்தவரும் அவரே. இம்மாநிலத்தை கான்யூட் மீண்டும் கைப்பற்ற பெரும் முயற்சியில் ஈடுபட்டபோது அவரை கர்ஹாம் (1018) என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் முறியடித்து வெற்றி கண்டவரும் இரண்டாம் மால்கமேயாவார். கர்ஹாம் போருக்குப் பின்னர் இங்கிலாந்திற்கும்

ஸ்காட்லாந்திற்குமான எல்லை ட்வீட் ஆறாக இருக்க வேண்டு மென நிர்ணயிக்கப்பட்டது. அதே ஆண்டில் ஸ்டார்த்கிளைடின் அரசரான ஓவன் தி பால்டு (Owen the Bald) என்பார் காலமானார். அவர்தான் ஸ்டார்த்கிளைடை ஆண்ட பிரிட்டிஷ் அரசர்களில் இறுதியானவர். அவர் காலமானபோது அப்பகுதியின் அரசராக டன்கன் என்பார் முடிசூட்டிக் கொண்டார். அவர் மால்கத்தின் பேரரும் வாரிசுமாக ஸ்காட்லாந்தின் அரசரானவர். மால்கத்திற்குப் பின்னர் டன்கன் அரசரானபோது (1034) பிக்டு, ஸ்காட், நார்ஸ்மக்கள், ஆங்கில குடியேற்றவாதிகள் ஆகிய அனைவரும் ஒருங்கிணைந்து ஓரரசரின் கீழ் வந்தனர். எனினும் இந்நால்வகை மக்களும் பிரிக்கப்பட முடியாதபடி ஒருங்கிணைந்து ஐக்கியமடைய வில்லை என்பதையும் நினைவிற் கொள்வோமாக.

# 17. நார்மானியர் ஆட்சி

கி. பி. 1066ஆம் ஆண்டு எட்வர்டு அதிபத்தர் காலமானுர் எட்மண்ட் அயர்ன்சைடின் பேரரான எட்கார் அதலிங் என்பார் இங்கிலாந்தின் அரசுரிமையை வேண்டினுர். அதாவது எட்கார் எட்வர்டின் அண்ணன்பேரர். விட்டன்சபை அவருடைய அரசுரிமையை நிராகரித்து, ஹெரால்டு பிரபுவை இங்கிலாந்தின் அரசராகத் தேர்ந்தெடுத்தது. இவ்வுரிமையைக் கைவிட்டுவிடுவதாக ஹெரால்டு வில்லியத்திற்கு வாக்குறுதி கொடுத்திருந்தார் என்பதை ஏற்கனவே அறிந்துள்ளோம். ஹெரால்டு தாம்கொடுத்த வாக்குறுதியை மீறி இங்கிலாந்தின் அரச முடியை ஏற்றுக் கொண்டார்.

கி. பி. 1066 ஆம் ஆண்டு கோடைகாலத்தில் டியூக் வில்லியம் இங்கிலாந்தின் மீது படையெடுக்க ஆயத்தமானுர். இங்கிலாந்தின் அரசுரிமை ஹெரால்டைவிட அவருக்கே மிகுதியாக இருந்தது. முதலாவதாக, தம்முடைய வாரிசாக வில்லியம் வருவதாக எட்வர்டு அதிபத்தரே அங்கீகரித்திருந்தார். எனவே தம் உரிமையை நிலைநாட்டிக்கொள்ள வில்லியம் இங்கிலாந்து வந்தார். இரண்டாவதாக, ஹெரால்டை உரிமையைப் பறித்துக்கொண்டவரென்றும். வாக்குறுதியை மீறினர் என்றும் வில்லியம் குற்றஞ்சாட்டினுர். மூன்ருவது, அவர் இங்கிலாந்து வந்தபோது செயின்ட் பீட்டரின் கொடியை ஏந்தி வந்திருப்பதாகவும் போப்பாண்டவரின் ஆசி பெற்று வந்திருப்பதாகவும் கூறிக்கொண்டார். கான்டர்பரி ஆர்ச் பிஷப் ஸ்டிகாண்டு போப்பாண்டவருக்கு எதிரி. எனவே உண்மையான போப்பாண்டவர் ஆணையொன்றினைப் பிறப்பித்து, அதில் ஹெரால்டு அரசாட்சியைப் பறித்துக் கொண்டவரென்றும் இங்கிலாந்தின் நியாயமான அரசர் வில்லியமே என்றும் அறிவித்திருந்தார். மேற்கூறியகாரணங்களின் அடிப்படையில் ஹெரால்டை பதவியிலிருந்து நீக்குவதோடு, ஸ்டிகாண்டையும் கான்டர்பரி ஆர்ச்பிஷப் பதவியிலிருந்து விலக்கும் நோக்குடன் வில்லியம் இங்கிலாந்தின் மீது படை யெடுத்தார்.

ஹார்ட்ராடாவின் படையெடுப்பும் டாஸ்டிக்கின் கலகமும்: நார்மானியரது கப்பற்படை இங்கிலாந்தின்மீது படையெடுக்க

ஆயத்தமாக இருந்த ஏறத்தாழ அதே சமயத்தில் நார்வேயின் அரசரான ஹெரால்டு ஹார்ட்ராடாவின் கப்பற்படையும் இங்கிலாந்து நாட்டை ஆண்ட ஹெரால்டின் மீது படையெடுக்க ஆயத்தமாகிக் கொண்டிருந்தது. ஹெரால்டு ஹார்ட்ராடா என்ற இந்த வைகிங்கு ஏழடி உயரமுள்ள பருத்த உருவத்தினர். அவர் ஆர்க்டிக் பெருங்கடலிலிருந்து கான்ஸ்டான்டி நோபிள் வரை கடல்பயணம் செய்த தீரர். அவருடைய கப்பற்படையில் 300 துடுப்புக்கப்பல்கள் இருந்தன. அக்கப்பற்படை யார்க்ஷயரிலிருந்த அவுஸ் (Ouse) என்னுமிடத்தில் நின்றதும் படைகள் இங்கிலாந்தின் மீது கால்வைத்தன. (ஆகஸ்டு,1066). இவ் வேளையில் நாடுகடத்தப்பட்டிருந்த டாஸ்டிக் நாடுதிரும்பி இருந்தார். அவரும் ஹார்ட்ராடாவுடன் சேர்ந்து கொண்டார். இக் கூட்டுப்படையினர் நார்த்தம்பிரியா, மற்றும் மெர்சியா பிரபுக்களை யார்க் நகருக்கருகிலுள்ள ஃபுல்போர்டு என்னுமிடத்தில் (செப்டம்பர் 20.10.66) தோற்கடித்தனர். ஹார்ட்ராடா யார்க் நகரைக் கைப்பற்றினர். அவர்களை முறியடிக்கும் நோக்குடன் ஹெரால்டு தெற்கிலிருந்து வடதிசை நோக்கி விரைந்தார். படையெடுப்பாளர்களை ஹெரால்டு ஸ்டாம் போர்டு பிரிட்ஜ் என்னுமிடத்தில் படுதோல்வி அடையச்செய்தார் [1066ஆம் ஆண்டு செப்டம்பர் 25ஆம்நாள்) டாஸ்டிக்கும்,ஹார்ட்ராடாவும் கொல்லப்பட்டனர். மூன்று நாட்களுக்குப் பின்னர் நார்மண்டி வில்லியம் (செப்டம்பர் 28ஆம் நாள்) சஸ்ஸெக்ஸ் கடற்கரையில் பீவன்சி என்னும் ஊருக்கருகில் கரையிறங்கினர். வைக்கிங் ஹார்ட்ராடாவின் படையெடுப்பும் துரோகஞ் செய்ய விழைந்த சகோதரர் டாஸ்டிக்கையும் சந்திக்க ஹெரால்டு இலண்டனிலிருந்து யார்க்நகர் போகவேண்டியவரானர். கடும் போருக்குப்பின்னர் யார்க்கிலிருந்து இலண்டன் திரும்பினர். யார்க் நகருக்கும் இலண்டனுக்கும் இடைப்பட்ட 200மைல் தூரத்தை ஒன்பது நாளில் ஆங்கிலப்படை கடந்துவந்து பெரும் சாதனையொன்றைச்சாதித்தது. தமக்கு உதவி செய்யத்துணைப்படைகளுடன் புறப்பட்டு வருமாறு எட்வின் பிரபுவையும் மார்க்கர் பிரபுவையும் ஏவி விட்டு ஹெரால்டு தென் திசை நோக்கி விரைந்தார். ஆனல் இவ்விரு பிரபுக்களும் உதவி செய்ய முன்வரவில்லை.

**ஹேஸ்டிங்ஸ் என்னுமிடத்தில் வில்லியம்:-** கி. பி. 1066 ஆம் ஆண்டில் காணப்பட்ட சஸ்ஸெக்ஸ் இன்றைய சஸ்ஸெக்ஸைப் போன்று இருக்கவில்லை. ஹேஸ்டிங்ஸிலிருந்து ஈஸ்ட்போர்ன் வரை நீண்டு ஒரே மட்டமாகத் தென்படும் கடற்கரையோ அன்றி அதற்குப் பின்னல் உள்ள ஒரே மட்டப் புல்வெளியோ அப்போது இருக்கவில்லை. மாருக, அறுபட்ட கடற்கரை கழிமுகங்களில் பல் வேறு ஆறுகள் பாய்ந்து வருவதால் ஏற்பட்ட குடாக்களும்,

வண்டல்மண் படிந்த கழிமுகப் பகுதிகளும், அவற்றுக்குள்ளே கடத்தற்கரிய சதுப்பு நிலங்களும் கொண்டு சஸ்ஸெக்ஸ் திகழ்ந்தது. சதுப்பு நிலக்காடுகளைக் கடந்து வில்லியம் ஹேஸ்டிங்ஸை வந்தடைந்தார். அதை எளிதாகக் கைப்பற்றி அரண் செய்து கொண்டார். பிரெட் மற்றும் புல்வர்த்தி (Brede and Bulverhythe) ஆகிய ஆற்றுக் கழிமுகங்கள் அதனைச் சுற்றி யிருந்தமையால், ஹேஸ்டிங்ஸ் தீபகற்பம் போன்று தென்பட்டது. அதை வடதிசையிலிருந்து மட்டும் அணுக இயலும். எனவே வில்லியம் மிகப் பாதுகாப்பான இடத்தினைக் கைப்பற்றிக்கொண்டு ஆங்கில இராணுவத்தை எதிர்நோக்கி நின்றார். 1066ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 13ம் நாள் ஆங்கிலப் படைகள் வில்லி யத்தை எதிர் வந்து சேர்ந்தன. மலைப்பாங்கான இடமொன்றைத் தேர்ந்தெடுத்து ஆங்கிலப்படை தண்டு இறங்கியது. ஹெரால்டின் படைகளில் அரண்மனைப் பிரபுக்களும், வெஸ்ஸெக்ஸைச் சார்ந்த தேனர்களும் நிறைந்திருந்தனர். அவர்கள் தம் கேடயங்களை ஒன்றாகப் பிணைத்து கேடயச் சுவரினை எழுப்பி மலையின் நடுப் பகுதியில் பாதுகாப்பாக நின்றனர். அப் படையின் இருமருங்கிலும் வெஸ்ஸெக்ஸ் உழவர்கள் தத்தமக்குக் கிடைத்ததை ஆயுதமாக ஏந்திக் கொண்டு போருக்கு ஆயத்தமாயினர். வில்லியத்தின் படையில் வில்லாளிகளும், குதிரைப்படையினரும் இருந்தது அவருக்குப் பேருதவியாயிற்று.

**ஹேஸ்டிங் போர் 1066:** அக்டோபர் மாதம் 14ந்தேதி காலை. தம்முடைய நார்மானியப் படையை வில்லியம் மலைக் கெதிரில் கொணர்ந்து நிறுத்தி உடனே தாக்குவதெனத் தீர்மானித்தார். போர் நாள் முழுதும் நடைபெற்றது. நார்மானிய வீரர்கள் போர்ப்பரணி பாடிக்கொண்டு முன்னேறித் தாக்கினர். டெய்லிபர் (Taillefer) என்ற நார்மானியனே இப்போரில் களபலி யான முதல்வீரன்.

வில்லியத்தைத் தலைவராகவும், போப்பாண்டவரின் பதாகை யைத் தாங்கியும் வந்த நார்மானியப் படைகள் பள்ளத்தாக்கினைக் கடந்து மீண்டும் மீண்டும் ஆங்கிலேயரைத் தாக்கினர். பெரிய போர்க்கோடரிகளைத் தாங்கி நின்ற அரண்மனைப் பிரபுக்கள் பொருதுகொண்டே தம் கேடயச் சுவரை எச்சரிக்கையாகக் காத்து நின்றனர். நார்மானிய குதிரைப்படை ஆங்கில உழவர்படையைத் தாக்கியது. படைப்பயிற்சியும் கட்டுப்பாடும் அற்ற உழவர்ப்படை தீவிரமாகத் தாக்கிற்று. இருப்பினும் ஆங்கிலப் படையை அவர்

களால் முறியடிக்க இயலவில்லை. ஆனால் மாலை நேரத்தில் நார் மானியர் பின்வாங்குவது போன்று பாசாங்கு செய்தபோது,உழவர் படை அவர்களை விரட்டியடிக்க பின்தொடர்ந்து நாசமாகியது. நார்மானிய வில்வீரர்களும் குதிரைப்படையினரும் வெற்றிவாகை சூடினர். பின்னர் கேடயச்சுவருக்கு மேல் நோக்கி நார்மானிய வில்வீரர்களை அம்பெய்த வில்லியம் உத்தரவிட்டார். ஹெரால்டின் இரு சகோதரர்கள் (குர்த், லியோஃபின்-Gurth and Leofuine) போர்க்களத்தில் மடிந்தனர். கண்ணில் அம்பு பொத்தி போரில் ஹெரால்டும் உயிரிழந்தார். எனினும் அஞ்சாது ஆங்கிலப்படை கள் நார்மானியரை எதிர்த்து நின்றன.ஹெரால்டின் அரண்மனைப் பிரபுக்கள் அனைவரும் செத்து மடிந்தனர். தலைவரற்ற உழவர் படையை நார்மானியர் காடுகளுக்கு விரட்டியடித்தனர். போர்க் களத்திலே தீவிரமாக நின்று வில்லியத்தின் படைகள் இரவைக் கழித்தன.

கடைசி சாக்சானிய அரசரின் உடலை ஈடித் கண்டெடுத்து வால்தாம் திருச்சபையில் புதைத்தாள். அத் திருச்சபையை நிலை நாட்டியவர் ஹெரால்டேயாகும். ஹெரால்டு வீழ்ந்த இடத்தில், பிற்காலத்தில் வில்லியம் தாம் பெற்ற வெற்றியின் நினைவாக போர்க்களத் திருச்சபை என்ற மாதாக்கோயிலைக் கட்டினார்(Battle Abbey). அத் திருச்சபையில் ஹேஸ்டிங்ஸ் போரில் பலியான நார்மானியர், பிரெஞ்சியர், பிரிட்டானியர்,பிளமியர் ஆகியோரின் பெயர்களை ஏடுகளில் பொறித்து வைத்தார்.

ஹேஸ்டிங்ஸ் போரின் விளைவாக தமக்குப் பகைவர்களா யிருந்த ஹெரால்டையும் அவருடைய சகோதரர்களையும் வில்லி யம் அழித்து விட்டார். 'வெட்டொன்று துண்டிரண்டு' என்பது போல் ஆங்கிலேயரின் எதிர்ப்பினை ஒரே போரில் முறியடித்து வாகை சூடினார். வில்லியம் பதவிப்பித்தர்களான ஆர்ச்பிஷப் ஸ்டிகாண்டும்நிலையான கொள்கைப் பிடிப்பற்றவர்களான எட்வின் பிரபுவும், மார்க்கர் பிரபுவும் வெற்றி வீரர் வில்லியத்திற்கு அடங்கி நடக்க இசைந்தனர். எனினும் மானத்தைக்காக்க நின்ற ஆங்கில மக்கள் போரில் செத்து மடிந்தனர். அம்பெய்தாமல் இருந்திருப்பின் ஹெரால்டு அடுத்த நாளும் போரிட்டு இருக்கக் கூடும்; நார்மானிய டியூக்கைக் கடல் கடந்து ஓடுமாறு விரட்டியடித்தும் இருக்கக் கூடும்.

**முதலாம் வில்லியத்தின் முடிசூட்டு விழா:-** ஹேஸ்டிங்ஸில் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து இலண்டனைக் கைப்பற்றுவதே

தம் இலட்சியமாகக் கொண்டார் வில்லியம். தம் படைகளை வாலிங் போர்டிற்குக் கொணர்ந்த அவர், தேம்ஸ் ஆற்றைக் கடந்து பெர்க்ஹாம்ஸ்டெட் என்னுமிடத்திற்கு ஏகினர். இலண்டனை வட திசையிலிருந்து தாக்கினர் என்பது பொருந்தும். இங்கிலாந்தின் அரச முடியினை எட்மண்ட் அயர்ன்சைடின் பேரரான எட்கார் அதெலிங் என்பாருக்குக் கொடுப்பதென விட்டன்சபை ஏற்கனவே அழைப்பு விடுத்திருந்தபோதிலும், வெற்றி வீரர் வில்லியத்தை அரசராக அங்கீகரிப்பதென அச் சபை இணங்க வேண்டியதாயிற்று. முக்கிய பிஷப்புகளும், பிரபுக்களும் அதெலிங்கின் தலைமையில் பெர்ஹாம்ஸ்டெட் சென்று வில்லியத்திற்கு அடி பணிந்தனர். பின்னர் வெற்றி வீரர் இலண்டன் மாநகருக்குள் நுழைந்தார். கிறிஸ்துமஸ் நாளன்று வெஸ்ட்மின்ஸ்டர் திருச் சபையில் அவர் மன்னராக முடிசூட்டிக் கொண்டார். முடிசூட்டு விழா நிகழ்ச்சி நடைபெற்றுக் கொண்டிருந்தபோது ஆங்கிலேயர் துரோகம் செய்கிறார்கள் என ஐயுற்று அடுத்திருந்த வீடுகளைத் தீயிட்டுக் கொளுத்தினர். இப்படியாககுழப்பத்துக்கும்கலகத்திற்கும் இடையே, தம் புதிய குடிமக்களின் வீடுகளைத் தீக்கிரையாக்கி கொழுந்து விட்டெரியும் சுடரொளி சாட்சியாக வில்லியம் முடிசூட்டிக் கொண்டார்.

எனினும் இங்கிலாந்து முழுமையும் இன்னும் வெல்லப்பட வில்லை என்பதை மறக்கலாகாது. அடுத்த ஆண்டில் (1067இல்) எக்சிடாரிலும், யார்க்கிலும் கலகங்கள் மூண்டன. மெர்சியா, நார்த்தம்பிரியாவின் பிரபுக்கள் யார்க் கலவரத்திற்குக் காரணமா யிருந்தனர். அவர்கள் மன்னிக்கப்பட்டனர்; எனினும் அவர்கள் மீண்டும் (1069) கலவரத்தில் ஈடுபட்டனர். இக்கலவரமே வில்லி யத்தின் ஆட்சிக் காலத்தில் எழுந்த பெரும் கலகமாகும். டேனிய அரசர் ஸ்வெயின் இக் கலகத்தின் போது இங்கிலாந்தின் மீது படையெடுத்து கலகக்காரர்களுக்கு உதவினர். டேனியக் கப்பல் கள் ஹம்பர் ஆற்றுக்குள் நுழைந்தன. ஆனால் வில்லியம் அவரை விலைகொடுத்து வாங்கி விட்டார்.

வடபகுதியில் கலகம் மூளாது தடுக்க வில்லியம் படுபாதகச் செயலொன்றைச்செய்து பழிதீர்த்துக் கொண்டார். யார்க் நகரி லிருந்து டர்ஹாம் வரை பரவியிருந்த கழனிகள் அனைத்தையும் நாசப்படுத்தி, ஒவ்வொரு கிராமத்தையும் அழித்து ஒழித்தார். ஸ்காட்டிய எல்லையைக் கடந்து தப்பி ஓட முடியாத அப்பகுதி மக்கள் கொன்று குவிக்கப் பட்டனர். கால்நடைகளும் கொல்லப் பட்டன. வடதிசையைப் பாழாக்கிய இச்சம்பவத்தால் யார்க்ஷய ரிலிருந்து டர்ஹாம்வரை பாலைவனமாயிற்று என்று டூம்ஸ்டே

குறிப்பேடுகள் குறித்து வைத்துள்ளன. பாழ்படுத்தப்பட்ட இப் பகுதிகளில் மக்கள் குடியேற நீண்ட காலமாயிற்று.

வில்லியத்திற்கெதிராக மற்ருெரு ஆங்கிலக் கலகம் மூண்டது. அதற்குக்காரணமாயிருந்தவர் ஹெரிவேர்டு தி வேக் என்பாராகும். (1070). ஹெரிவேர்டு என்ற இவ்வாங்கில வீரர் பல மாதங்கள் வில்லியத்தை ஈலிதீவில் எதிர்த்து நின்ருர். அவருக்குத் துணையாக மார்க்கர் பிரபு நின்ருர். ஈல்தீவினைச்சுற்றி சதுப்பு நிலக் காடுகள் சூழ்ந்து நின்றன. ஆனல், நார்மானியர் சதுப்பு நிலத்தைக் கடக்க கரைப்பாலம் ஒன்றினைக் கட்டி அதன் மூலம் ஹெரிவார்டின் வலிவிடத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். ஹெரிவார்டு தப்பியோடினுர் (1072). சதுப்பு நிலக்காட்டு நீர்ப்பரப்புகளால் கூட கடைசி ஆங்கிலத் தலைவருக்கு புகலிடம் கொடுக்க இயலவில்லை. இனி வடக்கில் கலவரம் மூள வழியில்லை. ஹேஸ்டிங்ஸ், இலண்டன், மேற்கு, வடக்கு, கிழக்கு இப்படியாக இறுதியாக இங்கிலாந்து முழுமையும் வெற்றி காணப்பட்டது.

# 18 நிலமானியத் திட்டமும், மேனர்ப்பண்ணை முறையும்

இங்கிலாந்தில் நிலமானியத்திட்டம் வளர்ச்சியுற்றது நார் மானிய வெற்றி ஏற்பட்டபோதுதான் என்பது பொதுவான கருத்தாகும்.

நிலமானியத் திட்டத்தின் தொடக்கம்:- மேலை நாடுகளில் ரோமானியப் பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகு பல நூற்றுண்டுகள் படிப் படியாக வளர்ச்சியுற்று நிலமானியத்திட்டம் நிலைபெறலாயிற்று. போரும், பாதுகாப்பற்ற நிலையும் நீடித்த காலத்தில் நிலத்தை உழுது பயிரிட்டவன் நிலத்தை படைபலம் மிக்க ஒருவனுக்கு அடைக்கலமாக ஒப்படைத்து விடுவது தான் பாதுகாப்பான தாகும் என எண்ணினன். படைபலம் மிக்கவனை ஆண்டான் (Lord) என்பர். நிலத்தைப் பயன்படுத்த வேண்டுமானல் அது பாதுகாப்பானவரிடத்தில் இருப்பது முறை என்று அக் காலத்தில் நம்பினர். தாம் செய்யும் உதவிக்கு ஆண்டான் சில சலுகைகள் அல்லது உரிமைகளைப் பெற்றன். இம்முறை ஏற் கனவே சாக்சானிய இங்கிலாந்தில் குறிப்பாக டேனிய படை யெடுப்புகள் நிகழ்ந்த காலத்தில் கடைப்பிடிக்கப் பட்டு வந்தது. எட்கார் அரசர் நிலமற்றவன் ஒவ்வொருவனும் ஓர் ஆண்டா னுக்கு அடிமைப்பட்டு வாழவேண்டுமென்று பணித்திருந்தார்.

நிலமானியத்திட்டத்தின் வளர்ச்சி:- முதலாம் வில்லியம் நில மானியத்திட்டத்தை கண்டுபிடித்தவரோ அன்றி தொடங்கிய வரோ அன்று. ஆனல் நார்மானிய வழக்குரைஞர்களும், பிரபுக் களும் சாக்சானிய பழக்க வழக்கங்களை செயல்படுத்திய போது நிலஉரிமை முறையை விரிவாக்கியிருந்தனர். எனிலும் இம் முறை முழுமையாக வளர்ச்சியுற மேலும் ஒரு நூற்றுண்டு காலம் தேவைப்பட்டது. நிலமானியத் திட்டம் என்ற பெயர் பிற்கால வழக்குரைஞர்களாலும், வரலாற்று வல்லுநர்களாலும் கண்டு பிடிக்கப்பட்டதாகும். அக் காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு இது நன்கு புலனாகவில்லை என்பது வேடிக்கைதான்.

நிலமானிய திட்டத்தின் பொருளையும் செயல்பட்ட முறை தனையும் ஆராயப்புகுமுன். இரண்டு குறிப்புக்களைக் கவனத்தி




படம்—5

பிரிட்டனில் மேற்கொள்ளப்பட்ட நார்மானிய நிலமானிய திட்டம்

கொள்ள வேண்டும். முதலாவது, இடைக்காலத்தில் செல்வம், அதிகாரம் ஆகியவற்றின் மூலாதாரமாக நிலமே அமைந்திருந் தமையான், மனிதனுக்கும் நிலத்திற்குமிடையே நிலவிய தொடர் பின் அடிப்படையிலேதான் சமூக அமைப்பு நிறுவப்பட்டிருந்தது. மனிதன் செய்த தொழில் எத்தகையதாயிலும் சரி, சமூகத்தில் அவனுக்கிருந்த அந்தஸ்து நிலத்தையே அடிப்படையாகக்கொண் டிருந்தது. ஆண்டான், சுதந்தரக்குடிமகன் அல்லது விலென் என்ற சமூகப்பிரிவினைகள் அவனவனுக்கு உரிமையாகியிருந்த நிலத்தின் அளவினைப் பொருத்திருந்திருந்தது. பெரும்பிரிவு என்று கருதப்பட்டவர் பெரும் நிலப்பரப்புக்கு உரிமை உடையவராக இருந்தவரே. விலென் என்று கருதப்பட்டவன் நிலத்தை உழுது பயிரிட்டவன் எனினும் அவனுக்கும் நிலத்திற்கும் இருந்த உரிமை உழுது பயிரிடும் உரிமைதான். இரண்டாவதாக, ஆண்டான் களாயிலும் விலென்களாயிலும் எல்லா வகுப்பினருக்கும் ஆற்ற வேண்டிய சில கடமைகள் இருந்தன. அவர்கள் அனுபவித்த உரிமைகளுக்குக் கைம்மாருக ஆற்றப்பட்டன. அக் கடமைகள்.

கொள்கையளவில் நிலமனைத்தும் அரசனைச்சார்ந்தது. தற் காலக்கருத்துப்படி நிலச்சொந்தக்காரர்கள் அன்று இருக்கவில்லை. அதற்கு மாருக நிலத்தை வைத்திருந்தவர்களென்றும், மானிய தாரர்கள் என்றும் அவர்கள் கருதப்பட்டார்கள். நிலத்தை மானிய மாகப்பெறுவதற்கு முன்னர் மானியதாரர் ஆண்டான் முன் மண்டி யிட்டு இறை வணக்கம் செலுத்த வேண்டும் தம் கைகளை ஆண்டானின் கைகளோடு இணைத்துக் கொண்டு, தாம் அவருக்கு விசுவாசம் காட்டுவதாக உறுதி கூறவேண்டும். மேனர்ப்பண்ணை யிலிருந்து ஒரு பிடி மண்ணெடுத்து சில அறிகுறிகளுடன் மானிய தாரர் மானியம் பெற்றதற்குச் சான்ருகப் பெற்ருர். விசுவாசப் பிரமாணம் மானியதாரரை ஆண்டானுக்குக் கீழ்ப்படியவைத்த துடன், ஆண்டானுக்குச் சில மானியக்கடமைகளையும் கொடுத்து குறிப்பாக இராணுவச்சேவைகளைச் செய்யும் கடமைப்படுத்திய வராயிற்று.

ஆண்டானிடமிருந்து நிலத்தைப்பெற்றவர்கள் அடிமைகள் என்றுகருதப்பட்டனர். அரசனிடமிருந்து நேரிடையாக நிலத்தைப் பெற்ற பாரன் பிரபுக்களும் நைட்வீரர்களும் பிரதம மானியதார்கள் எனப்பட்டனர். அரசருக்குப் படைவீரர்களாகப் பயன்பட்டவர் களான பாரன் பிரபுக்களும், நைட்வீரர்களும் அரசருக்குப் போரிட்டதுடன், போர்வீரர்களைக் கொடுக்கக் கடமைப்பட்டவர் கள். ஆண்டொன்றுக்கு அவர்கள் நாற்பது நாட்கள் போர்ப்பணி செய்யக் கடமைப்படவர்கள். இப்படி பிரதம மானியதாரர்களாக 1400 பேர் இருந்ததாக டூம்ஸ்டே புத்தகம் குறிப்பிடுகிறது.

பிரதம மானியதாரரிடத்திலிருந்து நிலத்தைப் பெற்றவர்களை அவர்கள் அரசரிடமிருந்து நிலத்தைநேரிடையாகப் பெறுதவர்கள் துணை மானியதாரர்கள் என்று கூறுவர். டூம்ஸ்டே புத்தகம் துணை மானியதாரர்கள் 8000 என்று குறிப்பிடுகிறது. துணைமானியதாரர் தம் ஆண்டானுகக் கருதப்பெற்ற பிரதம மானியதாரருக்கு கடமைகளைச் செய்யக்கடமைப்படடவர். ஆனல் அவசியம் நேரிடும்போது அவர்கள் அரசருக்கும் இறைவணக்கம் செய்யக்கடமைப் பட்டவர்கள்.

உதவிப்பணம்:- இராணுவசேவை செய்வதுடன், அடிமை தம் (நிலமானிய பிரபுவுக்கு) ஆண்டானுக்கு ஒரு சில சமயங்களில் வரி அல்லது உதவிப்பணத்தைக் கொடுக்க வேண்டும். ஆண்டான் போரில் சிறைப்படுத்தப்பட்டபோது அவரை மீட்பதற்கான மீட்சிப்பணம் அத்தகைய உதவிப்பணத்தைச் சாரும். அதேபோன்று ஆண்டானின் மூத்தமகன் நைட்வீரராக்கப்படும் போதும், மூத்தமகளுக்குத்திருமணம் நடைபெறும்போதும் அத்தகைய உதவிப்பணத்தை அடிமை கொடுக்கக்கடமைப்பட்டவன். மூத்தபெண்ணின் திருமணத்தையொட்டி வசூலிக்கப்படும் உதவிப் பணம் பெரும்வரிச்சுமையாகக் கருதப்பட்டது. மற்ருெரு வகை வரியைத்துணை உதவிப்பணம் எனலாம் (Reliefs) தம் தந்தையின் மரணத்திற்குப்பின்னர் அவருடைய சொத்துக்கு உரிமை கொண்டாடும் அடிமை இத்தகைய துணை உதவிப்பணத்தைக் கொடுக்க வேண்டும். இத் துணை உதவிப்பணத்தைக்கட்டின பின்னரே அச் சொத்துக்கு அவர் உரிமை உடையராகக் கருதப்பட்டார். இத்துணை உதவிப்பணம் தற்கால மரணகால வரிப்பணத்தைப் (Death Duty) போன்றதாகும். ஆனல் இவ்வரி அரசாங்கத்திற்குத் தற்காலத்தில் செலுத்தப்படுகிறது.

சமூக அமைப்பின் அடுத்த நிலையிலும் அதே போன்று ஆண்டான் அடிமை முறை செயல் பட்டு வந்தது. ஆண்டான் நிலச் சொந்தக்காரர்; குடியானவன் அதை உழுது பயிரிட்டான். ஆண்டானின் கடமை சமூகத்தைப் பாதுகாப்பதாகும். அதற்குக் கைம்மாருக தம் உழைப்பையும், சாகுபடி செய்த பொருளில் ஒரு பங்கினையும் கொடுக்கக் குடியானவனை அடிமையினிடமிருந்து பெறுவது ஆண்டானின் உரிமையாகும். வேறு வகையாகக் கூறின ஆண்டானுக்கு இத்தகைய சொந்தப் பணிகளைச்செய்வது அடிமையின் கடமை. அதற்குப் பாதுகாப்பை ஆண்டானிடம் இருந்து பெறுவது அடிமையின் உரிமை எனலாம். அத்துடன் தன் சொந்த பயனுக்காக நிலத்தின் ஒருபகுதியைப் பயன் படுத்திக் கொள்ளும் பழக்கமும் எழுந்தது.

பதினான்காம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பியர்ஸ தி பிளௌமன் என்னும் கவிதையில் குடியானவனுக்கும் ஆண்டானுக்குமிடையே இருந்த உறவினை கீழ்க்கண்டவாறு குறிப்பிடப் பட்டுள்ளது.

''நான் என் உழைப்பையும் வியர்வையையும் கொட்டி,
நம் இருவருக்காக விதைப்பேன்.
என் வாழ்நாள் முழுதும் உம்முடைய அன்பினை மட்டும்
எதிர்பார்த்திருப்பேன்.
புனித திருச்சபையையும் என்னையும், நல்லவரல்லாத
கெட்ட மனிதர்களிடந்திருந்து என்னை அழிக்காமல்
பாதுகாக்கும் கடமை உங்களுடையதாகும்.''

மேனர்ப்பண்ணை:- இடைக்காலத்தில் நிலத்தைச் சொந்தமாக வைத்திருக்கத்தக்க அளவு முறையாக அமைந்தது மேனர்ப் பண்ணை முறையாகும். பண்ணைக்கு நார்மானிய மொழியில் மேனர்ப்பண்ணை என்று அழைப்பர். மேனர்ப்பண்ணையில் ஒரு முழு கிராமமோ, ஒன்று அல்லது ஒன்றுக்குமேற்பட்ட கிராமப்பகுதியோ அதில் சார்ந்திருந்தது நிலமானியத் திட்ட ஏற்பாடுகளைச் செயல்படுத்தும் தல அமைப்பாக நார்மானியர் மேனர்ப்பண்ணைகளைப் பயன்படுத்தினர். மேனர்ப்பண்ணைகளை மானியமாகப் பெற்ற பிரபுக்களின் (ஆண்டான்கள்) விருப்பப்படி பணியாற்ற எண்ணற்ற கிராமங்கள் காத்துக் கிடந்தன. நார்மானிய வெற்றிக்குப் பின்னர் சுதந்தரக் குடிமக்களாய் இருந்தவர்களின் நிலை மோசமடைந்தமையால், சாக்சானிய காலத்தைச் சார்ந்த தேனர்கள் பெருந்தொகையில் சுதந்திரமிழந்த விலென்களைப் போன்று பின்னுக்குத் தள்ளப்பட்டனர். தொடக்க காலத்தில் 'விலென்' என்ற சொல் கிராமப்புறத்தானையே சுட்டியது; காலப்போக்கில் அது அடிமைகளைக் குறிப்பதாக மாறியது.

கட்டாய உழைப்பு (Compulsory Labour):-மேனர்ப்பண்ணையை வைத்திருந்த ஆண்டான் தமக்கென்று ஒரு சிறு நிலத்தைச் சொந்த உபயோகத்திற்காக வைத்துக் கொண்டார். அதை டெம்ஸ்ன் (Damcen) (அதாவது பிரபுவுக்குச் சொந்தமான நிலம் என்று பொருள்) என்பர். கிராம மக்கள் இதில் உழுது பயிரிட்டார்கள்.விலென்கள் ஆண்டானுக்குச் செய்யும் கட்டாய உழைப்பு அவர்களை மற்றவர்களிடத்திலிருந்து பிரித்து காட்டும் தனிச் சிறப்புக் குறியாகும்.விலென் பண்ணையில் பிரித்து விடப்பட்டிருந்த நிலப்பகுதிகளைச் சாகுபடிசெய்யும் உரிமை பெற்றிருந்தான். உழுது சாகுபடியாகும் நிலத்தில் முப்பது ஏக்கர் நிலத்தை பண்ணையின் ஒரேயிடத்தில் கொடுப்பதற்கு மாறாக வெவ்வேறு இடங்களில்

சிதறுண்டு கிடக்குமாறு கொடுக்கப்பட்டது. அப் பண்ணையில் ஆண்டானுக்கு கட்டாய உழைப்பு நல்கும்போது விலெனுக்கு கூலி கிடையாது. அவன் தன் ஆண்டானுக்கு சில அடிப்படைப் பணிகளைச்செய்யக் கடமைப்பட்டவன். வார நாட்களில்செய்யும் கடும்பணியும், மிகைப்படியானவேண்டுகோள் பணி(Boon Work) என்பவையும் ஆதாரப்பணிகளாம்.ஆண்டானின் நிலத்தை உழுது பயிரிட வில்லன் ஒரு தொழிலாளியை வாரத்திற்கு மூன்று முதல் ஐந்துநாட்கள் பணியாற்ற அனுப்பவேண்டும் வில்லனே அல்லது அவனுடைய குடும்ப உறுப்பினர்களில் ஒருவரோ இப்பணியைச் செய்ய வேண்டும். இத்தகைய வாராந்தரப் பணியைத் தவிர குறிப்பிட்ட சில பருவங்களில் அவன் ஆண்டானுக்கு ஒரு சில வேண்டுகோள் பணிகளையும் செய்யக் கடமைப்பட்டவன்- குறிப்பாக அறுவடை காலப்பணி இவ்வகையைச் சார்ந்ததாகும். வேண்டுகோள் பணி செய்யும் நாட்களில் ஆண்டான் அடிமைக்கு ரொட்டியும் பீரும், சில சமயம் மீனும் உணவாகக் கொடுத்தார். வில்லன் சுதந்திரக் குடிமகனன்று. அவன் நிலத்தை உழுது பயிரிட வேண்டியவன். வில்லனைத் தற்காலத் தொழிலாளியுடன் ஒப்பிடக்கூடாது. ஏனெனில் வில்லன் தன் விருப்பப்படி தொழிலை மாற்றிக் கொண்டு வேறு தொழிலில் ஈடுபடவோ, கிராமத்தை விட்டு வெளியேறிச் செல்வதோ அன்றி ஆண்டானின் அனுமதி யின்றித் திருமணஞ் செய்து கொள்வதோ முடியாது. ஆனால் அவன் உயிரோடு வாழும் காலம் முழுதும், அவன் ஆண்டானுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்யும் வரை, அவனை அவன் சாகுபடி செய்த நிலத்திலிருந்து விரட்டி அடிக்க முடியாது. ஆண்டானால் கூட அப்படிச் செய்ய இயலாது. தன் சொந்தத் தானியத்தைக் கூட அவன் ஆண்டானின் அரவைச் சாலையில் தான் அரைத்துக் கொள்ள வேண்டும். அரைத்துக் கொடுக்க ஒரு குறிப்பிட்ட சதவீத தானியத்தை ஆண்டான் எடுத்துக் கொள்வான். ஈஸ்டர், பெந்தகோஸ்ட், கிறிஸ்துமஸ் போன்ற பண்டிகை நாட்களில் ஆண்டான் வில்லனிடத்திலிருந்து கோழி, முட்டை, வெண்ணெய் போன்ற பொருள்களைப் பெற்றான். இந் நிலமானிய முறையால் பல்வேறு பண்ணைகளைக் கொண்டிருந்த ஆண்டானுக்கு நாட்டைச் சுற்றிப் பயணம் செய்ய வாய்ப்பேற் பட்டது. ஒவ்வொரு பண்ணையிலும் ஆண்டானுக்கு ஏராளமான பொருள்கள் கிடைத்தன. அளவுக்கு மீறிக் கிடைத்த பொருள் களை மத்திய இடமொன்றில் சேமித்து வைத்தோ அல்லது தல சந்தைகளில் விற்றோ பொருள் சேர்த்துக் கொண்டான்.

வில்லன்களை விடத் தாழ்ந்த அந்தஸ்து உள்ளவர்களை போர் டார்கள் (Bordars) என்றும் கோட்டார்கள் (Cottars) என்றும்

கூறினர். இருப்பினும் அவர்களுக்குக் கூட நிலம் மானியமாகக் கொடுக்கப்பட்டிருந்தது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். பல சமயங்களில் ஆண்டானுக்கு எடுபிடி வேலைகளைச் செய்ய செர்ப்புகள் (Serfs) எனப்படும் அடிமைப் பணியாட்கள் இருந்தனர். அவர்களுக்கு நிலம் கொடுக்கப்படவில்லை. ஆண்டானுக்குப் பணிபுரிவது அவர்களது தொழிலாகும். தேனீ வளர்த்தல், வேலிகாத்தல், காடுகாத்தல், பன்றி வளர்த்தல் போன்ற சிறப்புப் பணிகளை அவர்கள் ஆண்டானுக்குச் செய்தனர். ஆனால் நார்மானிய வெற்றிக்குப் பின்னர் இந்த ‘செர்ப்’ அடிமைகள் மேனர்ப்பண்ணை அலுவலர்களாக மாறி கூலிவேலை செய்யும் பணியாட்களாயினர்.

மேனர்ப் பண்ணைக்குச் சொந்தக்காரராயிருந்த ஆண்டானிடம் பல்வேறு பிரிவினரான குத்தகைக்காரர்கள் இருந்தனர். அவர்களில் வில்லன்களே பெருத்த எண்ணிக்கையினர். ஏறத்தாழ முக்கால் பங்கினர். வில்லன்களைத் தவிர சுதந்திர குடிமக்கள் (Free men) என்போர் வெவ்வெறு அளவினைக் கொண்ட நிலங்களைக் கொண்டிருந்தனர். சுதந்திரக் குடிமகனுக்கு சட்டபூர்வமான பல உரிமைகள் இருந்தன. தம் உரிமையை அவர் ஆண்டானுக்கு எதிராகக்கூட வலியுறுத்திக் கொள்ள இயலும். அத்துடன் தம் நிலத்தை விற்கவோ, அதன் உரிமையை வேறு ஒருவனுக்கு மாற்றிக்கொள்ளவோ உரிமை படைத்தவர் அவர். ஆண்டானின் நிலத்தில் குறிப்பிட்ட அளவு அவர் உழுது பயிரிட வேண்டியிருந்தாலும், வாராந்தர பணி அவருக்குக் கொடுக்கப்படவில்லை.

ஆண்டானின் நிலமும், குடியானவனின் நிலமும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து கலந்திருந்தன. நிலம் துண்டு துண்டுகளாக நீண்ட சதுர வடிவத்தில் பிரிக்கப்பட்டிருந்தன. காலப் போக்கில் நிலவடிவங்கள் மாறியதும் உண்டு. பொதுவாக ஆண்டான் ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கலப்பைகளையோ வைத்திருந்தார். வில்லன் தம் கலப்பைகளையும் உழுமாடுகளையும் தம் மற்ற துணைவர்களுடன் பகிர்ந்து கொண்டார். எனவே நிலம் பொதுவாக உழுதுபயிரிடப்பட்டது என்பது பொருந்தும். எல்லாத்துண்டுகளிலும் அதேவகையான பயிரையே சாகுபடி செய்வது வழக்கமாக இருந்ததை இங்கு கவனிக்க வேண்டும். உழுது பயிரிடும்போது எட்டு மாடுகள் பூட்டிய கலப்பைகளால் நிலத்தை உழுதனர். குதிரைகள் வண்டி இழுக்கவும் சாலைபோக்குவரத்திற்கும் பயன்படுத்தப் பட்டன.

மேனர்ப் பண்ணையைக் கொண்டிருந்த கிராமம் மேனர்ப் பண்ணையின் சொந்தக்காரரான ஆண்டானுக்குப் பல வகைகளில் உதவி செய்தது. அத்துடன் கிராம மக்களுக்கு வாழ வகை செய்தன அக் கிராமங்கள். உழுது சாகுபடி செய்யத் தகுதி வாய்ந்த திறந்தவெளி உழுநிலங்கள் துண்டுதுண்டாகப் பிரிக்கப் பட்டிருந்தமையால் கிராமவாசிகள் பல்வேறு இடங்களுக்குச் சென்று பயிரிட வேண்டியவராயினர். ஆனால் அவர்களுக்குப் பயன்படுத்த பொது பசும்புல் தரைகள் இருந்தன. தாம்வளர்த்த பன்றிகளைக் காடுகளிலும், ஆவினங்களையும், வாத்துகளையும் ஊர்பொதுவிடத்திலும் மேய்த்துக் கொள்ளலாம்.இந்த ஊர் பொது விடம் கிராமத்தைச் சுற்றிலும் அமைந்திருந்தது. இவ்வுரிமைகள் அனைத்தும் பரம்பரையாக வருபவையாம். அத்தகைய ஊர்ப் பொதுவிடங்களைத் தற்காலத்தில் காண்பதரிது.

மேனரின் மன்றங்கள்:- ஒவ்வொரு கிராமத்தின் மையத்தில் மேனர்ப்பிரபுவின் வீடு இருந்தது. அவ்வீட்டின் மண்டபத்தில் தான் மேனரின்மன்றம் செயல்பட்டது. கிராமத்தாரிடையே மூண்ட சண்டை சச்சரவுகளையும் பிறபணிகளையும் அம் மன்றத்தில் தீர்த்துக் கொண்டனர். வெற்றிவீரர் வில்லியம் பழைய சாக்சானி யரது மன்றங்களான நூற்றுவர் மன்றத்தையும், ஷயர் மன்றத் தையும் அப்படியே வைத்துக் கொண்டார். கிரிமினல் வழக்கு களை அம் மன்றங்களே விசாரிக்கும் உரிமையை அவர் உறுதிப் படுத்தினர். மேனர் மன்றங்களின் தலைவர்களாக நார்மானிய பிரபுக்கள் நியமிக்கப்பட்டனர். அதன் நடப்பு முறைகள் மரபு வழியாக நிர்ணயிக்கப்பட்டன. மேனர் மன்றங்களில் தான் இறந்துபோன குத்தகைகாரரின் நிலத்தைத் திரும்ப அளிக்கும் முறை செயல்படுத்தப்பட்டது. மானியம் கொடுக்கப்பட்ட நிலம் பற்றிய விவரங்கள் இலத்தீன் மொழியில் தோல்சுருள்களில் எழுதப்பட்டன. ''ஆண்டானின் 2½ ஏக்கர் பரப்புள்ள நிலத்தை மானியமாகப் பெற்றிருந்து ஹென்றி கெல் (Henry Gell) இறந்து போனன். ஹென்றியின் மகன் அவனுடைய வாரிசாவான். அவன் மேனர் மன்றத்திற்கு வந்து வாரிசுரிமை வரியாக 12 பென்ஸ் கொடுத்தான்'' என்று இத்தோல் சுருள்கள் குறித்து வைத்தன. இத்தோல் சுருள்கள் பல நம் கைக்குக் கிடைத் துள்ளன. அவற்றிலிருந்து மேனர்ப் பண்ணையின் அன்றாட வாழ்க்கை முறையைக் கண்டறியலாம். மேனர் மன்றக் குறிப் பேடுகளில் மனிதர்கள் செய்த தவறுகளையும் அதற்கு அவர்கள் பெற்ற தண்டனைகளையும்கூட அறியமுடியும்.

செர்ப் அடிமைகளின் துயரமான வாழ்க்கை:- மேனர்ப் பண்ணையை உழுது பயிரிட்ட குடியானவன் செர்ப் என்னும்

அடிமை குளிர்காலத்தில் கூட வீட்டில் அடைந்து கிடக்க முடியாது. அவன் ஆண்டானைக்கண்டு அச்சம் கொண்டார். நாள்தோறும் ஒருஏக்கர் நிலத்தையோ அல்லது அதற்கு மேற்பட்ட நிலத்தையோ அவன் உழவேண்டும். கலப்பைகளில் மாடுகள் கட்டி நிலத்தை உழவேண்டும். அவன் மகன் மாடுகளைக் கட்டி ஓட்ட வேண்டும் மாடுகளுக்கு வைக்கோலும், நீரும் காட்ட வேண்டும். குப்பை கூளங்களை எடுத்தெறிய வேண்டும். அவன் கடினமாக வேலைகளைச் செய்ய வேண்டிய சுதந்திரமில்லா அடிமைபோல் கருதப்பட்டான். ஆட்டிடையனுக்கு கடினமான பணிகளே காத்துக் கிடந்தன. காலைவேளையில் ஆடுகளைமேய்க்கக் கொண்டு செல்ல வேண்டும். அவன் தன்நாய்களுடன் வெயிலிலும், குளிரிலும் ஆடுகளைக் காவல் காத்து நிற்க வேண்டும். இல்லையேல் ஓநாய்கள் ஆடுகளைக் கொன்றுதின்று விடக் கூடும்

வில்லன்கள் அழுக்கு நிறைந்த குடில்களில் வாழ்ந்தார்கள். அவை மாட்டுத்தொழுவம் போன்று காட்சியளித்தன. ஒவ்வொரு குடிலும் இரண்டாகப்பிரிந்திருந்தன. அவற்றில் ஒன்றில் வில்லனும் அவன் குடும்பத்தினரும் வசித்தார்கள்: மற்றொன்று கால்நடைகளுக்குப்புகலிடமாயின. புகைபோக்கியற்ற அச்சிறு குடில்களில் இன்பமாக வாழவோ, சமைக்கவோ, தூங்கவோ இயலாது. குறிப்பாக, குளிர்காலங்களில் அவர்கள் சொல்லொணாத்துயருக்கு ஆளாயினர். துயரைப்போக்கிக் கொள்ள குடிக்கவேண்டியவராயினர். அவர்கள் உறங்கிய கொட்டில்களில் மெழுகுவர்த்திகள் கூட இல்லாத அழுக்கேறிய இருட்டறைகள். போரும், தொத்து நோயும், பஞ்சமும், பிணியும் அவர்களைப்பீடித்திருந்த போதிலும் அவர்களுக்குப் பாதுகாப்பான வாழ்க்கையை ஈந்தது நிலமானியத் திட்டம். மேலும் அவர்களுக்கென்று பொதுவான கூட்டுவாழ்க்கை முறை ஒன்றிருந்தது. திருச்சபை விழாக்களையும், பருவமாற்றங்களையும் பயன்படுத்தி அவர்கள் வாழ்ந்தார்கள் என்றால் மிகையாகாது.

# 19. வெற்றிவீரர் வில்லியம்

இங்கிலாந்தின் மீது படையெடுக்கும் தம்திட்டத்திற்கு வெற்றி வீரர் வில்லியம் போப்பாண்டவரின் ஆதரவைப் பெற்றிருந்தார். ஹெரால்டைப் பதவி நீக்கம் செய்வதோடல்லாமல் ஆர்ச்பிஷப் ஸ்டிகாந்தையும் பதவியிலிருந்து விரட்டப்போவதாக அவர் உறுதியளித்திருந்தார் என்பதை ஏற்கனவே அறிந்துள்ளோம். எனவே இங்கிலாந்து வெற்றி காணப்பட்டவுடனே ஸ்டிகாந்து பதவியிலிருந்து நீக்கப்பட்டார் (1070). அவருடைய வீழ்ச்சியினையடுத்து பெரும்பாலான சாக்சானிய பிஷப்புகள் அனைவரும் வீழ்ந்தனர். அவர்கள் பதவியில் கற்றறிந்த திறமை வாய்ந்த நார்மானிய திருச்சபைக் குருமார்கள் அமர்த்தப் பெற்றனர். லாங்க்பிராங்க் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பாக தலைமையேற்றார். ஏற்கனவே பெக், கேன் என்ற நார்மானிய திருச்சபைகளில் தம் திறமையைக்காட்டி பெயர் புகழ் பெற்றிருந்த இத்தாலியர் அவர். வில்லியத்தின் 'நண்பர் ஒருவர்' எனக்கருதப்பட்ட லாங்க்பிராங்க், வில்லியத்துடன் இணைந்து நெருங்கிப்பழகி திருச்சபை சீர்திருத்தத்தில் கண்ணும் கருத்துமாயிருந்தனர்.

போப்பாண்டவர் ஹில்டிபிராண்ட்:- கி. பி.1073ஆம்ஆண்டில் ஏழாம் கிரகிரி என்ற பெயரில் போப்பாண்டவரான ஹில்டிபிராண்ட் ஒரு மாபெரும் சமயசீர்திருத்தக்காரர். மடாலயமுறை பல திருச்சபைப்பெரியார்களை ஈந்த தென்றாலும், போப்பாண்டவரான ஹில்டிபிராண்டைப்போன்று ஒருவரைக் காண்பதருமையிலும் அருமையாம். உருவத்தில் சிறியவரான ஹில்டிபிராண்ட் திக்குவாயர். இருப்பினும் அவர் பெற்றிருந்த பெயரும் புகழும் அவர் காலத்தில் வேறொருவராலும் பெற முடியாதவொன்று எனில் அது மிகையாகாது. பல்வேறு சமயசீர்திருத்தங்களைச் செய்து முடிக்க வேண்டுமென்னும் பேரார்வம் கொண்டிருந்தார் அவர். கிறிஸ்தவ சமூகத்தினர் அனைவரையும் ஒரு தலைமையின் கீழ் இணைத்துப் பிணைக்கும் அரும் கருவியாக போப்பாண்டவர் பதவி இருப்பதை அவர் அறிந்துணர்ந்தார். அப்படிப்பட்டவரை பூவுலகில் இருந்த அரசர்களும், ஆட்சியாளர்களும் கீழ்ப்பணிந்து நடக்கக்கடமைப் பட்டவர்கள் என்பது அவரின்துணிவு. அவருடைய திட்டங்களைச்

செயல்படுத்த முயன்றபோது அவர் பேரரசருடன் கடுமையாக மோதவேண்டியவரானார். அதன் நிமித்தமாக அவர் புனிதப்பெரு நகரான ரோமாபுரியிலிருந்து இறுதியாக விரட்டப்பட்டார். 'நான் நீதியையும் நேர்மையையும் நேசிக்கிறேன், அநீதியை வெறுக்கிறேன். எனவே நான் நாடுகடத்தப்பெற்று இறக்கிறேன்' என்று கூறினார் அவர்.

ஹில்டிபிராண்டின் சமயசீர்திருத்தங்களில் சிலவற்றைச் செயல்படுத்துமாறு வெற்றிவீரர் வில்லியம், லாங்க்பிராங்கைத் தூண்டினார். அச்சீர்திருத்தங்களில் குறிப்பாக திருச்சபை குருமார்கள் திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரிகளாக இருப்பதை ஆதரித்தார். ஏற்கனவே திருமணமாகியிருந்த சமய குருமாரை லாங்க்பிராங்க் தம் மனைவியை விட்டு விடவேண்டும் என்றுவலியுறுத்தவில்லை என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். சாதாரண நீதிமன்றங்களிலிருந்து சிறப்பான திருச்சபை நீதிமன்றங்களைப் பிரித்தார் வில்லியம். சாக்சானியரது காலத்தில் பிஷப்பும், ஏர்ல் பிரபுவும்-அல்லது பிஷப்பும் ஷெரீப்பும்-ஷயர் மன்றத்தில் ஒன்றாகத் தலைமை தாங்கினர். அப் பதவியை வகித்த இருவரும் ஒன்றிணைந்து சமய குருமாராக இல்லாத கிறிஸ்தவர்களுக்கும், திருச்சபை குருமார்களுக்கும் நீதி வழங்கினர். அக்காலத்திலிருந்து புதியதாக எழுந்த திருச்சபை மன்றங்களில் பிஷப்போ அல்லது அவருடைய அதிகாரிகளோ திருமணங்கள், உயில்கள் போன்றவற்றின் மீதெழுந்த சட்டரீதியான அலுவல்களை ஆராய்ந்தனர். குறிப்பாக தார்மீக வழக்குகளையும் திருச்சபை க்கட்டுப்பாடுகளைக் குறித்தும் அவர்கள் அதிகக் கவனம் செலுத்தினர்.

**முதலாம் வில்லியமும், போப்பாண்டவரின் கோரிக்கைகளும்:** ஹில்டிபிராண்டின் கோரிக்கைகள் பலவற்றை வில்லியம் அனுமதிக்க மறுத்தார். போப்பாண்டவப் பெருமகனாரின் மானியமாக இங்கிலாந்து கருதப்படவேண்டும் என்ற கோரிக்கையை அறவே ஏற்க மறுத்தார் வில்லியம். 'நானோ, என் முன்னோர்களோ உங்களை ஏற்று உங்களுக்கு ஒருபோதும் விசுவாசபிரமாணம் எடுத்துக் கொள்ளவில்லையாதலால் நானும் எடுத்துக் கொள்ளவில்லை; எடுத்துக்கொள்ளவும் மாட்டேன்' என்று முழங்கினார் வில்லியம். இங்கிலாந்து அரசருக்கெதிராக திருச்சபை குருமார்கள் ரோமாபுரிக்கு முறையிடுவதையோ அன்றியும் தம்முடைய அனுமதியின்றி போப்பாண்டவர் மன்றத்திற்கு மேல் முறையீடு செய்வதையோ பற்றிய உரிமையை வில்லியம் மறுத்தார்.

**பதவியேற்கும் சடங்கு** (Investiture) :- ஆபட் குருமார்களும் பிஷப்புகளும் அரசருக்கு முன்னரே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனவும் வில்லியம் வலியுறுத்தினர். புனிதப் பதவியேற்கும் சடங்கின்போது கொடுக்கப்படும் மோதிரம், சிலுவைக்கோல் (Crozier) போன்ற சின்னங்களைத் தொடர்ந்து தாமே அளித்து வந்தார். ஆனால் ஹில்டிபிராண்ட் பதவியேற்கும் போது வழங்கப் பெறும் இச்சடங்குச் சின்னங்களைச் சமயகுருமார்கள் திருச்சபையினரின் கைகளிலிருந்தே பெறவேண்டுமென உரிமை கொண்டாடினர். பிற்காலத்தில் பேரரசர் நான்காம் ஹென்றிக்கும், பின்னர் முதலாம் ஹென்றிக்கும் ஆர்ச்பிஷப் ஆன்ஸ்லெம் அவர்களுக்கிடையே மூண்ட சச்சரவிற்கு இப் பிரச்சினையே காரணமாயிருந்தது.

வில்லியம் திருச்சபை விவகாரத்தில் மேற்கொண்ட சீர்திருத்தங்கள் சீரிய விளைவுகளை ஏற்படுத்தின. அதன் பயனாக அவருடைய வாரிசுகள் தீர்க்க முடியாத பிரச்சினைகளுக்குள்ளாயினர். அவருடைய ஆட்சிக் காலத்திலிருந்து இங்கிலாந்து நிலமானியத் திட்டத்தோடும், கத்தோலிக்கக் கிறிஸ்தவ சமயத்தோடும் நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டியதாயிற்று. க்ளூனியை முன்மாதிரியாகக்கொண்டு மடாலய வாழ்க்கை முறையும் சீர்திருத்தப்படலாயிற்று. கல்வித் துறையிலும், கட்டிடக் கலையிலும் புதிய சகாப்தம் தொடங்கிற்று. அதன்பயனாக நாட்டில் அழகான மடாலயங்களும், கவின்மிகு திருச்சபைக் கட்டிடங்களும் பையப் பைய கட்டப் படலாயின. ஹில்டிபிராண்டிடம் நட்புறவு கொண்டிருந்தபோதிலும், வில்லியம் திருச்சபை விவகாரத்தில் ஓரளவு சுதந்திர நிலையை வலியுறுத்தினர். இத் தன்மை இங்கிலாந்து திருச்சபையின் சீரிய அம்சங்களில் ஒன்றாகத் தொடர்ந்து நீடித்தது.

அக்காலத்தில் அவருடைய இராச்சியத்தில் முதலாம் வில்லியம் வலிமைமிக்க அரசராக விளங்கினர். அதற்குக் காரணமிருந்தது. நிலமானிய திட்டத்தால் விளையக்கூடிய பயங்கர அபாயங்களிலிருந்து அவர் நாட்டைக் காத்தார். அவ்வபாயங்கள் யாவை என்பதைக் காண்போமாக.

**நிலமானிய திட்டத்தால் ஏற்பட்ட ஆபத்துக்கள்**:- நாட்டிலிருந்த நிலத்தின் பெரும்பாலானவற்றை அரசர் தம் பாரன் பிரபுக்களுக்கு மானியமாகக் கொடுத்ததில் ஓர் இடர்ப்பாடிருந்தது. அவர்களிடத்திலிருந்து அரசர் பல்வேறு தொண்டுகளைப்பெற உரிமைபெற்றிருந்தார் எனினும் அவ்வுரிமையை நிலைநாட்டிக் கொள்ளும் வலிமையைபெற முடியாதவராய் இருப்பின் ஆபத்

தன்றே? பாரன் பிரபுக்களும் நைட்வீரர்களும் ஆயுதந்தாங்கும் உரிமை பெற்றிருந்ததும் ஆபத்தில் முடியக்கூடிய அதிகாரங் களாகும். இதன் விளைவாக தனிப்பட்ட போர்கள் ஏற்படும் சாத்தியக்கூறுகள் இருந்தன. பலவீனர்களான அரசர்களின் ஆட்சியில் இத்தகைய ஆபத்துகள் நிகழ்வது இயற்கையாகும். எடுத்துக்காட்டாக ஸ்டீபன் காலத்தில் அப்படித்தான் நிகழ்ந்தது அவனைவிட வல்லமைமிக்க தலைவன் இல்லையாதலால் ஆயுதந் தாங்கிய பாரன்பிரபு அச்சத்தைத் தரக்கூடிய அடிமையாவான் அன்றே?

நிலமானிய திட்டம் அரசினை சீர்குலைக்கக் காரணமாயிருந்தது மற்றுமொரு ஆபத்தாகும். எடுத்துக்காட்டாக, பிரான்ஸ் நாட்டில் வெற்றிவீரர் வில்லியம் இருந்த காலத்தில் நாடு முழுதும் பனி ரண்டு அல்லது இன்னும் அதிகமான பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டு ஒவ்வொரு நிலமானியமும் ஒரு டியூக் அல்லது கவுன்டினால் ஆளப்பட்டது. அவர்களில் வில்லியமும் ஒருவர். இத்தகைய டியூக்குகளும், கவுன்டுகளும் அரசரின் ஆணைக்குட்படாத சுதந்திர மானவர்கள்போல் இருந்தனர். அவர்களின் நிலமானியங்கள் வாழையடிவாழையாக மரபு வழிவந்த வாரிசுகளுக்குச் சென்றன. அவர்களின் கடமைகளும் ஏட்டளவில்தான் இருந்தன. இத்தகைய சூழலில் அரசரின் அதிகாரம் பொய்மைபோன்று காட்சியளித்தது. இத்தகைய சூழ்நிலைதான் எட்வர்டு அதிபத்தரின் கால இங்கி லாந்தின் தன்மையாக இருந்தது.

**நார்மானிய பிரபுக்களும் முதலாம் வில்லியமும்:-** பிரான்ஸ் நாட்டில் இருந்த பிரபுக்கள் அரசருக்கு விசுவாசப்பிரமாணம் செய்திருந்தபோதிலும், அரசர் அவர்கள் விவகாரத்தில் தலை யிடாமையான், அவர்கள் பெரும்பாலும் சுதந்திரமான பிரபுக்களை போல் இருந்தன. ஆனால் இங்கிலாந்தில் அவர் அரசரானபோது அத்தகைய சூழ்நிலையை விரும்பவில்லை. உண்மையான அரசர் போன்று, அரச அதிகாரத்தை வலியுறுத்தி நிலைநாட்டிக்கொள்ள முயன்றார். அதன் மூலம் நிலமானியம் பெற்ற பிரபுக்களின் அதிகாரத்தை குறைக்க முற்பட்டார். எனவே ஹெரால்டு அரச சருக்கு உதவியாக நின்று போரிட்ட பிரபுக்களின் நிலங்கள் அனைத்தையும் அவர் பறிமுதல் செய்தார். ஹெரால்டுக்கு உதவி செய்ய முயன்றவர்கள் எனஐயப்பட்டவர்களுக்கும் அதே கதிதான் ஏற்பட்டது. அப்படி சந்தேகப்பட்டவர்களில் எட்வின் பிரபுவும் மார்க்கர் பிரபுவும் முக்கியமானவர்கள். அவர்களுடன் எண்ணற்ற சாக்சானிய தேனர்களும் சந்தேகத்திற்கு ஆளாகவே, இங்கிலாந் தில் அவர்களுடைய நிலங்களில் பெரும்பகுதியை வில்லியம்

பறித்துக்கொண்டார். ஆனால் அவரை பிறிதொரு பிரச்சினை குறுக்கிட்டது. வில்லியத்தினிடம் ஏறத்தாழ ஐயாயிரம் நோமானிய பிரபுக்களும் ஏனைய நைட்வீரர்களும் இருந்தனர். அவர்களுக்கு நிலம் தேவைப்பட்டது. அரசரால் சாக்சானிய பிரபுக்களின் நிலங்களைப் பறிமுதல் செய்யப்பட்டபோது அந் நிலங்களைக் கவர நார்மானிய பிரபுக்கள் விரும்பினர். அவர்களில் ஒரு சிலர் அரசரின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள்; மற்றவர்களை அவர் நம்ப வில்லை. காலம்தான் அவர்களின் போக்கினைத்தீர்மானிக்கும் என்று கருதப்பட்டது. அடுத்து வந்த நான்கு நூற்றாண்டுகளின் வரலாற்றில்அரசருக்கும் அவர்தம் பிரபுக்களுக்குமிடையே நிலவிய தொடர்புகளே சிறப்பிடம் பெறுகின்றன.

**மேனர்ப் பண்ணைகள்:-** மேனர்ப்பண்ணைகளை மானியமாகப் பெற்றிருந்த பாரன்பிரபுக்கள் அவற்றை ஒரே இடத்தில் பெறுமல் இங்கிலாந்தின் பல்வேறு பகுதிகளில்சிதறுண்டு பெற்றிருந்தார்கள். இப்படி சிதறிய நிலையில் பெற்ற நிலங்கள் வேண்டுமென்றே பிரிக்கப்பட்டு கொடுக்கப்பட்டன என்பதைவிட சந்தர்ப்ப சூழ் நிலை காரணமாக கொடுக்கப்பட்டன என்பது பொருத்தமுடைய தாகும். வில்லியம் இங்கிலாந்தின் அரசரானபோதே ஆங்கிலந் தேனர்களுக்கு கிட்டியிருந்த நிலங்கள் தாறுமாருகக் கொடுக்கப் பட்டிருந்தன. அத்தகைய நிலங்களை ஆங்கிலத் தேனர்களிட மிருந்து பறிமுதல் செய்து நார்மானிய நைட்களுக்குக் கொடுக்கப் பட்டன. எனினும் வெஸ்ஸெக்ஸ், நார்த்தம்பிரியா போன்ற பெரு இராச்சியங்களை அவர் மீண்டும் நிலைநாட்ட அனுமதிக்க வில்லை. இந்த இரு இராச்சியங்களும் கான்யூட் அரசராக இருந்த போதிலும், எட்வர்டு அதிபத்திரின் காலத்திலும் நீடித்திருந்தன. ஆனால் தனிப்பட்ட மனிதர் ஒருவர் பெரும் மாநிலங்களுக்கு அதிபதிகளாய் இருப்பதை வில்லியம் விரும்பவில்லை. இந்த விதி முறைக்கு உட்படாத சிலர் இருந்தார்கள். அவர்களை அப்படிவிட்டு வைத்தற்கு அவர் தம் குடும்பத்தொடர்புகளோ அல்லது எல்லைப் புறப்பாதுகாப்போ காரணமாயிருந்தது. தம் ஒன்றுவிட்ட சகோதரர் மார்ட்டெயினைச் சார்ந்த இராபர்ட் என்பாருக்கு கார்ன்வால் முழு மையையும் டெவன், டோர்செட் போன்ற பெரும் பண்ணைகளை யும் அவர் கொடுத்தார். அப்படிக் கொடுத்த நிலமானியத்தைக் குறித்து அவர் வருத்தப்பட வேண்டிய அவசியமும் இருக்கவில்லை. தம் மற்றொரு ஒன்று விட்ட சகோதரரான ஓடோ என்பாருக்கு கென்ட்பிரபு என்ற பட்டதைக் கொடுத்தார். ஓடோ பேயாக்ஸின் பிஷப்பாகவும் இருந்தவர். கென்டின் பெரும்பாலான நிலப்பகுதி கள் அவருக்குக் கொடுக்கப்பட்டன. ஆனால் ஓடோ நன்றி

மறந்தவர்களில் முதல்வராகக் கருதப்பட்டவர். அதன்விளைவாக வில்லியம் அவரைக் கைது செய்து சிறையிலடைத்தார் (1082). அவருடைய நிலங்களனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டன. அதே போன்று அரச குடும்பத்திற்குச் சொந்தமாயிருந்த ஏனைய நார்மானிய குடும்பத்தினரும் கணிசமான பண்ணைகளைப் பெற்றிருந்தனர்.

**வேல்ஸ் எல்லைப்புறம்:-** வேல்ஸ் எல்லைப்புறத்தைக் காக்கும் பொறுப்புடன், செஸ்டர், ஷ்ரூஸ்பரி, ஹெரிபோர்டு என்னும் மூன்று பிரபுத்துவங்கள் ஏற்படுத்தப்பட்டன. இம்மூன்று பிரபுக் களும் பெரும் அளவிலாப் பண்ணைகளைப் பெற்றிருந்த தனி மனிதர்கள். ஹெரிபோர்டு பிரபுத்துவம் வில்லியம் பிட்ஸ் ஆஸ்பன் என்பாருக்குக்கொடுக்கப்பட்டது; அவர் வெற்றிவீரர் வில்லியத்தின் நெடுநாளைய நண்பர். ஆனல் பிட்ஸ் ஆஸ்பர்னின் மகன்ரோஜர் டி பிரிட்டியூல் என்பார் 1078ஆம் ஆண்டில் கலகம் செய்ததன் நிமித்தமாக அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்த பிரபுத்துவத்தை இழக்க வேண்டியவரானுர். அதற்குப் பின்னர் அது திரும்பக் கொடுக்கப்படவேயில்லை. ஷ்ரூஸ்பரிக்கு, பின்னர் அதே கதிதான் ஏற்பட்டது. வில்லியம் பறிமுதல் செய்யாத ஒரே ஒரு ஆங்கிலப் பிரபு வால்தியோப்ஃ என்பாராகும். அவர் நார்த்தாம்டன் பிரபு என்றும் அழைக்கப்பட்டார். ஆனல் அவரையும் பின்னர் கலக மொன்றில் சம்பந்தப்படுத்தி 1076ஆம் ஆண்டில் சிரச்சேதம் செய்தார் வில்லியம். டர்ஹாம் பிரபுத்துவம் பிறிதொரு பெரும் நிலமானியப் பகுதியாகும். அங்கு வாழ்ந்த பிஷப்புக்களே ஸ்காட் டிய எல்லைப்புறக் காவலர்களாக இருந்தனர்.

**நில அளவு ஆய்வு:-** வில்லியத்தின் ஆட்சிக்கால இறுதியில் அவர்மேற்கொண்ட இருநடவடிக்கைகள் நிலமானியப்பிரபுக்களின் அதிகாரத்தை மேலும் குறைக்க வகை செய்தது. கி. பி. 1085 ஆம் ஆண்டு குளிர்காலத்தில் அரசர் கிளஸ்டரில் தங்கியிருந்தார். அங்கு நடைபெற்ற பெரும் கூட்டமொன்றில் அவர் தம் விட்டன் சபை உறுப்பினர்களுடன், மாறிய நிலங்கள் பற்றியும், அவற்றை வைத்துக் காத்தவர்களின் நெறிமுறைகளைப் பற்றியும், அப்பண்ணை யில் வாழ்ந்து வந்தவர்களைப் பற்றியும் ஆழ்ந்து சிந்தித்துப் பேசினுர். பின்னர் அவர் இங்கிலாந்து முழுமையிலும் அதனைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்க ஒவ்வொரு ஷயருக்கும் தம் ஊழியர்களை அனுப்பினுர். ஒவ்வொரு பண்ணையின் மதிப்பையும் ஆய்ந்தறிந்து அரசருக்குச் சொந்தமான வரியை வசூலிக்கும் சமயத்தில் அது பற்றின எல்லா விவரங்களையும் குறித்து வைக்கு

மாறு ஆணையிட்டார். பாரன் பிரபுவாயினும் சரி, அல்லது துணை குத்தகைக்காரராயினும் சரி ஒவ்வொரு மனிதனும் அரசரின் ஆய்ந்தறியும் இத் திட்டத்திற்கு உகந்த பதிலைக் கொடுத்து, அவர்கள் பெற்ற மானிய நிலங்களும் மற்றும் சலுகைகளும் அரசருக்குச் சொந்தமானதே என்று அறிவிக்கும்படி கோரப்பட்டார்கள். நிலங்கள் பற்றிய இம்மாபெரும் ஆய்வு நடைபெற்று முடிந்தபோது, எல்லா விவரங்களும் சீராக அடுக்கப்பெற்று தொகுக்கப்பட்டன. அத்தொகுதி முழுமையும் டூம்ஸ்டே நூல் (Domesday Book) எனப்பட்டது. அந்நூலைக் கொண்டு மனிதர்கள் அனைவரையும் எடை போடக்கூடும்.

**டூம்ஸ்டே நூல்:-** டூம்ஸ்டே நூல் வரலாற்றுச் சிறப்பு மிக்கதொரு ஆதார நூலாகும். அதிலிருந்து இங்கிலாந்தின் நிலங்களைப் பற்றிய விவரம், மக்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அறிந்து கொள்ள இயலும். வில்லியம் இங்கிலாந்தை வெற்றி கொள்வதற்கு முன்பிருந்த நிலையையும், வெற்றி கொண்ட தருணத்தில் அதன் நிலையையும் உணர்வதற்கு டூம்ஸ்டே நூல் மிகப் பயன்படுகிறது. மேனர், பரோ பண்ணைகளைப் பற்றிய விளக்கத்திலிருந்து பழைய சாக்சானிய பழக்க வழக்கங்களையும், இங்கிலாந்து நார்மானியர்களால் வெல்லப்பட்டதால் விளைந்த விளைவுகளையும் அது வர்ணிக்கின்றது. அந்நூலின் முக்கிய நோக்கம் வரிவிதிப்பினைப் பற்றியதாகும். அதனை இராச்சியத்தின் பெரும் வரிவிகிதம் பற்றிய நூல் என்று கூடக் கூறலாம். நாட்டிலிருந்த ஒவ்வொரு பண்ணையின் அளவும் மதிப்பையும், அவற்றிலிருந்து கிடைத்த வரிகளும் ஏனைய வருவாய் பற்றின விவரங்களையும் அரசருக்குநாட்டின் அனைத்துப் பகுதிகளிலிருந்தும் பெறப்படும் வருமானத்தையும் அந்நூலில் குறிப்பிட்டுள்ளது.

**டூம்ஸ்டே நூல் காட்டும் விவரங்கள்:-** வெற்றி வீரர் வில்லியத்தின் அதிகாரிகள் அம்மாபெரும் நில அளவு மதிப்பீட்டினைக் குறித்து வைக்கும்படி ஆணையிடப்பட்டனர். அவர்கள் சேகரித்த விவரங்கள் பின் வருமாறு:- ஒவ்வொரு பண்ணையும் யாருடைய பெயரில் இருக்கிறது; அவற்றின் அளவுகள் யாவை; அவற்றில் அரசருக்குச் சொந்தமானவை எவ்வளவு; மற்ற மனிதர்களுக்குச் சொந்தமானவை எவ்வளவு; அப்பண்ணைகளில் வாழ்ந்த மக்களில் சுதந்திரக் குடிகள் எத்தனை பேர்; வில்லன்கள் எத்தனை பேர்; போர்டார்கள்-கோட்டார்கள் எத்தனை பேர்; செர்ப் அடிமைகளின் எண்ணிக்கை எவ்வளவு; காடுகளின் பரப்பு எவ்வளவு; புற்றரைகளின் பரப்பு எவ்வளவு; மேய்ச்சற்றரைகள் எத்துணை அளவு;

அரைவு நிலையங்கள் எத்தனை; மீன் வளர்க்கும் குளங்கள் எத்தனை; எட்வர்டு அரசர் காலத்தில் அவற்றின் மதிப்பென்னவாயிருந்தது; வில்லியம் அரசர் அவற்றை மானியமாக வழங்கிய போது அவற்றின் மதிப்பென்ன? இன்று (1085) அவற்றின் மதிப்பென்ன? அவற்றிலிருந்து முன்பிருந்ததை விட அதிக வரி வசூலிக்க முடியுமா? என்ற விவரங்களை டூம்ஸ்டே நூல் கொண்டிருந்தது. 'அவ்வருமையான பதிவேட்டில் குறிப்பிடப்படாத ஒரு கஜ நிலமோ, மாடோ, பசுவோ அன்றி பன்றியோ இருக்கவில்லை என்று வரலாற்றுக் குறிப்பேட்டினை எழுதிய ஆசிரியர்கள் கூறினர். சுருங்கக்கூறின் பணமதிப்பினைக் கொண்ட ஒவ்வொரு பொருளையும் அப்பதிவேடு குறித்து வைத்தது. அது அரசரின் கருவூலத்தைப் பெருக்க வழிவகை செய்ததெனின் அஃது மிகையாகாது.

சாலிஸ்பரி சூளுரை :- (Oath of Salisbury, 1086:-) அடுத்த ஆண்டு அதாவது கி. பி. 1086ஆம் ஆண்டில் வில்லியம் தம்முடைய இரண்டாம் நடவடிக்கையை மேற்கொண்டார். தம்மிடமிருந்து நிலத்தை மானியமாகப் பெற்ற அனைவரையும் சாலிஸ்பரியில் கூடவேண்டுமென வில்லியம் ஆணை பிறப்பித்தார். ஆண்டான், அடிமை என்ற பாகுபாடின்றி அனைவரையும் கூட்டி அவர்கள் அரசருக்கு விசுவாசப் பிரமாணம் செய்து சூளுரைக்க வேண்டுமென ஆணையிட்டார் அரசர். அவர்கள் அரசருக்கே நன்றிக்கடன் பட்டவர்களேயன்றி மற்றவர்களுக்கன்று' அஃதாவது அடிமை தன் மேலாளராக கருதப்படும் ஆண்டானைவிட அரசரே முக்கியமானவர் என்பதை இச் சூளுரையின் மூலம் வில்லியம் வலியுறுத்தினர். எனினும் சாலிஸ்பரிக்கு சூளுரை மேற்கொள்ள எத்துணை மானியதாரர்கள் வந்தனர் என்பதை வரையறுத்துக்கூற இயலவில்லை. தம் குடிமக்கள் அனைவரும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வது மற்றொரு காரணத்தாலும் அவசியம் என்று கருதப்பட்டது. கி. பி. 1086 ஆம் ஆண்டில் ஸ்காண்டிநேவியாவிலிருந்து வரும் படையெடுப்பினுல் இங்கிலாந்து தாக்குதலுக்கு இரையாகும் அச்சம் நிலவியதால் அதன் நிமித்தமாகவும் வில்லியம் மக்கள் அனைவரையும் சாலிஸ்பரியில் ஒன்று கூடுமாறு ஆணையிட்டார். டூம்ஸ்டே பதிவேடும் (1085) சாலிஸ்பரி சூளுரையும் (1086) வில்லியத்தை தன்னிகரில்லாத் தலைவராக, உண்மையான அரசராக அங்கீகரித்தன என்ருல் அது தவருகாது. அவர் வெறும் நிலமானிய பிரபு என்ற அந்தஸ்திலிருந்து உண்மையான அரசராக மதிக்கப்பட்டார். சாலிஸ்பரியில்

கூட்டப்பெற்ற கூட்டமே இங்கிலாந்தில் வில்லியம் செய்து முடித்த இறுதிப் பொதுப் பணியாகும்.

வெற்றி வீரருக்கு எதிராக அதிருப்தியுற்றிருந்த பிஷப் ஓடோ, ரோஜர் டி பிரிட்டியூல் போன்றவர்களை வில்லியம் எளிதாக அடக்கி விட்டார். கலகக்காரர்களின் நிலங்கள் பறி முதலாக்கப்பெற்று அவர்கள் தண்டிக்கப் பட்டனர். வில்லியத்திற்கு எதிராக நார்மண்டியில் கிளர்ச்சிகள் மூண்டன. நார்மண்டியை கண்காணிக்கும் பொறுப்பை அவர்தம் மூத்தமகன் இராபர்ட் என்பானிடம் ஒப்படைத்திருந்தார். எனினும் இராபர்டின் நிர்வாகத்தைக் கூர்மையாக கவனித்து வந்தார். தம் தந்தையாரின் தலையீட்டை விரும்பாத இராபர்ட் தென்நார்மண்டியிலிருந்த ஒரு சில கலகக்கார பிரபுக்களுடன் சேர்ந்து கொண்டார். இதனைத் தடுத்து நிறுத்தும் நோக்குடன் வில்லியம் தம் மகனின் கெர்பிராய் கோட்டையை முற்றுகையிட்டார் (1079). போரில் இருதரப்பிலும் வெற்றி தோல்வி கிட்டவில்லை. ஆனால் தம் மகனின் ஈட்டித்தாக்குதலுக்கு இரையான வில்லியம் குதிரையிலிருந்து வீழ்ந்து காயமுற்றார்.

முதலாம் வில்லியத்தின் மரணம், 1087:- தம் ஆட்சியின் இறுதியில் வில்லியம் தம் நிலமானியத்தலைவரான பிரான்ஸ் அரசருடன் போர் ஒன்றில் ஈடுபடவேண்டியவரானார். பிரான்ஸ் அரசருக்குச் சொந்தமான மாண்டஸ் (Mantes) என்னும் நகரை அவர் தீக்கிரையாக்கினார். அந்நகர் சேன் ஆற்றங்கரை நகரமாகும். அப்போரிலிருந்து திரும்புங்கால் அந்நகரத்து அழிவுகளுக்கிடையே குதிரையின் மேலிருந்து இடறி விழுந்து மரண காயமுற்றார். வில்லியம் நார்மானிய தலைநகரான ரூவண் என்னுமிடத்திற்கு அவர் கொண்டுசெல்லப்பட்டார். அங்கே ஏழை பணக்காரன் என்ற ஏற்றத்தாழ்வறியாத காலதேவனின் பிடியில் சிக்குண்டு மரணமுற்றார். அவருடைய இரண்டாம் மகன் வில்லியம் ஆங்கிலக் கால்வாயைக் கடந்து இங்கிலாந்து சென்றபோது, கேன் என்னும் நகரில் செயின்ட் ஸ்டீபன் திருச்சபையில் சடங்கேதுமின்றி வெற்றிவீரர் வில்லியம் அடக்கம் செய்யப்பட்டார். கேன் நகரை உருவாக்கி அமைத்தவரே அவர் தான். அவரமைத்த ஊரே அவருக்கு இறுதியில் புகலிடம் அளித்தது விந்தையன்றோ?

ஆங்கில சாக்சானிய வரலாற்றுக் குறிப்பேட்டில் வெற்றி வீரர் வில்லியத்தின் குணாதிசயங்களைத் துறவியொருவர் கீழ்க் காணுமாறு எழுதியுள்ளார்.

'இந்த வில்லியம் அரசர் தலைசிறந்த கூர்த்த மதியினர்; செல்வந்தர்; தனக்கு முன் ஆண்டவர்களை விட சீரும் சிறப்பும் மிக்கவர்; திறல் வீரர்; இறைவனை நேசித்த நல்லவர்களிடம் மென்மையாக நடந்து கொண்டவர்; தம் விருப்பத்திற்கு மாருன வர்களைக் கடுமையாக தண்டித்தவர்; கண்ணியம் மிக்கவர். ஆண்டுதோறும் மும்முறை முடி சூட்டிக்கொண்டவர். இங்கி லாந்திலிருந்த ஆர்ச்பிஷப்புகள், பிஷப்புகள், ஆபட்குருமார்கள், பிரபுக்கள், தேனர்கள், மற்றும் நைட்வீரர்கள் அனைவரும் அவ ருடன் இருந்தார்கள். அவருடைய விருப்பத்திற்கு மாருக செயல் பட்டவர்களை அவர் கடுமையாக-ஏன் கொடுமையாக- நடத்தி ஞர். அவர்கள் பிஷப்புகளாயின் அப்பிஷப் பதவியிலிருந்தும், ஆபட்குருமாராயின் அவர் வகித்த பதவியிலிருந்தும், நீக்கியும் தேனராயினும் அவர்களையும் சிறையிலடைத்தார். அவர் தம் சொந்த சகோதரர் ஓடோவைக் கூட விட்டு வைக்கவில்லை. ஓடோ நார்மண்டியின் செல்வச் சிறப்பு மிகுந்த பிஷப்பா யிருந்தவர். ஆனல் அவர் செய்த மறக்கமுடியாத நிகழ்ச்சிகளில் ஒன்று, இங்கிலாந்தில் அமைதியை நிலைநாட்டியதாகும். நாட்டில் நிலவிய அமைதியின் விளைவாக சாதாரண மனிதன்கூட இரச்சியம் முழுதிலும் பொன்னைச் சுமந்துகொண்டு அச்சமில்லா மல் எங்குவேண்டுமாயினும் சென்றுவர சாத்தியமாய் இருந்தது. ஒருவன் மற்றவனைக் கொலை செய்வதோ, அல்லது சொல்லொணு கொடுமையைச் செய்வதோ அன்று நாட்டில் நடக்கவில்லை.

வரலாற்றுக்குறிப்பேடு மேற்கூறிய புகழ்மாலையைச் சாற்றும் அதே வேளையில், அவரைப்பற்றிய அவலக் குறிப்பொன்றையும் அடுத்துக் காண்கிருேம். 'வில்லியம் அரசாண்ட காலத்தில் மக்கள் சொல்லமுடியாத துயருற்றனர்; அவர்கள் பல சங்கடங் களுக்கு ஆளாயினர். ஒருபுறம் மக்கள் கோட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்தனர்; ஆனல் ஏழைஎளியவர் இழிநிலைக்குத் தாழ்ந்து சென்றனர். தம் குடிமக்களிடமிருந்து அரசர் பொன்னையும், வெள்ளியையும் பறிக்கத் தயங்கவில்லை.' மற்ருெரு குறைபாட்டினை யும் வரலாற்றுக் குறிப்பேட்டில் அவரைப் பற்றி எழுதியவர் எழுதத் தவறவில்லை. மான்மந்தையைக்காக்க ஏராளமான மரங்களை நட்டு காடுகளை உருவாக்கிய அவர், மான்களைச் சுட்டு வீழ்த்திய குற்றத்திற்காக குற்றம்செய்தவரைக் குருடாக்கும் சட்டங்களையும் உருவாக்கியிருந்தார். நீண்ட கலைமானை தந்தையை நேசிப்பது போன்று அவர் நேசித்தார். தத்தியோடும் முயல்கள் கூட சுதந்திரமாக வாழ வேண்டுமென சட்டம் செய்தார் அவர்.

வெற்றிவீரர் வில்லியம் ஹாம்ப்ஷயரில் புதிய காடு (New Forest) ஒன்றை நிலைநாட்டினர். இப்புதுக்காடு வின்செஸ்டிரில் இருக்கும் அரச அரண்மனையை அடுத்து சௌகரியமாக அமைக்கப் பட்டிருக்கிறது. பல கிராமங்களையும் பண்ணைகளையும் ஓரளவு அழித்து உருவாக்கப்பெற்றது இப்புதுக்காடாகும். அவருடைய வாரிசுகளும் காட்டின் பரப்பளவைப் பெருக்குவதில் எப்போதும் ஆர்வம் காட்டினர்கள். பன்னிரண்டாம் நூற்றுண்டில் இராச்சியத்தின் மொத்தப் பரப்பில் மூன்றிலொரு பங்கு காடுகளாயிருந்தது என்றுல் அதன் அளவினை ஒருவாறு அறிந்துணரலாம். அரசருக்கு சொந்தமான காடுகளைக் கண்காணிக்க சிறப்பான காடுகாக்கும் மன்றங்கள் இருந்தன. அவற்றில் அத்துமீறி வேட்டையாடியவர்கள் கடும் தண்டனைக்காளாயினர். காடுகள் பற்றிய சாசனம் நிறைவேறும் காலம்வரை அச்சட்டங்கள் தொடர்ந்து பழக்கத்திலிருந்தன. ஜான் அரசர் காலத்தில் காடுகள் பற்றிய சட்டத்தின் கொடுமை குறைக்கப்படலாயிற்று.

# 20. வெற்றி வீரரின் மக்கள்

## (அ) இரண்டாம் வில்லியம் 1087-1100:

முதலாம் வில்லியம் காலமாகும் முன் நார்மண்டியை இராபர்ட்டிற்கும், இங்கிலாந்தைத் தம் இரண்டாம் மகன் வில்லியம் ரூபஸ் என்பாருக்கும் விட்டுச் சென்றார். அவருடைய இளையமகன் ஹென்றிக்கு அவர் 5000 பவுன் பெறுமான வெள்ளியை மட்டும் வைத்திருந்தார். ரூபஸ் இங்லாந்தின் அரசராக முடிசூட்டிக் கொள்வதை ஒருசில பாரன்பிரபுக்கள் விரும்பவில்லை. அவர்களின் தலைவராக விளங்கியவர் பேயக்ஸின் பிஷப்பான ஒடோ என்பாராகும் வில்லியம் அவரைச் சிறையில் அடைத்திருந்தார். வெற்றி வீரர் காலமானபோது அவர் சிறையிலிருந்து விடுதலையானார். தமக்கெதிராக மூண்ட கலகத்தை எளிதாக ரூபஸ் அடக்கி விட்டார். தம் சிற்றப்பன் ஒடோவின்மானிய நிலங்கள் இரண்டாம் முறையாகப் பறிக்கப்பட்டன-

ரூபஸின் குணப்பண்புகள்:- அனைவரையும் கவரும் குணநலன்களைப்பெறாதவர் ரூபஸ். அவர் நாகரிகமற்ற சிவந்த முகமுடைய இளைஞர். தம் தந்தையைப் போன்று அவருக்கும் வேட்டையாடுவதில் ஆர்வம் மிகுதி. அதிகார வெறி கொண்ட ரூபஸுக்கு தம் தந்தையைப்போன்ற தகுதியோதிறமையோ இருக்கவில்லை. அவர் அடிக்கடி தம் மூத்த சகோதரருடன் சச்சரவிட்டுக் கொண்டார். முதலாம் சிலுவைப்போரில் (1095) பிஷப் ஒடோவுடன் இணைந்து கொண்டு சமய ஆர்வம் மிக்கவராய், வீரச்செயல் புரிய இராபர்ட் புறப்பட்டபோதுதான் அவரைவிட்ட தொல்லைகள் தீர்ந்தன. இரண்டாம் வில்லியம் என்ற பட்டப்பெயர் ரூபஸுக்குண்டு. தம் சகோதரர் சிலுவைப்போருக்குப்புறப்பட்டு சென்ற போதுவில்லியம் அவருக்கு வழிச்செலவுக்காக 10,000 மார்க் தொகையைக்கடனாகக் கொடுத்தார். அதற்கு அடமானமாக நார்மண்டி டச்சியை அவர் பெற்றார்.

வெற்றி வீரர் காலமான இரண்டாண்டுகளுக்குப் பின்னர் லாங் பிராங்க காலமானார். எனினும் இரண்டாம் வில்லியம் கான்டர்பரி ஆர்ச்பிஷப் பதவியை நான்கு ஆண்டுகாலம் நிரப்

பாமல் விட்டு வைத்தார். அவருடைய கருவூலத்தலைவராய் திகழ்ந்த ரானுல்ப் பிளாம்பார்டு என்பார் கீழ்த்தரக் குலத்தில் பிறந்தவர். ஆர்ச்பிஷப் பதவிக்குப் பிறிதொருவரை நியமிக்காமல் அதன் வருமானம் அனைத்தையும் அரசாங்கக் கருவூலத்தில் சேர்த்துக் கொள்ளும் வழியை அரசருக்குக் காட்டியவர் அவரே. கி.பி. 1093ஆம் ஆண்டுவாக்கில் நோய்வாய்ப்பட்டு படுத்த படுக்கையினரான போது ரூபஸ் தாம் செய்த பாவச் செயல்களுக்காக மனம் நொந்து வருந்தினர். பெக் மடாலயத்தின் சமயக் குருமா ரான ஆன்ஸ்லெம் என்பாரைத் தம்படுக்கைக்கருகில் வரவழைத்து கான்டர்பரியின் ஆர்ச்பிஷப்பாக பதவியேற்க வேண்டுமென விருப்பமில்லாத அத் துறவிப் பெருமகனாரை அவர் வற்புறுத்தினர். பழுத்த கிழட்டு ஆன்ஸ்லெம் கொழுத்த இளம் காளையான இங்கிலாந்து அரசருடன் இணைய வேண்டியவரானர். ஆனல் நோய் தீர்ந்து குணமானவுடன் ரூபஸ் ஆன்ஸ்லெமை ஆர்ச்பிஷப்பாக்கியது தவறு என்று உணர்ந்து கொண்டார். மென்மையான இதயம் படைத்த ஆன்ஸ்லெம் விட்டுக் கொடுக்காத மனத்திட்பம் உடையவர். ரூபஸின் இழிந்த வாழ்க்கையை அவருக்கு நேரிலேயே குறை கூறிக் கண்டிக்கத் தவருதவர் புதிய ஆர்ச்பிஷப் ஆன்ஸ்லெம். தம் பதவிக்கு அறிகுறியாக ஏற்கும் கம்பிளி அங்கியை (Pallium) அரசருடைய கைகளிலிருந்து பெற அவர் மறுத்து விட்டார். அச்சின்னம் போப்பாண்டவர் அவருக்கு அனுப்பி வைத்ததாகும். ரூபஸின் நடத்தை அத்துமீறி கட்டுக்கடங்காமல் போன போது ஆன்ஸ்லெம் இங்கிலாந்தை விட்டு விட்டு ரோமாபுரிக்கு புறப்பட்டுச் சென்ருர்.

**ரூபஸின் மரணம், 1100 :-** கி. பி. 1100ஆம் ஆண்டில் புதுக் காட்டில் வேட்டையாடிக் கொண்டிருந்தபோது தற்செயலாக நிகழ்ந்த விபத்தொன்றில் சிவப்பரசர் என்று பெயர் பெற்ற இரண்டாம் வில்லியம் காலமானர். வேட்டையாடிய குழுவிலிருந்த அவருடைய சகோதரர் ஹென்றி வின்செஸ்டருக்கு விரைந்து சென்று அரசருக்குச் சொந்தமான கருவூலத்தைக் கைப்பற்றிக் கொண்டார். இராபர்ட் டியூக் முதல் சிலுவைப் போரில் பங்கு கொள்ள சென்றிருந்தார். அவர் அப்போதும் ஏசுநாதர் பிறந்த புனித பூமியிலேயே இருந்தார். எனவே அரசுரிமையைப் பெறுவதில் ஹென்றிக்கு எதிர்ப்பேயில்லை. மக்களின் வெறுப்பிற்காளானவரும், அக்கிரம வரி வசூலிக்கும் ஆற்றல் மிக்க வருமான ரானுல்பஃ பிளாம்பார்டை ஹென்றி உடனே டவர் சிறையில் அடைத்தார். சில ஆண்டுகளுக்குப் பின்னர் ரானுல்ப்ஃ தம் சொந்த பிஷப் மாவட்டமான டர்ஹாம் செல்ல அனுமதிக்கப்பட்டார். அங்கு திருச்சபைக் கோயில் ஒன்றைக் கட்டும் பணியில் அவர் ஈடுபட்டார்.

## (ஆ) முதலாம் ஹென்றி, 1100—1135).

கி.பி. 1100ஆம் ஆண்டில் முடிசூட்டிக் கொண்ட ஞான்று முதலாம் ஹென்றி சாசனம் ஒன்றை வெளியிட்டார். அச் சாசனத்தை ஒவ்வொரு ஷயர் மன்றத்திலும் படிக்க வேண்டுமென ஆணையிடப்பட்டது. அச் சாசனம் மக்களின் குறைகள் அனைத்தும் நிவர்த்திக்கப்படும் என திட்டவட்டமாகக் கூறாமல் தெளிவற்றதாக இருந்தது. நாட்டில் அமைதி காக்கப்படும் என்று அச் சாசனம் உறுதியளித்தது. மக்களின் குறைகள் தீர்க்கப்படும் என்ற வாக்குறுதி பெரும்பாலும் நிறைவேற்றப்படவில்லை எனலாம். ஆனால் நாட்டின் அமைதி காக்கப்படுமென கொடுத்த வாக்குறுதியை, ஹென்றி சொன்னபடியே காத்து, 'நீதி காத்த சிங்கம்' எனப் பெயர் பெற்றார் என்று வரலாற்றுக் குறிப்பேட்டாசிரியர் குறிப்பிட்டுள்ளார். அவர் கொடுத்த சாசனமே பிற்காலத்தில் ஜான் மன்னரிடம் இருந்து பிரபுக்கள் பெற்ற மகாசாசனத்தின் அடிப்படையாக அமைந்தது என்பதை பின்னர் அறியலாம்.

**முதலாம் ஹென்றியின் திருமணம்:-** முதலாம் ஹென்றி ரூபஸ் அரசரைப் போன்று ஈவு இறக்கமற்றவரன்று. அவர் எழுதவும் படிக்கவும் பெற்றிருந்த திறமையின் காரணமாக அவர் கற்றறிஞர் (beauclerc) என்று போற்றப்பட்டார். 'இளமையில் கல்' என்ற மூதுரைப்படி அவர் கற்ற கல்வி அவருக்குக் காலமெல்லாம் உயர்ந்த உள்ளத்தைக் கொடுத்தது. ஆங்கில வரலாற்றில் அவராண்ட முப்பத்தைந்து ஆண்டு கால ஆட்சி வளமைக்கும் அமைதிக்கும் பெயர் பெற்ற காலமாகும். ஸ்காட்லாந்து அரசர் மூன்றாம் மால்கத்தின் மகளான மாடில்டாவை திருமணம் செய்து கொண்ட அவரை ஆங்கில குடிமக்கள் போற்றிப் புகழ்ந்தனர். மால்கம் இங்கிலாந்தை ஆண்ட பழைய ஆங்கில சாக்சானிய வமிசத்தின் உறுப்பினர்களில் ஒருவர் (அவருடைய தாயாரான செயின்ட் மார்க்கரெட் என்பாள் எட்கார் அதலிங் என்பாரின் தமக்கையாவாள்). ஹென்றிக்கும் மாடில்டாவுக்கும் இரண்டு குழந்தைகள் பிறந்தனர். அவர்களில் வில்லியம் என்ற பெயர் கொண்ட மகன் ஒருவன் கடலில் மூழ்கி இறந்தான். மற்றவள் மாடில்டா என்ற பெண்மகவாகும். பதினோராம் ஆண்டு நிரம்பியிருந்த அம்மகளை ஹென்றி மன்னர், புனித ரோமானியப் பேரரசரான ஐந்தாம் ஹென்றிக்கு மணமுடித்தார். நார்மானிய இளவரசிக்கு புனித ரோமானியப் பேரரசர் வாழ்க்கைத் துணைவராகக் கிட்டியது பெறற்கரிய பொருத்தம் என்று புகழ்ந்தார்கள். புனித பேரரசர் அக்கால கிறிஸ்தவ உலகத்தின் சமய சார்பற்ற தலைவரும் சக்தி வாய்ந்த ஜெர்மானிய இராச்சியத்தின் அரசருமாய் திகழ்ந்தவர். அவர் இத்தாலியையும் ஆண்டு வந்தார்.

இராபர்டின் கலகம்:- முதலாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் மூண்ட ஒரேயொரு கலவரம் அவருடைய ஆட்சியின் தொடக்கத்தில் மூண்டது. அவருடைய சகோதரர் இராபர்ட் ஜெருசலத்திலிருந்து திரும்பி வந்து இங்கிலாந்தின் மீது படையெடுத்தார். கி. பி. 1101ஆம் ஆண்டில் போர்ட்ஸ்மத்தில் கரையிறங்கிய அவர் இலண்டனை நோக்கிப் படையெடுத்தார். தம் சகோதரருக்கு ஒய்வு கால ஊதியமாக (Pension) பொருளைக் கொடுக்க ஹென்றி ஒப்புக் கொண்டார். பின்னர் இராபர்ட்டின் உரிமைகளை ஆதரித்த பிரபுக்களை அடக்க அவர் ஆயத்தமானர். அத்தருணத்தில் ஷ்ருஸ்பரி பிரபுவான ராபர்ட் பெலாமி என்பான் மிகக் கொடிய கலகக்காரனுகக் கருதப்பட்டான். அவன் கொலைக்கஞ்சாத கொடுங்கோலன். அவனுடைய கொடூரமான செய்கைகளைக் கண்டு வேல்ஸ் எல்லைப்புற மக்கள் ஆருத்துயரத்தில் ஆழ்ந்திருந்தனர். அவனுடைய ஷ்ருஸ்பரி அரண்மனையையும் பிரிடஜ்நார்த் கோட்டையையும் அரசர் முற்றுகையிட்டு கைப்பற்றிக் கொண்டார். ராபர்ட் பெலாமி சரணடைய வேண்டியவனுனன். அவனுடைய நிலங்களைப் பறிமுதல் செய்து கொண்டதோடன்றி ஹென்றி அவனை நாடு கடத்தினுர். பெலாமியின் நடத்தை ஒன்றைப் புலனுக்கியது. அடுத்து வந்த ஆட்சியின்போது பிரபுக்கள் கையாண்ட முறைக்கு பெலாமியின் நடத்தை முன்னேடியாக இருந்தது. எனினும் அப்படிப்பட்ட துர்பாக்கியம் ஹென்றிக்கு ஏற்படவில்லை. அதற்குப் பின்னர், முப்பத்து மூன்றுண்டுகள் செழுமையான நல்லாட்சியை மன்னர் ஹென்றி நிலைநாட்டினுர். அக்காலத்தில் அவருக்கெதிராக கலகம் விளைவிக்கும் துணிச்சல் கொண்டவனையோ, கோட்டையைக் கைப்பற்றக்கூடிய வல்லமை படைத்தவனையோ காணமுடியவில்லை எனில் அவருடைய ஆட்சியின் சிறப்பை உணர முடியுமன்றே! பெலாமியின் வீழ்ச்சிக்குப் பின்னர் இராபர்ட் டியூக்குடன் அரசர் ஹென்றியின் இறுதிப் போராட்டம் மூண்டது. ஹென்றி நார்மண்டியின்மீது படையெடுத்து, பேயாக்ஸ், கேன் போன்ற இடங்களைக் கைப்பற்றிக் கொண்டு, தம் சகோதரனின் படையை டிஞ்சிப்ராய் (Tinchebrai) என்னுமிடத்தில் (1106) ஆங்கிலப் போர் வீரர்களின் உதவியால் தோற்கடித்தார். ஹேஸ்டிங்ஸ் போரில் ஏற்பட்ட தோல்விக்குப் பழிக்குப் பழி வாங்கிவிட்டார் எனில் அஃது மிகையாகாது. இராபர்ட் கைது செய்யப்பட்டு கார்டிப் கோட்டையில் தம் வாழ்நாளின் எஞ்சிய காலம் வரை சிறையில் வாடினுர். ஹென்றி நார்மண்டியையும் தம் இராச்சியத்துடன் இணைத்துக் கொண்டார்.

ஹென்றியும் ஆன்ஸ்லெமும்:- ஆர்ச்பிஷப் ஆன்ஸ்லெமை திரும்பி வரும்படி ஹென்றி அழைத்தார். தொடக்க காலத்தில்

அவர்களின் உறவு நல்லபடியே இருந்தது. ஆனால் அரச அதிகாரத்திற்கும் சமய அதிகாரத்திற்கும் இடையே முதலாம் வில்லியத்தின் ஆட்சிக்காலத்தில் எழுந்த பிரச்சினை மீண்டும் எழலாயிற்று. திருச்சபை பதவியை வழங்கும் சிறப்புரிமை குறித்துப் போப்பாண்டவர் ஹில்டிபிரான்ட் சில விதிமுறைகளை வகுத்துக் கொடுத்திருந்தார். ஆனால் பேரரசரோ, முதலாம் வில்லியத்தைப்போல, அதனை வழங்கும் அதிகாரம் தம்முடையதேயாகும் என்று உரிமை கொண்டாடினர். ஆங்கிலப் பிஷப்புகள் பதவியேற்கும் விஷயத்தில் முதலாம் ஹென்றியும் அவ்விதமே தமக்கு உரிமை உண்டு என வலியுறுத்தினர். அப்போது போப்பாண்டவராயிருந்த இரண்டாம் பாஸ்கல் (Paschal II)என்பார் ஆன்ஸ்லெமின் அதிகாரத்தை ஆதரிக்கவே, அவர் அரசருக்கிருந்த அவ்வதிகாரத்தை ஏற்றுக்கொள்ள முடியதெனத் திட்டவட்டமாக அறிவித்துவிட்டார். அதன் விளைவாக ஆன்ஸ்லெம் மீண்டும் ரோமாபுரிக்கு ஓடிச் சென்று தஞ்சம் புகலானர். மூன்றாண்டுகளுக்குப் பின்னர் முதலாம் ஹென்றியும் ஆன்ஸ்லெமும் பெக் என்னுமிடத்தில் (1106) பதவிச் சின்னங்கள் கொடுக்கும் பிரச்சினை குறித்து ஓர் உடன்பாட்டிற்கு வந்தனர். அதன்படி, திருச்சபை குருமார்கள் பிஷப்புகளைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், மோதிரம், சிலுவைக்கோல் இவைகளைக் கொடுக்கும் உரிமை போப்பாண்டவரையோ அல்லது அவருடைய பிரதிநிதியையோ சாரும் என்றும், மானியமாகப் பெறும் நிலத்திற்கு அவர்கள் அரசருக்கு இறை வணக்கம் செலுத்தவேண்டும் என்றும் முடிவாயிற்று.

**க்யூரியா ரெஜிஸ் (Curia Regis):** முதலாம் ஹென்றிய ஆட்சிக்காலம் முழுமையிலும் இங்கிலாந்து திறமையுடனும், வெற்றியுடனும் ஆளப்பட்டது எனலாம். நார்மானிய வெற்றிக்குப் பின்னர் இராச்சியத்தின் முக்கியக் கவுன்சில் கூட்டத்தை மாக்னம் கன்சீலியம் (Magnum Concilium) அல்லது பெரும் கவுன்சில் என்று அழைத்தனர். அதிலிருந்து தோன்றியதுதான் பிரபுக்கள் சபையாகும். அப் பெரும் கவுன்சில் சபைக் கூட்டத்திற்கு நிலச் சொந்தக்காரர்களான பெரும் பிரபுக்கள் (பிஷப்புகளும், ஆபட் குருமார்களும் இதில் அடங்குவர்.) உறுப்பினர்களாக வந்தனர். அச் சபை விட்டான் சபையின் சில மரபுகளையும் பின்பற்றியது. அரச மன்றமான க்யூரியா ரெஜிஸ் கூடும் காலங்களில் இக் கவுன்சில் சபையும் கூடவேண்டுமென ஆணையிடப்பட்டது. அரச மன்றமான க்யூரியா ரெஜிஸ் அரசர் தங்கியிருந்த இடங்களில் எல்லாம் கூடும் பழக்கம் ஏற்பட்டது. முதலாம் ஹென்றியின் காலத்தில் அரசாங்க அலுவல்கள் பெருகி வளர்ச்சியுற்றதன் காரணமாக அரச மன்றத்திலும் பல்வேறு வளர்ச்சிகள் தோன்றலாயின.

முதலாவது, சிறியதொரு கவுன்சில் சபை தீவிரமாகச் செயல் படலாயிற்று. அதில் அரண்மனையைச் சார்ந்த பெருமக்களும் அவர்களின் துணையாளர்களும் அடங்கியிருந்தனர். அரசியல் நீதித்தலைமை அலுவலரான ஜஸ்டீசியர் (Justicier), கருவூலத் தலைவர் (Treasurer), அரசரின் செயலாளரான சான்சலர், அரண்மனைக் காவலாளரின் தலைவர் (Chamberlain), மார்ஷல் மற்றும் போலீஸ்காவலர் (இவர்கள் நிலமானியப் படைகளின் தலைவர்கள்) ஆகியோர் அடங்கியிருந்தனர். இரண்டாவது கருவூலமன்றத்தில் தலைவராகப் பதவியேற்கும் கடமை கருவூலத் தலைவரைச் சார்ந்ததாகக் கருதப்பட்டது. இம் மன்றத்தில்தான் ஷெரிப்புகளும் மற்றும் ஏனையோரும் தம்மிடமிருந்த நாணயக் குவியல்களைக்கட்டிவிட்டு, கணக்குகளை தணிக்கை செய்துகொண்டனர். இம்முறையைத்தொடங்கக் காரணமாக இருந்தவ முதலாம் ஹென்றியின் புகழ்பெற்ற கருவூலத்தலைவரான சாலிஸ்பரி பிஷப் ரோஜர் என்பாராகும். அக்காலத்திலிருந்து கருவூலமே தேசிய வருமானத்தை வசூலித்துக் கண்காணிக்கும் அரசாங்க அலுவலகமாக இருந்துவருகிறது. மூன்ருவது, சுற்றிவரும் நீதிபதிகள் (Itinerant Justices or Judius Eyre) உருவான காலமும் இப்போதுதான். அதாவது, அரச மன்றத்திலிருந்த நீதிபதிகள் ஷயர்மன்றங்களுக்குப் பயணம்செய்து, அரசருடைய பொருளாதார, நீதி விவகாரங்களைக் கண்காணிக்கும் பழக்கமாகும். அரசமன்றம் இத்தகைய சிறப்பான வளர்ச்சி அடைவதற்கு முதலாம் ஹென்றி காரணமாயிருந்ததுடன், அரசாங்க நிர்வாகப் பணிகளைத் திறமையாக நிர்வகிக்க நிலையான அலுவலர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குத்தக்க பயிற்சி கொடுத்ததும் அவரையே சாரும். நிலமானிய பிரபுக்களைக் கவனிப்பதைவிட ஹென்றி மேற்கூறிய பணிகளுக்கே அக்கறை காட்டினர். நிலமானிய பிரபுக்களுக்கு நல்ல நிர்வாகத்தில் விருப்பமில்லை. முதலாம் ஹென்றியின் இத் திட்டத்தை அவருடைய பேரரான இரண்டாம் ஹென்றி மேலும் வளர்த்தார்.

**இலண்டன் சாசனம்:** ஹென்றியின் காலத்தில் நகரங்களும் வாணிபமும் பெருகி வளரலாயின. பிரெஞ்சிய வணிகர்களும், யூதர்களும் பெருமளவில் வந்து குடியேறியதே இதற்குக் காரணமாகும். இலண்டன் நகர் செல்வச் செழிப்பில் சீருற்று இருந்தமையால், அதன் மக்கள் அரசரிடமிருந்து பல் வேறு சலுகைகளைப்பெற வாய்ப்பேற்பட்டது. முதலாம் ஹென்றி மன்னர் புகழ்மிக்க இலண்டன் சாசனத்தை வழங்கினர். அதன் படி, கருவூலத்திற்கு ஆண்டொன்றுக்கு 300 பவுன்களை வரியாகக் கொடுப்பதற்குப் பிணையாக இலண்டன் மக்கள் மிடில்செக்ஸின் வருமானத்தை வசூலித்துக்கொள்ள வேண்டும்; இங்கிலாந்தின்

பிற பகுதிகளில் அன்றும் வசூலிக்கப்பெற்ற டேன்கில்டு வரியை இலண்டன் மக்கள் கொடுக்க வேண்டியதில்லை; இலண்டன் குடி மக்கள் தமக்குப் பிரியமான ஷெரீப்பையும், அரசியல் நீதித்தலைமை அலுவலரையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மேற்கூறிய இலண்டன் சாசனத்திலிருந்து ஆங்கில நகரங்களில் தலசுய ஆட்சி முறைகள் தொடங்கப்பட்டன என்பதை அறிந்து கொள்ளலாம். பிந்திய இடைக்காலத்தில் நகரங்கள் வளர்ச்சியுற்றமைக்கு முன்னோடியாகத் திகழ்ந்தமையால் இது முக்கிய அம்சமாகக் கருதப் பட்டது.

ஹென்றியின் ஒரே மகனான வில்லியம் 1120ஆம் ஆண்டில் நீரில் மூழ்கி இறந்து போனார். கி.பி. 1125ஆம் ஆண்டில் ஹென்றியின் மகளான பேரரசி மாடில்டா விதவையானாள். அவள் ஆஞ்சுவின் கவுன்டான ஜியோஃப்ரி என்பாரை மறு மணம் செய்து கொண்டுவிட்டமையால், ஹென்றியின் வாரிசாக அங்கீகரிக்கப்பட்டாள். நார்மானிய பிரபுக்கள் அவளையே ஹென்றியின் வாரிசென ஏற்றுக்கொள்ளும்படி இங்கிலாந்திலும், நார்மண்டியிலும் விசுவாசப்பிரமாணம் எடுத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டனர். ஹென்றி கி. பி. 1135ஆம் ஆண்டில் காலமானபோது மாடில்டாவின் மகனான ஹென்றி இரண்டு வயது பாலகன். மாடில்டாவின் மகனும் அதாவது முதலாம் ஹென்றியின் பேரனுமான ஹென்றியே பின்னர் இரண்டாம் ஹென்றி என்னும் பெயரில் வருங்காலத்தில் இங்கிலாந்தின் அரசரானார். முதல் ஹென்றி காலமானபோது அவருடைய அமைதியான ஆட்சிக்குப் பின்னர் பத்தொன்பதாண்டுகள் நாட்டில் குழப்பம் மூண்டது.

## (இ) ஸ்டீபனின் ஆட்சியும், குழப்பமான சூழலும்

முதலாம் ஹென்றி நார்மண்டியில் காலமானார். இங்கிலாந்தின் பெரும் கவுன்சில் எனப்படும் பிரபுக்கள் சபையைச் சார்ந்தவர்கள் போலக்னுவின் ஸ்டீபன் என்பாரை அரசராக்க விரும்பினர். வின்செஸ்டர் பிஷப்பின் செல்வாக்கிற்கு உட்பட்ட அவர்கள் அப் பிஷப்பின் சகோதரரை அரசராக்க விரும்பியதில் வியப் பொன்றுமில்லை. காலம் சென்ற அரசரின் சகோதரரின் மகன்; அதன்படி பார்த்தால் அவரும் வெற்றிவீரர் வில்லியத்தின் பேரரா வார். ஹென்றியின் மகள் மாடில்டாவைவிட ஸ்டீபனே பதவி யைப் பெறத் தகுதிவாய்ந்தவர் என்றும் கருதினர். மாடில்டா ஒரு பெண்; போதாக்குறைக்கு அவள் ஆஞ்சுகோமகன் ஒருவனை மறு மணம் செய்து கொண்டிருந்தாள். ஆஞ்சு இனத்தவர்களை

நார்மானியர் வெறுத்தனர். ஸ்டீபன் இங்கிலாந்து வந்து சேர்ந்த போது பெரும் கவுன்சிலைச் சார்ந்தவர்கள் அவரைஅரசராக அங்கீகரித்தனர். ஏற்கெனவே அவர்கள் மாடில்டாவுக்கு விசுவாசம் தெரிவித்திருந்தனர். ஸ்டீபனை அரசராகக் கான்டர்பரி ஆர்ச்பிஷப் முடிசூட்டினுர்.

ஸ்டீபனின் குணப்பண்புகள்:- வரலாற்றுக் குறிப்பேட்டு ஆசிரியரின் கூற்றுப்படி ஸ்டீபன் மென்மையான இதயம் படைத்தவர். அவருடைய பாட்டனுரும் அவர்தம் மக்களும் அரசராயிருந்து பாரன்பிரபுக்களை சமாளித்த தகுதியோ திறமையோ அவருக்கிருக்கவில்லை. குறிப்பாக மாடில்டாவை அரியணையேற்ற நடைபெற்ற முயற்சியின் பயனுக நாட்டில் குழப்பமான சூழ்நிலை நிலவியது. மாடில்டாவின் எதிர்ப்பு அத்துணை வலிவுடையதாகக் கருதப்படவில்லை. எனினும்,அவள் இங்கிலாந்தின்மீது படையெடுத்தபோது பாரன் பிரபுக்களில் பலர் அவளுக்கு ஆதரவளித்தனர். நாட்டில் அமைதியை விரும்பாத பல பிரபுக்கள் மாடில்டாவை ஆதரிப்பதில் கண்ணுங்கருத்துமா யிருந்தனர். பாரன் பிரபுக்கள் போரை விரும்பினர். ஏறத்தாழ இருபது ஆண்டுகள் நடைபெற்ற உள்நாட்டுக் கலகத்திற்குப் பாரன்பிரபுக்களே காரணமாயிருந்தனர். வரலாற்றுக் குறிப்போட்டு ஆசிரியர் கூறும் கருத்துகளிலிருந்து கோட்டைகளில் வாழ்ந்த கொடுங்கோலர்களை அரசர் அதிகாரம் அடக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிருர்.

'ஸ்டீபன் மென்மையானவர்; இளகிய மனத்தினர்; நல்லவர்; நீதியை நிலைநாட்டும் திறனற்றவர் என்பதை அறிந்து கொண்ட துரோகிகள் என்னென்ன செய்தார்கள் தெரியுமா? அத் துரோகிகள் அரசருக்கு இறைவணக்கம் செலுத்தி வாக்குறுதிகளைக் கொடுக்கத் தவறவில்லை. ஆனுல் அவர்கள் கொடுத்த வாக்குறுதிகளைக் காற்றில் பறக்கவிட்டு விட்டார்கள். ஒவ்வொரு பணக்காரனும் கோட்டை கட்டிக்கொண்டான்; அவற்றை அவர்கள் அரசருக்கெதிராகக் கட்டிக்கொண்டனர். கோட்டைகளைக் கட்டி முடித்ததும் அவற்றில் பேய்பிசாசுகளையும், கெட்ட மனிதர்களையும் அடைத்து வைத்தார்கள். பொருள்படைத்தவர்களையும், தொழிலாளர்களையும், பெண்களையும், அவர்களின் பொன்னையும், வெள்ளியையும் பறித்துக்கொள்ளும் நோக்குடன் சிறையில் அடைத்தார்கள். அவர்களைச் சொற்களால் வருணிக்க முடியாத கொடுமைகளுக்கு உள்ளாக்கினர். அவர்களின் தொந்தரவுகளுக்கு ஆளாகாத தியாகிகளே இல்லையெனலாம். அக்காலத்தில் உணவு தானியமோ, இறைச்சியோ, பாலாடைக் கட்டியோ, வெண்ணெயோ கிட்டவில்லை. நாட்டில் எங்கும்

பஞ்சமும் பட்டினியும் கோரத் தாண்டவமாடின. நாடெங்கும் கய வாளித்தனம் நர்த்தனமாடியது; கிறித்தவரல்லாதவர்கள் செய்த கொடுமைகளைச் சொல்லி மாளாது. திருச்சபைப் பொருள்களைச் சூறையாடிப் பின்னர் திருச்சபைகளைக் கொளுத்திச் சிதைத்தனர். இரண்டு மூன்றுபேர் சவாரி செய்துகொண்டு யாதேனும் ஊரில் நுழைந்தால், அவர்கள் திருடர்களோ என அஞ்சி ஊர்வாழ் மக்கள் அவர்களிடமிருந்து தப்ப தம் வீடுகளை விட்டுவிட்டு ஓடினர். நிலத்தை உழுதுபயிரிட ஆள் இல்லாமையால், உண் ணும் பொருள்கள் கிட்டவில்லை. நாடெல்லாம் வறிதே பயிரிடப் படாது பாழாகக்கிடந்தன. ஏசுநாதரும், அவருடைய சீடர்களும் உறங்கிவிட்டனர். என்று அவர்கள் வெளிப்படையாகப் பேசிக் கொண்டனர்'.

ஸ்டீபனின் அரசாட்சியில் நடந்த சம்பவங்களைச் சுருக்கமாகக் காண்போமாக. ஆட்சியின் தொடக்கத்தில் அவருக்கு ஓரளவு வெற்றிவாய்ப்புகள் கிட்டின. கிளஸ்டரைச் சார்ந்த இராபர்ட் (மாடில்டாவின் ஒன்றுவிட்ட சகோதரர்) மேற்கு இங்கிலாந்தில் தோற்கடிக்கப்பட்டார். வடக்கில் படையெடுத்துவந்த ஸ்காட் லாந்து மன்னர் டேவிட்டின் படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. 1138ஆம் ஆண்டில் ஸ்டான்டர்டு என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் அவர் தோற்கடிக்கப்பட்டார். ஆனால் பின்னர் ஸ்டீப னின் ஆட்சியில் சச்சரவுகள் மூண்டன. முதலில் அவருக்கெதி ராகச் சண்டையிட்டவர்கள் பாரன் பிரபுக்களில் ஒரு சாராராகும். அவர்கள் கருவூலத்தலைவரும், சாலிஸ்பரி பிரபு ரோஜரின்தலைமை யில் கிளர்ச்சி செய்தனர். பின்னர் ஸ்டீபனின் சொந்த சகோதர ரான வின்செஸ்டரின் தலைமையில்பிஷப்புகள் கிளர்ந்தெழுந்தனர். சிறிது காலத்திற்குப்பின் மாடில்டாவே இங்கிலாந்து வந்து சேர்ந்தாள். கி.பி.1141ஆம் ஆண்டில் நடைபெற்ற லிங்கன்போரில் அரசர் தோல்வியுற்று கைது செய்யப்பட்டார். அப்போது மாடில் டாவை ஆதரித்து நின்ற பிஷப்புகள் அவளையே அரசியென அறிவித்தனர். ஆனால் இலண்டன் குடிமக்களிடமிருந்து வரி யொன்றினை வசூலிக்க அவள் முயற்சித்தபோது அவள் முடி சூட்டிக்கொள்வதற்கு முன்னரே இலண்டனிலிருந்து விரட்டப் பட்டாள். அடுத்து, அவளுடைய சகோதரர் இராபர்ட் பிடிபட்டார். அவரை விடுதலை செய்யும் நோக்கத்தால், அரசரும் விடுதலை செய்யப்பட்டார். ஆக்ஸ்போர்டுக் கோட்டைக்குள் இருந்தமாடில் டாவை அவர் முற்றுகையிட்டபொழுது, மாடில்டா வெண்ணிற உடை உடுத்துக்கொண்டு (1142) கோட்டையிலிருந்து தப்பி யோடிவிட்டாள்,

இத்தருணத்தில் மாடில்டாவின் கணவர் நார்மண்டியை வெற்றிகண்டார். அவர் 1151ஆம் ஆண்டில் காலமானபோது அவருடைய திறமைவாய்ந்த மகன் அவரையடுத்து அரசு கட்டி லேறினன். அப்போது அவருக்கு வயது பதினெட்டு. ஹென்றி என்று பெயர் படைத்த அவர் கி. பி. 1152ஆம் ஆண்டில் இங்கிலாந்து வந்து சேர்ந்தார். வாலிங்போர்டுக் கோட்டையைக் கைப் பிடித்துக்கொண்டு அவர் தம் போர் நடவடிக்கைகளைத் தொடங்கினர். அக் கோட்டையை மாடில்டாவிற்காகப் பணிந்து நின்றதாகும். ஹென்றியின் போர் ஆயத்தங்களைக் கண்ணுற்ற ஸ்டீபனின் ஆதரவாளர்கள் அவரைக் கைவிட்டுவிட்டு ஓடி மறைந்தனர். பிஷப்புகள் மீண்டுமொரு முறை ஸ்டீபனுடன் சச்சரவிட்டுக் கொண்டனர். இருப்பினும், இவர்கள் அவருடன் சமாதான உடன்படிக்கையொன்று செய்துகொண்டனர் அதன்படி ஸ்டீபனின்மகன் ஈஸ்டாஸ் (Eustace) இறந்துவிட்டபடியால், ஹென்றியை அரியணைக்கு வாரிசென அங்கீகரிக்க வேண்டுமென்றும், ஸ்டீபன் தம் வாழுங்காலம்வரை அரசராக எதிர்ப்பொன்றுமின்றி ஆள வேண்டுமென்றும் முடிவாயிற்று. அதைத்தான் 'வாலிங்போர்டு உடன்படிக்கை' (1153) என்பர். ஸ்டீபன் அதனை ஒப்புக் கொண்டார். அடுத்த ஆண்டில் ஸ்டீபன் காலமானபோது (1154) ஆஞ்சுகோமகன் ஹென்றி இங்கிலாந்தின் முடிமன்னரானர்.

# 21. இரண்டாம் ஹென்றியும் முதலாம் ரிச்சர்டும்

## (அ) பிளான்டாஜெனட்டுகள்

மேலை ஐரோப்பாவில் சீரிய நிலைக்கு உயர்ந்த ஆஞ்சு வமிசத்தின் எழுச்சி வரலாற்றில் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. கி. பி. 1137ஆம் ஆண்டில் ஜஃப்ரி பிளான்டா ஜெனட் ஆஞ்சு மற்றும் மெயின் பகுதிகளின் சாதாரணக் கவுண்டாக இருந்தவர். பிளான்டா ஜெனட் என்ற 'சொல்லிற்கு 'மஞ்சள் நிறப் பூக்களைக் கொண்ட குத்துச்செடியின் கிளையினை அடையாளக் குறியாக அணிந்தவர்' என்று பொருள். இரண்டாம் ஹென்றி மன்னர் காலம் முதல் மூன்றும் ரிச்சர்டு அரசராயிருந்தவரை ஆண்ட இங்கிலாந்து மன்னர்கள் பிளான்டாஜெனட் வம்சத்தைச் சாந்தவர்கள். ஜஃப்ரியின் மகன் ஹென்றி பிரான்ஸின் மூன்றிலிரண்டு பகுதிக்கும் இங்கிலாந்திற்கும் அரசராக கி. பி. 1154-ல் முடிசூட்டிக் கொண்டார். ஜஃப்ரி பேராசைக்காரர்; அவருடைய மனைவி மாடில்டா இங்கிலாந்து நாட்டை ஸ்டீபன் மன்னரிடமிருந்து பறித்துக்கொள்ள (1135-52) வெகு பாடுபட்டாள். ஜஃப்ரி நார்மண்டி டச்சியை வெற்றி கொள்ளும் ஆர்வத்தில் தம் நேரத்தைக் கழித்தவர். ஜஃப்ரி காலமான ஓராண்டுக்குப் பின்னர் அவருடைய மகன் ஹென்றி அக்குவிடெயினின் வாரிசுரிமைக்காரியான ஈலியனுர் என்பாளை 1152ஆம் ஆண்டு மணந்து கொண்டார். பிரான்ஸ் மன்னர் ஏழாம் லூயி ஈலியனுரை மணவிலக்கம் செய்திருந்தார். ஈலியனுரை ஹென்றி திருமணம் செய்து கொண்டமையால் இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் இடையே நிலவிவந்த சக்தி சமன்நிலை சீர்குலையலாயிற்று. ஈலியனுர் கொணர்ந்த சீதனமும், தமக்கு ஏற்கெனவே வாரிசுரிமையாக கிட்டிய நார்மண்டியும், ஆஞ்சுவும் ஹென்றிக்கு பிரான்ஸ் நாட்டின் மேற்குப் பாதியை பெறும் வாய்ப்பினை நல்கியது. திருமணம் செய்து கொண்ட ஈராண்டுகளுக்குப் பின்னர், ஸ்டீபனுக்குப் பிறகு இங்கிலாந்து அரசராகும் உரிமையை அவர் பெற்றுர். இதன் பயனுக அவருக்கு டிவீட் ஆற்றிலிருந்து பிரனீஸ் மலை வரையிலான பகுதிகள் கிட்டின.

**இரண்டாம் ஹென்றி, (1154-1189):** ஹென்றி முடிசூட்டிக் கொண்டபோது பிளான்டா ஜெனட் வமிசம் ஆங்கில அரியணையில் அமரும் அரும் வாய்ப்பினைப் பெற்றது. இவ்வமிச அரசர்கள்




படம் 6

இரண்டாம் ஹென்றியின் காலத்தில் ஆங்கிலேயருக்குச் சொந்தமான பிரெஞ்சுப் பகுதிகள்

சீரும் சிறப்பும் மிக்கவர்கள். அவர்கள் அனைவரும் திறமைசாலிகள்; எனினும் அவர்களில் பெரும்பாலோர் அதிர்ஷ்டக் கட்டைகள். இவ் வம்ச அரசர்களுள் ஒருவரான இரண்டாம் ஹென்றி மன்னர்

தலைசிறந்தவர் எனின் அஃது மிகையாகாது. தம் அரும்பணிகளால் இங்கிலாந்தின் அனைத்துத் துறைகளிலும் அவர் பெயர் நிலைத்து நிற்கலாயிற்று. குறிப்பாக ஆங்கிலச் சட்டங்களில் அவர் ஆற்றிய தொண்டினைக் காலமெல்லாம் நினைவுகூறலாம். அரச அதிகாரமே தலையாயது என்பது குறித்து அவர் நிலைநாட்டிச் சென்ற மரபின் விளைவாக அவருடைய பலவீனரான குமாரர்கள் பதவியிலமர்ந்த காலத்தும் அவர்களைக் கட்டிக்காக்கும் கல்லமை பெற்றிருந்தன அம்மரபுகள். முதலாம் ரிச்சர்டும், ஜானும் பலவீனரான அரசர்கள்; அவருடைய மக்கள். ஆனால் இரண்டாம் ஹென்றியின் காதலற்ற திருமணத்தின் கனியாத பரிசுகளாக அவருக்குக் குடும்பத்தில் இன்பமற்ற வாழ்வும், நன்றி கெட்ட குமாரர்களும் பிறந்ததுதான் மிச்சம். தம் விருப்பப்படி இங்கிலாந்தின் வரலாற்றுக்கு வடிவங் கொடுத்த ஹென்றி, இறுதியில் அன்பிழந்தவராகவும், பரிந் திரங்கப் பெறுதவராகவும் காலமானது வேடிக்கைதான்.

ஹென்றியின் நடவடிக்கை: பிரான்ஸ் நாட்டில் அவர் பெற் றிருந்த ஏராளமான பகுதிகளைக் கண்காணிக்கும் நிமித்தமாகஅவர் காலத்தின் பெரும்பகுதியைத் தம் தாய்நாட்டில் செலவழிக்க வேண்டியவரானர். இருப்பினும் தம், வலிவான ஆட்சியின் விளை வாக விரைவில் இங்கிலாந்தின் விவகாரங்களில் அமைதியை நிலைநாட்டினர். இடையரு நடவடிக்கையை மேற்கொண்ட அவர் நாடு நெடுகிலும் பயணம் செய்து தவறு செய்த ஷெரீப்பையும் கலகக்காரப் பிரபுவையும் தண்டிக்கத் தவறவில்லை, 'எங்காவது நாளைக் கழிக்க அரசர் தீர்மானம் செய்தாரானல், காலைப்போதி லேயே எழுந்துவிடுவார் என்று நிச்சயமாக நம்பலாம். தம் பயணத்தில் திடீரென ஏற்படும் மாற்றத்தால் அனைவரையும் அவர் குழப்பத்தில் ஆழ்த்திவிடுவார். பின்னர் மக்கள் தலைதெறிக்க ஓடி, உன்மத்தம் பிடித்தவர்கள் போல, பொதிக்குதிரைகளை ஏவியும், இரதங்களை ஒன்றன்மீது ஒன்றை மோதவிட்டும் எங்கும் குழப் பத்தை விளைவித்து, நகரமே கட்டவிழ்த்து விடப்பட்ட காட்சி யாக இருக்கும்' என்று அவருடைய குடும்பப் புரோகிதர் குறிப்பிடு கிறுர். பாரன்பிரபுக்கள் உடனே அவரைத் தம் தனிப் பெருந்தலைவர் என்று உணர்ந்து கொள்வர். அவரிட்ட கட்டளையை ஒருசிறிதும் எதிர்ப்பு காட்டாமல் அவர்கள் கீழ்ப்படிந்தனர். ஸ்டீபனின் ஆட்சிக்காலத்தில் அனுமதி வாங்காமல் கட்டிய கோட்டைகள் இடித்துத் தரைமட்டமாக்கப்பட வேண்டும் என்று அவரிட்ட கட்டளையை அவர்கள் ஏற்றுக்கொண்டு அதன்படி நடந்தனர். நிலமானிய பிரபுக்களின் அராஜக ஆட்சி இரண்டாம் ஹென்றி யால் முடிவு கட்டப்பட்டதென்றல் அது தவருகாது.

## (ஆ) ஆர்ச்பிஷப் தாமஸ் பெக்கெட்

இங்கிலாந்து அமைதியை எதிர்நோக்கியது. இரண்டாம் ஹென்றி இங்கிலாந்தில் அமைதியை நிலைநாட்டினார். இனி இராச்சியத்தின் நிர்வாகத்தைத் திறம்பட செய்விக்க முனைந்தது அவருடைய செயலாக்க நெஞ்சம். தாமஸ் பெக்கெட் என்பார் அரசருடைய மதிமிக்க அமைச்சர்களில் தலைசிறந்தவர். அவர் இலண்டன் நகர வணிகரொருவரின் மகன்; ஆர்ச்பிஷப் தியோபால்டு என்பாரின் சமயப் பணியாள்களில் ஒருவர். அரசரின் செல்வாக்கினால் இலைமறைகாயாய் இருந்த பெக்கெட் 1154ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் சான்ஸ்சலராக உயர்பதவி பெற்றார். அவர் ஹென்றி மன்னரின் சிறந்த தனிப்பட்ட நண்பரும், சீரிய ஆலோசகருமானார். அவர் செல்வச் செழிப்பில் மிதந்து தவழ்ந்தார்; அவருடைய அரண்மனையில் பொன்னும் மணியும் பூத்துக் குலுங்கின. சொல்லொணு செலவு செய்து அவர் கொடுத்த களியாட்டங்களைக் கண்டோர் இறும்பூதெய்தினர். பொருள் செலவினை அவர் ஒருசிறிதும் பொருட்படுத்தினரில்லை.

கி. பி. 1162ஆம் ஆண்டில் பெக்கெட் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பாகப் பதவியேற்றவுடன் மேற்கூறிய ஆடம்பரச் செலவுகள் அனைத்தையும் அடியோடு ஒழித்து, மாறியதொரு வாழ்க்கையை அவர் மேற்கொண்டார். தூயதொரு துறவற வாழ்வினைக் கடைப்பிடித்த பெக்கெட்டின் இன்றைய வாழ்வு அவர்அரண்மனை ஊழியராக இருந்தபோது செய்த அன்றைய டாம்பீக வாழ்விலிருந்து முற்றிலும் மாறுபட்டிருந்தது. அதைவிட அதிகமாக மாறுபட்டிருந்தது அரசருக்கும் அவருக்குமிடையே நிலவிய நல்லுறவு. 'மனிதனால் இரண்டு எஜமானரிடத்தில் சேவை செய்ய முடியாது' என்று பெக்கெட் ஹென்றியினிடத்தில் எச்சரித்திருந்தார். மேலும் இங்கிலாந்து திருச்சபையின் தலைமைபீடத்தைத் தாம் மேற்கொள்ள நேரிட்டால் அவர்களிடையே நிலவிய நல்லுறவு நலிவுறும் என்று அவர் கூறியது பொய்க்கவில்லை. ஹென்றியும் பெக்கெட்டும் ஈடு சோடானவராய் விளங்கினர். ஹென்றி இறுமாப்புற்றவர்; வீருப்புடையவர்; தம் இச்சைப்படி இங்கிலாந்து முழுவதையும் கீழ்ப்படியவைக்கும் தீர்மானத்தைத் கொண்டவர். ஆனால் பெக்கெட்டும் இறுமாப்புடையவராகவே இருந்தார். திருச்சபையின் பெயரால் அரசரை எதிர்ப்பது தம் கடமையாகும் என்று அவர் கருதினர்.

**திருச்சபை மன்றங்கள்:** சிவில் மன்றங்களிலிருந்து திருச்சபை மன்றங்களை முதலாம் வில்லியம் பிரித்திருந்தார் என்பதை

ஏற்கெனவே அறிந்துள்ளோம். தம் குடிமக்கள் அனைவரும் அரசருடைய சட்டதிட்டங்களினுல் கட்டுப்படவேண்டும் என்று இரண்டாம் ஹென்றி விழைந்தார். திருச்சபை மற்றும் நிலமானிய சலுகைகளுக்கு எதிராக அரசரது ஆதிக்கமே வலியுறுத்தப்பட வேண்டுமென்பது அவருடைய கொள்கையாகும். குற்றம்புரிந்த சமய குருமார்கள் பற்றிய பிரச்சினை குறித்து அவர் திருச்சபையுடன் மோதவேண்டியவரானுர். கிரிமினல் குற்றங்களைப் புரிந்திருந்தாலும், திருச்சபைக் குருமார்கள் திருச்சபை மன்றங்களிலுலே விசாரிக்கப்பட வேண்டுமென்ற உரிமை அப்போது நடைமுறையிலிருந்தது. இப் பழக்கத்தைத் 'திருச்சபைக்கு அனுகூலம்' (Benefit of clergy)என்பர். கொலைக் குற்றம் புரிந்தவர்களைக்கூடத் தண்டிக்காமல், பிராயச்சித்தமோ அல்லது அவர் வகித்த பதவியிலிருந்து கீழ்நிலைக்குத் தள்ளப்படுவதோ போன்ற சிறு தண்டனைகளைப் பெற்று திருச்சபை ஊழியர்கள் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பிவந்தனர். இதை இரண்டாம் ஹென்றி ஏற்க மறுத்ததுடன், அதைத் திருத்தவும் முற்பட்டார். அக் காலத்தில் ஓரளவு எழுதவும் படிக்கவும் அறிந்திருந்தவர்கள் தங்களைச் சமய குருமார்கள் என்று சொல்லிக் கொள்ளுமளவிற்கு இம் முறை பயன்படுத்தப்பட்டது.

**கிளாரன்டன் அரசியல் சட்டங்கள்:- (Constitutions of Clarendon 1164):** தாமஸ் பெக்கெட் ஆர்ச் பிஷப்பாகப் பதவியேற்ற அடுத்த ஆண்டில் சம்பவமொன்று நிகழ்ந்தது. சமய குருமார் ஒருவர் செய்த கொலைக் குற்றத்திற்கு எளிய தண்டனை கொடுக்கப் பெற்று விடுதலையாகியிருந்தார். ஹென்றி மன்னர் கடும் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமெனத் தீர்மானித்தார். கிரிமினல் குற்றம் புரிந்த சமய குருமார்களை நடத்தும் முறை முதலாம் ஹென்றி காலத்தில் கடைப்பிடிக்கப்பட்டபடி அம் முறையைப் பின்பற்ற வேண்டுமென இரண்டாம் ஹென்றி அறிவித்தார். அதற்கு ஆர்ச்பிஷப்பின் சம்மதத்தையும் அரசர் வேண்டினுர். ஆர்ச்பிஷப் பெக்கெட் அரசர் வேண்டுகோளுக்குச் செவிமடுத்து வேண்டா விருப்போடு சம்மதத்தை வழங்கினுர். அதனை அடுத்து அரசரின் கவுன்சில் சபை கிளாரன்டன் என்னுமிடத்தில் கூடியபோது பெக்கெட் அரசரைச் சந்திக்கும் வாய்ப்பினைப் பெற்றுர். அப்போது கவுன்சில் சபைக் கூட்டத்தில் தாம் கொடுத்த சம்மதம் தப்பித் தவறிக் கொடுக்கப்பட்டுவிட்டதென்று அறிவித்தார். தாம் கொடுத்த வாக்குறுதியை அவர் திரும்பப் பெற்றுக் கொள்ளப் போவதாகவும், அரசர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்ததினுல் பெரும் பாவத்தைச் செய்துவிட்டதாகவும் இனி அத்தகைய பாவத்தைச் செய்யப்போவதில்லை என்றும் அறி

வித்தார். அதைக் கேட்ட ஹென்றி மன்னர் இராச்சியத்தில் கடைப்பிடிக்கப்பெற்ற ,தொன்மையானப் பழக்க வழக்கங்கள் என்ற சட்டதிட்டங்களை வெளியிட்டார். பின்னர் அவற்றைத்தான் 'கிளாரன்டன் அரசியல் சட்டங்கள்' என்று கூறினர். மேற் கூறிய ஆவணத்தில் (document) பழைய சச்சரவுகளைப் பற்றிய சில ஷரத்துகள் குறிப்பிடப்பட்டிருந்தன. அவற்றில் குறிப்பாக ஒன்று குறிப்பிடத்தக்கதாகும். ஆர்ச்பிஷப்பின் மன்றத்தால் விசாரிக்கப்பட்ட வழக்குகளை அரசரின் அனுமதியின்றி ரோமாபுரி போப்பாண்டவருக்கு மேற் முறையிடுதல் கூடாதென்பதாகும். கிரிமினல் வழக்குகளில் ஈடுபட்ட சமய குருமார்களைப் பற்றிய முக்கியப் பிரச்சினை குறித்து, ஹென்றியின் ஆணை இதுதான். கிரிமினல் குற்றஞ்செய்த சமய குருமார்கள் குற்றமுடையவர்கள் என்று திருச்சபை மன்றத்தில் தீர்ப்பானால், அத்தகைய குற்ற வாளிகள் சமய குருமார் பதவியிலிருந்து உடனே நீக்கப் பெற்று பின்னர் சாதாரண நீதி மன்றங்களினால் விசாரிக்கப்பட அவர்கள் அனுப்பப்பட வேண்டுமென்றும் பின்னர் அதற்கான தண்டனையைப் பெற வேண்டுமென்றும் இரண்டாம் ஹென்றி கருத்தை வெளியிட்டார். மேற் குறிப்பிடப் பெற்ற கிளாரன்டன் சட்டதிட்டங்களுக்கு ஆர்ச்பிஷப் தாமஸ் பெக்கெட் அங்கீகாரம் அளித்து அதற்கான முத்திரையைப் பதிக்க வேண்டுமென ஹென்றி வலியுறுத்தினர் (1164). பெக்கெட் இதனை ஏற்க மறுத்துவிட்டார். 'ஒரு குற்றம் புரிந்தவரை இரு முறை தண்டிப்பது கடவுளின் நியாயமன்று' என்று மேலும் பெக் கெட் குறிப்பிட்டிருந்தார். கடுங்கோபம் கொண்ட ஹென்றி, ஆர்ச் பிஷப்பை நார்த்தாம்ப்டனில் கூட்டப்பெற்ற கவுன்சில் சபைக்கு வரவேண்டுமென ஆணையிட்டார். பெக்கெட் நார்த்தாம்ப்டன் வந்து சேர்ந்தார். அங்கிருந்த திருச்சபைக்குச் சென்றார். அங்கு பொதுத் தொழுகை நடத்திவிட்டுத் தம்முடைய ஆர்ச்பிஷப்பின் அடையாளமான சிலுவையைக் கைகளில் ஏந்திக் கொண்டு அரசரைக் காணக் காத்து நின்றார். ஹென்றி அவரைப் பார்க்க மறுத்துவிட்டார். ஆனால் லெஸ்டர் பிரபுவை அனுப்பி அவர் அரசருடைய ஆணைக்குக் கீழ்ப்படிய வேண்டுமென வேண் டினர். லெஸ்டர் பிரபுவைக் கண்ட பெக்கெட், ராபர்ட், (லெஸ்ட ரின் சொந்தப் பெயர்) உங்களின் சமயத்தலைவர் என்ற முறையில் நீங்கள் எனக்கு விசுவாசப் பிரமாணம் செய்யக் கடமைப்பட்டவர். எனவே, நான் உங்களிடம் பேச மறுக்கிறேன்' என்றார் பெக்கெட். லெஸ்டர் பிரபு தயங்கினர். பெக்கெட் அறையை விட்டு வெளியேறினர். அரச ஆணையை பெக்கெட் முழுமையாக ஏற்க மறுத்துவிட்டார். அதனால் அவர் இங்கிலாந்தில் தங்குவதும் நல்லதாகப்படவில்லை. எனவே மாறுவேடத்தில் அவர் இங்கி

லாந்தைவிட்டு வெளியேறி, அடுத்து ஆறு ஆண்டுகள் (1164-70) பிரான்ஸில் நாடுகடத்தப்பட்டவர்போல் வாழ்ந்தார்.

**பெக்கெட் நாடுதிரும்பலும் புதிய சச்சரவும்:** வெளிநாட்டில் வாழ்ந்தஞான்று பெக்கெட், அப்போது போப்பாண்டவராயிருந்தவரின் உதவியை நாடினார். ஆனால் போப்பாண்டவர், பேரரசர் முதலாம் பிரடரிக் என்பாருடன் சச்சரவிட்டுக் கொண்டிருந்தமையால் பெக்கெட்டிற்கு அவரால் உதவ இயலவில்லை. இரண்டாம் ஹென்றியும் பெக்கெட்டைப் பழிவாங்கத் தவறவில்லை. கான்டர்பரி ஆர்ச்பிஷப் ஆட்சிப் பகுதியின் வருவாய் அனைத்தையும் பறிமுதல் செய்து கொண்டார். இதையறிந்த பெக்கெட் அரசர் இரண்டாம் ஹென்றியையும் அவருடைய அமைச்சர்கள் அனைவரையும் சமய விலக்கம் செய்துவிட்டதாக மறுமொழி விடுத்தார். ஆறு ஆண்டுகள் முடியுந் தறுவாயில் இருவருக்குமிடையே மூண்ட சச்சரவு ஒரு வழியாகத் தீர்ந்துபோனவுடன், தாமஸ்பெக்கெட் 1170ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் நாடு திரும்பினார். துரதிர்ஷ்டவசமாக நாடு திரும்பிய சூட்டோடு பிறிதொரு விவகாரத்தில் அரசருக்கும் ஆர்ச்பிஷப்பிற்கும் மனத்தாங்கல் ஏற்பட்டது. பெக்கெட் இங்கிலாந்தில் இல்லாதிருந்த காலத்தில் இரண்டாம் ஹென்றி தம் மகன் இளவரசன் ஹென்றியை அரசராக முடிசூட்டிவிட்டார். இம் முடிசூட்டும் வைபவத்தை யார்க் ஆர்ச்பிஷப்பை நடாத்தி வைக்குமாறு அரசர் பணித்திருந்தார். இவ்வநியாயத்தை பெக்கெட் சகித்துக் கொள்ள ஒருப்படவில்லை. நாடு திரும்பியவுடன் பெக்கெட் அந் நிகழ்ச்சியில் பங்குகொண்ட பிஷப்புகள் அனைவரையும் தவறு செய்தமைக்கு மன்னிப்புக் கோருமாறு பணித்ததுடன், அரசரின் பாரன் பிரபுக்களில் சிலரை சமயவிலக்கமும் செய்துவிட்டார். அப்போது இரண்டாம் ஹென்றி பிரான்சில் தங்கியிருந்தார். பெக்கெட் செய்த நடவடிக்கைகளைக் கேட்டறிந்த ஹென்றி கடுங்கோபம் கொண்டு 'என்னுடைய உப்பைத்தின்றும் கோழைகள் யாரேனும் இந்த கட்டுக்கடங்காத பூசாரியைத் தீர்த்துத் தொலைக்கக் கூடாதா?' என்று இரைந்தார். நான்கு நைட் வீரர்கள் விரைந்தெழுந்து ஹென்றி அவசரத்தால் கோபத்தால் கொதித்துக் கூறிய சொற்களை நம்பி அதன்படியே பெக்கெட்டைத் தீர்த்துக்கட்ட முடிவுசெய்தனர். பிரான்சிலிருந்து கப்பலேறி அவர்கள் இங்கிலாந்து சேர்ந்தவுடன் நேராகக் காண்டர்பரிக்குப் புறப்பட்டுச் சென்றனர் (1170).

**பெக்கெட் கொலை, 1170:** கி. பி. 1170ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 29ஆம் நாள் மாலை நேரம். திருக்கோயிலில் மாலை நேர வழிபாட்டுப் பாடல்கள் ஓதப்பட்டன. நைட் வீரர்களின்

வருகையை அறிந்த துறவிகள் திருக்கோயிலின் கதவுகளை அடைக்க விரைந்தனர். அதனைக் கண்ட பெக்கெட் 'வழிபாட்டுக்குரிய புனித இடத்தை கோட்டை கொத்தளம் போன்று காவலிடமாக மாற்றக் கூடாது' எனக் கூறினர். உருவிய வாள்களுடன் நைட் வீரர்கள் உள்ளே நுழைந்தனர். வழிபாட்டில் ஈடுபட்டிருந்தோர் நைட் வீரர்களின் தோற்றத்தைக் கண்டு துணுக்குற்றவர்களாய் அங்குமிங்கும் சிதறியோடினர். துறவிகள் பெக்கெட்டை ஒளித்துவைக்க முயன்ற போதும், அச்சமொன்றையும் அறியாதவரான தாமஸ் பெக்கெட் தமக்கு ஊறுவிளைவிக்க வந்த பகைவர்களை நேராக அணுகினர்.

'அரசருக்கும் நாட்டிற்கும் துரோகம் செய்த அந்தத் தாமஸ் பெக்கெட் எங்கே?' முன்னே விரைந்து வந்த பெக்கெட் 'அடியேன்தான் பெக்கெட்; நான் இதோ இங்கேயிருக்கிறேன்; நான் அரசருக்குத் துரோகியல்ல; நான் ஒரு (சமய குருமார்) பாதிரி. நீங்கள் ஏன் என்னைத் தேடுகிறீர்கள்' என்று வினவினர். அக் கொடியவர்களின் கைகளில் அவர் சிக்குண்டார். தம்மை யாரும் பிடித்துக் கொள்ளக்கூடாது என்பதற்காக அவர் தூண் ஒன்றினைப் பிடித்துக்கொண்டார். ஆனல் நைட்வீரர்களில் ஒருவன் தன் உடைவாளால் பெக்கெட் தலையில் அணிந்திருந்த மகுடத்தை தவெட்டினன். அதன் விளைவாக அவருடைய மண்டையோட்டின் ஒரு பகுதி வெட்டுண்டது. மற்றவர்களும் அவரைத் தாக்கி அடித்தனர். பெக்கெட் மரமெனத் தரையில் சாய்ந்தார். 'ஏசுநாதரின் பெயரும் புகழுக்காகவும், திருச்சபையைப் பாதுகாக்கவும் நான் மரணத்தை ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்' என்று பெக்கெட் அலறினர். கொலைகாரர்கள் மீண்டும் அவரைத் தாக்கினர்கள். ஆர்ச்பிஷப்பின் செங்குருதி வழிபாட்டு மேடைக்குச் செல்லும் படிகளில் கொட்டிக் கறை படிந்ததைக் கண்டோர் நெஞ்சு துடுக்குற்றனர். 'நைட் வீரர்களே, போதும் இனி அவரால் எழுந்திருக்க முடியாது; புறப்படுங்கள் போகலாம்' என்று கொலைகாரர்களில் ஒருவன் கூறினன். வீரராக வாழ்ந்தது போன்றே பெக்கெட் வீரராக மடிந்தார்.

இக் கொடுங்கொலை கிறிஸ்தவ உலகத்தையே அதிர வைத்தது. இவ் வடாத செயல் அரசரையும் வாட்டி வதைத்தது. ஹென்றி தம் தூதரை போப்பாண்டவரிடம் அனுப்பி, தமக்கு ஆர்ச்பிஷப்பைக் கொல்லும் நோக்கம் இருந்ததில்லை என்று நிலை நாட்ட முயன்றார். ஆனல் போப்பாண்டவர் அவருக்குப் பாவ மன்னிப்பு அளிக்க மறுத்து விட்டார். திருச்சபைக் கெதிரான கிளாரண்டன் சாசன ஷரத்துகளில் ஒன்றுன போப்பாண்ட

வருக்கு மேல் முறையீடு செய்வதைத் தடுத்திருந்த நிபந்தனையை மாற்றிக்கொண்டாலன்றி அரசரின் பாவத்திற்குக் கழுவாய் கிடையாதெனப் போப்பாண்டவர் உறுதியாக நின்றார் (1172). இறுதியாக ஹென்றி கழுவாய் வேண்டிப் பிராயச்சித்தமாக பொது வான நிகழ்ச்சியொன்றைச் செய்தார். பெக்கெட் கொலையுண்ட பலிபீடத்தின்மீது தம் உடலைச் சாட்டையால் அடிக்கும்படி துறவி களை அனுமதித்து வேண்டி வழிபட்டார். அன்றைய நாளி லிருந்து சமயச் சீர்திருத்தம் வரைகுற்றம் புரிந்த சமயக்குருமார்கள் அரசரின் கோபத்திலிருந்து பாதுகாக்கப்பட்டனர். தியாக சீலரான பெக்கெட்டின் தியாகம் வீண் போகவில்லை. அவரின் உடல் கான்டர்பரி திருக்கோயிலுக்குள் புதைக்கப்பட்டது.

சமயத்திற்காக உயிர் துறந்தோரின் புனித பட்டியலில் பெக்கெட்டின் பெயரையும் போப்பாண்டவர் சேர்த்தார். கான்டர்பரியில் இருந்த செயின்ட் தாமஸின் திருக்கோயிலுக்கு மக்கள் ஷயர்கள் அனைத்திலிருந்தும் வந்துசென்றனர். அவர் பெயர் வீரக் கதையின் நடுநாயகமாயிற்று; அதிசயமாயிற்று. அவருடைய சமாதிக்கருகில் அவர் மரணத்தினையடுத்து வியத்தகு நிகழ்ச்சிகள் தோன்றியதாக அறிவிக்கப்பட்டது. இங்கிலாந் தின் மாபெரும் வீரரானமையால் இங்கிலாந்திலேயே மதிப்பு மிக்க துறவியென்றும், தியாகசீலர் என்றும் மக்களால் போற்றப் படலானார் செயின்ட் தாமஸ். அரசரின் கருத்து நியாயமான தாகவும், பெக்கெட்டின் கருத்து தவறானதாகவும்கூட இருந் திருக்கலாம். ஆனால் அரசர் கொடுங்கோலராகக் கருதப்பட்டார். திருச்சபையின் பெயரால் அரசரை எதிர்க்கக்கூடிய துணிச்சல் ஆர்ச்பிஷப் ஒருவருக்கே இருந்ததென்பதை யாரும் மறுக்க முடியாது. கொடுங்கோலர்களுக்கு மக்கள் மண்டியிட்டுத் தான் பணியலாம். ஆனால் அவர்கள் அநீதியை எதிர்த்துப் போராடும் துணிச்சல் பெற்றவர்களைத்தான் அன்பாக நேசிக்கிறார்கள் என்பதற்கு பெக்கெட் ஓர் எடுத்துக்காட்டு. பெக்கெட்டும் விடாப் பிடியர்; திமிர் பிடித்தவர்; எனினும் தியாகம் அவரை உயர்த்தி விட்டது.

## (இ) இரண்டாம் ஹென்றியின் பணிகள்

இரண்டாம் ஹென்றி முப்பத்தைந்து ஆண்டுக்காலம் ஆட்சி செய்தார். அவர் ஆட்சியில் பல்வேறு சம்பவங்கள் நடந்தன. அவற்றுள் ஒன்றுதான் பெக்கெட்டுடன் அவர் சச்சரவிட்டுக் கொண்டதாகும். அச் சம்பவம் வரலாற்றுச் சிறப்புமிக்கதெனில் மிகையாகாது. பெக்கெட்டுடன் நடைபெற்ற தகராறில் முழு

வெற்றிபெற அரசரால் முடியவில்லை என்பது உண்மையாயினும், ஏறத்தாழ மற்றெல்லா விஷயங்களிலும் அரசர் வெற்றிபெற்ருர் என்று கருதினுல் அது தவருகாது. இங்கிலாந்தின் அரசியல் அமைப்பு மற்றும் சட்டதிட்டங்கள் ஒரு மனிதனுலேயோ அல்லது ஒரு குறிப்பிட்ட சமயத்தில் மனிதர் குழுவினுலோ உருவாக்கப் பட்டவை அல்ல. பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் சட்டதிட்டங்கள் அப்படித்தான் உருவாயின. ஆனுல், இங்கிலாந்திலோ சட்டதிட்டங்கள் படிப்படியாக வளர்ச்சி பெறலாயின. ஆனுல் இரண்டாம் ஹென்றியும் அவருடைய அமைச்சர்களும் இங்கிலாந்து முழுமைக்குமான பகுத்தறிவு அடிப்படையில் சட்டத் தொகுப்பொன்றனை உருவாக்க முயன்றனர், மேலும் அச் சட்டத் தின் வடிவஅமைப்பையும் அவர்களின் காலத்திற்குப் பின்னரும் அது வளர்ச்சியுற வேண்டிய வழிவகைகளையும் உறுதிப்படுத்திச் சென்றனர் என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். ஹென்றி சட்ட ஆட்சிக்கு வழிகோலினுர் எனின் மிகையாகாது.

நிலமானியதிட்டம் நாட்டின் பெரும்பாலான மக்களை ஸ்தல பாரன் பிரபுக்களின் கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருந்தது. பல வீனர்களான அரசர்கள் ஆட்சியில் இருந்தபோது பாரன் பிரபுக் களின் கட்டுக்கடங்கா அதிகாரத்தினுல் மத்தியஅரசு பலவீனப் பட்டிருந்தது. எடுத்துக்காட்டாக, ஸ்டீபனின் ஆட்சியைக் குறிப்பிடலாம். ஸ்டீபனை அடுத்து பதவிக்கு வந்தவர் இரண் டாம் ஹென்றி. ஸ்டீபனின் ஆட்சிக்காலத்தில் பாரன் பிரபுக்கள் தாங்கள் விரும்பியபடி நடந்து கொண்டிருந்தனர். ஆனுல் இரண்டாம் ஹென்றியோ நாட்டில் அராஜகத்திற்கு மாருக நிலை யான ஆட்சியைக் கொடுத்ததோடன்றி மத்திய அரசாங்கத்தின் பணியையும் நாடெங்கிலும் பரப்பினுர். அதன் பயனுக முடி யாட்சியின் அரச அதிகாரத்தை இங்கிலாந்துக் குடிமகன் ஒவ் வொருவனும் உணர்ச்சிபூர்வமாக அறிந்தான்.

கருவூல மன்றம்:- மத்திய அரசாங்கம் க்யூரியா ரெஜிஸ் என்னும் பெயர் கொண்ட அரசமன்றமாயிருந்தது. அதன் அதிகா ரத்தைப் பெருக்கியதற்கு இரண்டாம் ஹென்றியே மூல காரண மாயிருந்தார். முதலாம் ஹென்றியின் காலத்தில் கருவூல மன்றம்- அதுதான் பின்னர் க்யூரியா ரெஜிஸாக மாறியது- நாட்டின் பொரு ளாதார விவகாரங்களைக் கவனிக்க அமைக்கப்பட்டது. இப்போது கருவூலம் அரசாங்கத்தின் நடுநாயகமாய் அமைந்தது. அம் மன்றத்தின் உறுப்பினர்களாக ஜஸ்டீயர், சான்சலர், போலிஸ் அதிகாரி, அரண்மனைக் காப்பாளர், மார்ஷல் என்னும் அதிகாரி, பொருளாளர் போன்றவர்களுடன் அரசரின் குறிப்பறிந்து செயல்படும் சிறப்பதிகாரிகளும் கருவூல வாரியத்தில்

கூடினர். இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் க்யூரியா ரெஜிஸ் உயிருள்ள மரம் போன்று தனித்தியங்கத் தொடங்கியது. பொது முறையீடுகள் மன்றம் அவருடைய ஆட்சியின் போதுதான் உருவாக்கப்பட்டது. பல்வேறு பிரபுக்களும் ஏனைய சுதந்திரக்குடி மக்களும் அரசரின் நீதிபதிகளுக்கு முன்னர் தங்களுடைய முறை யீடுகளை (வழக்குகளை) கொணர்ந்தபோது அவற்றை விசாரணை செய்யும் பொறுப்பு இப்போது முறையீடுகள் மன்றத்தின் பணி யாகும்.(மகாசாசனம் வெளியானபிறகு இம்மன்றம் வெஸ்ட்மின்ஸ் டரில் நிலையாக அமரலாயிற்று. அரசருடன் பயணம் செய்து வந்த இம்மன்ற நீதிபதிகள் முன் விசாரணைக்கு வந்த வழக்குகளை விசாரிக்க வழக்காடுபவர்கள் அரசர் சென்ற இடங்களுக்கெல்லாம் இதற்கு முன்னர் சென்று வந்தார்கள். அத்தகைய பயணங்களிலி ருந்து அவர்களைக் காக்கவே இம்மன்றம் நிலையாக வெஸ்ட்மினிஸ் டரில் அமரலாயிற்று. இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக்கு முடியும் வரை கூட அரசருடைய பெஞ்ச் மன்றம் (Court of King's Bench) உருவாக்கப் பெறவில்லை.

இங்கிலாந்தில் நீதியை நிலைநாட்ட அரசருடைய மன்றம் (மன்றங்கள்) மட்டும் போதுமானதாக இருக்கவில்லை. அரசர் எங் கெல்லாம் செல்லுகிறாரோ அங்கு அரசமன்றம் கூடவேண்டியதா யிற்று. அரசரோ இடைவிடாது சுற்றுப்பயணம் செய்து வந்தார். அவர் செல்லுமிடங்களுக்கெல்லாம் அரச மன்றத்தினர் சென்று வழக்குகளை விசாரிப்பது தொந்தரவாகக் காணப்பட்டது. சில நீதி மன்றங்கள் வெஸ்ட்மின்ஸ்டரில் நிலையாகப் பணியாற்றும் வகை யாக (சுற்றிவராமல், உருவாக்கப் பெற்ற போதுகூட, மக்களில் ஒரு சிலருக்கு அவ் விசாரணைக்காக இலண்டன் செல்ல வேண் டுவது அதிகச் செலவினை ஏற்படுத்தியது. ஆனால் மக்கள் நீதி மன்றங்களுக்குச் செல்ல முடியாதபோது, நீதிமன்மம் மக்களி டையே செல்லலாம் அல்லவா?

**கிளாரண்டன் அஸ்ஸைஸ், 1166:-** முதலாம் ஹென்றியின் ஆட்சியின்போது சுற்றி வரும் நீதிபதிகள் என்னும் முறை வழக்கத்திற்கு வந்தது. இம்முறை மேலும் திருத்தி அமைக்கப் பட எழுந்ததுதான் கிளாரண்டன் அஸ்ஸைஸ் என்னும் கிளாரண் டன் சட்ட சீர்திருத்தமாகும். கிளாரண்டன் சட்டதீர்திருத்தம் சுற்றிவரும் நீதிபதிகள் வழக்கு விசாரணை செய்யும் முறையை ஒழுங்குபடுத்தியது. இதை ஒழுங்குபடுத்தியவர் இரண்டாம் ஹென்றி மன்னராவார். இன்று வரை அஸ்ஸைஸ் நீதிமன்றங் களில் இம்முறை தொடர்ந்து செயல்பட்டுவருவது அவருடைய பெருமைக்கு எடுத்துக்காட்டாகும். குறிப்பிட்ட காலவரையறைக் குள் ஷயர்களில் தம் நீதிபதிகள் சுற்றுப்பயணம் செய்து,

அரசருடைய உரிமைகள் குறித்து விசாரணை செய்து ஒவ்வொரு கவுண்டியும் கட்டவேண்டிய வரிகளை நிர்ணயித்து ஷெரீப்புகளின் பணியினை மேற்பார்வையிட்டு, தம்சொந்தமன்றங்களில் இருந்த பாரன் பிரபுக்களின் அதிகாரங்களையும் மேற்பார்வையிட வேண்டுமென அவர் பணித்தார். சுற்றிவரும் நீதிபதிகளின் பணியின் வாயிலாக ஷயர்களிலும், நூற்றுவர் மன்றங்களிலும் செயல்பட்ட தல அதிகாரிகள் மத்திய அரசாங்கத்துடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு அவர் முயன்றார்.

**ஜூரி முறையின் தொடக்கம்:-** கிளாரண்டன் அஸ்ஸைஸ் மூலம் பிறிதொரு நடவடிக்கையும் மேற்கொள்ளப்பட்டது. அது தான் ஜூரிமுறை சீர்திருத்தப்பட்டதாகும். நூற்றுவர் மன்றம் ஒவ்வொன்றிலிருந்து சட்டத்திற்குக்கட்டுப்பட்ட பன்னிரு குடிமக்களும், ஷயரில் இருக்கும் ஒவ்வொரு கிராமத்திலிருந்து நால்வரும் தத்தம் ஷயரில் ஹென்றி மன்னரான காலத்திலிருந்து கொலைகாரனாகவோ அன்றி திருடனாகவோ யாரேனும் சந்தேகிக்கப்பட்டவர்களா என்பதை சூளுரைத்து உறுதி செய்ய வேண்டும்; அவ் வகை சந்தேகத்திற்காளானவர்களை அவர்கள் அரசரின் நீதிபதிகளின் முன்னிலையில் ஷயர் மன்றத்தில் கொண்டு நிறுத்த வேண்டுமென்றும் ஆணையிட்டார். விசாரணைக்காளானவரின் அண்டை வீட்டுக்காரர்களை உள்ளிட்ட இக் குழுவினைத் தான் ஜூரி என்றழைத்தனர். ஜூரி என்ற சொல் ஜூரே என்ற சொல்லிலிருந்து பிறந்தது. ஜூரெ (Jure)என்றால் சூளுரைத்தவர்கள் அல்லது அரசரின் அதிகாரிகள் கேட்ட வினாக்களுக்கு சத்தியவாக்குப் பிரமாணம் செய்து பதில் சொன்னவர்கள் என்று பொருள்.

ஜூரி முறை ஒன்றும் புதிதாகப் புகுத்தப்பட்ட முறையன்று. முதலாம் வில்லியம் ஜூரிகளைப் பயன்படுத்தி டூம்ஸ்டே ஆய்வில் புள்ளி விவரங்களையும் உரிமைகளையும் உறுதிப்படுத்தினார். எட்வர்டு அதிபத்தரின் காலத்தில் ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பின் மதிப்பு என்னவாயிருந்தது; அதன் இன்றைய மதிப்பென்ன? என்பனபோன்ற கேள்விகளுக்கு டூம்ஸ்டே ஆய்வில் விடையளிக்க ஜூரிகள் பயன்படுத்தப்பட்டனர். இரண்டாம் ஹென்றி தம் ஆட்சிக்காலத்தின் போது ஜூரி முறையைப் பெரிதும் வளர்த்தார். தம் நிர்வாகப் பணிகள் அனைத்திலும் இம் முறையை அவர் பயன்படுத்தினார். கிரிமினல் வழக்குகளில் மட்டுமல்லாமல் (கொலை, கொள்ளை, பொய்க்கூற்று முதலிய குற்றங்களுக்காக சந்தேகிக்கப்பட்டவர்கள் கிரிமினல் வழக்குக்கு ஆளானவர்கள்) சிவில் வழக்குகளிலும் ஜூரி முறையைப் பயன் படுத்தினார். நிலமானியம் பெற்றவர்களில் ஒரு குறிப்பிட்ட நிலம் குறித்து அதனைப் பயன்படுத்திய

வர்களில் எவருக்கு உரிமை அதிகம் இருந்தது என்பதை நிர்ண யிக்கவும் இம்முறை பயன்படுத்தப்பட்டது. மேலும் நிர்வாகத் துறையிலும், பொருளாதார விவகாரத்திலும் (அரசருக்குச் சொந்த மாக வேண்டிய பறிமுதல்கள், புதையல்கள் முதலானவை குறித்து) இலாபங்கள் எவை எவை; ஷெரிப்புகளும் அவருக்குக் கீழ் பணிபுரிந்த பெய்லீப் போன்ற சிறு அதிகாரிகள் செய்த தவறு கள் எவை எவை? என்பனவற்றை ஆராயவும் இம் முறை பயன் படுத்தப்பட்டது. தலை மன்றங்களில் ஜூரிகளைப் பயன்படுத்தி யதும் அவர்களைத் தேர்ந்தெடுத்ததும் தல சுய ஆட்சிக்கு வழி வகுக்க மேற்கொள்ளப் பெற்ற சிறப்பான நடவடிக்கையாகும்.

**சோதனைமுறை விசாரணை (Trial by Ordeal) :-** இரண்டாம் ஹென்றியின் ஜூரிகள் ஒருகுறிப்பிட்ட விவரத்தைக் கூறிய சாட்சிகள் மட்டுமே என்பதைக் கவனத்திற் கொள்ள வேண்டும். அவர்கள் விசாரணைக்குக் கொணர்ந்த நபர்கள் குறிப் பிட்ட குற்றங்களைப்புரிந்தவர்கள் என்று சந்தேகிக்கப்பட்டவர் களா என்பதே இந்த விவரமாகும். இம்முறை தற்கால ஜூரி முறையிலிருந்து மாறுபட்டிருக்கிறது. [தற்கால ஜூரிகளுக்கு வழக்கு பற்றிய முன் விவரம் ஒன்றும் தெரிந்திருக்கக்கூடாது. நீதிமன்றம் வரும்வரை ஒருவர் மற்றொருவரையும் அறிந்திருக்கக் கூடாது என்பதாகும்]. குற்றம் புரிந்தவர்களை விசாரித்த முறை தற்கால முறையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால்– கொடுமை யானது. குற்றம்ப் புரிந்தவர்களை பொருதச் செய்து குற்றம்புரிந்த வர் யார்? என்று விசாரிக்கும் பழக்கத்தை நார்மானியர் கொண்டிருந்தனர் (Trial by combat). அம்முறைப்படி வெற்றி பெற்றவனே நேர்மையானவன் என்று தீர்ப்பு கூறப்பட்டது. சோதனைமுறை விசாரணை மற்றொருவகை விசாரிக்கும் பழக்க மாகும். அது முந்தையதை விடத் தொன்மையானது. அதன்படி குற்றம் புரிந்தவர் ஒரு குறிப்பிட்ட தூரம் பழுக்கக் காய்ச்சின இரும்பைப்பற்றிச் செல்லவேண்டும். அத்தகைய பழுக்கக்காய்ச்சிய இரும்பைப்பற்றிச்சென்ற மூன்று நாட்களுக்குப்பின்னர் கையில் புண்ணாகி சீழ்வடிந்தால் அவன் குற்றம் புரிந்தவனென்றும் புண் ணாகாமல் வடுமட்டும் காணப்பெற்றால் அவன் குற்றம் புரியாத அப்பாவி என்றும் தீர்மானிக்கும்முறையைத்தான் சோதனைமுறை விசாரணை என்பர். இத்தகைய விசாரணை சமயசடங்கு போன் றது; தெய்வத்திற்கு முறையிடுவதைப் போன்றது, சட்டம்தோன் றிய தொடக்க நாட்களில் இம்முறை சாமானிய பழக்கமாக இருந்த தென்பதை மறுந்து விடக்கூடாது. படிப்படியாக இத்தொன்மை யான பழக்க வழக்கங்கள் வழக்காறு ஒழிந்து போயின. போப் பாண்டவர் மூன்றும் இன்னொசென்ட் என்பார் கி. பி. 1215 ஆம் ஆண்டில் சோதனைமுறை விசாரணையை ரத்து செய்தார்.

ஜூரிமுறை விசாரணை: (Trial by Jury):- சோதனை முறை விசாரணை வழக்காறு ஒழிந்தபோது, ஒருவர் குற்றம் புரிந்தவரா அல்லது அப்பாவியா என்பதைத் தீர்மானிப்பது எப்படி? இப் பிரச்சினையைத் தீர்க்க எழுந்ததுதான் ஜூரி முறை. குற்றம் புரிந்த தாகச் சந்தேகிக்கப்பட்டவரை விசாரிக்க அரசரின் நீதிபதிகள் ஜூரிகளை நாடவேண்டியவராயினர். அவர்கள் தீர்ப்பு கூறும் முன் சூளுரைத்து அதன் பின்னரே குற்றம் புரிந்ததாக சந்தேகிக்கப் பட்டவரின் குற்றம் குறித்துத் தீர்ப்புக் கூறினர். ஜூரி முறை விசாரணை பிற்காலத்தில் சிறு ஜூரி (Petty Jury) என்று கூறப்பட்டனர். இவர்கள் குற்றங் கூறும் ஜூரி அல்லது நிருபணம் செய்யும் ஜூரிகளிலிருந்து வேறுபட்டவர்கள். அவர் களையே பின்னர் கிராண்ட் ஜூரி என்றழைத்தனர். (கிராண்ட் ஜூரிமுறை இப்போது ரத்து செய்யப்பட்டுவிட்டது.) இடைக் காலத்தில் வாழ்ந்த பெரியோர்கள் ஜூரிமுறை விசாரணையை நியாயமானது என்று கருதவில்லை. ஆனால் தங்களை எம்முறை யிலும் விசாரணை செய்யக்கூடாது என்று மறுத்தவர்கள் உணவு கொடுக்கப்படாமலோ அன்றி சுமக்க முடியாத பெரும் பளுவினால் அமுக்கப்பட்டோ செத்தனர்.

ஸ்கூட்டேஜ் வரி 1159:- பாரன் பிரபுக்களின் அதி காரத்தைக் கட்டுப்படுத்த இரண்டாம் ஹென்றி பல நடவடிக்கை களை மேற்கொண்டார். அவருடைய ஆட்சியின் தொடக்கக் காலத்தில் அவர் படைக்கலப்பணம் அல்லது ஸ்கூட்டேஜ் என்னும் வரியை பாரன் பிரபுக்கள் கொடுக்க வேண்டுமெனப் பணித்தார். நிலமானிய ப்பிரபுக்கள் அரசருக்கு படைவீரர்களாகத் தம் துணைமானியதாரர்களை அனுப்புவதற்குப் பதிலாக பணமாகக் கட்டிவிட வேண்டுமென்று கோரும் முறை ஏற்பட்டது. அத் தகைய பணத்தைத்தான் ஸ்கூட்டேஜ் என்பர். அரசர் வசூலித்த பொருளைக் கொண்டு கூலிப்பட்டாளத்தினரைப் படைவீரர் களாக அமர்த்திக்கொண்டார். அங்ஙனம் அமர்த்தப்பட்ட படை வீரர்கள் அரசருக்கு விசுவாசம் காட்டினர். அதன் மூலம் பாரன் பிரபுக்களின் வலிமை குறைந்தது.

ஷெரிப்புகள் பற்றிய விசாரணை, 1170:- கி. பி. 1170-ம் ஆண்டில் அரசர் தம் நீதிபதிகளை நாடெங்கிலும் பயணம் சென்று ஷெரிப்புகளின் நடத்தை குறித்து விசாரணை செய்யும்படி பணித்தார். இவ் விசாரணையின் பயனாக ஏராளமான பாரன் பிரபுக்கள் ஷெரிப் பதவியிலிருந்து நீக்கப்பட்டனர். அவர் களுக்குப் பதிலாக கருவூலமன்றத்தில் பணியாற்றிய அரச அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர்.

படைத்தளவாடச் சட்டம் (Assize of Arms) 1181 :- இரண்டாம் ஹென்றி தம் ஆட்சிக்காலத்தின் இறுதியில் அஸ்ஸைஸ் ஆப் ஆர்ம்ஸ் எனப்படும் படைத்தளவாடச்சட்டத்தை வெளியிட்டார் (1181). அதன்படி இங்கிலாந்தில் வாழ்ந்த சுதந்திரக் குடிமக்கள் அனைவரும் தத்தம் சக்திக்குகந்த ஆயுதத்தளவாடங்களை அரசருக்குக் கொடுக்கவேண்டுமென ஆணையிடப்பட்டனர். இம்முறையில் தேசிய இராணுவத்தை மீண்டும் மலரச்செய்து அரசருக்குப் பாதுகாப்பளிக்கும் நம்பிக்கை வாய்ந்த படையை உருவாக்க வழி பிறந்தது. அந்நியப் படையெடுப்பிலிருந்தோ அன்றி பாரன் பிரபுக்களின் கலகத்திலிருந்தோ நாட்டைக் காக்க சுதந்திரக் குடிமக்களைக் கொண்ட படை பெரிதும் பயன்படும் என்று அரசர் கருதினர். இப்படை வீரர்களைப் போருக்கழைக்கும் பொறுப்பு ஷெரிப்புகளிடம் விடப்பட்டது. இத்தகைய படை நிலமானியப் படையை விட நம்பிக்கைக்குப் பாத்திரமானதாய் இருந்தது.

ஹென்றி மன்னர் பணியின் முக்கியத்துவம்:- இரண்டாம் ஹென்றி பிரஞ்சுமொழி பேசிய பிரபுக்களின் வழிவந்தவர். அவருக்குக்கிடைத்த ஆட்சிப் பொறுப்புப் பகுதியில் இங்கிலாந்து ஒருசிறு பகுதியேயாகும். இருப்பினும் அவர் அரச மன்றத்தை மையமாகக்கொண்டு, நாடு முழுமைக்குமான சட்ட முறையை நிலைநாட்டினர். எனவே, அவரை ஆங்கில சட்டமன்றங்கள் மற்றும் ஜூரிமுறை ஆகியவற்றின் தந்தை என்று அழைக்கலாம். மேனர் மன்றங்கள், நூற்றுவர் மன்றங்கள், மற்றும் ஷயர் மன்றங்களில் இருந்த நீதிபதிகளைவிட அரசமன்ற நீதிபதிகள் வல்லுநர்களாக இருந்தார்கள். பொறுத்தமானவர்களைத் தேர்ந்தெடுத்து எளிமையாக நீதிகிடைக்கச் செய்தமை இரண்டாம் ஹென்றி ஆற்றிய பணிகளில் சிறந்ததாகும். அதன் பயனாக இரண்டு விளைவுகள் தோன்றின. முதலாவது, அரசமன்றமே நீதியின் நிலைக்கலன் என்னும் கருத்து வளர வழிபிறந்தது. சட்டம் சிறப்புபெற இக்கருத்து தொடக்கமாயிருந்த தென்பதை இதன்மூலம் உணரலாம். ஆங்கில வாழ்க்கை முறையில் சீரிய அம்சங்களில் இஃதொன்றாகும். இரண்டாவது, அரசருடைய நீதிபதிகள் தம் தீர்ப்பினை எழுதி வைத்தார்கள். அத் தீர்ப்புகள் பிற்காலத்தில் பின்பற்றத்தக்க நல் மரபுகளாயின. இங்கிலாந்தின் பொதுச்சட்டம் எனப்படும் சட்டத்திற்கு அவை அடித்தளமாக அமைந்தன.

அயர்லாந்தும் இரண்டாம் ஹென்றியும்:- இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் அயர்லாந்தில் சச்சரவுகள்

மூண்டன. அவருடைய ஆட்சியின்போதுதான் இங்கிலாந்திற்கும் அயர்லாந்திற்கும் தொடர்பேற்பட்டது. ஆங்கிலேயர் கி. பி. 1170ஆம் ஆண்டில் அயர்லாந்தில் புகுந்தார்கள். அதுவே அயர்லாந்தினை வெற்றிகாண்பதற்குத். தொடக்கமாய் அமைந்தது எனில் அது மிகையாகாது.

பன்னிரண்டாம் நூற்றுண்டில் அயர்லாந்து, ஆரும் நூற்றுண்டு இங்கிலாந்தைப்போன்று காட்சியளித்தது. அப்போது அதனைப் பண்பபாடு குறைந்த இனத்தலைவர்கள் ஆண்டனர். அவர்களில் ஒருவரை அயர்லாந்தின் மேலான அரசர் என்று குறிப்பிட்டனர். அல்ஸ்டர், மன்ஸ்டர், லென்ஸ்டர், கன்னுட், மற்றும் மீத் என்னும் ஐந்து மாநிலத் தலைவர்களும் பெயருக்கு அயர்லாந்தின் தலைவர்களென மதிக்கப்பெற்றனர். பல்வேறு இனத்தவர்களுக்குள்ளே இடையருத போராட்டங்கள் தொடர்ந்து நடைபெற்றன. இனத்தலைவர்களில் ஒருவரான டெர்மத் மக்மூர்ரா என்பார்; அவர் வென்ஸ்டரின் அரசர். அவர் வேல்ஸிலிருந்த ஆங்கில நார்மானிய பிரபுக்களின் உதவியை வேண்டினர். பெம்ப்ரோக் ஏர்ல் பிரபுவான ஸ்ட்ராங்போ என்பார் ஆங்கில-நார்மானிய பிரபுக்களில் ஒருவர். டெர்மத்திற்கு உதவும் நோக்குடன் ஸ்ட்ராங்போ (1170) அயர்லாந்திற்கு வந்திறங்கினர். டெர்மத்தின் மகளை மணந்து கொண்டு, அவருக்குப் பின்னர் ஸ்ட்ராங்போவே லீன்ஸ்டரின் அரசராகப் பதவியேற்ருர். 1171ஆம் ஆண்டில் இரண்டாம் ஹென்றி அயர்லாந்திற்கு வருகை புரிந்தார். ஸ்ட்ராங்போர் வென்ஸ்டரில் அவருக்கு இறைவணக்கம் செய்தார். அவரைப் பின்பற்றி பல ஐரிஷ் தலைவர்களும் இரண்டாம் ஹென்றியை அரசராக ஏற்றுக்கொண்டு, அவரையே அயர்லாந்தின் அரசராகவும் இருக்கவேண்டுமெனக் கோரினர். அயர்லாந்தை விட்டுச்செல்லும் முன் இரண்டாம் ஹென்றி அதை ஸ்ட்ராங்போவிடம் விட்டுச்சென்ருர். ஸ்ட்ராங்போவும் அவரைச் சார்ந்த கூட்டாளிகளும் அதை ஏற்றுக்கொண்டனர். பின்னர் இரண்டாம் ஹென்றி அயர்லாந்தை இங்கிலாந்திற்குக்கட்டுப்பட்ட துணை இராச்சியமாக்கி, தம் இளைய மகனை பொறுப்பேற்க வைக்கலாமா என்று ஆழ்ந்து சிந்திக்கலானர். ஆனல் இளவரசர் ஜானின் அயர்லாந்து படையெடுப்பு (1185) முழுத் தோல்வியில் முடிவுற்றது.

**ஹென்றியின் மக்களிடையே மூண்ட முதற் கலவரம் (1173-74):-** பரந்து விரிந்து கிடந்ததம் இராச்சியத்தின் மூலை முடுக்கெல்லாம் இரண்டாம் ஹென்றி பயணம் செய்து, நீதியை நிலைநாட்ட தம் நேரத்தில் பெரும் பகுதியைச் செலவிட்டார்.

அவருடைய பணியை இருமுறை இவர் மக்களிடையே மூண்ட கலவரங்கள் குறுக்கிட்டன. அவர்களைக் கலகத்தில் இறங்குமாறு தூண்டி விட்டவள் அவர்களின் தாயாரேயாகும். அவருடைய மூத்த மகன் ஹென்றி தம் தந்தையார் உயிர்வாழ்ந்த காலத்திலேயே அரசராக முடிசூட்டப்பட்டார். எனினும் தந்தைக்கும் மகனுக்கும் இடையே சுமுகமான உறவு நிலவவில்லை. தம் இளைய மகனும், தமக்குப் பிரியமானவனுமான ஜானுக்குப் பிரான்ஸ் நாட்டில் நிலங்களைத் தர மூத்த ஹென்றி முயற்சி செய்தபோது, அது இளைய ஹென்றியை கலகம்செய்யத் தூண்டியது (1173-74). அதனையொட்டி இரண்டு ஆண்டு காலம் உள்நாட்டுப் போர் மூண்டது. இப்போர்கள் ஸ்டீபன் காலப் போர்களை நினைவு படுத்தின. ஆங்கிலக் கால்வாயின் இருமருங்கிலும் நிலத்தை மானியமாகப் பெற்றிருந்த பெரும் ஆங்கில நார்மானியப் பவன் பிரபுக்கள் இரண்டாம் ஹென்றியைப் பதவியிலிருந்து நீக்கும் நோக்குடன் இளைய ஹென்றியுடன் இணைந்து கொண்டனர். ஆனால் சிறு பிரபுக்களும் ஷெரிப்புகளும், புதிதாகப் பதவியேற்ற அரசு ஊழியர்களும் பழைய அரசரையே உறுதியாக ஆதரித்தார்கள். இங்கிலாந்தில் லெஸ்டர் பிரபுவின் தலைமையில் கலகச் காரர்கள் மத்திய நிலங்களில் போர்க்கொடி உயர்த்தினர். மத்திய நிலங்களே கலவரத்தின் மையமாக இருந்ததென்றால் மிகையாகாது. அத்தருணத்தில் ஸ்காட்டிய அரசரான சிங்க நெஞ்சன் வில்லியம் படையெடுத்து வந்து வடபகுதியை ஹென்றியின் உதவிக்கு உறுதுணையாக நிற்கச் செய்தார். ஆல்ன்விக் என்னுமிடத்தில் ஸ்காட்டிய அரசர் பிடிபட்டு, ஹென்றி மன்னருக்கு இறைவணக்கம் செய்யுமாறு கட்டாயப்படுத்தப்பட்டார். அத்துடன் அவருடைய கோட்டைகள் சிலவற்றையும் ஸ்காட்டிய அரசர் ஹென்றிக்குக் கொடுக்க வேண்டியவரானார். இதனை பாலெய்சி உடன்படிக்கை என்பர். (Treaty of Falaise, 1174).

பிரான்ஸ் நாட்டில் நடைபெற்ற கலகமோ மிகத் தீவிரமாயிருந்தது. இளைய ஹென்றியுடன் அவருடைய தம்பியர் ஜஃப்ரேயும் ரிச்சர்டும் இணைந்து கொண்டனர். பிரான்ஸ் மன்னரும், பிரிட்டானி, நார்மண்டி, அக்குவிடெயின் பாரன் பிரபுக்களும் தத்தம் சுதந்திரத்தை நிலைநாட்டிக்கொள்ளும் நோக்குடன் இளைய ஹென்றிக்கு ஆதரவு நல்கினர். எனினும் அடுத்த ஆண்டின் இறுதிவாக்கில் இக்கலகம் அடக்கியொடுக்கப்பட்டது.

இருப்பினும் அரசருடைய மக்கள் அதிருப்தியுற்றவர்களாகவே இருந்தனர். அவர்கள் பெற்ற வாரிசுரிமைப் பகுதிகள் போதுமானவையாக இல்லாதிருந்ததே அதிருப்திக்குக் காரணமாகும்,

ஜஃப்ரே பிரிட்டானியின் டியூக்காகப் பெற்றிருந்தார் •நார்மண்டியின் வாரிசுரிமை பெற்ற இளவரசியைத் திருமணம் செய்து கொண்டிருந்தார் அவர். ரிச்சர்டு அக்குவிடெயினின் அரசராகப் பெற்றிருந்தார் (1175). ஆனால் ஒரு சில ஆண்டுகளுக்குப் பின்னர் இளையஹென்றி காலமானார். அவருக்குப் பின்னர்ப் ஜஃப்ரேயும் இளவயதிலேயே காலமானார். ஆனால் ரிச்சர்டு தம் தந்தையை நிம்மதியாக வாழவிடவில்லை. அடுத்து பட்டத்திற்கு வரவேண்டியவர் ரிச்சர்டேயாயினும், அவரால் பொறுத்திருக்க முடியவில்லை. மேலும் தம் தந்தையின் கடைசி காலத்தை அமைதியாக கழிக்கவும் ரிச்சர்டு விரும்பவில்லை. அவர் பிலிப் அகஸ்டஸ் என்பாருடன் சேர்ந்துகொண்டு தம் தந்தைக்கெதிராக உடன்படிக்கை ஒன்றினை 1188ஆம் ஆண்டில் செய்து கொண்டார். பிற்காலத்தில் இந்த பிலிப்அகஸ்டஸே பிரான்ஸின் அரசரானார். இரண்டாம் ஹென்றி கலகத்தை அடக்க மற்றுமொருமுறை போருக்குப் புறப்பட்ட போதிலும் அவர் தோற்கடிக்கப்பட்டார். ரிச்சர்டும், பிலிப்பும் அவரை சமாதான உடன்படிக்கைக்கு வற்புறுத்தி இசைய வைத்தனர். இத்தருணத்தில் தம் அன்புக்குப் பாத்திரமான ஜானும் கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்ட செய்தியை அறிந்த அவர் மனம் நொந்து போனார். இனி உலகில் வாழவேண்டும் என்னும் ஆசையையே அவர் இழந்துவிட்டார். சிறிது காலத்திற்குள் கி. பி. 1189 ஆம் ஆண்டில் இரண்டாம் ஹென்றி காலமானார்.

## ஈ. முதலாம் ரிச்சர்டும் பிரிட்டனும் (1189- 1199)

இரண்டாம் ஹென்றியின் மரணத்திற்குப் பின்னர் முதலாம் ரிச்சர்டு இங்கிலாந்தின் அரசராகப் பதவியேற்றார். அவரை இரு காரணங்களுக்காக நினைவு கூர்வது அவசியம். முதலாவது, இங்கிலாந்தின் சார்பாக அவர் சிலுவைப்போர்களில் பங்கு கொண்டு கிறிஸ்தவர்களின் புனிதத் தலங்களைக் காப்பாற்ற முயன்றதாகும். இரண்டாவது சிலுவைப் போர்களின்போது முஸ்லிம்களின் தலைவராயிருந்த சலாடீனுடன் அவர் பொருததாகும்.

முதலாம் ரிச்சர்டு இங்கிலாந்தில் பிறந்தார். எனினும் அவர் முடிசூட்டிக்கொள்ள தம் 32ஆம் வயதில் இங்கிலாந்திற்கு வருகை புரிந்ததற்கு முன்னர் இருமுறைகள்தான் தம் தாய்நாட்டிற்கு வந்திருந்தார். மரபுவழியாக நோக்கின் அவரை ஒரு பிரெஞ்சுக்காரர் எனலாம். நடைமுறை பழக்கவழங்கங்கள், மற்றும் அவருடைய நாட்டங்கள் அனைத்தும் பிரெஞ்சு மரபுப்படியே அமைந்திருந்தன. இங்கிலாந்தில் அவருக்கிருந்த பிடிப்பெல்லாம் அவர்

ஈடுபட்ட சிலுவைப்போருக்கு பொருள் பிரிக்கத்தான் என்ருல் மிகையாகாது. அந்நோக்கத்துடன் அவர் பிஷப் ஆட்சிப்பகுதிகள் (bishoprics), அரசாங்கத்தின் உயர் பதவிகள் மற்றும் நிலமானிய உரிமை குறித்த வழக்குகள் ஆகிய அனைத்திலும் அதிகப்பொருள் கொடுத்து விலைக்குவாங்கவந்தவர்க்கு அவற்றை விற்று பெரும் பொருள் சேர்ப்பதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார். அதே போன்று நகரங்களுக்குச் சாசனங்களை விற்றும்பொருள் சேர்த்தார். ஸ்காட்டிய அரசர் சிறைப்பட்டிருந்தார். அவரிடமிருந்து பெரும் தொகையைப் பெற்றுக்கொண்டு இறைவணக்கம் செய்யத்தேவை யில்லை என்று தீர்மானித்து அவரை விடுதலை செய்தார். இதன் மூலம்பாலெய் உடன்படிக்கையையும்ரத்துசெய்துவிட்டார் முதலாம் ரிச்சர்டு மன்னர். மேற்கூறிய ஏற்பாடுகள் அனைத்தையும் தம் இச்சைப்படி செய்து முடித்துக் கொண்டு ரிச்சர்டு மன்னர் புனித பூமியைப்பாதுகாக்க சிலுவைப்போரில் பங்குகொள்ள புறப்பட்டுச் சென்ருர் (1190) அவர் தம்முடன் நாற்பது கப்பல்களைக் கொண்டு சென்ருர். மத்தியதரைக் கடலில் நுழைந்த முதல் ஆங்கிலக் கப்பற்படை அதுதான் என்பதை நினைவிற் கொள்க.

**ரிச்சர்டு சிறைப்படுத்தப்படல்:-** முதலாம் ரிச்சர்டு சிரியா நாட்டில் இருந்த ஏக்கர் (Acre) என்ற நகரைக் கைப்பற்றிய பின்னர் தம்முடன் உடன்வந்த ஏனைய சிலுவைப் போர் வீரர் களுடன் சச்சரவிட்டுக் கொண்டார். முஸ்லிம் மன்னர் சலாடி னுடன் உடன்படிக்கை செய்து கொண்டு ரிச்சர்டு நாடு திரும்பப் புறப்பட்டார். வரும் வழியில் 1192 ஆம் ஆண்டில் ஆஸ்திரியாவின் டியூக்கான லியோபோல்டு ரிச்சர்டை சிறைப்படுத்தினுர். சிலுவைப்போரின்போது ரிச்சர்டு அவரை அவமானப்படுத்தி யதற்குப் பழிவாங்குவான் பொருட்டே அவர் கைது செய்யப்பட் டார். அவரை சிறை மீட்க மீட்சிப்பணமாக 1,50,000 மார்க்குகள் தேவையாயிற்று. நாணயங்கள் அருமையாக இருந்த அக் காலத்தில் இத்தொகை மிகப் பெரியதெனக் கருதப்பட்டது. இத்தொகையில் பெரும்பகுதி இங்கிலாந்தில் வசூலிக்கப்பட்டது. அனைவரிடமும் நிலவரியில் காற்பங்கும், தனிப்பட்ட சொத்து வைத்திருந்தவர்களின் சொத்திலிருந்து காற்பங்கும் மீட்சிப்பண மாக வசூலிக்கப்பட்டது. ஒரு வகையில் அதனைக் கட்டாய வரி யென்றே கூறலாம். மீட்சிப் பணத்தைக் கொடுத்துவிட்டு விடுதலை யானவுடன் ரிச்சர்டு அவசர அவசரமாக இங்கிலாந்திற்கு வருகை புரிந்தார். பின்னர் அவர் இங்கிலாந்தை ஆள்வதற்கு மாருக, தம்முடன், சிலுவைப்போரில் பங்கு கொண்ட பிரான்ஸ் நாட்டு பிலிப்புடன் போர் செய்வதில் பேரார்வம் காட்டினுர். ரிச்சர்டு ஊரில் இல்லாத காலத்தில் பிலிப் நார்மண்டியைத் தாக்

கிஞர் என்பதே அப்போருக்குக் காரணமாகும். இளவரசர் ஜான், முதலாம் ரிச்சர்டின் சகோதரர். எனினும் ரிச்சர்டு சிலுவைப் போருக்குச் சென்றிருந்த தருணத்தில் நார்மண்டியைக் கைப்பற்ற ஜானும் முயன்ருர். ரிச்சர்டு ஊரில் இல்லாதபோது ஜான் நடந்து கொண்ட முறையும் நேர்மையானதாக இருக்கவில்லை. தம் சகோதரர் ரிச்சர்டு சிறைப்படுத்தப்பட்டிருந்த காலத்தில் அவரை இறந்து விட்டவர் போல ஜான் கருத்திற் கொண்டார். அதையும் பொருட்படுத்தாமல் ரிச்சர்டு அவரைத் தண்டிக்கவில்லை. உண்மையில் அவர் அரசத்துரோகக் குற்றத்திற்காக தண்டிக்கப்பட்டிருக்க வேண்டும். மாருக ரிச்சர்டு அவருடைய நிலங்களை மட்டும் பறித்துக் கொண்டார். எனினும் அவருடைய உயிரைப் பறித்துக் கொள்ளவில்லை. இதைக் கருணை என்பதைவிட கடும் கண்டனம் என்று கூறுவதே பொருத்தமுடையதாகும். தம் ஆட்சிக் காலத்தின் எஞ்சிய ஆண்டுகளை, ரிச்சர்டு பிரான்ஸ் நாட்டு விவகாரத்தில் தலையிட்டுக் கழித்தார்.

ஹியூபர்ட் வால்ட்டர் (Hubert Walter) :- முதலாம் ரிச்சர்டு இங்கிலாந்தின் ஆட்சிபீடத்தில் பல்லாண்டுகள் அரசராக அமர்ந்திருந்தாலும், நாட்டினை உண்மையிலே ஆண்ட பெருமை ஹியூபர்ட் வால்ட்டர் என்பாரைச்சாரும். அவர் ஜஸ்டீசியராகவும், கான்டர்பரி ஆர்ச்பிஷப்பாகவும் பொறுப்பேற்றிருந்தார். மேற்கூறிய இரு பொறுப்புகளையும் ஒருவரே வகித்ததிலிருந்து ஓர் உண்மை புலனுகிறது. இரண்டாம் ஹென்றியால் அமைக்கப் பெற்ற அரசாங்க நிர்வாகமுறை நாட்டின் நிர்வாகத்தின் தலைவராக அரசர் இல்லாதிருந்தால் கூட அவருடைய ஊழியர்களால் நிர்வகிக்க முடியும் என்பதே அவ்வுண்மை. ரிச்சர்டும் தாங்க முடியாத வரிச்சுமையை விதித்து மக்களிடம் இருந்து பெரும் பொருளை எதிர்பார்த்தவர். வால்ட்டர் இரண்டாம் ஹென்றியின் நிர்வாக முறையை மேலும் உறுதிப்படுத்தி அதனை முன்னுக்குக் கொணர்ந்தவர் நிலவரியை நிர்ணயிக்கும் நிமித்தமாக அவர் ஷயர்களிலும் ஜூரிகளைப் பயன்படுத்தினுர். தத்தம் கவுண்டிகளில் அரசர் விரும்பிய அமைதியை நிலைநாட்டும் பொருட்டு ஷயர்களில் நைட்வீரர்களை அவர் பணியில் அமர்த்திஞர். இதிலிருந்து பிறந்தது தான் அமைதிக்காவல் நடுவர் முறை (Justices of Peace) என்பதை அறியலாம். பிற்காலத்தில் இவ்வமைதிக் காவல் நடுவர்கள் தல ஆட்சியை வேரூன்ற பாடுபட்ட ஸ்தல பிரமுகர்கள். சுய ஆட்சி சாசனங்களை வழங்கி பல நகரங்களில் தல ஆட்சி நடைபெற வழி வகுத்தவரும் அவரே. சாசனங்கள் பணத்திற்காக வழங்கப்பட்டன என்பதை மட்டும் மறந்து விடலாகாது. அவருடைய ஆட்சிக்காலத்தில் தான்

கி. பி. 1191ஆம் ஆண்டு இலண்டன் மாநகர் தன்சொந்த மேயரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமையை முதன்முதலாகப் பெற்றது. ஆனல் வால்ட்டர் ஜஸ்டீசியராகப் பணியாற்றிய போதிலும் இங்கிலாந்தில் செல்வாக்கு இழந்தவராகவே இருந்தார். அதற்கு அவர் மட்டும் பொறுப்பாக மாட்டார். அரசர் நாட்டில் இல்லாத காலத்திலும் அவருக்காகப் பெருந் தொகையை மக்கள் கொடுக்கவேண்டியவர்களாயினர். முதலாவதாக அரசர் சிலுவைப்போரில் பங்குகொண்ட போதும் பின்னர் அவரை சிறை மீட்க மீட்சிப் பணமாகவும், அதன் பின்னர் அவர் நடத்திய பிரெஞ்சுப் போருக்குமென அவர் ஈடுபட்ட வெளிநாட்டு விவகாரங்களும் அடுத்தடுத்து மக்கள் பொருளுதவி செய்தனர். நாட்டில் நல்லாட்சி புரிய வல்லவரான அரசர் இல்லாத போதிலும், அவர் பொருட்டு பெரும் பொருளைப் பறிக்கக் காரணமாயிருந்த ஜஸ்டீசியர் வால்ட்டர் மக்களின் நன்மதிப்பினை இழந்ததில் வியப்பொன்றுமில்லை.

**ரிச்சர்டு காலமாதல், 1199:-** கி. பி. 1139 ஆம் ஆண்டில் ரிச்சர்டு காலமான செய்தி இங்கிலாந்தை வந்தடைந்தது. பிரான்ஸில் லிமோகஸ் நகருக்கருகில் சாலூஸ் கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருக்கையில், கோட்டைக்கு வெளியில் அவர் கொல்லப்பட்டார். அவர் மரணத்தைக் குறித்து ஆங்கில மக்கள் அனுதாபமுற்றுர்கள் என்று கூற இயலாது. அவரை அடுத்து ஆட்சிக்கு வந்தவர் நடாத்திய நிர்வாகத்தை அவர்கள் அறிந்திருப்பார்களேயாயின் அவர்கள் ரிச்சர்டுக்காக ஒரு வேளை அனுதாபப்பட்டிருக்கலாம்!

## உ. முதலாம் ரிச்சர்டும் சிலுவைப்போரும்

**வீரப்பண்பு மரபு யுகமும் சிலுவைப்போரும்:-** இங்கிலாந்தில் இரண்டாம் வில்லியம் அரசாண்டபோது முதல் சிலுவைப்போர் நடைபெற்றது. சிலுவைப்போர்நடைபெற்றகாலம் வீரப்பண்பினைக் காத்த பருவமாயிருப்பினும் கூட இங்கிலாந்து அரசரின் குணநலனில் அத்தகைய பண்பு காணப்படவில்லை என்பது நினைவு கூரத்தக்கது. இடைக்கால வீரப்பண்பு மரபினைக்காக்க கொடுங்கோன்மைக்குப் பெயர்பெற்ற ரூபஸ்ால் இயலாது. முதலாம் ஹென்றி மற்றும் இரண்டாம் ஹென்றிபோன்ற மதிநுட்ப அரசர்களாலும் அதனைக்காக்க இயலவில்லை. ஆனல் அத்தகைய மரபுகாத்த மாணிக்கமாக எடுத்துக் காட்டாய் இருந்தவர் நார்மண்டியைச்சார்ந்த இராபர்ட் என்பதாகும். சிலுவைப் போரில் பங்குபெறுவான் வேண்டிய இராச்சியத்தையே துறந்தவர்

அவர். அவரைப்போன்று பெருமைபெற்றவர்கள் மனத்திண்மை யற்ற ஸ்டீபனும், சிங்கநெஞ்சன் ரிச்சர்டும் ஆவார்கள்.

நைட்வீரர்கள்:- (Knights):- நைட்வீரர் என்போர் யாவர்? அவர்கள் வெறும் நிலத்தைப்பெற்றிருந்தவர்கள் மட்டுமல்லாமல் தம் ஆண்டானுக்கு இராணுவ சேவை செய்ய வேண்டியவர் களாயும் இருந்தனர். வீரப்பண்பு மரபினைக்காக்கும் இலட்சியம் அவர்களிடம் அவசியம் இருக்க வேண்டுமென எதிர்பார்க்கப் பட்டவர்கள் இந் நைட்வீரர்கள். அத்துடன் உண்மையான நைட் வீரர்களுக்கிடையே ஆன்மீக உறவினைப் பகிர்ந்துகொள்ளும் மனப் பாங்கு எதிர்பார்க்கப்பட்டது. நைட்வீரர்களைப் பயிற்றுவித்த வரலாறு தெரிந்த கொள்ள வேண்டியதொன்று. நைட்வீரன் நீண்ட கடினமான பயிற்சியைப்பெற்றாக வேண்டும். தொடக்கத் தில் நைட்வீரன் ஒவ்வொருவனும் அவனவன் ஆண்டானின் அரண்மனையில் குற்றேவல் புரியும் சிறுவனாக அமர்த்தப்பட்டான். இங்கு அவன் ஆண்டான் உண்ணும்போது அவருக்கு அருகி லிருந்து தொண்டு செய்தான்; ஆண்டானின் குடும்பத்தினரில் ஒருவனாக வாழ்ந்தான். பதினான்காம் வயதில் பணியாளாக இருந்த நிலை மாறி அவனை ஸ்கொயர் என்றழைத்தனர்; ஸ்கொயர் என்றால் வீரத்திருத்தகையின் துணையாள் என்று பொருள்படும். வயதுவந்தவனாகக் கருதப்படும்வரை இத்துணையாளான ஸ்கொயர் தம் ஆண்டானுடன் வேட்டையாடவோ அல்லது போர்க்களத் திற்கோ பணிபுரிய அவருக்குத் துணை நின்றான். இருபத் தொன்றாம் வயதில் நைட்வீரன் ஆகும் தகுதியைப் பெற்று விட் டான் என்று தீர்மானிக்கப்பட்டால் அப்போதிருந்து அவனை நைட்வீரன் என்று பெயரிட்டழைத்தனர். அரசரோ அல்லது யாதேனும் ஒரு பெரும் பிரபுவோ உடைவாளை இடையிற்செருகி அவனை நைட்வீரன் ஆக்கினர். உடைவாளை நைட்வீரனுக்குக் கொடுக்கும் விழாவிற்கு முன் தினம் இரவில் அவ்வாள் திருச் சபை பலிபீடத்திற்கு முன் வைக்கப்படும். இருளகன்று ஒளி பிறக்கும் காலைப்பொழுதுவரை அந்நைட்வீரன் கண்துஞ்சாக் காவ லனாய் அதைக் காத்து நிற்க வேண்டும்.

உடைவாள், வீரத்திருத்தகைப்பட்டச் சின்னம், போர்க் கவசம் ஆகியவற்றை அணிவிக்கும் விழாவின்போது, பாது காப்பற்ற மக்களைக் காப்பாற்றுவதாகவும், தேவைப்பட்டால்கிறிஸ் தவ சமயத்தைக்காக்கத் தம் இன்னுயிரையும் தருவதாகவும் நைட் வீரன் உறுதிமொழி கூற வேண்டும். இத்தகைய உயர்ந்த இலட் சியங்களைக் கொண்டிருத்தலே வீரப்பண்புமரபாகும். சர் தாமஸ் மலாரி என்ற கவிஞர் தம் எழுதிய 'மார்டி டி ஆர்தர்' என்னும்

கவிதையில் நைட்வீரன் பேணிக்காத்த வீரப்பண்பு மரபினை அழகாகவும், விறுவிறுப்பாகவும் விவரித்துள்ளார். பெருஞ்செயல்களைச் செய்த பெருமக்களின் பால் அன்பும், பரிவும் அவ்வீரர்கள் கொள்வதையும் அக்கவிதை விளக்குகிறது. எனினும் இடைக் காலத்தில் அத்தகைய வீரப்பண்பு மரபினை நாள்தோறும் நடைமுறைப்படுத்தியவர்களைக் காண்பது அருமையிலும் அருமையாம்.

உண்மையான போர் நடைபெறாத காலங்களில் நைட்வீரர்கள் விளையாட்டுப் போட்டிகளில் வேடிக்கையான போர்க் காட்சிகளில் ஈடுபட்டு பொழுதைப் போக்கினர். அது போன்ற விளையாட்டுப் போட்டிகள் நடைபெறுங்கால், பெருங்கூட்டமாக மக்கள் திரண்டு வந்து அவற்றைக் கண்டு களித்தனர்.

**சிலுவைப்போர்கள்:-** சிலுவைப் போர்களின்போது வீரப் பண்பு மரபு சீரிய இலட்சியமாகக் கருதப்பட்டது. ஏசுநாதர் பிறந்த இடத்தைப் புனிதமாகக் கொள்வர். அதனைக் காக்க ஐரோப்பிய வீரர்கள் சிலுவையை ஏந்திப் போருக்குச் சென்றதால் இப்போர்களை சிலுவைப் போர்கள் என்பர். முதல் சிலுவைப்போர் ரூபஸ் இங்கிலாந்தை அரசாண்டபோது நிகழ்ந்ததாகும். அப்போர் உலக வரலாற்றில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது.

சிலுவைப் போர்களுக்கான காரணத்தை ஆராய செயின்ட் அகஸ்டினும் நபிகள் நாயகமும் வாழ்ந்த காலத்தை நோக்க வேண்டும். கி. பி. ஆறும் நூற்றாண்டில் ஏசுநாதர் பிறந்த புனிதபூமி(Holy Land) அராபியர் வசமாயிற்று. அவர்கள் இஸ்லாம் சமயத்தைச் சார்ந்தவர்கள். நபிகள் நாயகத்தின் வழியைப் பின் பற்றியவர்கள். நபிகள் நாயகம் இஸ்லாம் சமயத்தை நிலை நாட்டிய பெரியார். ஏழாம் நூற்றாண்டின் இறுதிக்குள் அராபியர் மத்திய தரைக்கடலில் தென்கரை முழுவதையும் வெற்றி கண்டிருந்தார்கள். ஜிப்ரால்டர் நீர்ப்பிரிவிலிருந்து பாரசீகக் குடாவரை பரவியிருந்த மாபெரும் பேரரசு ஒன்றினை அராபியர் உருவாக்கியிருந்தனர்.

**முஸ்லிம் உலகம்:-** பத்தாம் நூற்றாண்டுவாக்கில் முஸ்லீம்களின் ஆதிக்கத்திற்குட்பட்ட பிரதேசங்களை மூன்று காலிப்புகள் பாக்தாத், கெய்ரோ, கார்டோவா ஆகிய தலைநகரங்களிலிருந்து ஆண்டார்கள். அவை ஒவ்வொன்றும் நாகரிகம், கல்வி முதலியவற்றில் வேறுபட்டிருந்தன. கார்டோவா அல்லது கெய்ரோவில் அமைக்கப்பட்ட பள்ளிகளில் உயர்ந்த பண்பாட்டுப் பாடங்கள் கற்றுக் கொடுக்கப்பட்டன. அதனால் அங்கு நிலவிய கலாசாரம்

இடைக்காலத்தின் தொடக்கத்தில் ஐரோப்பாவில் தென்பட்ட நாகரிகம் குறைந்த கலாசாரத்தைவிட சிறப்புற்றிருந்தது. ஸ்பெயின் நாட்டின் வடபகுதியில் கிறிஸ்தவர்களும் தென் பகுதியில் மூர்கள் என்ற முஸ்லிம்களும் ஆட்சி செய்தமையால் கிறிஸ்தவர்களுக்கும் மூர்களுக்குமிடையே இடையருத போர்கள் நடைபெற்றன. ஆனால் இஸ்லாம் பரவியிருந்த கீழைநாடு களில் நட்புறவு சூழ்நிலை நிலவியது எனலாம். கடலும் கீழைப் பேரரசுப் பகுதிகளும் மேலை ஐரோப்பாவிலிருந்து பிரிக்கப்பட் டிருந்தன. கீழைப்பேரரசின் தலைநகராக கான்ஸ்டான்டி நோபிள் விளங்கிற்று. மேலை ஐரோப்பா இஸ்லாம் சமயத்தின் நேரிடை யான தொடர்புக்காளாகாமல் தப்பியது. எனினும் மேலைஐரோப்பா விலிருந்து யாத்திரிகர்கள் ஜெருசலத்திலிருந்த ஏசுநாதரின் புனித கல்லறையைக்காண ஆண்டுதோறும் சென்றபோது சமய பொறை யுடைமை காத்த அராபியர்கள் அவர்களின் பயணத்தில் குறுக் கிடாமல், கிறிஸ்தவ சமயத்தை நிலைநாட்டிய பெரியாரை மரியாதை உணர்வுடன் போற்றினர்.

**செல்ஜூக் துருக்கியர்:-** செல்ஜூக் துருக்கியர் தலையெடுத்த போது இவ்வனைத்தும் மாறத் தொடங்கின. மத்திய ஆசியாவின் டார்டரி சமவெளிகளிலிருந்து படையெடுத்த காட்டுமிராண்டிகளின் தாக்குதல்களினால் ஐரோப்பா மற்றும் அண்மைக் கிழக்கு நாடு களின் அமைதி பல தடவைகளில் சீர்குலைந்தது. அங்கிருந்துதான் துருக்கியரும் வந்தனர். அவ்வண்ணம் படையெடுத்த துருக்கியரில் ஒருவர் செல்ஜூக் என்பார்; அவர் டார்டர் இனத்தவர். அவரு டைய பெயருடன் இணைத்தே படையெடுத்த துருக்கியரை செல்ஜூக் துருக்கியர் என்றழைத்தனர். அவருடைய பேரரே துருக்கிய சுல்தான்களில் முதலாவதாக வந்தவர்; பாக்தாத் நகரை கி. பி. 1055 ஆம் ஆண்டில் கைப்பற்றியவரும் அவரே. அப்போது பாக்தாத்தின் காலிபாவைச் சிறைப்படுத்திவிட்டு அவர் பெயரில் ஆட்சி நடாத்தினர் செல்ஜூக்கின் பேரர். விரைவில் துருக்கியர் பாரசீகத்தைக் கைப்பற்றினர். அதன் பின்னர் கீழைப் பேரரசின் மீது அவர்கள் பாய்ந்தார்கள். 1071ஆம் ஆண்டில் செல்ஜூக் துருக் கியர் பேரரசைத் தோற்கடித்தனர்; ஆசியா மைனர் பகுதிகள் துருக்கியரின் கைவசமாயின. பின்னர் அவர்கள் சிரியாவையும், பாலஸ்தீனத்தையும் வெற்றி கண்டு 1076ஆம் ஆண்டில் ஜெருசலத்தையும் கைப்பற்றினர்.

**கிறிஸ்தவர் முறைகேடாக நடத்தப்படல்:-** அதிகாரம் பெற்று முன்னேறிய துருக்கியரின் எழுச்சி உலக வரலாற்றை வெகுவாகப் பாதித்தது. அவ்வெழுச்சி ஆசியாவை மட்டுமல்லாமல் ஐரோப்பா

வையும் பாதித்தது எனில் அது மிகையாகாது. மேற்கு ஆசியா அராபியரின்பிடியிலிருந்து துருக்கியரின் ஆட்சிக்குக் கை மாறிய போது சூழ்நிலை மேலும் மோசமுற்றது. துருக்கியரும் இஸ்லாமிய சமயத்தவரேஎனினும் அவர்கள் சமயவெறி கொண்டிருந்தமையால் அவர்களின் ஆட்சி காட்டுமிராண்டித்தனத்திற்கு எடுத்துக்காட்டாய் இருந்தது. இத்தன்மையை அவர்கள் தம் டார்டர் முன்னோர்களிடத்திலிருந்து பெற்றோர்கள் போலும்! அராபிய ஆட்சியிலிருந்து துருக்கியரின் ஆட்சி மாற்றத்தால் ஜெருசலத்திற்குப் புனித யாத்திரை செய்த கிறிஸ்தவப் பயணிகள் சொல்லொணுத் துயருக்கு ஆளாயினர். துருக்கியர் அவர்களைக் கொடூரமாக ஒறுத்தனர். இக்கொடுமைகளை எதிர்த்துப் பிரசாரம் செய்தவர் பீட்டர் துறவி என்பார். அவர் செய்த பிரசாரமே முதல் சிலுவைப்போருக்குத் தூண்டுகோலாயிற்று என்பர். துருக்கியரின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தத் தவறினுல் கீழைப் பேரரசு விரைவில் அழிந்துவிடக் கூடும் என்ற அச்சம் எழுந்தது. பாக்தாத்-ஆண்டியாக்-ஜெருசலம் ஆகிய அனைத்தையும் துருக்கியர் கைப்பற்றிக் கொண்டனர். அடுத்து அவர்கள் கான்ஸ்டாண்டிநோபிலைத் தாக்கக் குறிவைத்தனர். கீழைப் பேரரசராயிருந்தவர் அப்போது போப்பாண்டவராயிருந்த இரண்டாம் அர்பன் என்பாரை வேண்டி ஐரோப்பியர் அனைவரையும் தம் உதவிக்கு வருமாறு ஆணையிட்டுப் படைதிரட்ட வேண்டினுர். இரண்டாம் அர்பன் ஹில்டிபிராண்ட என்பாரை அடுத்துப் போப்பாண்டவரானவர். கான்ஸ்டான்டிநோபில் வீழ்ச்சியுற்ருல் இத்தாலியும் பின்னர் மேற்கு ஐரோப்பாவும் ஏன் கிறிஸ்தவ உலகமே வீழ்ச்சியுறலாம் என்றுணர்ந்து பேரரசரின் வேண்டுகோளுக்குப் போப்பாண்டவர் செவிசாய்த்தார்

**கிளார்மாண்ட் கவுன்சில், 1095:-** கி. பி. 1095 ஆம் ஆண்டில் கூட்டப்பெற்ற கிளார்மாண்ட் கவுன்சில் கூட்டத்தில், இரண்டாம் அர்பன் துருக்கியருக் கெதிரான புனிதப் போருக்கான திட்டத்தை விவாதித்தார். அதே விஷயத்தைக் குறித்து கூடியிருந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் அவர் விளக்கப்பேருரையொன்றை ஆற்றினுர். அதனுல் உற்சாகம் கரைபுரண்டோடியது கூட்டத்தில் குழுமியிருந்தோர் 'அது கடவுளின் கட்டளை' என்று குரலெழுப்பினர்.உண்மையிலேயே அது கடவுளின் கட்டளைதான்' என்று மறுமொழி பகர்ந்தார் போப்பாண்டவர். 'மேற்கூறிய நெஞ்சம் நினைவு கூரும் சொல்லே பரிசுத்த ஆத்துமா (Holy Spirit)வினை உணர்ச்சியூட்டும் சொல்லாகட்டும். அச்சொல்லே போர்ப்பரணியாக முழங்கட்டும். கிறிஸ்துவின் மீது இருக்கும் பாசத்தையும் பரிவையும், தீரத்தையும் துணிச்சலையும் அது எடுத்துக் காட்டுமாகுக.அவருடைய சிலுவையே உங்கள் மோட்சத்திற்கு வழி

காட்டும் சின்னமாக அமையட்டும்.' செந்நிறம் தாங்கிய செஞ் சிலுவையை அணிந்து கொள்ளுங்கள். அது உங்கள் மார்பு களையும் தோள்களையும் அணிசெய்வதாகுக. இப்போரில் வாகை சூடி புனிதம் பெற உறுதிமொழி எடுத்துக் கொள்ளுங்கள்' என்றும் போப்பாண்டவர் பகர்ந்தார்.

**முதல் சிலுவைப்போர் 1096-99:-** போப்பாண்டவர் இரண்டாம் அர்பனின் செயலாக்கத்தின் விளைவாகத்தான் முதல் சிலுவைப் போர் மூண்டது. கிறிஸ்தவ உலகில் பல்லாயிரப் பிரசாரகர்கள் போப்பாண்டவரின் எடுத்துக் காட்டினைப் (முன்மாதிரி) பின்பற்றினர். வரலாற்றில் இதற்கு முன் காணப்பெறாத பேரூக்கத்தால் உந்தப்பெற்று, பல்லாயிரவர் சிலுவைகளை ஏந்திக்கொண்டு, புனித நிலத்தில் போராடி உயிர் நீப்பவர்கள் அனைவரும் பாவங்களிலிருந்து கழுவாய் பெற்று மோட்ச சாம்ராஜ்யத்தைப் பெறுவது உறுதியென்று கூறிய போப்பாண்டவரின் உறுதிமொழியை.நம்பிப் போருக்குப் புறப்பட்டனர். ஆர்வத்தால் தூண்டப் பெற்ற சிலுவைப்போரின் வீரர்கள் போருக்கான சரியான ஆயுத்தங்களைச் செய்யும் வரை காத்திருக்கப் பொறுக்கமாட்டார்கள் என்றால் மிகையாகாது. சிலுவைப் போரில் பங்குகொள்ள அடுத்தடுத்து மூன்று வீரர் குழாம் தலைவரற்ற நிலையில் திரண்டெழுந்து பிரான்ஸ், ஜெர்மனி, ஹங்கேரி ஆகிய நாடுகளின் வழியாக கி. பி. 1096 ஆம் ஆண்டில் கான்ஸ்டான்டிநோபிலுக்குப் புறப்பட்டுச் சென்றனர். பேரரசர் மதிநுட்பமிக்கவர். கட்டுப்பாடற்ற இக்கூட்டத்தினரை அவர் கப்பலேற்றி ஆசியாவுக்கு அனுப்பிவைத்தார். அங்கு அவர்களில் பெரும்பாலோர் துருக்கியர்களால் படுகொலை செய்யப் பெற்று மாண்டு மடிந்தனர்.

**ஜெருசலம் பிடிபடல் 1099:-** உண்மையான சிலுவைப் போர் 1097 ஆம் ஆண்டில் தொடங்கியது. மேற்கு ஐரோப்பாவைச் சார்ந்த நிலமானிய பிரபுக்கள் அதன் தலைவர்களாயிருந்தனர். வில்லியம் ரூபஸின் சகோதரரும், நார்மண்டி டியூக் இராபர்ட்டை உள்ளிட்ட நார்மண்டி மற்றும் நார்மன் சிசிலியைச் சார்ந்த நைட்வீரர்கள் அவர்களில் சிறப்பானவர்கள். கான்ஸ்டான்டிநோபிளை விட்டுச் சென்ற சிலுவை வீரர்கள் ஆசியா மைனரில் நுழைந்து ஆன்டியாக்கைக் கைப்பற்றினர். அடுத்த ஆண்டில் அவர்கள் ஜெருசலத்தைத் தாக்கி 1099ஆம் ஆண்டு ஜூலை 15ஆம் நாளன்று அந்நகரையும் கைப்பற்றிக்கொண்டனர். பல்லாயிரவர் கொடுமையாகப் படுகொலை செய்யப்பட்டனர். படுகொலை செய்வதை நிறுத்திவிட்டு கிறிஸ்தவர்கள் ஏசுநாதரின் புனித கல்லறையை நோக்கி ஊர்வலமாகச் சென்றனர்.

ஆனால் அடுத்தநாள் மீண்டும் படுகொலைகள் தொடர்ந்தன. மாற்ருரின் குருதியைக் குடிக்க ஒவ்வொருவரும் ஆர்வம் காட்டினர். திருக்கோயிலின் கூரையின் மீதேறிக்கொண்டே உடைவாளால் ஆண்களையும் பெண்களையும் வெட்டிச் சாய்த்தனர். கிறிஸ்தவரல்லாதவர்கள் அங்ஙனம் படுகொலை செய்யப்பட்டதைக் கேட்டிருக்கவோ அன்றி பார்த்திருக்கவோ முடியாது. அவர்களில் பலியானவர்கள் எத்தனைபேர் என்பது கடவுளுக்குத்தான் வெளிச்சம். அதை நேரில் பார்த்தவர்களின்க் கூற்றுப்படி 'அவர்களைக் கர்த்தர் கைவிடும் முன்னர், சிலுவைப்போர் வீரர்கள் கர்த்தரைக் கைக் கழுவி விட்டனர்'. முதல் சிலுவைப் போரில் ஒன்றுதான் கிறிஸ்தவர்கள் வெற்றி பெற்றனர். சிரியாவில் ஜெருசல இராச்சியத்தை உள்ளிட்ட ஐந்து கிறிஸ்தவ அரசுகள் அமைக்கப்பட்டன. காட்பிரே டி பவுல்லான் (Godfrey de Bouillon) ஜெருசலத்தின் முதல் அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிலுவைப் போரில ஈடு பட்டிருந்த நைட்டுகளில் அவர் மிகுந்த மென்மையான இதயங்கொண்டவர். ஆனால் அந்நகரில் பொன்னுலான முடியைச் சூட்டிக்கொள்ள அவர் மறுத்து விட்டார். கர்த்தர் முட்களினுலான முடிசூட்டிக்கொண்ட அதேநகரில் அந்த அரசர் பொன்முடியைச் சூட்டிக்கொள்ள மறுத்ததில் வியப்பொன்றுமில்லை.

முதல் சிலுவைப்போரின் விளைவாக புதிய அமைப்பு முறை ஒன்று உருவாக்கப்பட்டது. படைவீரத் துறவிகளைக் கொண்ட அவ்வமைப்பில் சேர்ந்தவர்கள் சமயப்பற்றும் இராணுவப் பயிற்சியும் பெற்றவர்களாயிருந்தனர். சிலுவைப் போர்களின்போது கிறிஸ்தவர்களிடத்தில் காணப்பட்ட பொதுவான உணர்ச்சி சமயப்பற்றும் போர் வெறியும் கொண்டிருந்ததெனில் மிகையாகாது. அவ்வமைப்பை "நைட்ஸ் டெம்பளர்ஸ்" (Knights Templars) என்பர். நைட்ஸ் டெம்ப்ளர்ஸ் அமைப்புபடி கி.பி. 1118-ஆம் ஆண்டில் பர்கண்டியைச்சார்ந்த ஒருவரையும் மற்றும் ஏனைய நைட்வீரர்கள் எண்மரையும் உறுப்பினர்களாகக்கொண்டு எழுந்தது. ஜெருசலத்திற்கு வருகை புரிந்த ஏழை யாத்திரிகர்களின் பாதுகாப்புப்பணியை அவர்கள் மேற்கொண்டனர். சாலமன் திருக்கோயிலுக்கருகில் இந் நைட்வீரர்கள் தங்குவதற்கான வீடொன்றளிக்கப்பட்டது. பத்தாண்டுகளுக்குப் பின்னர் போப்பாண்டவர் நைட்ஸ் டெம்பளர்ஸ் அமைப்பை ஒரு சமய இயக்கமென அங்கீகரித்தார். காலப்போக்கில் அவ்வியக்கத்தின் எண்ணிக்கை பல்கிப் பெருகியது. சமய சகோதரத்துவத்தின் அடிப்படையில் அமைந்ததால் அதன் உறுப்பினர்கள், கற்பு, ஏழ்மை, மற்றும் கீழ்ப்படிதல், ஆகிய மூன்று விரதங்களைக் காப்பு

தாக உறுதிபூண்டனர். பாலஸ்தீனத்தில் அமைக்கப் பெற்ற கிறிஸ்தவ அரசுகளைக் காக்கும் முதுகெலும்பு போல் அவர்கள் இருந்தனர்.

ஜெருசலத்தில் எழுந்த பிறிதொரு இயக்கம் செயின்ட் ஜான் பெயரில் உருவாக்கப்பட்ட ஜெருசலம் செயின்ட் ஜான் இயக்கமாகும். (Order of St. John of Jerusalem). இவ்வியக்கம் மருத்துவமனையொன்றினை ஆதாரமாகக் கொண்டு எழுந்ததாகும். இவ்வியக்கம் முதல் சிலுவைப் போருக்கு முன்னரே ஜெருசலத்தில் வாழ்ந்த நோயுற்ற எளியவரான கிறிஸ்தவர்களுக்கு மருத்துவ உதவி செய்யும் நோக்கத்துடன் தொடங்கப்பட்டதாகும். நைட்ஸ் டெம்ப்ளர்ஸ் என்ற இயக்கம் சமய அடிப்படையில் உருவாக்கப்பட்டபோது செயின்ட் ஜான் இயக்கத்தலைவர் தம்முடைய இயக்கத்தையும் இராணுவத்தின் அடிப்படையிலும் சமயத்தின் அடிப்படையிலும் அமைக்க அனுமதி பெற்று செயின்ட் ஜான் இயக்கத்தைச் சார்ந்த நைட்வீரர்கள் என்ற பெயர் பெற்றனர். அவர்களை மருத்துவ வீரர்கள் என்றால் மிகையாகாது.

மேற்கூறிய இரு இயக்கங்களும் காலப்போக்கில் நிலங்களை மானியமாகப் பெற்று பெரும் பொருளைச் சேர்த்துக் கொண்டன. அவை பாலஸ்தீனத்திலும் மேலை ஐரோப்பிய நாடுகளிலும் ஏராளமான நிலத்தை மானியமாகப் பெற்றன. இங்கிலாந்தில் நைட்ஸ் டெம்ப்ளர்ஸ் இயக்கம் ஸ்டீபனின் ஆட்சிக்காலத்தில் ஹோல்பர்ன் என்ற ஊரில் நிறுவப்பட்டது. பின்னர் 1184 ஆம் ஆண்டில் அதன் இருப்பிடம் தேம்ஸ் ஆற்றங்கரையில் இன்று காணப்படும் திருக்கோயில் இருக்குமிடத்திற்கு மாற்றப்பட்டது. அங்கு இன்னும் அவர்களின் திருச்சபையைக் காணலாம். செல்வத்திலும், செருக்கிலும் திளைத்த டெம்ப்ளர்ஸ் இயக்கத்தவர்கள் சமூகத்திற்குப் பயன்படத் தவறியபோது, போப்பாண்டவரின் ஆணையால் அவ்வியக்கம் 1312 ஆம் ஆண்டில் கலைக்கப்பட்டது. இன்று இலண்டனில் இருக்கும் அவர்களின் கட்டிடத்தில் மிடில் டெம்பிளையும் இன்னர் டெம்பிளையும் சார்ந்த வழக்குரைஞர்கள் வசிக்கிறார்கள்.

**இரண்டாம் சிலுவைப்போர் 1147:-** முதல் சிலுவைப்போரின் விளைவாக ஜெருசலத்தில் கிறிஸ்தவ இராச்சியங்கள் உருவாக்கப்பட்ட வரலாற்றை ஏற்கனவே அறிந்துள்ளோம். செல்ஜூக் பேரரசு வீழ்ச்சியுற்றதால்தான் கிறிஸ்தவ அரசுகள் அவ்வளவு எளிமையாக அமைய வாய்ப்பேற்பட்டது. ஆனால் விரைவில் முஸ்லிம்களிடையே மீண்டும் மறுமலர்ச்சி ஏற்பட்டது. அடுத்தடுத்து வந்த வீரம் வாய்ந்த முஸ்லீம் தளபதிகளே அதற்குக்

காரணமாய் இருந்தனர்- அவர்களில் ஒருவர் எடிசா என்ற நகரைக் கிறிஸ்தவர்களிடத்திலிருந்துகைப்பற்றினார். எடிசாவின் வீழ்ச்சியே இரண்டாம் சிலுவைப் போருக்குக் காரணமாயிற்று. செயின்ட் பெர்னார்ட் என்பாரின் பிரசாரத்தால் தூண்டப்பெற்ற இரண்டாம் சிலுவைப்போர் கிறிஸ்தவர்களுக்குத் தொடர்ந்து பல்வேறு தோல்விகளைக்கொடுத்தது. முஸ்லிம் தளபதிகளில் ஒருவரான சலாடின் என்பார் திறமைமிக்கவர். அவர் கி. பி. 1171ஆம் ஆண்டில் எகிப்தின் சுல்தானாகப் பதவியேற்றார். அவர் சிரியா, எகிப்து மற்றும் மெசபேடோமியாவையும் தம் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்தார். சலாடின் சீரிய மனிதர்; மனிதர்களை ஆண்ட மாபெரும் அரசரென பெயரும் புகழும் பெற்றவர். உண்மைச் சமயத்தில் நம்பிக்கையற்றவர்களுடன் போர்புரிவதில், சிலுவைப்போர் வீரர்களைப் போன்று, அவரும் பேரார்வம் காட்டினார். ஆனால் வெற்றிவாகை சூடும்போதும் கருணை காட்டுவதிலும் வல்லவரென புகழ் பெற்றவர் சலாடின். முஸ்லிம் வீரப்பண்பு மரபிற்கு சீரிய எடுத்துக்ககாட்டாய் அவர் நின்றார் முஸ்லிம் அரசுகளை இணைத்து முடித்தபோது, அவர் தம் வாழ்நாளின் புனித இலட்சியத்தை ஈடேற்ற முயற்சி செய்தார். கிறிஸ்தவர்களுக்கெதிராக எழுந்த புனிதப்போர்களே அப் புனித இலட்சியம்.

**ஜெருசலத்தை சலாடின் கைப்பற்றுதல், 1187:-** மேற்குறிப்பிட்ட இலட்சியத்தை நிறைவேற்றும் நோக்குடன் சலாடின் ஜெருசலம் இராச்சியத்தின் மீது படையெடுத்தார். கிறிஸ்தவர்கள் அவர்தம் அரசரான கை டி லூஷிக்னன் என்பாரின் முன்னேறி சலாடினுடன் மோதினர். ஆனால் ஹாட்டின் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் சலாடின் கிறிஸ்தவப்படைகளைத் தோற்கடித்து அழித்தார். ஜெருசலத்தையும் 1187ஆம்ஆண்டில் சலாடின் கைப்பற்றினார். புனித நகரில் முஸ்லிம் படைகள் நுழைந்தபோது, படைவீரர்கள் தெருக்களில் அமைதியை நிலைநாட்டினர். இந் நடவடிக்கை முதல் சிலுவைப் போரின்போது நடைபெற்ற படுகொலைகளிலிருந்து மாறுபட்டிருந்தது. அந்நகர மக்கள் மீட்சிப்பணம் கட்டுமாறு வற்புறுத்தப்பட்டனர். எனினும் சலாடின் காட்டிய கருணையால் பலர் உயிர்பிழைத்தனர்.

அடுத்த ஆண்டில் சலாடின் அரசர் கை டி லூஷிக்னனையும் அவருடைய பிரபுக்களையும் விடுதலை செய்தார். மீண்டும் தமக்கெதிராக ஆயுதந்தரிக்க மாட்டார்கள் என்னும் உறுதிமொழி பெற்று சலாடின் அவர்களை விடுவித்தார். எனினும் கிறிஸ்தவர்கள் தாம் கொடுத்த வாக்குறுதியை மீறினர். விடுதலையான கை டி லூஷிக்னன் கிறிஸ்தவப்படைகளுடன் டையர்(Tyre) என்னு

மிடத்தில் உடனே சேர்ந்து கொண்டார். அந்த நகரம் மட்டுமே முஸ்லிம்களுக்குக் கிட்டாமல் நின்ற ஒரே நகரம். அதற்குப் பின்னர் ஏக்கர் நகர முற்றுகையை அவர் தொடங்கினர்; இம் முற்றுகை ஈராண்டுகள் (1189-91) நீடித்தது. இத் தருணத்தில் தான் ஐரோப்பியர் மூன்றும் சிலுவைப் போரைத் தொடங்க ஆயத்த மாயினர். மூன்றும் சிலுவைப் போரின் மாவீரராகக் கருதப் பெற்றவர் இங்கிலாந்தின் அரசர் முதலாம் ரிச்சர்டு.

**மூன்றும் சிலுவைப்போர், 1189-91--** ஜெருசலம் என்ற புனித நகர வீழ்ச்சி மூன்றும் சிலுவைப்போருக்கு வித்திட்டது. ஜெருசலத்தினை முஸ்லிம்கள் கைப்பற்றிக் கொண்ட செய்தி காட்டுத் தீபோல் பரவி கிறிஸ்தவ உலகைக் கதிகலங்க வைத்தது. சமய குருமார்கள் சணல் துணி அணிந்து கொண்டும், சாதாரண கிறிஸ்தவர்கள் துக்கம் அனுஷ்டித்தும் அச் செய்தி கேட்டு வருந்தினர். தம்மிடையே மூண்டுள்ள தனிப்பட்ட சச்சரவுகளையும் நிலமானிய தகராறுகளையும் ஒதுக்கிவிட்டு எல்லா கிறிஸ்தவ இளவரசர்களும் சிலுவையேந்தி புனித நகரைக் காக்க முற்படுமாறு போப்பாண்டவர் அனைத்துக் கிறிஸ்தவர்களையும் வேண்டினர். அவருடைய வேண்டுகோளைச் செவிமடுத்து ஐரோப்பாவின் மாமன்னர்கள் மூவர் சிலுவைப் போரில் பங்கு கொள்ள முன்வந்தனர். பேரரசர் பிரெடரிக் பார்பரோசா (செந்தாடிக்காரர்), பிரெஞ்சு நாட்டு அரசர் பிலிப் அகஸ்டஸ், இங்கிலாந்து அரசர் இரண்டாம் ஹென்றி ஆகியோரே அம்மூவர். கி. பி. 1188 ஆம் ஆண்டில் சிலுவைப் போரில் பங்கு பெறும் நோக்குடன் இங்கிலாந்தில் ஹென்றி 'சலாடின் வரி' என்னும் பெயரில் நிதி வசூலித்தார். ஆனல் ஹென்றி தாம் சாகும் வரை (1189) பிலிப்புடன் போரிட்டுக் கொண்டிருந்தார். அவருக்குப்பின் இங்கிலாந்தின் அரசரான முதலாம் ரிச்சர்டு சிலுவை ஏந்தச் சித்தமானர்.

**பிலிப்பும் ரிச்சர்டும்:-** பிரெடரிக் பார்பரோசா பேரரசர்; எழுபது வயதானவர். அவர்தான் முதலில் போருக்குப் புறப்பட்டார். ஆனல் சிரியாவில் ஆறு ஒன்றில் அவர் மூழ்கி மடிந்து போனர். அவருடைய மரணத்திற்குப் பின்னர் பிரான்ஸ் நாட்டு பிலிப்பும் இங்கிலாந்து அரசர் ரிச்சர்டும் சிலுவைப்போரின் முக்கிய தலைவர்களாயினர். இவ்விருவரும் முரண்பட்ட குணப்பண்புகளைக் கொண்டவர்கள். பிலிப் ஆழ்ந்த அரசியல் தந்திரம் மிக்கவர்; ரிச்சர்டு கனல் கக்கும் செயல் வீரம் பெற்றவர். துடி துடிப்பானவர்; ரிச்சர்டின் செயல்வீரம் பெரும்பாலும் புத்திசாலித்தனமாக இருந்ததில்லை. எனவே பிலிப்புக்கு ரிச்சர்டின் சக்தியைக் கண்ணுற்று பொருமை. பிரான்ஸ் நாட்டின் பாதிக்குமேல் பரப்பினை ஆஞ்சுவினத்தவர்

கள் பெற்றிருந்தமையால் பிரெஞ்சியர் பொறுமை கொண்டது இயற்கைதான். எனவே இருவரிடையேயும் நல்லுறவு நீடிக்க வில்லை.

**ரிச்சர்டின் குணவியல்பு:-** ரிச்சர்டு போன்ற மனிதரை ஆங்கில மக்கள் போற்றியதில் வியப்பில்லை. தீரமிக்கவர்; உடற்பயிற்சி களில் தேர்ச்சி மிக்கவர்; ராட்சசன் போன்று சக்தி கொண்டவர். அதேபோன்று கொடைவள்ளல் எனப் புகழப்பட்டவர். எனினும் தம் நடவடிக்கைகளின் விளைவு எப்படி இருக்கும் என்பதை ஆராயாதவர். இதில் ரிச்சர்டுக்கும் அவர் தம்பி ஜானுக்கும் ஒரு வகையில் ஒற்றுமையிருந்தது. அவருடைய நடவடிக்கைகளில் பெரும்பாலும் வெறித்தனத்தைக் காணலாம். இங்கிலாந்தின் நலனில் ஒரு சிறிதும் அக்கறை காட்டாத மன்னர்களில் அவரும் ஒருவர். சிலுவைப் போரில் பங்கு கொண்டு அவர் போர்க்களத்தில் பெற்ற வெற்றிகள், சிலுவைப் போர் வீரர் ஆலோசனை குழுவில் அவர் நடந்து கொண்ட முறையால் கொடுக்க வேண்டிய பலனைக் கொடுக்கத் தவறின.

**சிசிலியில் ரிச்சர்டு:-** கி. பி. 1190ஆம் ஆண்டில் பிலிப்பும் ரிச்சர்டும் மார்சேல்ஸ் நகரிலிருந்து ஒன்றாகப் புறப்பட்டார்கள்; கப்பல் மூலம் சிசிலி சென்றடைந்தனர். அங்கு ரிச்சர்டு தம் சுய ரூபத்தைக் காட்டவே, அவருக்கும், சிசிலித்தீவின் அரசரான தான்கீரிட் என்பாருக்குமிடையே சச்சரவெழுந்தது. தான்கீரிட் தமக்கு முன்னர் அரசராயிருந்தவரின் மனைவியின் நிலபுலன்களைப் பறித்துக்கொண்டார். அவள் ரிச்சர்டின் சகோதரி. கோபங் கொண்ட ரிச்சர்டு மெசினா என்ற நகரைத்தாக்கிக் கைப்பற்றிக் கொண்டார். தான்கீரிட் அப்பெண்ணின் நிலபுலன்களைத் திருப்பித்தந்தார். பின்னர் ஆங்கிலப் படைகள் சைப்பிரஸுக்கு புறப்பட்டுச் சென்றன. இங்கும் ரிச்சர்டு அத்தீவின் அரசருடன் சச்சரவு இட்டுக்கொண்டார். இம்முறை நகரை மட்டும் கைப்பற் ருமல் ரிச்சர்டு அத்தீவையே கைப்பற்றிக்கொண்டு, அதன் அரசரையும் பதவி நீக்கம் செய்தார். சைப்பிரஸில் ரிச்சர்டு ஸ்பானிய இளவரசி நவாரைச் சார்ந்த பிரென்காரியா என்பாளை மணந்து கொண்டார். திருமணத்திற்குமுன் அவர் தம் முதல் மனைவியை விவாகரத்து செய்தார். அலிஸ் என்ற பெயர் கொண்ட அவரின் முதல் மனைவி பிரெஞ்சிய அரசரின் சகோதரி. இதன் விளைவாகவும் பிலிப்புடன் ரிச்சர்டின் உறவு சீராக இருக்கவில்லை. பின்னர் ரிச்சர்டு புனிதநிலத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். ஏற்கனவே பிலிப் அங்கு சென்றடைந்திருந்தார்.

**பாலஸ்தீனத்தில் ரிச்சர்டு 1191:-** கி.பி. 1191ஆம் ஆண்டு சூன் திங்களில் ரிச்சர்டு பாலஸ்தீனத்தில் இறங்கியபோது, சிலுவைப் போர்வீரர்கள் ரிச்சர்டு வந்து சேர்ந்ததற்கு மகிழ்ச்சிகொண்டு தத்தம் முகாம்களில் தீமூட்டிக்களித்தனர். ரிச்சர்டின் வருகையைக் கேள்வியுற்ற முஸ்லிம்கள் அச்சத்தால் நெஞ்சம் கலங்கினர். கடந்த ஈராண்டுகளாக ஏக்கர் நகரம் முற்றுகையிடப்பட்டிருந்தது. ரிச்சர்டும் பிலிப்பும் பெரும் படைகளுடன் புனித நிலம் வந்துற்றதால் கிறிஸ்தவர்களின் வெற்றி வாய்ப்பும் மிகுதியாயிற்று. ரிச்சர்டு வந்துற்ற ஒரு மாதத்திற்குப் பின்னர் ஏக்கர் நகரம் கிறிஸ்தவர் வசமாயிற்று. அந்நகரின் சுவர்களில் சிலுவை பொறித்தகொடிகள் ஏற்றப்பட்டன (1191). வெற்றிவாகை சூடிய போதும் சிலுவைப்படைவீரர்கள் தமக்குள்ளே சண்டையிட்டுக் கொண்டனர். ஆஸ்திரியாவின் டியூக் லியோபால்டின் கொடியொன்று அரசர் ரிச்சர்டின் கொடிக்கருகில் நிறுத்திவைக்கப் பட்டிருந்தது. ஆங்கில நைட்வீரன் ஒருவன் லியோபால்டின் கொடியைக் கிழித்து கீழே எறிந்து அதைச்சாய்கடையில் போட்டு விட்டான். ரிச்சர்டின் ஆணையின்படியே அது நடை பெற்றிருக்கக் கூடும். லியோபால்டு அதற்குப் பழி வாங்க விரும்பவில்லை. ஆனால் அவர் மிகுந்த அதிருப்தியுற்று பாலஸ்தீனத்தைவிட்டுத் திரும்பினார். அவர் மனதில் பழிக்குப் பழிவாங்கும் எண்ணம் சுடர் விட்டுப் பிரகாசித்தது. இந் நிகழ்ச்சி நடைபெற்ற சிறிது காலத்திற்குள் பிலிப்பும் ரிச்சர்டுடன் சச்சரவிட்டுக் கொண்டு தம் சொந்த நாடான பிரான்ஸிற்குத் திரும்பினார்.

ரிச்சர்டு தற்போது சலாடின் மீது பாய்ந்தார். அவர் கடற்கரையை அடுத்திருந்த தென்பாகத்தில் வேகமாக முன்னேறினார். அர்சப் (Arsuf) போரில் வெற்றி பெற்றார். அங்கு ரிச்சர்டின் தீரச் செயல்களைக்கண்டு கிறிஸ்தவர்கள் மகிழ்ந்தனர். பின்னர் ரிச்சர்டு ஜாப்பாவையும் கைப்பற்றிக் கொண்டார். அங்கிருந்து கிழக்கு நோக்கிப் பாய்ந்து, அவர் ஜெருசலத்தைக் கைப்பற்ற எண்ணினார். ஆனால் குளிர்காலத்தில் அந்நகரைத் தாக்குவதை சிரியாவின் தலைவர்கள் வெறுத்தனர். வருத்தத்துடன் ரிச்சர்டு திரும்ப வேண்டியவரானார். அவர் தம் படையுடன் அஸ்கலான் (Ascalon) என்னுமிடத்தை 1192 ஜனவரி மாதவாக்கில் தாக்கினார். ஆனால் முஸ்லிம்கள் அந்நகரைப்புறக்கணித்து விட்டு அங்கிருந்து கலைந்து சென்று விட்டனர். அடுத்து வந்த கோடைகாலத்தில் ரிச்சர்டு மீண்டுமொருமுறை ஜெருசலத்தின் மீது படையெடுத்தார். ஆனால் அவருடைய படையில் ஏற்பட்ட நோயும், பிரெஞ்சியர் கூட்டுறவு தரமறுத்தமையும் அவருடையதிட்டங்களைச் சீர்குலைத்து விட்டன. புனித நகரான ஜெருசலம் கைக்கெட்டிய வேளையில்

வாய்க்கெட்டாதது போன்று அவர் திரும்ப வேண்டியவரானர். பின்னர் ரிச்சர்டு ஏக்கர் நகரம் திரும்பினர்.

கி. பி. 1192 ஆம் ஆண்டில் சலாடினுடன் ராம்லே என்னுமிடத்தில் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது. சிலுவைப் படைவீரர்களின் சார்பாக ரிச்சர்டு, சலாடினின் வெற்றிகள் அனைத்தையும் அங்கீகாரம் செய்ய வேண்டியவரானர். அதற்குக் கைம்மாருக கிறிஸ்தவர்கள் ஜாப்பாவை வைத்துக் கொள்வதைச் சுல்தான் ஏற்றுக் கொண்டார். அதனுடன் புனித கல்லறைக்குக் கிறிஸ்தவர்கள் தொல்லையின்றி சென்று வரலாம் என்றும் ஒப்புக் கொண்டார். மூன்ரும் சிலுவைப் போர் இவ்வகையாக முடிவுற்றது. உண்மையில் அது கிறிஸ்தவர்களின் தோல்வியில் முடிவுற்றதெனக் கொண்டால் மிகையாகாது. அடுத்த ஆண்டில் சலாடின் காலமானர். தம் பகைவர்களைத் தோற்கடித்த வெற்றி வீரராக அவர் காலமானபோது முஸ்லிம்கள் அவர் மறைவு குறித்து ஆழ்ந்த வருத்த முற்றனர்.

ராம்லே சமாதான உடன்படிக்கையைச் செய்து முடித்திருந்த போதிலும், ஒருநாள் தாம் மீண்டும் திரும்பப் போவதாக ரிச்சர்டு சலாடினை எச்சரித்திருந்தார் ரிச்சர்டும் கப்பல் வழியாக நாடு திரும்பப் புறப்பட்டபோது, தாம் விட்டுச் சென்ற புனித பூமியைத் திரும்பித் திரும்பிப் பார்த்து, பின் பிரார்த்தனை செய்தார். 'புனித பூமியே! உன்னைக் கர்த்தரிடம் ஒப்படைத்துச் செல்கிறேன். கருணை மிக்க கர்த்தர் எனக்கு நீண்ட ஆயுளை மட்டும் நல்கி, அத்துடன் உங்களின் நல்லெண்ணமும் என் பக்கம் இருந்தால், நான் மேலும் உதவிகளுடன் உன்னைக் காக்க மீண்டும் வருவேன். வருங்காலத்திலும் உன்னைக் காப்பது என் வாழ்க்கை லட்சியமாகும். அதுவே என் நம்பிக்கையுமாகும்.' எனினும் ரிச்சர்டின் பிரார்த்தனையின்படி ஒன்றும் நடக்கவில்லை. அவர் பல்வேறு துணிச்சல் மிக்க நடவடிக்கைகளில் பங்கு கொண்டு வெற்றி பெற்ருர். எனினும் அவரால் மீண்டும் பாலஸ்தீனத்திற்கு உதவ முடியவில்லை. நாடு திரும்பும் வழியில் ரிச்சர்டு ஆஸ்திரியாவில் சிறைப் படுத்தப்பட்டார். ஏக்கர் நகரில் ஆஸ்திரியாவின் டியூக்கை ரிச்சர்டு அவமானப் படுத்தியிருந்தார். அதற்குப் பழிவாங்கவே அவர் கைதாக வேண்டியவரானர். விடுதலையானவுடன் அவர் பிரான்ஸுடன் போரில் இறங்கினர். அப் போரின்போது ரிச்சர்டு மடிந்து போனர்.

மூன்ரும் சிலுவைப் போருக்குப் பின்னர் முஸ்லிம்களுக்கு எதிராகப் பல்வேறு முயற்சிகளைக் கிறிஸ்தவர்கள் எகிப்திலும் பாலஸ்தீனத்திலும் மேற் கொண்டாலும், அவையொன்றும் வெற்றி பெறவில்லை. புனித பூமியை முஸ்லிம்களிடத்திலிருந்து விடுவிக்க முயன்ற முயற்சியின் நிமித்தம் நடைபெற்ற சிலுவைப்

போர்கள் அனைத்தும் தோல்வியுற்றன. கிறிஸ்தவர்களிடையே அப்போர்கள் சகோதரத்துவத்தை ஏற்படுத்தத் தவறியபோதிலும் அவை சர்வதேச அமைப்பு முறையை உருவாக்க வழி காட்டின. போருக்கான முக்கிய நோக்கம் கைகூட வில்லையாயினும் அதனால் பல்வேறு விளைவுகள் ஏற்பட்டன.

**சிலுவைப்போரினால்** ஏற்பட்ட விளைவுகள்:- முதலாவது, சிலுவைப்போர்கள் சற்றேறக் குறைய இருநூறாண்டுகள் நடைபெற்றமையால் ஐரோப்பாவிற்கும் ஆசியாவுக்குமிடையே போக்குவரத்தும், கூட்டுறவும் தூண்டப்படலாயின. பாலஸ்தீனத்தில் கிறிஸ்தவர்களின் கைவசமான ஏக்கர், ஆன்டியாக், மற்றும் திரிபோலி போன்ற நகரங்கள் ஐரோப்பாவுடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டிருந்தன. குறிப்பாக இத்தாலிய நகரங்களுக்கும் கிழக்கத்திய நகரங்களுக்குமிடையே போக்குவரத்துகள் நீடித்தன. அதன் காரணமாகத்தான் ஐரோப்பாவின் தலைசிறந்த வணிகத்தலமாக வெனிஸ் எழுச்சியுறலாயிற்று. சிலுவைப் போர் வீரர்கள் அந்நகரையே பயன் படுத்தியமையால் மத்தியதரைக் கடலில் வாணிக முன்னுரிமை பெற்ற பெருநகரமாகத் திகழ அந்நகருக்கு வாய்ப்பேற்பட்டது. வெனிஸ் நகரக் கப்பல்கள் ஆடம்பரப் பொருள்களைச் சுமந்து சென்றதால் ஐரோப்பியர்களின் வீடுகளில் வெல்வெட், மஸ்லின் போன்ற விலையுயர்ந்த துணி வகைகளும், பல்வேறு ஆடம்பர உணவுப் பொருள்களும் வந்துற்றன. அதே போன்று ஆரஞ்சுப் பழமரங்களும், ரோஜா மலர்ச்செடிகளும் மேலைநாட்டவர் தோட்டங்களில் பயிரிடப்படலாயின. ஐரோப்பாவில் காகிதம் கொண்டு வரப்பட்டதும் சிலுவைப்போர்களால் ஏற்பட்ட விளைவே எனலாம்.

இரண்டாவதாக நாகரிக முதிர்ச்சி பெற்ற கீழை நாடுகளுடன் ஏற்பட்ட தொடர்பினால், இதுவரை காணப்பெறாத நாடுகளைக் காண வேண்டுமென்னும் ஆர்வத்துடிப்பும் உணர்வும் தூண்டப்பட்டன. ஐரோப்பா தனித்து, காட்டுமிராண்டித் தன்மையில் வேரூன்றி இருந்த நிலைமாறி, சுயதேவையைப் பூர்த்தி செய்து கொள்ளக் கீழை நாடுகளை நோக்கும் நிலை ஏற்படவும் வழி பிறந்தது. இவ்வுணர்ச்சியின் பயனாகத்தான் முதலாம் எட்வர்டின் சமயகாலத்தவரான மார்க்கோ போலோ என்ற வெனிஸ் நகரக்காரர் பயணம் செய்வதற்கும், பின்னர் கொலம்பஸும் மற்றவர்களும் பல்வேறு புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதற்கும் காரணமாயிதார்கள் என்பதும் நினைவிற் கொள்ளத்தக்கதாகும். ஐரோப்பா திரையிடப்பட்டு இருந்த நிலையை சிலுவைப் போர்கள் மாற்றி விட்டனவென்றால் அது மிகையாகாது.

# 22. ஜான் மன்னரும் மூன்றும் ஹென்றி மன்னரும்

## (அ) ஜான் மன்னரும் போப்பாண்டவரும்

ஜான், 1199—1216:- முதலாம் ரிச்சர்டுக்குப் பின்னர் இங்கிலாந்தின் அரசு கட்டிலேறியவர் ஜான். அவர் இரண்டாம் ஹென்றியின் செல்லப்பிள்ளை. எனினும் அவர் முடிசூட்டிக் கொள்வதற்கு முன்னரே அவர் நம்பிக்கையற்றவராகவும், நம்பிக்கைக்கு ஒவ்வாதவராகவும் காட்சியளித்தார். இரண்டாம் ஹென்றி நன்றி கெட்ட ஜானுக்குச்சலுகை மேல் சலுகை காட்டி மனம் நொந்து போனார். மன்னர் இரண்டாம் ஹென்றியின் உயிர் குடிக்கும் காலனாக அமைந்தது ஜானின் குணவியல்பு. அதே போன்று தம் சகோதரர் ரிச்சர்டுக்கும் ஜான் துரோகம் செய்வித்து பட்டத்திற்கு வந்ததே கெட்ட சகுனமாய் அமைந்தது. அவருக்கு விரோதிகள் பலரிருந்தது துரதிர்ஷ்டம்தான். இடைக் காலத்தில் மாபெரும் போப்பாண்டவராகக் கருதப்பெற்ற மூன்றும் இன்னொசென்ட் என்பாருடன் ஜான் சச்சரவிட்டுக் கொண்டார். அதே போன்று அவர் பிரான்ஸ் மன்னர் பிலிப் அகஸ்டஸுடனும் சச்சரவிட்டுக் கொண்டார். பிலிப் பிரான்ஸின் அனைத்துப் பகுதிகளையும் ஒருங்கிணைத்து வலிமை வாய்ந்த முடியாட்சியை நிலைநாட்டப் பெரிதும் முயன்றவர். இறுதியாக, ஜான் தம் மக்களுடனேயே போரிட்டு உயிர்த்தியாகம் செய்து கொண்டார். அதற்குக் காரணம் அவருடைய சொந்தத் தவறுகளே. அதன் விளைவாக நாட்டு மக்கள் தம் அனைத்தையும் தியாகம் செய்து அவருக்கு எதிராக அணிவகுத்தனர். இருப்பினும் வில்லியம் மார்ஷல் போன்ற ஒரு சில நல்ல மனிதர்கள் அவருக்கு உறுதுணையாக நின்றனர். ஜானை ஒரு தந்திரசாலி என்று கூறினாலும் மதி நுட்பம் மிக்கவர் எனக்கருதமுடியாது. தம் மனதிற்குப் பட்டதைச் சட்டெனச் செய்து முடிக்கும்போது அவர் கருணையற்றவராகவும், கொடூரமானவராகவும் இருந்தமையால் அவருடைய கொள்கையில் நெடுநோக்கைக் காண இயலவில்லை. நாம் கடைப்பிடிக்கும் கொள்கை கோட்பாடுகள் எங்கு கொண்டு செல்லும் என்று

கணிக்கும் ஞானமும் அவருக்கு இருக்கவில்லை. போப்பாண்டவருடைய பிரதிநிதியின் காலடியில் தஞ்சம் புகவேண்டிய அவசியமும், ரன்னிமீட் என்னுமிடத்தில் மகாசாசனத்திற்குக் கையொப்பமிட்டுக் கொடுக்கவேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்பட்டதும் இதனால்தான்.

**ஜானும் பிரட்டானி ஆர்தரும்:-** ஜான் முடிசூட்டிக் கொண்டவுடனேயே தம் மூத்த சகோதரர் பிரிட்டானிஜப்ஃரேவின் மகன் ஆர்தருடன் சண்டையிட்டுக்கொண்டார். ஆர்தர் ஏற்கனவே பிரட்டானியின் டியூக்காக இருந்தார்; ஆஞ்சு, மெயின், டூரெயின் ஆகிய பகுதிகளை பரம்பரைச் சொத்தாக உரிமை கொண்டாடிய அவர், அதற்காக பிரஞ்சு அரசர் பிலிப்புக்கு இறைவணக்கமும் செலுத்தியிருந்தார். இதனிடையில் ஜான் பெருங்குற்றம் ஒன்றைச் செய்தார். அக்குவிடெயினில் இருந்த வலிமைமிக்க பிரபுக்களில் ஒருவரான கவுன்ட் டி லா மார்ச் என்பவரைப் பகைத்துக்கொண்டார் ஜான். கவுன்ட் டி லா மார்ச்சுக்கு நிச்சயதார்த்தம் செய்யப்பெற்றிருந்த மணமகளை ஜான் கவர்ந்து சென்று திருமணம் செய்து கொண்டார். அதே சமயம் தம் முதல் மனைவியான கிளஸ்டர் அவிஸ் என்பாளை விவாகரத்து செய்தும் இருந்தார். அவிஸ் இங்கிலாந்திலிருந்த கிளஸ்டர் குடும்பத்தைச் சார்ந்தவளாகையால் மிகுந்த செல்வாக்குபடைத்த அக் குடும்பத்தின் கோபத்திற்கு ஆளானார். பிரெஞ்சு மன்னர் பிலிப், ஆர்தருக்கும், கவுன்ட் டி லா மார்ச்சுக்கும் உதவி செய்ய முன் வந்தார். ஆர்தரின் உதவியுடன் பிலிப் நார்மண்டியின் மீது படையெடுத்தார்.

**ஆர்தர் கொலையாதல், 1203:-**ஜான், இப்படியாக, பல விரோதிகளைச் சம்பாதித்துக் கொண்டிருந்தார். அவர்களில் ஒருவரான பிரிட்டானி ஆர்தர் அவரிடம் வசமாக மாட்டிக்கொண்டார். மிராபோ கோட்டையில் அவர் 1203 ஆம் ஆண்டில் ஜான் வசம் சிக்கிக்கொண்டார். ஜான் தமக்கே உரித்தான கொடுங்கோன்மையுடன் ஆர்தரைக் கொலை செய்தார். ஆர்தரைக் கொன்ற ஒரு செயல்தான் அவர் பெற்ற வெற்றி என்று கருதினாலும், போர் அவருக்கெதிராகவே சென்றது.

**நார்மண்டியை இழத்தல் 1204 :-** பிலிப் வேகமாக நார்மண்டி, ஆஞ்சு, டூரெயின் ஆகியபகுதிகளை வெற்றி கண்டார். கி. பி. 1204ஆம் ஆண்டில் சேன் ஆற்றங்கரையிலிருந்த சாசிகோட்டை (Saucy Castle) வீழ்ச்சியுற்றது. அது ரிச்சர்டு மன்னரின் கோட்டையாகக் கருதப்பட்டது. அதையும் பிரெஞ்சு மன்னர் சரணடையச் செய்தார். ரூவனும் உடன்படிக்கை செய்து கொண்டு கீழப்படிந்த

போது நார்மண்டிடச்சியில் ஜானுக்கு எஞ்சியிருந்தது ஒன்றுமில்லை யெனலாம். சானல் தீவுகள் (Channel Isles) மட்டும் பிரிட்டிஷார் வசம்நின்றது. இரண்டு ஆண்டுகாலம் நாட்டில் இலலாமலிருந்த ஜான்பின்னர் இங்கிலாந்திற்குத் திரும்பினர். பிரான்சின் தென் மேற்கில் பாய்ட்டோவும் பிலிப்பிற்குக் கீழ்ப்படிந்தது. தம் மனைவி யின்மூலம் சீதனமாக இரண்டாம்·ஹென்றி பெற்ற பிரெஞ்சுப்பதிகு களில் எஞ்சியிருந்தது காஸ்கனி ஒன்று மட்டும் தொடர்ந்து ஜானுக்கு விசுவாசம் காட்டிநின்றது. ஆஞ்சுவினத்தவர்கள் பல பகுதிகளைக்கோட்டை விட்டுவிட்டனர் என்பதற்குவேறு எடுத்துக் காட்டு தேவையில்லையன்றோ? பிரான்சுநாட்டில் இங்கிலாந்திற்குச் சொந்தமாயிருந்த பகுதிகள் ஒன்றன்பின் ஒன்றாக கைநழுவிச் சென்றது ஆங்கிலேயருக்கு அவமானத்தைக் கொடுத்தபோதிலும் உண்மையிலே அவ்விழப்பினை துரதிர்ஷ்டமானதாகக் கருதக் கூடாது. கி.பி. 1066ஆம்ஆண்டிலிருந்து 1204 ஆம் ஆண்டுவரை நீடித்த உறவினால் இங்கிலாந்தில் குடியேறியிருந்த நார்மானி யருக்கும் ஆங்கிலேயருக்கும் நார்மண்டியின் இழப்பு ஓர் இணைப் பினை ஏற்படுத்தியது. 1204ஆம் ஆண்டில் நார்மண்டியை இங்கி லாந்து இழந்தபோது இங்கிலாந்திலிருந்த நார்மானிய பாரன் பிரபுக்களுக்கும் சாக்சானிய குடிமக்களுக்கும் இடையே இருந்த வேறுபாடுகள் குறையத்தொடங்கின. நார்மண்டியின் இழப்பி லிருந்து நார்மானிய நைட்டுகள் தாங்கள் குடியேறிய நாட்டிலேயே மிகுந்த அக்கறையும் கவனமும் செலுத்தலாயினர். அவர்களின் மூதாதையர்களின் தாயகமாயிருந்த நார்மண்டி படிப்படியாக அந்நியநாடுபோல் ஆயிற்று.

**ஜானும் போப்பாண்டவரும்:-** நார்மானிய- ஆஞ்சுவின நாடு களை இழந்துவிட்ட ஜான், அடுத்தபடியாக போப்பாண்டவர் மூன்றும் இன்னசென்டுடன் சச்சரவிட்டுக்கொண்டார். கி. பி. 1205ஆம் ஆண்டில் ஆர்ச்பிஷப் ஹுபர்ட் வால்ட்டர் காலமான போது, கான்டர்பரியில் இருந்த துறவிகள் பிஷப்புகளையோ அன்றி அரசரையோ கலக்காமல் மடத்துத் தலைவருக்கு அடுத்துக் கீழுள்ள துறவியான ரெஜினால்டு என்பாரை ஆர்ச்பிஷப்பாகத் தேர்ந்தெடுத்தனர். பின்னர், போப்பாண்டவரின் அனுமதியைப் பெறவேண்டி அவர்கள் ரெஜினால்டை ரோமாபுரிக்கு அனுப்பினர். இச் செய்தி வெளியில் தெரிந்தபோது பிஷப்புகள் அதனைக் கண்டித்தனர். அத் தேர்தலைச் செல்லுபடியாகக் கூடாதென அவர்கள் போப்பாண்டவருக்கு முறையீடு செய்தனர். போப் பாண்டவர் இன்னெசென்ட் இம் முறையீட்டினை விசாரணை செய்துகொண்டிருந்தபோது,ஜான் பிஷப்புகளையும் கான்டர்பரியில் தங்கியிருந்த துறவிகளையும் தம்முடைய நம்பிக்கைக்குப் பாத்திர

மானவரும், நார்விச்சின் பிஷப்புமான ஜான் டிகிரே என்பாரை ஆர்ச்பிஷப்பாகத் தேர்ந்தெடுக்குமாறு ஆணையிட்டார். பின்னர் ஜான் டி கிரேயை ரோமாபுரிக்கு அனுப்பி தாம் நடாத்திய தேர்தலை போப்பாண்டவர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென வேண்டுகோள் விடுத்தார். எதேச்சாதிகரமான முறையில் நியமிக்கப் பெற்ற நியமனத்தைப் போப்பாண்டவர் ஏற்க மறுத்தது இயற்கைதான். துறவிகள் மற்றும் பிஷப்புகள் ஆகியோரின் முறையீடுகளை போப்பாண்டவர் செவிமடுத்தபின்னர் ரெஜினால்டு மற்றும் ஜான் டி கிரே ஆகிய இருவரின் தேர்தலும் செல்லாதென அவர் அறிவித்ததோடு, கார்டினல் ஸ்டீபன் லாங்க்டன் என்னும் ஆங்கிலேயரை ஆர்ச்பிஷப்பாக நியமித்தார். லாங்க்டன் பேரும் புகழும் பெற்ற ஞானி. அப்போது போப்பாண்டவர் மன்றத்தில் தங்கியிருந்தார். இச் செய்தியைக் கேள்வியுற்ற ஜான் கடுங்கோபங் கொண்டார். அதன் விளைவாக காண்டர்பரி துறவிகளின் நிலபுலன்களைப் பறிமுதல் செய்தார் ஜான். அது மட்டுமன்று: கார்டினல் ஸ்டீபன் லாங்க்டன் இங்கிலாந்தில் காலடி வைக்கவும் அனுமதியளிக்க மறுத்தார். ஆனால் போப்பாண்டவரோ ஜானின் பூச்சாண்டிக்கு அஞ்சினாரில்லை. ஜான் கீழ்ப்படிய மறுத்தபோது போப்பாண்டவர் இங்கிலாந்தைச் சமயத் தொடர்புகளிலிருந்து விலக்கிவிடும் விலக்காணையைப் (interdict) பிறப்பித்தார். இவ்விலக்காணையின் பயனாக, இங்கிலாந்திலிருந்த எல்லாத் திருச்சபைகளும் மூடப்பட்டன. திருச்சபை முற்றங்களிலிருந்து மட்டும் பிரார்த்தனைகளையும் சமய பிரசங்கங்களையும் பிரசாரம் செய்யும் உரிமை மட்டும் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் சமயச்சடங்குகளைச் செய்யக் கூடாதென்று தடைவிதிக்கப்பட்டது. மடாலயங்கள் பல இத்தடையால் பாதிக்கப்படாமலிருந்தன என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். திருச்சபை முற்றங்களில் இறந்தவர்களைப் புதைப்பதும் தடுக்கப்பட்டது. ஞானஸ்நானம் செய்வது தனிப்பட்ட முறையில் மட்டும் அனுமதிக்கப்பட்டது. பொதுவாக திருச்சபைகளில் ஞானஸ்நானம் செய்வது தடுக்கப்பட்டது. இத்தண்டனை மாபாதகமானது என்று மக்களால் கருதப்பட்டது. மக்கள் வாழ்க்கையே ஸ்தம்பித்துவிட்டது போன்ற நிலை காணப்பட்டது. விலக்காணையை ஜான் துச்சமாக மதித்தார். விலக்காணையை ஏற்றுக்கொண்டு அதன்படி கீழ்ப்படிய முற்பட்ட சமயக்குருமார்களின் நிலங்களையும், பொருள்களையும் ஜான் பறித்துக் கொண்டார்.

**ஜான் சமய நீக்கம் செய்யப்படல் 1209:-** அடுத்த ஆண்டில் ஜான் சமயநீக்கம் (மதப்பிரஷ்டம்) செய்யப்பட்டார். ஆனால் ஜான் மன்னர் அதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. தம் வலிமையில்

நம்பிக்கை கொண்ட அவர், எதிர்ப்பிலும் துடுக்குத்தனத்துடன் நடந்து கொண்டு தம் பகைவர்களைக் கடுமையாகச் சாடினார். நிலங்கள் பறிக்கப்பட்டதற்கு அஞ்சிய பல திருச்சபை குருமார்கள் அரசருக்கு அடி பணிந்தனர். நெஞ்சுரங்கொண்ட குருமார்கள் (மதப்பிரஷடம்) சமயநீக்கம் செய்யப்பட்ட அரசருக்குத் தொண்டு செய்ய மறுத்தபோது, அவர்கள் சிறைப்படுத்தப்பட்டு, சித்திர வதைக்காளாகி, கொல்லப்பட்டனர். அதே தருணத்தில் ஜான் பாரன் பிரபுக்களையும் பகைத்துக் கொண்டார். தமக்கு எதிராக இருக்கிறார்கள் என்ற சிறு ஐயப்பாட்டின் மீது கூட அவர்களின் கோட்டைகளைக் கைப்பற்றிக் கொண்டார் அவர். அதன் சொந்தக் காரர்கள் நாட்டைவிட்டே விரட்டப்பட்டனர். அவர்களின் மனைவி மக்கள் அரசாங்க சிறைக் கூடங்களில் அடைக்கப் பெற்று, மீட்சிப் பணம் பெற்று விடுவிக்கப்பட்டனர். ஜானுக்கு பாரன்பிரபுக்களுக்கு மிடையே மூண்ட பகைக்கு அரசியல் காரணங்கள் இருந்தன. ஸ்கூட்டேஜ்வரி, வெளிநாடுகளில் போர்ப்பணி ஆகிய விவகாரங் களில் அவர்கள் அரசனை ஆதரிக்கவில்லை. தொடக்கத்தில் பிரபுக் கள் சமய விவகாரத்தில் தலையிடவில்லை.

போப்பாண்டவரிடம் எஞ்சியிருந்த கடைசி ஆயுதத்தையும் அவர் பயன் படுத்த வேண்டியவரானார். ஜான் மன்னரை பதவி யிலிருந்து விலக்கி விட்டதாக அவர் அறிவித்தார். அதன்படி ஆங்கில மக்கள் ஜான் மன்னருக்கு விசுவாசப் பிரமாணம் செய்ய வேண்டியதில்லை என்றும் அறிவித்தார் (1212). பிரான்ஸ் மன்னர் பிலிப் ஜான் மன்னரைப் பதவியிலிருந்து விலக்கிய போப்பாண்ட வரின் ஆணையை ஆவலுடன் ஏற்றுக்கொண்டு, அவருக்கெதிராகப் போருக்கு ஆயத்தமானார். அவருக்கு பதிலடி கொடுக்கும் நோக்கு டன் ஜான், பேரரசர் நான்காம் ஆட்டோ என்பாருடன் உடன் படிக்கை செய்து கொண்டு பிலிப்புக்கு எதிராக ஆயத்தமானார். பிலிப், ஜானுக்கும் ஆட்டோவுக்கும் எதிரியாயிருந்தவர்; எனவே பொதுப்பகைவர். சிறிது காலம் வரை சட்ட திட்டங்களுக்குட் படாத ஜான் மன்னர் தம் கொள்கையில் விடாப்பிடியாக நின்று பார்த்தார். எனினும் ஜபுனுக்கு ஒன்றினையடுத்து மற்றொன்றாக பல பிரச்சினைகள் எழுந்தன. பிரெஞ்சிய கைக்கூலிகளின் ஏவுதலினால் வேல்ஸ் இளவரசர்கள் ஜானுக்கெதிராகக் கலகம் செய்தனர். ஆங்கில பாரன் பிரபுக்களில் ஒரு சிலர் ஸ்காட்டிய அரசருடன் உடன்படிக்கை செய்து கொண்டனர். போதாக்குறைக்கு தம் சொந்த மக்களே அவருக்கு விசுவாசம் காட்டுவார்களா என்ற ஐயமும் எழுந்தபோது தான் ஜான் பணிய வேண்டியவரானார். நயவஞ்சக எண்ணத்துடனும், நெஞ்சுறுதியுடனும் ஜான், தம் தந்திரத்தைத் தலைகீழாக மாற்றிக் கொண்டார். ஆர்ச்பிஷப்

லாங்க்டனை அவர் வரவேற்றார். தமக்கு ரோமாபுரிக்குப் போகும் வாய்ப்பு கிட்டியபோது அங்கு சென்று போப்பாண்டவருக்கும் பின்னர் இறைவணக்கம் செய்யப் போவதாக உறுதிமொழியளித்தார். போப்பாண்டவரின் பிரதிநிதியான பாண்டுல்ஃப் (Pandulf) என்பாரிடம் தம் முடியையும் (1213) சரணடையச் செய்தார், மீண்டும் அதைப் பெறும் முன்னர், இங்கிலாந்து போப்பாண்டவரின் பிச்சை என்பதையும் அங்கீகரித்துக் கொண்டார். அத்துடன் போப்பாண்டவரின் அடிமை என்னும் முறையாக ரோமாபுரிக்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட தொகையை வரியாகக் கட்டவும் ஒப்புக் கொண்டார். அதற்குப் பின்னர் சிலவாண்டுகள் போப்பாண்டவரின் பிரதிநிதிகளே இங்கிலாந்தினை உண்மையாக ஆண்டனர் என்று கூறினால் மிகையாகாது. மேற்கூறிய தந்திரத்தைக் கையாண்டு, ஜான் தம் பகைவர்களைத் திசை திருப்பினார். ஸ்காட்லாந்து அரசருடனோ அல்லது பிரான்ஸ் அரசருடனோ உறவு கொள்ளத் துணிந்த பிரபுக்களுக்கு இப்போது அத்தகைய அவசியம் ஏற்படவில்லை. சமய விலக்கம் செய்யப்பட்ட அரசருக்கு எதிராகச் செய்யப்பட்ட நடவடிக்கை அது. ஆனால் ஜானோ இப்போது போப்பாண்டவரின் அடிமையாகி விட்டாரே! மாறாக அவ்வாறு செய்தவர்கள் துரோகிகள் என்பதும், நியாயமான உரிமை பெற்ற தம் சொந்த அரசருக்கு எதிராகப் போர் செய்யத் துணிந்ததும், அப்பிரபுகளின் அங்கீகரிக்கப்பட்ட ஆண்டானுக்கெதிராகச் சென்றதும், தற்போது போப்பாண்டவரின் கூட்டாளி என்பதால் உறுதி செய்யப்பட்டது.

**பிலிப் ஆயத்தமாதல்:-** ஜான் மன்னர் சரணடைந்ததை அடுத்து, பிரான்ஸ் மன்னர் பிலிப் தாம் எண்ணியிருந்த போர் நடவடிக்கையிலிருந்து விலகிக் கொள்ளுமாறு போப்பாண்டவர் கட்டளையிட்டார். ஆனால் பிலிப்பிற்கோ போர் ஆயத்தத்திலிருந்து விடுபட ஒரு சிறிதும் விருப்பமில்லை. அவர் சிசிலியின் அரசர் பிரடரிக் என்பாருடன் கூட்டு சேர்ந்து கொண்டார். சிசிலி மன்னர் அத்தருணத்தில் பேரரசர் பதவிக்கு உரிமை கொண்டாட ஜெர்மனிக்கு வந்திருந்தார். ஆனால் ஜானோ அப்போது பேரரசராக இருந்த ஆட்டோவுடன் இணைந்திருந்தார். சாலிஸ்பரி பிரபுவின் கீழ் படையொன்றினை ஜான் பிளாண்டர்ஸ்ஸுக்கு அனுப்பி வைத்தார். ஜான் பாய்ட்டோவுக்குப் புறப்பட்டுச் சென்று பிரெஞ்சியப் படைகளைத் தாக்கலாம் என்று திட்டமிட்டிருந்தார். ஆட்டோவும் சாலிஸ்பரியும் கிழக்கிலிருந்து பிரெஞ்சுப் படைகளைத் தாக்கும் போது தம் தலைமையில் பாய்ட்டோவிலிருந்து ஒரே சமயத்தில் பிரெஞ்சியரை இருமுனைகளில்த் தாக்க திட்டம் தீட்டினார். ஆனால் நடைபெற்ற விவகாரமோ அவருக்குப் பேரதிர்ச்சியை ஈந்தது.

பிளாண்டர்ஸில் சாலிஸ்பரி பிரபு படையுடன் பேரரசர் ஆட்டோவுடன் இணைந்து கொண்ட போதிலும், கூட்டுப் படைகள் பிரெஞ்சியப் படைகளை பொவைன்ஸ் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் படுதோல்வியுற்றன. சாலிஸ்பரி பிரபுவே கைதானர். இத் தோல்வியின் பயனாக ஆட்டோ பேரரசர் முடியை இரண்டாம் பிரடரிக்கிற்கு இழக்க வேண்டியவரானர். பிரான்ஸில் தமக்கு ஏற்கனவே இருந்து பின்னர் இழந்திருந்த பகுதிகளைப் பெறும் நம்பிக்கையையும் ஜான் இழந்து விட்டார். பெரும்பாடு பட்டுத் தலைதப்பினது தம்பிரான் புண்ணியம் என்றுற் போல் பாயிட்டோவிலிருந்து தப்பி, ஜான் இங்கிலாந்து திரும்பினர்.

**இங்கிலாந்தில் ஜானுக்கு எதிர்ப்பு :-** இங்கிலாந்து திரும்பிய ஜான் தம் நாட்டில் திருச்சபைக் குருமார்கள், பாரன் பிரபுக்கள் மற்றும் நகர மக்கள் அனைவரும் தமக்கெதிராக இணைந்திருப்பதைக் கண்டார். பிரான்ஸ் அவருக்கு ஏற்பட்ட இழப்புகளினுல் அவர் நிலைமை தாற்காலிகமாகப் பலவீனப்பட்டிருந்ததை ஆங்கிலப் பகைவர்கள் தமக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொண்டனர். அவர்கள் ஸ்டீபன் லாங்க்டனைத் தம் தலைவரெனக் கொண்டார்கள். முதலாம் ஹென்றி அளித்த சாசனத்தை ஸ்டீபன் லாங்க்டன் அவர்களுக்குத் தனிப்பட செயின்ட் பால் திருச்சபையில் படித்துக் காட்டினர். லாங்க்டனும், பாரன் பிரபுக்களும் இங்கிலாந்தை ஆண்ட படுமோசமான அரசர் ஒருவரிடத்திலிருந்து நாட்டினை நிலமானிய பழக்க வழக்கங்களின் அடிப்படையில் ஆளப்போவதாக உறுதி மொழி வாங்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர் என்பதைச் சுட்டிக் காட்டுவதாகும். அவர்களின் உறுதியின் விளைவாக வந்ததே மகா சாசனமாகும்.

## (ஆ) மகாசாசனம், 15, ஜூன், 1215 (Magna Carta)

கி பி. 1215 ஆம் ஆண்டு ஈஸ்டர் திருநாளன்று பாரன் பிரபுக்கள் ஆயுதம் ஏந்தி பிராக்லி (Brackley) என்னுமிடத்தில் சந்தித்தனர். தம்முடைய முறைகேடான ஆட்சியை நகரமக்களும் வெறுக்கத்தலைப்பட்டுவிட்டனர் என்பதை ஜான் மன்னர் உணர்ந்தார். இராபர்ட் பிட்ஸ்வால்ட்டரின் தலைமையில் வந்த பாரன்பிரபுக்களின் படையை வரவேற்க இலண்டன் நகரின் வாயில்கள் திறக்கப்பட்டன. வால்ட்டர் தம்மை 'கர்த்தர் மற்றும் புனிதத்திருச்சபை இராணுவத்தின் தளபதி' என்று கூறிக் கொண்டார். எதிர்ப்பு காட்டுவதில் பலன் ஒன்றும் ஏற்படப் போவதில்லை என்பதைக் கண்டு கொண்டார் ஜான். ரன்னிமீடு புல்வெளியில் பாரன்பிரபுக்களைச் சந்திக்க அவர் ஏற்றுக் கொண்

டார். வின்ட்சருக்கும் ஸ்டெயின்ஸுக்கும் இடையிலுள்ளது இந்த ரன்னிமீடு புல்வெளி. அங்கு லாங்க்டன் மகாசாசனம் என்று அழைக்கப்படும் ஆவணத்தை அவரிடம் சமர்ப்பித்தார் (1215 ஜூன் 15.)

அரசருக்குச்சட்டத்தை மீறும் உரிமை கிடையாது.' என்பதே மகாசாசனம் சுட்டிக்காட்டும் அடிப்படை கொள்கையாகும். அரசருக்கும் அவருடைய அடிமைகளுக்குமிடையே நிலவிய தொடர்புகளை ஒழுங்குபடுத்தும் நிலமானிய பழக்கவழக்கங்களைக் குறிப்பதுதான் சட்டம் என்பதே பாரன்பிரபுக்களின் கருத்தாகும். நாட்டில் நிலவிய பழக்கவழக்கங்கள் எவையெவை என்பதை மகாசாசனம் குறித்துக்காட்டியது. பாரன்பிரபுக்களுக்கும் அரசருக்குமிடையே எழுந்த உடன்படிக்கை என்றும் அதனைக் கூறலாம். அதனைச்செயல்படுத்துவதற்கு வழிவகை செய்யும் ஷரத்து ஒன்றையும் அது கொண்டிருந்தது.

மகாசாசனத்தை நன்கு புரிந்துகொண்டால் அது நிலமானிய யுகத்தைப் புரிந்து கொண்டதைப் போன்றதாகும். மகாசாசனம் அறுபத்துமூன்று ஷரத்துகளைக் கொண்டது. அதன் முதலாவது ஷரத்து 'ஆங்கிலத் திருச்சபை சுதந்திரமானதாக இருக்க வேண்டும்' என்பதை வலியுறுத்துகிறது. திருச்சபை சுதந்திரம் என்றால் என்ன? திருச்சபை தன் தொன்மையான உரிமைகளை கட்டுபாடின்றி அனுபவிப்பதுடன், அரசரால் பறிக்கப்படுவதினின்றும் விடுதலை பெறுவதாகும். மகாசாசனத்தில் ஒரு சில ஷரத்துகள் வில்லன்களைப் பாதுகாப்பது குறித்து விவரித்துள்ளன. ஆண்டானாகக் கருதப்படும் பிரபுக்கள் தம் சொத்தை அரசரிடமிருந்து காத்துக்கொள்ள வேண்டியபடியால் இந்த ஷரத்துகள் அவசியமென்று கருதப்பட்டன போலும். பாரன்பிரபுக்கள் தாம் மானியமாகப் பெற்ற நிலங்களைக் குறித்த நிபந்தனைகளைச் சுட்டிக்காட்டின பலஷரத்துக்கள். அவை காக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் அந்தஷரத்துகள்வலியுறுத்தின. ஏற்கெனவேகொடுக்கப்பெற்றிருந்த நிலமானிய சுதந்திரங்கள் ஆஞ்சுவின் அரசர்களால்பறிக்கப்பட்டு விடக்கூடிய அச்சம் நிலவியதால் அதனை வலியுறுத்துவது அவசியம் என்று கருதப்பட்டது மகாசாசனத்தில் 'சுதந்திரம்' என்று குறிப்பிடப்பட்டுள்ள சொல் தற்கால சுதந்திரம் என்னும் கருத்தில் ஆளப்படவில்லை. அங்கு கூறப்பட்டுள்ள சுதந்திரம் நிலமானிய சுதந்திரங்கள் அல்லது பாரன் பிரபுக்களின் சிறப்புரிமைகளாகும். தம் சொந்த நிலங்களை நிர்வகிப்பதில் அரசருடைய நீதிபதிகள் மற்றும் ஷெரிப்புகளின் தலையீடுகளும் குறுக்கீடுகளும் இருக்கக் கூடாது என்பது அத்தகைய சிறப்புரிமைகளில் ஒன்றாகும்.

நிலமானிய பழக்கவழக்கங்கள் என்று குறிப்பிடும்போது பாரன் பிரபுக்களின் மூதாதையர்கள் அதனை என்ன பொருளில் சொல்லிச் சென்றார்களோ அந்த இலட்சியத்தைச் சுட்டிக் காட்டுவதாயிருந்தது. நிலமானிய பழக்க வழக்கத்தை இரண்டாம் ஹென்றி தம் சாமர்த்தியமான வல்லாட்சியினால் சீர்குலைக்க முயற்சி செய்தார் என்பதையும் ரிச்சர்டு மன்னரும் ஜான் அரசரும் அவற்றைத் தத்தம் சுயலாப நோக்கத்திற்குப் பயன்படுத்திக் கொண்டு முறைகேடாக நடந்துகொண்டார்கள் என்பதையும் கருத்திற்கொண்டு அதனைப் பறிக்கக்கூடாதென முறையிட்டது தான் மகாசாசனத்தின் மூல மந்திரம். சட்டத்தின் முன் மக்கள் அனைவரும் சமம் என்பதையும் நிலமானிய பழக்க வழக்கத்தைத் தடுக்கவும் தூக்கியெறியவும் அவர்கள் முயன்றதைத் தான் மகா சாசனம் முயன்றது.

சட்டபூர்வமில்லாத வரி விதித்து தம் கருவூலத்தை நிரப்பிக் கொள்ள ஜான் எல்லா வகையிலும் முயன்றது மட்டுமன்றி, அதை ஒரு பழக்கமாக ஆக்கிக் கொண்டிருந்தார் என்பதை அறிவோம். பாரன்பிரபுக்களின் மீது 'நாட்டின் பொது மன்றத்தின் அங்கீகாரம் பெறாமல் ஸ்கூட்டேஜ் வரி அல்லது ஏனைய உதவிப் பணத்தையே அரசர் வசூலிக்கக் கூடாது என்று மகாசாசனம் அரசரைக் கட்டுப் படுத்தியது. பொது மன்றத்திற்கு பெரும் பாரன்பிரபுக்கள் தனித் தனியாக அழைப்பாணை விடப்பெற்று அழைக்கப்பட வேண்டும். மற்றும் பிரதான மானியதாரர்களை அரசர் தம் ஷெரிப்புகளின் வாயிலாக பொது மன்றத்திற்கு அவர்கள் வந்து சேரும்படி அழைக்க வேண்டும். ஏனெனில் அது தான் நடைமுறையில் இருந்த பழக்கமாகும். மேலும் விதவைகள் மற்றும் வாரிசுதாரர் களின் நிலங்களைப் பறித்துக் கொள்வதில் ஜான்மன்னர் கண்ணுங் கருத்துமாய் இருந்தார். நிலத்தை இழந்தவர்கள் பெருந் தொகையை அபராதமாகக் கட்டிய பின்னரே அவர்களின் பரம்பரை உரிமை திருப்பித் தரப்பட்டது. இந்தக் குறையை மகாசாசனம் தீர்க்க முயன்றது. தங்கள் பரம்பரை சொத்தினைச் சுதந்தரமாக அதனதன் வாரிசுதாரர்கள் பெறவேண்டும் என்னும் உரிமையை மகாசாசனம் வலியுறுத்தியது. குறிப்பாக விதவை களின் நிலையை மகாசாசனம் தெளிவாக்கியது. தம் கணவனை இழந்தவுடனேயே விதவையானவள் திருமணப் பங்காக தனக்குக் கிடைக்க வேண்டிய சொத்தை உடனடியாக யாதொரு தங்கு தடங்கலின்றி பெறவேண்டும் என்னும் உறுதிமொழியை மகாசாசனம் விதவைகளுக்களித்தது. ஜான் பாரன்பிரபுக்கள் பலரின் கோட்டைகளை எதேச்சாதிகார முறையில் பறித்துக் கொண்டிருந்தார். அது குறித்தும் மகாசாசனம் குறிப்பிட்டிருந்தது.

'சட்டப்படியான தீர்ப்பினலன்றி எவருடைய நிலத்தையோ, கோட்டைகளேயோ அல்லது அவருடைய உரிமையையோ பறித்திருந்தாலோ அன்றி அவருடைய பாத்தியத்தைப் பிடுங்கியிருந்தாலோ அவற்றை அவரவருக்கு நாம் உடனடியாகத் திருப்பித்தரக் கடமைப்பட்டுள்ளோம்.

**முப்பத்தொன்பதாம் ஷரத்து:-** ஆங்கில மக்களின் உரிமைகளைக் காக்கும் உரிமைப்பத்திரம் என்று மகாசாசனம் போற்றப்படுகிறது. உண்மையில் அத்தகைய வாசகம் மகாசாசனத்தில் குறிக்கப்படவில்லை. நாற்பதாம் ஷரத்து கூறுவது இது தான். 'நீதியை நாம் யாருக்கும் விற்கமாட்டோம்; யாருக்கும் மறுக்க மாட்டோம்; யாருக்கும் தாமதம் செய்யமாட்டோம்' என்பது மகாசாசனத்தின் வசனம். முப்பதொன்பதாம் ஷரத்தும் நீதியைக் குறித்து குறிப்பிட்டுள்ளது. சுதந்தரமான மக்களைக் கைப்பற்றுவதோ, சிறைபிடிப்பதோ, சொத்துபறிமுதல் செய்வதோ, சமூகத்திலிருந்து விலக்குவதோ, நாடு கடத்துவதோ, எவ்விதத்திலும் அழிவையுண்டாக்குவதோ கூடாது. அத்துடன் அவனுடைய பிரபுகளின் சட்டமன்றதின் தீர்ப்பினலும் அல்லது நாட்டின்சட்டப்படியும் குற்றமற்றவராயிருப்பவரின் மீது நேரிலோ பிறர் வாயிலாகவோ நாம் வழக்கு தொடரமாட்டோம். சிறப்பானதாகக் கருதப்படும் இம்முப்பதொன்பதாம் ஷரத்து ஜூரிமுறை விசாரணை குறித்து ஒன்றையும் குறிப்பிடவில்லை என்பது நினைவிற்கொள்ள வேண்டும். இம்முறை 1215ஆம் ஆண்டுக்கு பலகாலத்திற்குப் பின்னல் செயல்படத் தொடங்கியது. பிரபுக்கள் என்றும் குறிப்பிட்டது பாரன் பிரபுவுக்கு சமஅந்தஸ்து உள்ளவரைக் குறித்ததேயன்றி அரசருக்கு அருகிலிருந்து தொண்டு செய்து அதனல் பெயர் பெற்ற திடீர் புள்ளிகளை அது குறிப்பிடவில்லை. சுதந்திர குடிமகன் (Freeman) என்று குறிப்பிட்டது. நிலத்தை மானியமாகப் பெற்ற சுதந்திர குடிமகனைக் குறித்ததேயன்றி நம் காலக்கருத்தில் கூறப்படும் சுதந்திர மனிதனையன்று. சுதந்திரக் குடிமகன் ஒதுக்கப்படக்கூடாது என்று மாகாசனம் வலியுறுத்தியது, நிலமானிய கருத்துப்படியான சுதந்திர குடிமகனைச் சுட்டுவதாகும். தம் ஆண்டானுக்கும் அவன் நிலத்திற்கும் கட்டுண்ட அடிமை போலிருந்த வில்லனையும் அது குறிப்பிடவில்லை. அனைத்து ஆங்கிலக்குடி மக்களும் சுதந்திரமாகப் பிறந்தவர்கள் என்ற அடிப்படைக் கொள்கையை மகாசாசனத்தை யாத்தவர்கள் கனவிற்கூட சிந்திக்கவில்லை. ஏனெனில் அக்கால மக்கள் தொகையில் முக்காற்பங்கிற்குமேலிருந்த அடிமைகள் அல்லது வில்லன்கள் பாரன்பிரபுக்களின் குதிரைகள், மற்றும் கால்நடை

மகாசாசனத்தின் 61ஆம் ஷரத்து புரட்சிகரமானதாகும். அந்த விதி சாசனத்தை பின்பற்றுவதில் வற்புறுத்தலுக்கு வழி செய்தது. மன்னருக்கும் அவருடைய மக்களுக்கு மிடையேயுள்ள ஒப்பந்தத்தை எவ்வாறு வற்புறுத்துவது என்னும் பிரச்சினை கடினமாயும் அவசியமாயும் இருந்தது. மன்னர், தனக்குரிய அதிகாரத்தையும் கௌரவத்தையும் பெற்றிருந்தார். எனவே முன்பு ஆண்ட மன்னர்கள் புனிதமான, எழுத்து மூலம் உறுதி செய்யப்பட்ட ஒப்பந்தங்களைப் புறக்கணித்துள்ளார் என்பது முந்திய அனுபவமாகும். ஜான் மன்னர் நம்பத்தக்கவ ரல்லர் என் பதும் நாடறிந்ததாகும். அக்காலத்தில் மன்னரைக் கட்டுப் படுத்து வதற்கான அரசியல் சட்டத் தடைகள் ஏற்படவில்லை. எனவே நாகரிக மற்ற முறையில் ஒரு திட்டம் வகுக்கப் பெற்றது. இத் திட்டத்தின் தன்மை நடைமுறைக்குச் சற்றும் ஏற்றதன்று. அத்துடன் ஜான்மன்னர் அவருடைய குடிகளுக்கெல்லாம் கலகம் செய்யத்தக்க உரிமை வழங்கினர் என்னும் கருத்து மக்களிடையே பரவியிருந்தது. மானியப் பிரபுக்கள் அனைவரும் சேர்ந்து இருபத் தைந்து பேர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும், சாசனத் தில் கண்ட ஷரத்துகளை நடைமுறைப்படுத்த அவர்களுடைய முழு வலிமையையும் பயன் படுத்திப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இருக்க வேண்டுமென்றும் ஏற்பட்டது. மன்னரோ அல்லது அவருடைய அதிகாரிகளோ சாசனத்தைச் சிறிதள வேனும் மீறி நடந்தால், மேற்கூறிய இருபத்தைந்து மானியப் பிரபுக்கள் அல்லது அவர்களில் நால்வர், மன்னரிடமோ, மன்னர் இல்லாத சமயத்தில் பிரதம அரசியல் நீதிபதியிடமோ குறைகூறி உடனடியாகக் குறை நீக்கத்தைக் கோர வேண்டும். நாற்பது நாட்களுக்குள் குறை நீக்கம் செய்யப்படாவிடின் 'மேற்கூறப்பட்ட 25 மானியப் பிரபுக்கள் நாட்டுப் பொதுமக்களுடன் சேர்ந்து கொண்டு எம் கோட்டைகள், நிலங்கள், சொத்துகள் முதலியவற்றை அவர்களின் விழைவுப்படி குறை நீக்கம் செய்யும் வரை, எம்முறை யிலும் கைப்பற்றி எல்லாச் சாத்தியமான வழிகளிலும் பறிமுதல் செய்து தொல்லையை உண்டு பண்ணலாம்.' சிறப்பு வாய்ந்த இந்த ஷரத்தைக் குறித்து பலர் பலவாறுக எழுதியுள்ளனர். மன்னருக்கு எதிராகவே போர் முழக்கம் செய்வதற்கு 25 பிரபுக்களுக்கு அதி காரம் அளிக்கப் பட்டுள்ளதெனக் கருதுகிறர் ஸ்டப்ஸ் என்னும் வல்லுநர்.

மேற்கூறிய 61வது ஷரத்தை ஜான் மன்னர் கேட்டபோது அவர் குறிப்பிட்டதாவது, 'அவர்கள் எனக்கு மேல் இருபத்தைந்து அரசர்களைக் கொடுத்திருக்கிறர்கள்!'

**பிற்கால வரலாற்றில் மகாசாசனம்:-** சுருங்கக் கூறின், மகா சாசனம் சிறப்பாக பாரன்பிரபுக்களின் சாசனம் ஆகும். மக்கட் தொகையில் பெரும் பங்கினராய் இருந்த வில்லன்கள் அது குறித்து சிறிதும் அக்கறை காட்டவில்லை. அது புரட்சிகரமான திட்டம் எதையும் கொண்டிருக்கவில்லை, ஒன்றைத் தவிர 25பாரன் பிரபுக்களின் குழு வொன்றின் மூலம் அரசரைக் கட்டுப்படுத்த மகாசாசனம் வழிவகை செய்தது ஒன்றுதான் அது. எல்லா ஆங்கிலேயருக்கும் அது சுதந்திரத்தை ஊர்ஜிதம் செய்யவில்லை. ஏனெனில் கி. பி. 1215 ஆம் ஆண்டில் அத்தகைய கருத்தினைப் பற்றி ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது. ஆனால் பிற்காலத்தில், குறிப்பாக ஸ்டூவர்ட் மன்னர்களுடன் சச்சரவேற்பட்டபோது அப்போது ஆங்கிலேயர்கள் அனைவரும் சுதந்திரக் குடிமக்கள் ஆகி இருந்தனர்- மகாசாசனத்தின் சில ஷரத்துகள் புதிய பொருளிலும் விரிந்த பொருளிலும் விளக்கப்பட்டு அரச முடிக்கெதிராக சுட்டிக் காட்டப்பட்டன. இங்கிலாந்து அரசரைக் கட்டுப்படுத்தி அவர் களைச் சட்ட நீதிபடியாகவும், நாட்டில் நிலவிய பழக்க வழக்க மரபுகளின் அடிப்படையிலும் ஆள வேண்டும் என மக்களைக்கோர வைத்த முதல் முயற்சியே மகாசாசனம் என்ற முறையில் அது வரலாற்றில் சிறப்பிடத்தைப் பெறுகின்றது. அந்த வகையில் அது பிற்காலத்தவர்க்கு முன் மாதிரியாக அமைந்த ஆவணமாய்த் திகழ்வதுடன், இங்கிலாந்தின் வாழையடி வாழையாக மதிக்கப் பட்டு வரும் சுதந்திரத்தைக் கோடிட்டுக்காட்டிய வரலாற்றுத் திருப்புமுனை என்றும் கருதப் படுகிறது.

**மகா சாசனத்தைக் குறித்து பொது மதிப்பீடு:-** ஆங்கில அரசியல் அமைப்புத்திட்ட வரலாற்றில் மகாசாசனத்திற்குச் சீரிய முக்கியத்துவம் உண்டு. 'ஆங்கில சுதந்திரத்தின் உயிர்நாடி' என்று அதனை ஹாலம் (Hallam) என்பார் குறிப்பிடுகிறார். 'மகா சாசனம், உரிமை மனு (Petition of Right)' உரிமைகள் மசோதா (Bill of Rights) ஆகிய மூன்றும ஆங்கில அரசியல் அமைப்புத் திட்டத்தின் வேதநூலாகும்' என்று சாத்தாம் (Chatham) வலி யுறுத்துகிறார்.

'மகாசாசனம் எந்தக் காரணத்திற்காக வரையப்பட்டதோ அந்நோக்கத்தைப் பூர்த்தி செய்ததுடன் நாட்டு மக்களில் கருத் தொருமித்த முதல் பொதுசெயல்திட்டமாகும்' என்ற கருத்து சரி யானதாகப்படவில்லை. ஜான் மன்னரின் கொடுங்கோலாட்சியை எதிர்க்க பாரன்பிரபுக்கள், சமய குருமார்கள், மக்கள் ஆகியோ ரிடையே தாற்காலிக இணக்கம் ஏற்பட்டதென்னவோ உண்மை தான். ஆனால் அதன் பயனாக நாட்டுமக்கள் அனைவரிடையேயும்

ஒற்றுமை ஏற்படவில்லை என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். இன்று தேசியம் பற்றிய கருத்தினைப் போன்று அக் காலத்தில் பரந்து விரிந்த பொருளில் அது கொள்ளப்படவில்லை. அது பிற்காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சியாகும். அடுத்து வந்த அரசாட்சியின் சந்தர்ப்ப சூழ்நிலைகளின்போது அதை மீண்டும் மீண்டும் ஊர்ஜிதம் செய்தனர் என்பது ஒன்றே வருங்காலத்தில் மகாசாசனம் வழிகாட்டியாய் அமைந்தது என்பதைச்சுட்டிக் காட்டுகிறது.

பாரன்பிரபுக்களின் உரிமைகளைக் கட்டுபடுத்த ஜான்மன்னர் முயன்ற முறையினை எதிர்க்கவும், அவர்களின் தனிப்பட்ட குறை களுக்கெதிராக கலகம் மூண்டதின் விளைவாகவும் பாரன்பிரபுக் களின் •பணியின் பயனாக எழுந்ததே மகாசாசனமாகும். பாரன் பிரபுக்கள் தங்களுக்காகப் போரிட்டார்களேயன்றி, நாட்டை முதன்மையாகக் கொண்டு போராடவில்லை. ஆனால் தங்களுக் காகப் போராடிய போது, அவர்கள் நாடு முழுவதிற்குமாகப் போராடினார்கள் என்பதும் உண்மைதான். ஜான்மன்னர் வெற்றி பெற்றிருந்தால் அதன் விளைவாக அனைத்து வகுப்பு மக்களின் உரிமைகளுக்கும் பயங்கர அபாயம் நேரிட்டிருக்கக்கூடும்; முடி மன்னரின் வல்லாட்சி நிலைநாட்டப்பட்டிருக்கக்கூடும். மேலும், பாரன்பிரபுக்களின் இலட்சியங்கள் சுயநலமானவை என்றாலும், நாட்டு மக்கள் அனைவரின் ஆதரவும் அவர்களுக்குத் தேவைப் பட்டது. அத்தகைய ஆதரவுக்குச் செவி சாய்த்துத்தான் திருச் சபையின் செல்வாக்கினையும், நகர்ப்புற மக்களது உரிமைகளையும் கவுன்டிகளின் உரிமைகளையும் காக்கும் ஷரத்துக்கள் மகா சாசனத்தில் இடம்பெற வாய்ப்பேற்பட்டது.

முதலாம் ஹென்றியின் சாசனங்களின் அடிப்படையில் எழுந்த மகாசாசனம் பழையதைப் பாதுகாக்கும் தன்மையைக் கொண்டிருந்தது. அதில் புதிய ஷரத்துக்கள் பெரும்பாலும் இல்லையெனக் கொள்ளலாம். எனினும் மகாசாசனத்திற்கு முன்னால்வந்த சாசனங்கள் தெளிவற்றவையாக இருந்தன. ஆனால் மகாசாசனமோ பழைய உரிமைகளைத் தெளிவாக ஊர்ஜி தம் செய்து வலியுறுத்தியது.

மகாசாசனத்தைக் காக்க இருபத்தைந்து பாரன் பிரபுக்களின் கூட்டுறவையும், ஒத்துழைப்பையும் எதிர்பார்த்தது. நாட்டு மக்கள் அனைவரின் பொதுநலத்தையும் குறிப்பிடும் வாசகம் என் பதில் ஓர் அடிப்படை உண்மை இருப்பதைப் புரிந்து கொள்ள

வேண்டும். அது என்ன? அரசியலில் மக்களைப் பொருட்படுத்தி அங்கீகரிக்கும் விஷயம் அமுலாக்கத்தொடங்கியது என்பதே அது.

மகாசாசனத்தை ஏன் 'மகா' (Great) என்று அடைமொழியிட்டு அழைக்கிறோம்? காரணம் உண்டு. இங்கிலாந்தில் வெளியான பல்வேறு அரசியல் ஆவணங்களில் அளவில் பெரியது இச்சாசனமே யாகும் என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும். மேலும், அதனை அடுத்து வந்த மன்னர் திரும்பத் திரும்ப ஊர்ஜிதம் செய்தமையால் அதன் சிறப்பு கூடுதலாகிறது. வரலாற்றில் முப்பத்தேழு முறை மகாசாசனத்தை ஊர்ஜிதம் செய்திருப்பதாகக் கூறுவர். அது ஒன்றே அதன் சிறப்பினை வலியுறுத்துவதாகும்.

எனினும், இவ்வளவு சிறப்புகளைக் கொண்டிருந்த மகா சாசனத்தைப் பிற்காலத்தில் வந்த நாடக மேதை ஷேக்ஸ்பியர் தம் வரலாற்று நாடகமான 'ஜான் மன்னர்' என்ற நாடகத்தில் குறிப்பிடாதது வியப்பாக இருக்கிறது.

கோக் என்பவரின் காலம் முதல் பத்தொன்பதாம் நூற்றுண்டு வரை ஆங்கிலேயரின் அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள் எல்லாமே மகாசாசனப் பத்திரத்தில் காணலாம் எனக் கருதப்பட்டது. 'இங்கிலாந்தின் அடிப்படையான சட்டங்களுக்கு முக்கிய ஆதாரமாயுள்ளது என மகாசாசனம் அறிவிப்பதாயிற்று' எனக் கோக் கூறினர்.

**ஜானின் உதாசீனம்:-** மகா சாசனத்தின் ஷரத்துகளை மதித்து நடக்க வேண்டும் என்ற எண்ணம் ஒரு சிறிதும் ஜானிடம் காணப்படவில்லை. கட்டாயப் படுத்தப்பட்டு உறுதிமொழிகளை வாங்கியிருந்தது மகா சாசனம். எனவே அவற்றைச் சமயம் கிடைத்த போது ஜான், உதறித்தள்ள முயற்சி செய்ததில் வியப் பொன்றுமில்லை. ஜானுக்குப் பெரும் நம்பிக்கை ரோமாபுரியிலிருந்தது போப்பாண்டவர் இன்னசென்ட் அவருக்குக் கூட்டாளியாகி இருந்தார். அவருக்கு எவ்வித உதவியையும் செய்ய அவர் ஆயத்தமாயிருந்தார். தங்களின் சட்டபூர்வமான அரசருக்கு எதிராக கலகக்காரர்களால் வரையப்பட்டதென்று கூறி மகாசாசனத்தைப் போப்பாண்டவர் ரத்து செய்தார். மேலும் பாரன் பிரபுக்கள் அரசருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்குமாறும் போப்பாண்டவர் பிரபுக்களைப் பணித்தார். எனினும் பிரபுக்கள் உள்நாட்டுப் போருக்கு ஆயத்தமானர்கள். போப்பாண்டவரின் ஆசி பெற்று சிலுவைப் போர்வீரர்களைப் போன்று ஆங்கிலக் கால்வாயைக் கடந்து வந்த

கூலிப்பட்டாளத்தினரை தம் உதவிக்கு வரவேற்க போவர் சென்ற ஜான், தம் பக்கம் நியாயம் இருப்பதாக எண்ணிக் கொண்டார். அந்தப்படை வந்தவுடன் ஜான் வடபால் முன்னேறிச் சென்றார். பெர்விக் வரையிலுள்ள பகுதிகளை அழித்து நாசப்படுத்தினார். பின்னர் தென்பால் திரும்பி இலண்டன் மீது படையெடுத்தார். அப்போது அந்நகரம் அவருடைய பகைவர்களின் தலைநகரா யிருந்தது.

**பிரெஞ்சு மன்னர் இங்கிலாந்து வரல், 1216:-** இதனிடையில் பாரன் பிரபுக்கள் வறிதே நிற்கவில்லை. அவர்கள் பிரெஞ்சு மன்னர் பிலிப்பை இங்கிலாந்தின்மீது படையெடுத்து வருமாறு அழைப்பு விடுத்தனர். மறுமொழி கொடுக்கும் முகத்தான் பிலிப் மன்னர் தம் மூத்தமகன் இளவரசன் லூயியை இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார். அவருடன் பெரும்சேனையொன்றும் உடன் வந்தது. அவை கலகக்கார பாரன் பிரபுக்களுடன் இலண்டனில் இணைந்து கொண்டன. தேம்ஸ் ஆற்றங்கரைக் கோட்டைகளான வின்ட்சர், வாலிங்போர்டு, ஆக்ஸ்போர்டு முதலான கோட்டைகளை ஜான் பிடித்துக் கொண்டு, இலண்டனைப் பட்டினிப் போட்டு சரணடையச் செய்யமுடியும் என்று நம்பியிருந்தார் அவர். ஆனால் ஜானின் பிரெஞ்சிய கூலிப்பட்டாளத்தினர் தம் இளவரசருக்கெதிராகப் போர்புரிய இணங்கவில்லை. மாறாக அவர்கள் ஜானைக் கை கழுவத் தொடங்கினர். ஜான் வேல்ஸ் எல்லைப்புறங்களைத் தாக்கச் சென்றார். பின்னர் இறுதியாக முயற்சியொன்றினைச் செயல்படுத்த முயன்ற ஜான் இங்கிலாந்தின் குறுக்காகப் படையெடுத்து விரைந்து லிங்கனைக் கைப்பற்றினார். இருப்பினும் பிரச்சினை தீர்ந்த பாடாகத் தென்படவில்லை. நாட்டில் பயங்கர உள்நாட்டுப் போர் மூளும் பேரச்சம் மூண்டது. இத்தருணத்தில் அரசரை துரதிர்ஷ்டம் தொடர்ந்தது. துன்ப நிகழ்ச்சியொன்று அவரைத் துரத்தியது. வாஷ் ஆற்றைக் கடக்கும்போது அவருடைய பொருள்கள் ஆற்று வெள்ளத்தால் பறிபோயின. மக்களின் சொல்லொணாத் துயர்களைக் கண்டு இரங்காத கல்நெஞ்சம் கொண்ட ஜானின் இதயம் பொருளை யிழந்து விட்டபோது இரங்கித் துடித்தது. ஜான் நோய்வாய்ப் பட்டார்; நீவார்க் வந்து சேர்ந்தார். அங்கு அவர் காலமானார் (1216).

ஜான் மன்னரின் வாழ்க்கை சுயநலம் படைத்ததாய் இருந்தது; பயனற்ற செயல்களில் பொழுதைப் போக்கினவர். நிலையற்ற மனம் படைத்தவர். அவர் மரணமுற்றதால் இங்கிலாந்து உள்நாட்டுப் போரிலிருந்து காப்பாற்றப்பட்டது. அவருடைய கொடுங்கோலாட்சி நாட்டிற்கு நல்லனவற்றைக் கொடுக்கப்

போவதை உணராமலேயே அவர் மாண்டுபோனூர். அவருடைய மரணத்திற்கு ஒருவரும் வருந்தவில்லை. இப்படியாக ஜான் மன்னரின் ஆட்சி முடிவுற்றது. அத்துடன் நார்மானியக் கொடுங் கோன்மையும் முடிவினை எய்தியது.

## இ. மூன்ரும் ஹென்றி -தொடக்க ஆண்டுகள்

**மூன்ரும் ஹென்றி 1216-72:-** மூன்ரும் ஹென்றியின் தந்தை யாரான ஜான் மன்னர் காலமானபோது, அவருக்கு வயது ஒன்பது தான் ஆகியிருந்தது; அவருடைய இராச்சியம்சீர்குலைவுற்ற நிலையில் இருந்தது. இங்கிலாந்தின்மீது பிரான்ஸ் நாட்டின் படையெடுப்பு நடைபெற்றுக் கொண்டிருந்தது. பிரெஞ்சிய இளவரசர் இலண் டனில் இருந்து கொண்டு அரசுரிமைக்கு உரிமை கொண்டாடி வந்தார்; பாரன் பிரபுக்களில் சிலர் அவருக்காகப் போராடிக் கொண்டிருந்தனர். இத்தகைய இக்கட்டான நிலையிலிருந்த இங்கிலாந்தைக் காப்பாற்றிய பெருமை பெம்ப்ரோக் ஏர்ல்பிரபு வில்லியம் மார்ஷல் என்பாரையும், ஜஸ்டிசியராகப் பணியாற்றிய ஹூபர்ட் டி பர்க் என்பாரையும் சாரும். ஜான் தற்போது காலமாகி விட்டபடியால் பாரன் பிரபுக்களின் கட்சியைச் சார்ந்த பெரும் பாலோர் பெம்ப்ரோக் பிரபுவினுடன் இணைந்து கொண்டு பிரெஞ்சி யரை லிங்கன் என்னுமிடத்தில் 1217ஆம் ஆண்டில் தோற்கடித் தனர். ஹூபர்ட் டி பர்க்கும் இங்கிலாந்தின் தென் கரையிலுள்ள துறைமுகங்களிலிருந்த அவருடைய வீரர்களும் பிரெஞ்சியரின் கப்பற்படையை டோவர் நீர்ப்பிரிவுப் பகுதியில் சான்ட்விச்சுக் கருகில் சிதற அடித்தனர். சிறிது காலத்திற்குள் பிரெஞ்சிய இளவரசரும் இங்கிலாந்தை விட்டுச்செல்ல ஒப்புக்கொண்டார்.

**ஹூபெர்ட் டி பர்க்கும் அவருடைய வீழ்ச்சியும்:-** ஈராண்டுகளுக் குப் பின்னர் பெம்ரோக் பிரபு காலமானூர். அவரையடுத்து ஏறத்தாழ அடுத்த பத்தாண்டுகளுக்கு இங்கிலாந்தை ஹூபர்ட் டி பர்க் ஆண்டார். மகாசாசனத்தை அரசரின் பெயரில் அவர் மீண்டும் வெளியிட்டார். ஹென்றியின் இளமைப் பருவத்தில் நாட்டைத்திறமையாக ஆட்சி நடாத்தினூர் டிபர்க். ஹென்றிக்கு வயது வரும்வரை நீடிந்த அமைதியான ஆண்டுகள் பின்னூல் வரஇருந்த நீண்ட, அமைதியற்ற ஆட்சி நிலையை ஒரு வகையில் மறைத்து ஏமாற்றியிருந்ததெனவேண்டும். தம்முடைய ஆசிரிய ராக இருந்த பீட்டர் டி ரோச்சஸ் என்பாரிடம் அவர் பெரு நம்பிக்கைக் கொண்டிருந்தார். பின்னர் அவரை ஹென்றி வின்செஸ்டரின் பிஷப்பாகவும் ஆக்கியிருந்தார். அப்பிஷப்பின் செல்வாக்கிற்குட்பட்ட ஹென்றி, தம்முடைய புகழ்பெற்ற

ஜஸ்டீசியரான ஹூபர்ட் டி பர்க்கைப் பதவிநீக்கம் செய்த தோடன்றி, கைது செய்து சிறையில் அடைத்தார் (1232). டி பர்க்கின் கைகளில் விலங்கினை மாட்டப் பணிக்கப்பட்ட காவலர், அவருடைய கைகளில் விலங்கினை மாட்ட மறுத்து விட்டுக்கூறியதாவது:- 'நம்பிக்கைக்குப் பாத்திரமான இந்த ஹூபர்ட் தான், பலமுறைகள் அந்நியர்களினால் தாக்கப்பட்டு அழிக்கப்பட்ட இங்கிலாந்தைக் காத்து, இங்கிலாந்தை இங்கிலாந்தாக இருக்கச் செய்தவரல்லவா?' ஹூபர்ட்டின் வீழ்ச்சிக்குப் பின்னர் மூன்றும் ஹென்றி சுதந்திரமனிதரானார்; இங்கிலாந்தைத் தாமே ஆட்சி செய்வதெனவும் முடிவு செய்தார் (1234- 72)

**மூன்றும் ஹென்றியின் குணவியல்புகள்:-** பயங்கரமான சூழ் நிலையில் தத்தளித்த நாட்டினை ஆளத்தகுதி வாய்ந்த குண வியல்புகளை மூன்றும் ஹென்றி கொண்டிருக்கவில்லை. அவர் பண்பாட்டிற்கும், தூய்மைக்கும் இலக்கணமாய் நின்றார். அவருக்குக் கலைகளைப் பேணிக்காக்கும் சுவையிருந்தது. அதன் விளைவாக அழகினை எடுத்துக்காட்டும் சீரிய கட்டிடங்களை அவர் கட்டக்காரணமாயிருந்தார். வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோயிலைக் கட்டிய பெருமை பெரும்பாலும் அவரைச்சாரும். இன்றும் அதன் கலை அழகினைக்கண்டு களிக்கலாம். அதன் நிமித்தமாக அவர் எட்வர்டு அதிபத்தரின் திருக்கோயிலை இடித்து விட்டு, அப்புனிதரின் நினைவாக பெரியதும், அழகு மிக்கதுமான திருக்கோயில் ஒன்றினைக்கட்டி முடித்தார். அப்படி கட்டி முடிக்கப் பெற்றது தான் வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோயிலாகும். திருச்சபையின்மீது அவருக்கிருந்த ஈடுபாடும் பக்தியும், அவருடைய பண்பாட்டிற்கு எடுத்துக்காட்டாக அமைந்திடினும்கூட அவரைத் திறமை வாய்ந்த அரசரென்றோ அல்லது வெற்றிவாகை சூடிய மன்னரென்றோ கொள்ள இயலாது. விடாபிடியரும் தலைகனத்தவருமான அவர், தம் விழைவுப்படி நடக்கும்போது எந்த குறுக்கீட்டையும் வெறுத்தார். எனினும் அவருக்கு நாட்டை ஆளும் திறமை இருக்கவில்லை. அவரைப் பொருளாதார ஞானசூனியர் எனலாம். அதைப்போன்று அவரால் மனிதர்களைச் சரியானபடி எடைபோட்டுப் பார்க்க முடியவில்லை. மேற்கூறிய இவ்விரு பலவீனங்கள் அவரது ராச்சிய நலிவுக்குக் காரணங்களாயின.

வெஸ்ட்மின்ஸ்டர் திருச்சபையைக் கட்டக் காரணமாயிருந்த முதல்வர் எட்வர்டு அதிபத்தர்; அதைத் திருத்தியமைத்துப் புதுப்பித்த மூன்றும் ஹென்றி இரண்டாமவர். இருப்பினும் அவர்களுக்கிடையே எத்துணை ஒற்றுமைகள். இருவரும் புண்ணிய புனித ஆத்மாக்கள்; இருவரும் சாதாரண மனிதன் போலல்லாது

ஒருவகையில் பிரிந்து காணப் பட்டார்கள். அவர்களிடம் இனிமையும், உணர்ச்சியும் இயற்கையாகக் குடி கொண்டிருந்தன. இருவரும் தம் இச்சையை தம்முடன் சமகாலத்து முரட்டுப் பிடிவாதம் கொண்டவர்களிடம் நிலைநாட்டமுடியாது தோற்று விட்டவர்கள். இவையெல்லாவற்றையும் விட மூன்றும் ஹென்றி அதிபத்தரைப்போல் முக்கிய பலவீனத்தால் பாதிக்கப்பட்டவர். அதுதான் அவர் ஆங்கிலேயர்களை விட அந்நியர்களை நம்பின பலவீனமாகும்.

பீட்டி ரோச்சஸ் என்பார் பாயிட்டோவைச் சார்ந்தவர் அவரைப் பின்பற்றி அவருடைய அணுக்கத் தொண்டர்கள் எல்லாம் பாய்ட்டோவிலிருந்து வந்து ஆங்கில அரண்மனையை அலங்கரித்தனர். அவர் 1236 ஆம் ஆண்டில் புரோவென்ஸைச் சார்ந்த இலியனுர் என்பாரைத் திருமணம் செய்து கொண்டபோது புரோவென்ஸைச் சார்ந்தவர்களும், சவாய்காரர்களும் இங்கிலாந்தில் குடியேறினர். எலியனுர் அரசியின் சகோதரி பிரான்ஸ் நாட்டினரான செயின்ட்லூயி என்பாரை மணந்து கொண்டபோது அவர் தம்முடைய இத்தாலிய மாமன்களையும் சவாய் குடும்பத்தைச் சார்ந்த இளவரசர்களையும் இங்கிலாந்திற்குக் கொண்டு வந்தார். இந்த மாமன்மார்கள் ஹென்றி பந்தபாசத்தால் கூடிக் குலாவி கொம்மாள மடித்து மகிழ்ந்தனர். சவாயைச் சார்ந்த பானிபேஸ் என்பார் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பானுர். வில்லியம் வின்செஸ்டர் பிஷப்பானுர். பீட்டர் ரிச்மாண்ட் பிரபுவானுர். தாமஸ் என்ற சகோதரர்களில் பிறிதொருவர் ஹென்றியின் செல்வாக்கிற்குட் பட்டு வாரிசுரிமை கொண்ட பணக்காரி யொருத்தியை மணந்து கொண்டார்.

தம் மனைவியின் உற்ருர் உறவினர்களுக்கும், மற்றும் அவர்களைப் பின்பற்றி வந்தவர்களுக்கும் ஹென்றி சலுகைகளையும் பொருளையும் வாரி வழங்கியதால் ஏற்பட்ட மனக்குறையை விட பிறிதொரு மனக்குறையும் நாட்டு மக்களை வாட்டி வதைத்தது. போப்பாண்டவர் ஒன்பதாம் கிரகிரி பேரரசர் இரண்டாம் பிரடரிக் குடன் சச்சரவிட்டுக் கொண்டிருந்தார். போப்பாண்டவரின் பிரதிநிதியான ஆட்டோ என்பார் இப்போருக்கு அவசியமான நிதி திரட்ட வேண்டுமென இங்கிலாந்திற்கு ஆணையிட்டார். சமய குருமார்களின் பொருள்களில் ஐந்திலொரு பங்கினை சமய நிந்தனையாளரான (heretic) பேரரசருக்கெதிராக நடைபெறும் ஒருவகை சிலுவைப்போருக்குக் கொடுக்க வேண்டுமென ஆட்டோ கோரிக்கை விடுத்தார். ஆனல் போப்பாண்டவர் அத்துடன் நிற்காமல் மேலும் ஆங்கிலேயரின் மனக்குறையைப் பெரிதாக்கும்

செயலொன்றைச் செய்தார். ரோமாபுரி சமயகுருமார்களில் முன்னூறு பேருக்கு இங்கிலாந்தில் வருவாய் கிட்டும் பணிகளை ஏற்படுத்திக் கொடுத்தார். அதன் மூலம் அவர்களின் குடும்பத்தார் களின் பேராதரவை பேரரசர் பிரடரிக்குக் கெதிராகப் பெற முடியும் என்று போப்பாண்டவர் நம்பினார். அப்படி நியமிக்கப் பெற்றவர் களில் சிலர் இங்கிலாந்துக்கு வராமலேயே வருவாயைப் பெற்று அனுபவித்து வந்தார்கள். 'போப்பாண்டவரை எதிலும் எதிர்க்கும் விருப்பமோ, நெஞ்சுரமோ எனக்கு இல்லை' என்று கொண்ட ஹென்றியின் கருத்திலிருந்து அவருடைய போக்கினைப் புரிந்து கொள்ள முடியும். இங்கிலாந்தை போப்பாண்டவரின் ஆட்சிக்குட் பட்ட பிரதேசங்களின் ஒரு மாநிலமாக நிர்வகிக்கப் படுவதையே அவர் விரும்புகிறவர் போன்றுதிருப்தியுற்று காணப்பட்டார். அவர் இங்கிலாந்து இவ்விதம் சூறையாடப் படுவதைக் குறித்து அவர் வெட்கப் பட்டதாகத்தெரியவில்லை.

## ச. சைமன் டி மாண்ட்போர்டு

கி. பி. 1250 ஆம் ஆண்டில் இரண்டாம் பிரடரிக் காலமான போது போப்பாண்டவராயிருந்தவர் நான்காம் அலெக்சாந்தர் என்பாராகும். இரண்டாம் பிரடரிக் சிசிலியின் முடிமன்னராயிருந் தவர். அவர் காலமானதால், அரசுரிமையைப் போப்பாண்டவர் ஹென்றியின் மகன் எட்மண்டிற்கு பெரும் பொருளைப் பெற்றுக் கொண்டு விற்று விட்டார். ஹென்றியின் சகோதரர் ரிச்சர்டு கார்ன்வால் பிரபுவாயிருந்தார். அவரை ரோமானியர்களின் அரச ராக்கப் போவதாகக் கூறி மீண்டும் பெரும் பொருளையும் பெற்றார். போப்பாண்டவர். (பேரரசர் பதவி) மேற்கூறிய இருபதவிகளும் பார்ப்பதற்குப் பெரும் பதவிகள் போல் தென்பட்டாலும் பயனற்ற பதவிகளாகத்தான் இருந்தன. ஏனெனில் எட்மண்ட் சிசிலியில் கால் வைக்கவே இல்லை. ரிச்சர்டின் கதியோ பிறிதொரு வகை யாகப் புறக்கணிக்கப் பட்டிருந்தது. அவர் ஆக்கன் (Aachen) என்னும் நகரில் பேரரசராக முடிசூட்டிக் கொண்ட போதிலும், ஜெர்மனியில் அவரை ஒருவரும் அங்கீகரிக்கவில்லை.

**வேல்ஸில் போர் :-** இத் தருணத்தில் மூன்றும் ஹென்றி பயனற்ற போர் ஒன்றில் ஈடுபட வேண்டியவரானார். லெவ்லின் ஆப் குருபைட்(Llewelyn of Gruffyod)என்பார் வேல்ஸ் இளவரசர் எனத் தம்மைக் கூறிக் கொண்டு ஹென்றிக்கு எதிராக எழுந்தார். வேல்ஸிலிருந்து திரும்பிய ஹென்றி தமக்கெதிராக எதிர்ப்புணர்ச்சி கள் கிளம்பியுள்ளதையும், அவ்வெதிர்ப்புக்குத் தலைமை தாங்கும் தலைவர்கள் இருப்பதையும் உணர்ந்தார். திருச்சபை குருமார்கள் போப்பாண்டவருக்கு வலுக்கட்டாயமாக செலுத்த வேண்டியு

வரிகளுக்கு எதிராகக் கோபங் கொண்டனர். திருச்சபைப் பதவி வகித்தவர்களில் பெரும்பாலோர் அந்நியர்களாக இருந்தது அவர்களின் கோபத்திற்கு மேலும் தூபம் போட்டது. இவ் வனைத்திற்கும் அரசரையே காரணம் காட்டி அவர்கள் குறை கூறினர். அவர்களைத் தலைமை தாங்கி நடாத்திச் சென்றவர் லிங்கன் பிஷப்பான கிராஸ்டெஸ்ட் என்பாராகும். தம் இருக்கும் ஆண்டு வரை (கி பி. 1253) அவர்களுக்குத் தலைமை தாங்கினர் கிராஸ்டெஸ்ட். அது மட்டுமன்று. பாரன்பிரபுக்களும், நைட்வீரர்களும் கூட அரசரின் அவசியமற்ற போர்களை எதிர்த்தனர். பொருளும், போர் வீரர்களும் பெருஞ்சேதமுறுவதை அவர்களால் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. அவர்கள் சீர்த்திருத்தங்கள் தேவையெனக் கோரிக்கை எழுப்பினர். அவர்களின் தலைவராக இருந்தவர் சைமன் டி மாண்ட்போர்டு என்பார். அவர் பிரெஞ்சிய பெருங் குடிமகனுரில் ஒருவர். லீஸ்டர் பிரபுவாக்கப்பட்டிருந்தார். அவர் சிறுது காலம் எட்வர்டு இளவரசருக்கு உற்ற நண்பராகவும் இருந்தார். டி மாண்ட்போர்டு தலைமை தாங்கும் தகுதி பெற்ற திண்மையாளர். தொடக்க காலத்தில் அரசரின் ஆதரவினைப்பெற்ற அந்நிய நண்பர்களில் அவரும் ஒருவர். ஹென்றி தம்முடைய சொந்த சகோதிரியையே அவருக்கு மணம் முடித்துக் கொடுத்தார். அத்துடன் அவரைக் காஸ்கனியின் கவர்னராகவும் ஆக்கியிருந்தார். அவர் முயற்சியால் தான் காஸ்கனி இங்கிலாந்துடன் இணைந்திருக்க வாய்ப்பேற்பட்டது. பின்னர் அரசருக்கும் சைமன் டி மாண்ட்போர்டுக்கும் இடையே மூண்ட சச்சரவின் விளைவாக, அவரை அரசர் காஸ்கனியின் கவர்னர் பதவியிலிருந்து பதவி நீக்கம் செய்தார் (1253). அதனுல் தான் அவர் அரசரின் பகைவர்களுடன் இணைந்து கொண்டார்.

**ஆக்ஸ்போர்டு கவுன்சில் கூட்டம் 1258 :-** கி. பி. 1258ஆம் ஆண்டில் கூட்டப் பெற்ற ஆக்ஸ்போர்டு கவுன்சில் கூட்டத்தின் போது பாரன்பிரபுக்கள் ஆயுதந்தரித்துக் கொண்டு வந்தனர். அதுவே ஹென்றி ஆட்சியின் திருப்புமையமாக அமைந்தது எனில் மிகையன்று. கூட்டந்திற்கு வந்திருந்த பிரபுக்கள் தங்கள் குறைகளுக்கு அரசர் உடனடியாகப் பரிகாரம் தேட வேண்டுமென ஆர்ப்பரித்தனர். அரசரின் அபிமானத்திற்கு ஆட்பட்டிருந்த அந்நியர்கள் நாட்டிலிருந்து உடனடியாக விரட்டப்பட வேண்டுமென்றும் அவர்கள் கோரினர். பின்னர் அவர்கள் 24 பாரன் பிரபுக்களைக் கொண்ட குழுவொன்றினை நியமித்து அரசாங்கத்தை நல்வழிப்படுத்தத் தீர்மானித்தனர். அக் குழுவினர் புதியதொரு அரசாங்கத்தை நிலைநாட்டுவதற்கான சட்ட திட்டங்களை வரை

யறுத்தனர். அதைத்தான் வரலாற்றில் ஆக்ஸ்போர்டு ஏற்பாடுகள் என்பர் (Provisions of Oxford).

**ஆக்ஸ்போர்டு ஏற்பாடுகள்:-** சைமன் டி மான்ட் போர்டையும் கிளஸ்டர் பிரபு ரிச்சர்டு டி கிளார் என்பவரையும் தலைவர்களாகக் கொண்ட பதினைந்து பாரன் பிரபுக்கள் நிலையானதொரு குழுவாக உருவாகப்பெற்று, அரசரின் அரசாங்கத்தின் எல்லா நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்த வேண்டும் என்பதே அந்த ஏற்பாடுகளாகும். அதனைச் சட்டபூர்வமான பிரபுக்களின் குழு ஆட்சி என்றும் கொள்ளலாம். ஹென்றி ஆக்ஸ்போர்டு ஏற்பாடுகளின்படி நடப்பதாக உறுதிமொழி கொடுத்தார். ஆனால் அடுத்த ஆண்டில் போப்பாண்டவர் நான்காம் அலெக்சாந்தர் என்பாரின் தலையீட்டினால் அரசர் கொடுத்த உறுதிமொழி அவரைக் கட்டுப்படுத்த திறனற்றது என்றும் கோர வைத்து ஆக்ஸ்போர்டு ஏற்பாட்டை சீர்குலைய வைக்க முயன்றார். அரசரும், பிரபுக்களும் இவ்வழக்கை பிரான்ஸ் மன்னர் செயின்ட் லூயி என்பாரிடம் தீர்த்து வைக்குமாறு வேண்டிக் கொண்டனர். பிரெஞ்சிய அரசர் ஆமியன்ஸ் ஒப்பந்தப்படி கி. பி. 1264ஆம் ஆண்டில் தம் தீர்ப்பினை ஹென்றிக்குச் சாதகமாகக்கூறினார். அத்துடன் ஆக்ஸ்போர்டு ஏற்பாடுகள் அரசரைக் கட்டுப்படுத்தாதென்றும் பிரெஞ்சு மன்னர் அறிவித்தார். அதன் விளைவாக இங்கிலாந்தில் உள்நாட்டுப் போர் மூண்டது. கலகக்காரர்களின் படைகளுக்கு சைமன் டி மாண்ட் போர்டு தலைமை தாங்கினார்.

**லூயிஸ் போர், 1264:-** சைமன் டி மாண்ட் போர்டு அரசரை ஒரே போரில் தோல்வி அடையச் செய்தார். அரசருடைய படையினர் அப்போது சஸ்ஸெக்ஸில் லூயிஸ் என்னுமிடத்தில் தங்கியிருந்தன. கி. பி 1264 ஆம் ஆண்டு மே மாதம் 14ஆம் நாள் கதிரொளி கிளம்பும் முன் சைமனின் படைவீரர்கள் நகரத்திற்கு வெளிப்புறத்திலிருந்த குன்றுப்பகுதியில் தென்பட்டனர். அரசரின் படைகளை இளவரசர் எட்வர்டு தலைமையேற்று நடத்தினர். அப்போது எட்வர்டு இளவரசர் சைமனின் தீராப் பகைவராயிருந்தார். குன்றுப்பக்கத்தில் சைமனின் கொடியேற்றப்பட்டிருப்பதைக் கண்ணுற்றார் இளவரசர் எட்வர்டு. தம் படைவீரர்களை ஏவி அக்கொடியைக் கைப்பற்ற எண்ணியபோது, அதனை இலண்டனைச் சார்ந்தவர்கள் காத்து நிற்பதையும் இளவரசர் எட்வர்டு கண்டார். சைமன் அப்போது அங்கு இருக்கவில்லை. இது சைமன் டி மாண்ட்போர்டின் தந்திரம். இளவரசரை ஏமாற்றவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இளவரசர் எட்வர்டு இலண்டன் நகரவாசிகளைப் பின்தொடர்ந்து லூயிஸ் வரை முன்னேறினார்.

சைமனின் தந்திரம் வெற்றி பெற்றது. சைமனின் படைவீரர்கள் அரசருடைய படையைப் படுதோல்வி அடையச் செய்தனர். மூன்று அரசர்கள் கைது செய்யப்பட்டனர். இங்கிலாந்து அரசர், சிசிலியின் அரசர், ரோமானியரின் அரசர் ஆகியவர் அம்மூவர் ஆவர். எட்வர்டு திரும்பி வந்தபோது அவரும் சரணடைய வேண்டியவரானுர்; பின்னர் கைது செய்யப்பட்டார்.

**சைமனின் ஆட்சி:-** லூயிஸ் போருக்குப் பின்னர் சைமன் இங்கிலாந்தை ஓராண்டுகாலம் ஆட்சி புரிந்தார். அவருடைய குணவியல்புகள் வரலாற்று ஆசிரியர்களால் புரிந்துகொள்ள முடியாத புதிராக இருந்தது. சிலருக்கு அவர் ஒரு கட்சியின் தலைவர் போன்று காட்சியளித்தார். ஏனையோர் அவரைத் தலை சிறந்த அரசியல் ஞானி என்று போற்றினர். அவருடைய தலைமை யேற்கும் பெருமித உணர்ச்சிக்கெதிராக குறுக்கீடுகள் எதனையும் அவர் சகிக்காதவர். ஏனைய பாரன் பிரபுக்களில் தாமும் ஒருவர் என்பதனை சைமன் மறந்துவிட்டார். அதனுல் அவரால் இங்கிலாந்தை ஏதேச்சாதிகாரிபோல் ஆள இயலவில்லை. தம் போன்ற பாரன் பிரபுக்களின் இணைந்த கூட்டுறவின் பேரில்தான் அதனை ஆள இயலும் என்பதை அவர் மறந்து போனுர்.

**அவருடைய பாராளுமன்றம் 1265:-** பிரபுக்களின் கூட்டுறவை அவரால் பெற முடியவில்லை என்பதை அவர் கி.பி. 1265ஆம் ஆண்டில் கூட்டிய புகழ்பெற்ற பாராளுமன்றத்திற்கு இருபத்து மூன்று பாரன்பிரபுக்களை மட்டும் அழைத்ததிலிருந்து தெற்றென உணரலாம். தாம் கூட்டிய பாராளுமன்றத்தில் நகரவாசிகளின் ஆதரவினைப் பெறும் நோக்குடன் அவர் புதியதொரு ஏற்பாட்டினைச் செய்தார். ஷயர்களின் நைட்வீரர்களுடன் ஒவ்வொரு நகரத்திலிருந்தும் இரண்டு நகரவாசிகள் அவரால் கூட்டப் பெற்ற பாராளுமன்றத்திற்கு அழைக்கப்பட்டனர். குறிப்பாக அவரை ஆதரித்த நகரப் பிரதிநிதிகள் சிதப்பாக அழைக்கப்பட்டனர் என்பதை இங்கு நினைவிற் கொள்ள வேண்டும். இந்தச் செயலைச் செய்வித்த காரணத்தால் தான் சைமனை பாராளுமன்றத்தின் தந்தை என்று போற்றிப் புகழ்கிருர்கள். சைமன் செய்த இந்த ஏற்பாடு அரசரின் கட்சியைவிட தமக்கு ஆதரவு இருப்பதைக் காட்டவே அவர் பாரன் பிரபுக்களல்லாத நகரவாசிகளான பெருங்குடிமக்களை தாம் கூட்டிய பாராளுமன்றத்திற்கு வரவழைத்ததன் முக்கிய நோக்கமாகும்.

சைமனின் ஆட்சியால் மட்டும் நாட்டில் அமைதி நிலவவில்லை. பாரன் பிரபுக்களில் பாதிபேர் அவருக்கெதிராக எழுந்தி

ருந்தனர். தம் கோட்டையைக் காக்க யாராவது விழைந்து முற்பட்டபோது, சைமன் அப்பிரபுவின் அண்டை அயலார் தம் கோட்டைகளையும் சூறையாடிப் பாழ்படுத்தினார்; கழனிகள் நாசமாக்கப்பட்டன. கால்நடைகள் விரட்டப்பட்டன. இப்படியாக அவர் தம் கோட்டைகளைக் காத்துக் கொண்டார். திருச்சபைகளோ அன்றி கல்லறைகளோ கூட சைமனின் சூறையாடலுக்குத் தப்பவில்லை. ஏழை குடியானவர்களின் வீடுகளையும், அவர்களின் படுக்கைகளில் திணிக்கப்பட்டிருந்த வைக்கோலைக்கூட படுக்கைகளிலிருந்து கிழித்தெடுத்துக் கொண்டார் அச்செயல் ஸ்டீபனின் பிரபுக்களில் ஒருவர் செய்ததைப் போன்று தென்பட்டது.

இளவரசர் எட்வர்டு தப்பிச் செல்லல் :- லூயிஸ் போருக்கு ஓராண்டுக்குப்பிறகு வசந்த காலத்தில் குதிரைப் பந்தயம் ஒன்றில் கலந்து கொண்ட இளவரசர் எட்வர்டு தம்மைச் சிறைப்படுத்தியிருந்தவர்களை நயவஞ்சகமாக ஏமாற்றி விட்டுத் தப்பியோடினார். எட்வர்டும் கிளௌஸ்டர் பிரபுவும் இப்போது ஒன்றாக இணைந்து கொண்டார்கள். கிளௌஸ்டர் பிரபு எல்லைப்புறப் பகுதியில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற பிரபுக்களில் ஒருவர். அவ்விருவரும் நல்லாட்சியை நிலைநாட்டும் உண்மை வீரர்கள் போல் உரிமை கொண்டாடினர். சைமனின் தந்திரங்களிலிருந்து எட்வர்டு சரியான பாடத்தைக் கற்றிருந்தார். எட்வர்டின் மதியூகத்தைப் போற்ற வேண்டும். சைமன் பிரவும் ஹென்றி மன்னரின் அந்நிய நண்பர்களைப் போல் அந்நியர்களில் ஒருவர் தானே! அவருடைய பகைவர்கள் இதனைச் சுட்டிக் காட்டத் தவறவில்லை. லெவலினுடன் உறவுக் கொண்டமையால் சைமன் டி மாண்ட்போர்டும் தம் செல்வாக்கைப் பெருமளவுக்கு இழந்து விட்டிருந்தார். தம்மிடம் சிறையாகியிருந்த ஹென்றி மன்னரை வற்புறுத்தி லெவலினை வேல்ஸ் இளவரசராக அங்கீகரிக்கும் உடன்படிக்கையொன்றையும் செய்து கொண்டார். தங்களுடன் செய்துகொண்ட உடன்படிக்கையின் விலையாக அவர்கள் லெவலினை வேல்ஸ் இளவரசர்க்கும் கோரிக்கையை விடுத்தனர். இந்த உடன்படிக்கையைப் பிப்டன் உடன்படிக்கை (1265) என்பர். எனினும் எட்வர்டும் கிளஸ்டரும் பெரும்பாலான எல்லைப்புறப் பகுதிகளைத் தம் வசம் கொண்டிருந்தனர். சைமன் தம்மகனை தென்கிழக்குக் கவுண்டிகளிலும் இலண்டனிலும் படை திரட்டுமாறு பணித்தார். கெனில்வொர்த்துக்கு செல்லும்ச் வழியில் மத்திய நிலப்பகுதிகளிலும் படைவீரர்களைத் திரட்ட வேண்டுமெனவும் சைமன் தம் மகனுக்குக் கட்டளையிட்டார்.

**ஈவ்ஷாம்போர், 1265:-** சைமனின் மகனுன இளைய சைமனின் படைகள் எட்வர்டின் படைவீரர்களை கெனில் வொர்த்தில் சிதற அடித்தன. எஞ்சித் தப்பிப் பிழைத்தவர்கள் கோட்டைக்குள் தஞ்சம் புகுந்தனர். அக்கோட்டை சைமன் டி மாண்ட்போர்டிற்குச் சொந்தமானது. சில நாட்களுக்குப்பின்னர் கி. பி. 1265 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 4 ஆம் நாள் எட்வர்டு, ஈவ்ஷாம் என்னும் ஊருக்கருகில் அவான் ஆற்றங்கரைவளைவில் டி மாண்ட்போர்டின் படைகளைச்சுற்றி வளைத்துக் கொண்டார். நிலப்பகுதியில் எட்வர்டு தேர்ந்தெடுக்கப்பெற்ற சிறந்த வீரர் களைப் பாதுகாப்பிற்கு ஏற்பாடு செய்துவிட்டு, ஆற்றுப்பாலத்தைப் பாதுகாக்கப் பிறிதொரு படையையும் அனுப்பியிருந்தார். அதன் பயனுக சைமன் டி மாண்ட்போர்ட் எட்வர்டின் கைகளில் வச மாக மாட்டிக் கொண்டார். சைமன் பிரபுவுக்கு தம் முடிவு காலம் நெருங்கிவிட்டது என்ற உணர்வு வந்து விட்டது. எனவே பொரிட்டுக்கொண்டே உயிர் துறப்பது என்னும் முடிவுக்கு வந்தார் அவர். சிலமணி நேரங்களில் அனைத்தும் முடிந்து விட்டது. இப்போரின்போது மனதைக்கலக்கும் சம்பவம்ஒன்று நிகழ்ந்தது. சைமன் தாம் செல்லுமிடங்களுக்கெல்லாம் தம்மால் சிறைப்படுத்தப் பட்டிருந்த ஹென்றி மன்னரையும் உடன் அழைத்துச்செல்வது வழக்கம். பிரபுக்கள் ஹென்றி மன்னரையும் போரில் ஈடுபடுத்தினர். மாறுவேடத்திலிருந்த அரசர் ஹென்றி பெரும் ஆபத்துக்குள்ளாஞர். 'என்பெயர் ஹென்றி; இங்கிலாந் தின் பழைய அரசர்' என்றும் என்னை அடிக்காதீர்கள்; என்ஞல் போரிட இயலாது; நான் ஒருதொண்டுகிழம்' என்றும் ஹென்றி கூச்சலிட்டார். இறுதியில் அரசரின் தலைக்கவசம் கீழே விழுந்த போது, எட்வர்டின் படைவீரர்கள் அவரை அடையாளம் கண்டு கொண்டனர். அரசர் காப்பாற்றப்பட்டார். அன்று நடந்த போரில் பிரபுக்கள் தோற்றனர். எல்லாத் திசைகளிலும் அவர் களை எட்வர்டின் படைவீரர்கள் சூழ்ந்து கொண்டு கடுமையாகத் தாக்கினர். போரின் நடுவில் சைமன் பிரபு செத்து வீழ்ந்தார்.

சைமன் மடிந்தபோதும் அவருடைய செல்வாக்கு சிறிதும் மக்களிடையே குறையவில்லை. பெகர்கட்டை மக்கள் கருதியது போல் அவரையும் மக்கள் நாட்டின் சுதந்திரத்திற்குப் போராடிய தியாகி எனக் கொண்டனர். கீழ்க்காணும் கவிதையில் அதனைக் காணலாம்.

'அங்கு வீழ்ந்த அவ்வீரர் சுதந்திரமலரின் பரிசு
அவர் கண்ட போர்கள் எத்தனை எத்தனை எத்தனையோ
துரதிர்ஷ்ட கட்டை மாண்ட்போர்ட் பிரபுவை
நாட்டு மக்கள் நீண்ட காலம் நினைவிற் கொள்வர்.'

அவர் திரிதுறவிகளுக்கும், கற்றறிந்தவரான இராஸ்டெஸ்டின் நண்பராவார். இராஸ்டெஸ்ட் லிங்கன் பிஷப்; போப்பாண்டவரின் தவறுகளைச் சுட்டிக் காட்டிய அஞ்சா நெஞ்சினர்.

மூன்றும் ஹென்றியின் மரணம் **1272:-** சைமன் டி மாண்ட் போர்டின் வீழ்ச்சிக்குப் பின்னர் இளவரசர் எட்வர்டுக்குச் சாதக மாகவே சூழ்நிலை நாட்டில் நிலவியது. அவருடைய தந்தையார் அரசியலிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்டார். எட்வர்டு திறமை யாக ஆளக் கூடியவர் என்பதை அறிந்து கொண்ட பாரன் பிரபுக்கள் திருப்தியுற்றவர்களாய் நாட்டின் நிர்வாகத்தையும் நல்லாட்சியையும் எதிர் நோக்கினர். இளவரசர் எட்வர்டு மகா சாசனத்தின் அடிப்படையில் நாட்டை ஆளப்போவதாக உறுதி மொழியளித்தார். நாட்டைக் கட்டுப் படுத்த நியமிக்கப் பெற்றிருந்த பாரன் பிரபுக்களின் குழுவும் இருந்த இடம்தெரியாமல் மறைந்தது. புயலுக்குப் பின்னர் அமைதி என்பார்கள். எட்வர்டு சிலுவைப் போரில் பங்கு கொள்வான் வேண்டி இங்கிலாந்தை விட்டுச் சென்றுர். அவர் புனித பூமியில் கிறிஸ்தவ மதத்திற்காகப் போரிட் டுக் கொண்டிருந்தபோது, அவருடைய தந்தையாரான மூன்றும் ஹென்றி மன்னர், ஐம்பத்தாறு ஆண்டுகள் ஆட்சி செய்தபின், கி-பி. 1272 ஆம் ஆண்டில் காலமானுர்.

இங்கிலாந்தில் ஏற்பட்ட மாறுதல்கள்:- மூன்றும் ஹென்றியின் ஆட்சியிலிருந்து இங்கிலாந்து வெகுவாக மாறியிருந்தது. நாட்டு மக்களிடையே தேசிய உணர்ச்சி மேலும் வளர்ச்சியுற்றது. பிரபுக் கள் நார்மானிய நிலங்களை விட்டொழித்து இங்கிலாந்தின் மீதே நாட்டங் கொண்டனர். பேரவை நாட்டுச் சபையாக உருவாகி, அரும்பணி ஆற்றலாயிற்று. நீதி மன்றங்கள் வெகுவாக வளர்ச்சி யுற்றன. அத்துடன் அரசமன்றம், பொது வழக்கு மன்றம், கருவூல மன்றம் போன்றவை சீரிய பணியாற்றின. பல துறைகளில் இங்கிலாந்து முன்னேறி இருந்தது. சமய உணர்ச்சியை வளர்க்கப் பாடுபட்ட திரிதுறவியர் இக்காலத்தில் பெருவளர்ச்சியுற்றிருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

நகரங்கள் வளர்ச்சியுற்று வாணிபம் பெருகிற்று. நாட்டு மக் களின் எண்ணிக்கையும் பெருகிற்று. எல்லா வகுப்பு மக்களும் பரந்தநோக்குடன் விளங்கலாயினர். அறவாழ்விலும், கல்வியிலும் நாட்டம் அதிகமாகவே, அவற்றைப் பூர்த்தி செய்ய முடியாமல் திருச்சபையினர் திக்கு முக்காடினர். நாட்டுப்புறக் குருமார்கள் ஏழையராயும், அஞ்ஞானிகளாயும் இருந்த அக்காலத்தில் மடால யத்துறவிகள் செல்வக் கொழிப்பில் திளைத்து, தொண்டு மனப்

பான்மையை இழந்து போகும் தருவாயில் இருந்தனர். இருப்பினும் தொண்டு செய்த மடாலயங்களும் ஒருசில நிலைத்திருந்தன. மக்கட் தொகைப் பெருக்கம், வேலையில்லாத் திண்டாட்டம், நோய் வாய்ப்படல் போன்றவற்றால் ஏற்பட்ட தொல்லைகளை நீக்கவும் மடாலயங்கள் மருத்துவச் சேவைகளைச் செய்ய முற்படலாயினர். ஆன்மாக் காக்க மடாலயங்கள் முயன்றதைப் போன்று உடலை நோயிலிருந்து காக்க மருத்துவர் தேவைப்பட்டனர்.

**திரிதுறவியர்:-** இத் தேவையைப் பூர்த்தி செய்தவர்கள் திரிதுறவிகளாவர். பிரான்ஸ்சிஸ்கள், டாமினிகன் என்னும் பெயர் படைத்த இரு திரிதுறவியர் நிறுவனங்கள் இப் பணியை சிரத்தையுடன் செய்தன. காருடைத் துறவிகள், சாம்பல் நிற உடைத் துறவிகள், வெண் துறவியர், ஆஸ்டின் துறவியர் என்னும் பெயரில் இத்திரிதுறவியர் நாட்டின் பல பாகங்களிலும் பயணம் செய்து கிறிஸ்தவ சமயப்பிரசாரம், சமயப் போதனை, நோயுற்றவர்களுக்குதவிடும் மருத்துவத் தொண்டு, இறந்தவர்களை அடக்கம் செய்யும் சடங்கு போன்றவற்றில் அக்கறை காட்டினர். ஆக்ஸ்போர்டு, கேம்ப்ரிட்ஜ் போன்ற இடங்களில் எழுந்த கல்விக் கூடங்களுக்கும் அவர்களே பொறுப்பாயிருந்தனர். திரிதுறவியரின் சமயப்பணியால் நாட்டில் புதியதொரு சமய வாழ்க்கை மறுமலர்ச்சியுற்றதை மக்கள் கண்டார்கள். எல்லா வகுப்பு மக்களும் தொண்டில் அக்கறை காட்டினர். நாட்டு மக்களிடையே அவர்களுக்கிருந்த தொடர்பால் அவர்கள் திருச்சபையிலும், அரசாங்கத் துறையிலும் எழுந்த தவறுகளைச் சுட்டிக் காட்டினர். அத்துடன், அரசர், பாரன் பிரபுக்கள், போப்பாண்டவர், பிஷப்புகள் ஆகியோர் செய்யும் பிழைகளை அழகுணர்ச்சி கொண்ட கவிதைகளின் மூலம் எள்ளி நகையாடினர். சீர்திருத்த இயக்கத்தின் வெற்றிக்கு அவர்களின் தொண்டு பெரிதும் உதவிற்று.

# 23. பிரிட்டனில் முதல் ஆங்கில அரசர்:- முதலாம் எட்வர்டின் ஆட்சி

## (அ) முதலாம் எட்வர்டு (1272-1307)

கி. பி. 1274ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 19ஆம்நாள் முதலாம் எட்வர்டு தம் மனைவி இலியனுருடன், முடிசூட்டப் பெற்றார். அவர் அப்பொழுது 33வயது நிரம்பப்பெற்றவராகவும் இங்கிலாந்து நாட்டின் பாரம்பரியத்தையும் பழக்க வழக்கங்களை யும் நன்கு அறிந்தவராகவும் இருந்தார். எட்வர்டு முழுமையான ஆங்கிலக் குடிமகனாகத் திகழ்ந்தார். பிரச்சினையற்ற வாரிசாக அங்கீகரிக்கப்பெற்ற முதல் மன்னர் அவர்தான். அவர் தம் தந்தையார் காலமான கணத்திலிருந்து அவருடைய பரம்பரை உரிமையை யாரும் மறுக்கவில்லை. இதற்கு முன்னர் ஆண்ட அரச வாரிசுகளை விட அவரை மக்கள் நன்கு அறிந்திருந்தனர். அவரை மக்கள் நேசித்தனர். முதலாம் எட்வர்டு மன்னரை இங்கிலாந்து நாட்டின் முதல் ஆங்கில அரசர் என்று அழைப் பதற்குக் காரணம் இருந்தது. ஏனைய அரசர்களைப் போலல்லாமல் இங்கிலாந்து நாட்டிலேயே பிறந்து அக்காலத்து உயர் குடி மக்கள் பேசிய பிரெஞ்சு மொழியை எட்வர்டு பேசினார். மேலும் அவர் காலத்தில் நாட்டில் நிலவிய சூழ்நிலைகளை நன்கு அறிந்திருந்தார்.

எட்வர்டு மன்னர் அனுபவம் என்னும் பள்ளியில் நன்கு கற்று ணர்ந்து உண்மையும், மதிப்பும் மிக்க மாவீரர் ஆனார். அவர் வாக்குறுதியை மீருதவர்; தவறு செய்தவர்களைக் கடுமையாகத் தண்டித்தார். அவருடைய தளபதிகள் உடன் சென்று போர் செய்ய விரும்பினர். நீதியை நிலைநாட்டியவர் என்று பெயர்பெற்ற முதலாம் எட்வர்டு, மக்களுக்கும் நாட்டிற்கும் சரியானதையே செய்ய ஆவல் கொண்டிருந்தார். மாபெரும் அரசராவதற்கு வேண்டிய பயிற்சிகளை எட்வர்டு பெற்றிருந்தார். நாட்டிற் குள்ளும் புறமும் அவர் போர்புரிந்தார். வேல்ஸ், பிரான்ஸ், பாலஸ்தீனம் போன்ற நாடுகளில் அவர் போரிட்டிருந்தார். பல்வேறு மக்களையும் மாநகரங்களையும் நேரில் பார்த்து வந்தவர்

அவர். வெளிநாடுகளில் வாழ்ந்து வந்த மாமன்னர்களை அவர் எப்படி அறிந்திருந்தாரோ அங்ஙனம் தம்சொந்த நாட்டிலிருந்த பெரும் பிரபுக்களையும், சிறந்த சமயப் பெரியார்களையும், வழக்குரைஞர்களையும் அவர் நன்கு அறிந்திருந்தார். நார்மானிய வெற்றிக்குப்பின்னர் இங்கிலாந்து நாட்டை ஆண்ட அரசர்களில் அவரே பெரும்பாலும் அன்னியர் அல்லாதவர். அவர் வெஸ்ட் மின்ஸ்டரில் பிறந்தார். தம் வாழ்நாளின் பெரும் பகுதியை ஆங்கில மக்களிடையே அவர் கழித்தார். அதனால்தான் அவரை இங்கிலாந்து நாட்டில் முதல் ஆங்கில அரசர் என்று கூறுகிறோம்.

எட்வர்டின் இலட்சியங்கள்:- எட்வர்டின் முதல் இலட்சியம் பிரிட்டிஷ் தீவுகள் அனைத்தையும் ஒரே ஆட்சியின்கீழ் கொண்டு வர வேண்டும் என்பதேயாகும். சிலுவைப்போரில் பங்கு கொண்டு நாடு திரும்பி அரசாங்கத்தைத் தாமே நிர்வகிக்கத் தொடங்கிய போது எட்வர்டு இந்த இலட்சியத்தை அடைய முயற்சித்தார். தம் மக்களுக்கு நாட்டின் அரசாங்க நிர்வாகத்தில் இதுவரை அவர்கள் அனுபவித்தறியாத பெரும்பங்கினைக் கொடுக்க வேண்டும் என்று கருதியது அவருடைய இரண்டாம் இலட்சியமாகும். நாட்டு மக்கள் அனைவரும் நீதிமன்றங்களைச் சுதந்திரமாகப் பயன்படுத்த வேண்டுமென்றும், எல்லா மக்களுக்கும் எல்லாவித மான சூழ்நிலையிலும் உதவும் பாராளுமன்றக்குழு ஒன்றும் இருக்க வேண்டுமென அவர் உறுதிபூண்டார். 'எதுவொன்று அனைவரையும் பாதிக்கின்றதோ, அஃது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் படல்வேண்டும்' என்ற குறிக்கோளை இங்கிலாந்தின் இலட்சியமாக வைத்தார் எட்வர்டு. வாய்மையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற குறிக்கோளை அவர் தமக்கு வைத்துக்கொண்டார். மேற்கூறிய இலட்சியங்களை மாறுபடாமல் செயல்படுத்த வேண்டுமென்று தம் வாழ்நாள் முழுவதும் உழைத்த உழைப்பே முதல் எட்வர்டு மன்னரை இங்கிலாந்து அரசர்களில் தலைசிறந்தவர் என்று கொள்ளக் காரணமாயின.

அவரது குண இயல்புகள்:- எட்வர்டு மன்னர் தம்மைப் பொறுத்தவரையில் தலைசிறந்தவர் மட்டுமன்று; அவர் நல்லவர். சிக்கனமாக வாழத் தெரிந்தவர்; எளிமையை விரும்புபவர்; அடக்கமுடையவர்; உண்மையான சமய நோக்குள்ளவர். எல்லாவற்றையும் விட அவர் சிறந்த போர்வீரர்; விளையாட்டு வீரர். போரை விரும்பிய அவர் வேட்டையாடுவதிலும் பிரியம் கொண்டவர்; கல்வி கற்றவர்; ஆங்கிலம், லத்தீன் பிரெஞ்சு, ஸ்பானிய மொழிகளில் அவர் தம்முடன் பழகவந்தவர்களுடன் பேசி வந்தார்.

தந்தையாரைப் போன்று எட்வர்டும் கலைகளைப் போற்றும் காவலர் ஆனார். தமக்குத்தாமே அவர் வழக்கறிஞர் ஆகவும், அரசியல் ஞானியாகவும் இருந்தார். துணிச்சல் மிக்கவர்; உணர்ச்சி வயப் பட்டவர்; பழிக்குப்பழி வாங்கும் பண்பினர். மூர்க்க குணமும், இம்சை இவை இரண்டுமே அவருடைய குணவியல்புகளின் குறை பாடுகளாகும். தாம் எப்பொழுதும் சரியானதையே பின்பற்று வதாக அவர் நம்பினார். சிலசமயம் தந்திரங்களில் ஈடுபட்டாலும், எப்போதும் நேர்மையானவராக இருந்தார். அச்சத்திற்கும், அன்பிற்கும் இருப்பிடமானவர் என்று குறிக்கும் கதைகள் பல அவரைச் சுற்றி எழுந்தன. கோபம் கொண்ட நிலையில் அவரைக் காண சகிக்காது. கோபம் வந்தபோது பதட்ட மான செயல்களில் அவர் ஈடுபட்டார். எச்சரிக்கையில்லாத பணி யாளன் ஒருவனைத் தண்டிக்க அவர் ஆற்றை நீந்திக் கடந்தார். வீணான நிலக்கிழார் ஒருவனை அவர்தம் கைகளினாலேயே நையப் புடைத்தார். அவனை அதிக இம்சை படுத்திவிட்டோம் என்பதை யறிந்து அவர் அவனுக்கு வெகுமதியளித்து அந்த பாவத்தைப் போக்கிக் கொண்டார். ஏழை எளியவர்க்கும், பணக்காரர்களுக்கும் நல்ல தோழனான அவர், கூட்டாளிகளின் கூட்டத்தில் கூடி நின்று கேளிக்கை செய்தவர். அன்பு நிறைந்த கணவரும், ஆதரவு காட்டும் தந்தையுமானவர் எட்வர்டு. மேற்கூறிய பண்புகளின் நிலைக்கலனாக அவர் தலைசிறந்த மனிதர்கள் வாழ்ந்த காலத்தின் மாபெரும் மனிதராவார். சிறந்த அரசியல் ஞானி, வழக்குரைஞர், போர்வீரர் என்று போற்றப்பட்ட எட்வர்டு அவர் காலத்தில் வெளி நாடுகளில் வாழ்ந்த மாமன்னர்களுடன் தம்மை ஒப்பிட்டுக் கொண்டார். அவர் மறைந்தபோது, இங்கிலாந்தின் வரலாற்றில் என்றுமே அழிக்கமுடியாத அடையாளச் சின்னத்தைப் பொறித்து அழியாதவராகி நின்றார்.

**எட்வர்டின் ஆலோசகர்கள்:-** எட்வர்டு மன்னர் தம் முன்னோர் களைப் போன்று தம்அரண்மனை நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த திருச்சபையினரையே பெரிதும் நம்பினார். அவர்களில் ஒருவர் அவருடைய நீண்டநாள் நண்பரான ராபர்ட் பர்னெல் என்னும் ஸ்கோர்ப்ஷயர் வாசியாவார். பெருந்தன்மையும், குறிப்பறிதலும் கொண்ட லௌகிகர். இவர் தலைசிறந்த வழக்குரைஞராகவும் அரசியல் வல்லுனராகவும் திகழ்ந்தார். எட்வர்டு இவரை சான்சலர் ஆக்கினார். கி. பி. 1292ஆம் ஆண்டு இவர் சான் சலராகவே இருந்து காலமானார். இவருக்குப் பிறகு வால்டர் லாங்டன் என்ற குறுகிய நோக்கமுள்ளவர் சான்சலர் ஆனார். லிங்கனின் பிரபுவான லாஸி, இத்தாலி வழக்கறிஞரான அக்குர்ஸி, பெம்ப்ரோக்கின் ஏர்லான வாலென்ஸ் என்பவர்களும்,

எட்வர்டின் தலைமை நீதிபதியான ஹெங்ஹாம் என்பவரும் எட்வர்டுக்கு பக்தி பூர்வமாக அருந்தொண்டாற்றிய அறிஞர் பெருமக்கள். வேறுபல பெரும் வழக்குரைஞர்கள் அவரைச் சூழ்ந்திருந்தனர். பெரும் பிரபுக்களும், பிஷப்புகளும் அவருடைய அமைச்சராகப் பணியாற்றினர். டர்ஹாமின் பிஷப்பான அந்தோணி பெக் சிறந்த பிஷப்புகளில் ஒருவர். அத்துடன் அவர் போர் வீரர்கும் அரசியல் வாதியும்கூட. அவருடைய கண்காணிப்பில் வடக்கு ஷயர்களில் அமைதி நிலவியது. லிங்கன் பிரபு ஹென்றி டி லாசி என்பார் லௌகீகப் பெரியோர்களில் நேர்மை மிக்கவர். அரசருக்குப் போர்காலங்களிலும், அமைதிகாலங்களிலும் தளராது தொண்டு செய்தவர் ஆவர். கி.பி 1254 ஆம் ஆண்டிலிருந்து தொடர்ந்து வந்த பொது வழக்கப்படி எட்வர்டு தம்ஆட்சிகாலம் முழுவதிலும் நைட்டுகளையும் நகர மக்களையும், தாம்கூட்டிய பாராளுமன்றத்துக்கு அழைத்தார். இப் பாராளுமன்றங்கள், அரசரின் ஆலோசனைசபையும், உறுப்பினர் அனைவரையும் கொண்ட கூட்டங்களேயாகும். அவசியத்திற்கேற்ப தேவைப்பட்டவர்களைக் கூப்பிட்டு கலந்தாலோசிக்கும்பண்பு படைத்திருந்த எட்வர்டு சட்ட முறைகளை கையாளப் பழக்கப்பட்டிருந்த நைட்டுகளை சட்டம் பற்றிய ஆலோசனை செய்யும் போது அழைத்து கலந்தார். அதுபோன்று சுங்கவர் பற்றிய ஆலோசனைபோது வணிகர்களை கூட்டி ஆராய்ந்தார். சிலதடவைகளில் நைட்டுகளை மட்டும், வேறு சில தடவைகளில் வணிகர்களை மட்டும் பிறிதொரு தடவை அமைச்சர்களையும் பிரபுக்களையும் அவ்வப்பொழுது இவ்வனைவரையும் ஒன்ருகவோ அல்லது தனித் தனித்தனியாகவோ தமது விருப்பப்படி கூட்டுவார். வேல்ஸை வெற்றிகண்டது, பொதுமக்களின் கருத்துணர்ந்து செய்த செயலாகும். எட்வர்டு மன்னர் பிரபுக்களையும் மற்றவர் ஆலோசகர்களையும் நன்கு பயன்படுத்திக்கொண்டார். ஹென்றி டி லாசி போன்ற பிரபுவான கிளஸ்டர் பிரபு கில்பர்ட்- டி- கிளார் பிரபுக்களின் போரின்போது வெற்றி தேடித்தந்தவர். அவரது மனைவி காலமானபோது எட்வர்டு தம்மகள் ஜோனையேஅவருக்கு மணம் முடித்து வைத்தார். காரன்வால் பிரபு எட்வர்டு அரசரின் நெருங்கிய உறவினர். தம் வாழ்நாள் முழுவதும் அரசருடன் இணைபிரியாதிருந்து அவர்உதவினுர். பிரபுக்களை அமைச்சர்களாகவும் படைத் தளபதிகளாகவும் எட்வர்டு பயன் படுத்திக் கொண்டார். இருப்பினும் அவர்களுடைய அரசியல் செல்வாக்கு தமக்கு ஊறுவிளைவிக்க முடியாதவரை எச்சரிக்கையாக தம்மைக் காத்துக் கொண்டார். முடிந்த போதெல்லாம் பிரபுக்களுடன் தரமான உடன்படிக்கை செய்து கொள்ளவும், வாரிசு இன்றி இறந்தவர்களின் பரம்பரை சொத்துக்களை அரசரின் நிலங்களுடன் இணைத்

துக் கொள்ளவும் அவர் முயன்றார். பிரபுக்களின் எண்ணிக்கை வெகுவாக குறைந்துபோனதே பானக்பர்ன் போரின் தோல்விக்குக் காரணம் ஆகும். இப்போரில் ஐந்து அல்லது ஆறு பிரபுக்களே எட்வர்டு மகனுக்கு உதவி செய்ய எஞ்சியிருந்தனர்.

முதலாம் எட்வர்டின் வாழ்க்கையினை மூன்று பிரிவுகளாகப் பிரித்துப் படிப்பது சாலச்சிறந்தது!

1. எட்வர்டும் வேல்ஸும், ஸ்காட்லாந்தும்.

2. எட்வர்டும் பாராளுமன்றமும் சட்ட சீர்திருத்தங்களும்.

3, எட்வர்டும் மற்ற அரசுகளின் உறவும்.

**எட்வர்டும் வேல்ஸும் வேல்ஸ்:-** பிரிட்டனை ஒரு நாடாக உருவாக்க வேண்டுமெனின் வேல்ஸுடன் உடன்படிக்கை செய்து கொள்வது அவசியம் எனகருதப்பட்டது. நார்மானியர் படையெடுப்பு காலமுதல் இங்கிலாந்தின் எல்லையிலிருந்த வேல்ஸால்பல தொல்லைகள் விளைந்தன. வேல்ஸில் இருந்த மக்களை இதுகாறும் யாராலும் வெல்ல முடியவில்லை. இங்கிலாந்துக் கெதிராகக்கிளம்பிய ஒவ்வொரு கலகக்காரரும் வேல்ஸில் தஞ்சம் புகுந்து உதவிகளைப் பெற்று இங்கிலாந்தைத் தாக்க முயன்றார்கள். வேல்ஸின் ஒரு பதிகுயை 'எல்லைப்புறம்' அல்லது 'மார்ச்சஸ்' என்பர். இப் பகுதியில் படைமானிய அமைப்பினால் இடையறாத் தொல்லைகள் ஏற்பட்டன. மேலும் எட்வர்டு தனது குடைக்கீழ் பிரிட்டனைக்கொண்டு வரும் எ ண் ண ம் உடையவராய் இருந்ததினால் அவர் தம்முதற் பணியை வேல்ஸில் தொடங்கினார். வேல்ஸ் இளவரசர்களின் போர் திறமையை அவர் ஏற்கனவே அறிந்திருந்தார். இங்கிலாந்தில் ஏ ற் ப ட் ட சச்சரவுகள் தொடர்ந்து வேல்ஸிலும் மூண்டன. வடவேல்ஸின் இளவரசரான லெவ்லின் என்ற புதிய அரசர் எட்வர்டின் சினத்தைத்தூண்டிவிடக் காரணமாயிருந்தார். அரசருக்கு இறைவணக்கம் வேண்டி அவர் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார்; ஆனால் அவர் செலுத்த மறுத்து விட்டார். கி. பி. 1273 ஆம் ஆண்டிலிருந்து கி.பி.1275 ஆம் ஆண்டு வரை எட்வர்டால் வேல்ஸுக்கு வர முடியவில்லை. கி. பி. 1276-1277 ஆம் ஆண்டுகளில் எட்வர்ட் வேல்ஸின் மீது போர் தொடுத்தார். போரில் லெவ்லின் தோற்று ஸ்நோடன் காடுகளுக்கு விரட்டப்பட்டார். காலப்போக்கில் அவர் சரணடைந்தார். பின்னர் சைமன் பிரபுவின் மகளும் எட்வர்டின் உறவினருமான இலியனார் டி மாண்ட்போர்டு என்பாளைத் திருமணம் செய்துகொள்ள லெவ்லின் அனுமதிக்கப்பட்டார். எனினும், தண்டனையாக டி

ஆற்றின் மேல் பாலத்திலிருந்து கான்வே வரையிருந்த அவரு டைய ஆட்சிப் பிரதேசத்தின் பகுதி துண்டிக்கப்பட்டது. இருவரி டையேயும் அமைதி நீடிக்கவில்லை. கி. பி. 1282ஆம் ஆண்டு மீண்டும் போர் மூண்டது. முன்னர் எட்வர்டுக்குத் தொண்டாற்றி யவரும் லெவ்லின் சகோதரருமான டேவிட் என்பார் இப்பொழுது லெவ்லினுடன் சேர்ந்து கொண்டார். அவரிடமிருந்து துண்டிக்கப் பட்ட பகுதியில் அரசர் ஆங்கில சட்டத்தையும், அக்காடுகளில் வாழ்ந்த பண்பாடு அற்ற மக்களுக்கு, ஆங்கில வணிகர்கள் மூலம் அச்சட்டங்களைப் பற்றிய போதனைகளையும், வலிமை வாய்ந்த கோட்டைகளில் வாழும் பெரும் பிரபுக்களின் ஆட்சியையும் புகுத் தினார். இதன் விளைவாக வேல்ஸ் பகுதியெங்கும் ஆங்கிலேயரை வேல்ஸ் மக்கள் வெறுத்தனர். அப்பகுதியில் ஆங்கில அரசருக்கு எதிராகக் கலகத்தைத் தூண்டுவது லெவ்லினுக்கு சுலபமாகி அர சுக்கு ஆதரவுத் தேடித்தந்தது. எட்வர்டு இதனால் உடனே பழி வாங்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டார். பெரும்படை ஒன்றைத் திரட்டி, திருச்சபையைத் தூண்டி லெவ்லினைத் துரோகி என்று கூறிச் சமயவிலக்கம் செய்வித்தார். அரச மன்றத்தை வேல்ஸின் எல்லைப்புறத்திலிருந்த ஸ்ரூஸ்பரி என்ற நகருக்குக் கொணர்ந்து வேல்ஸை வெற்றி காணும் பணியில் தம் முழு கவனத்தையும் செலுத்தினார். போர் மெதுவாக நடைபெற்றபோதிலும் வெற்றி யென்னவோ முழுமையாக இருந்தது. சரணடைய மறுத்த லெவ்லின் அயர்லாந்தின் பிரபுவாக நியமிக்கப்படுவதாக அறிவித் ததையும், ஏற்க மறுத்தபோது ப்யூலித் என்னுமிடத்தில் கொல்லப் பட்டார். லெவ்லின் சகோதரர் டேவிட் லெவ்லின் மரணத்துக்குப் பிறகு தம்மை இளவரசராக அறிவித்துக் கொண்டார். அவரும் எட்வர்டின் படைகளால் கைப்பற்றப்பட்டு ஸ்ரூஸ்பரியில் நடை பெற்ற பாராளுமன்றத்தால் விசாரிக்கப்பட்டு கி. பி. 1283 ஆம் ஆண்டு அக்டோபர் 3ம் நாள் துரோகி எனக் கருதப்பட்டு மரண தண்டனை விதிக்கப் பெற்றார். இந்த தேதியிலிருந்து இங்கிலாந்து வேல்ஸை வெற்றி கொண்ட படலம் தொடங்குவதாகக் கொள்ள லாம். வேல்ஸை இங்கிலாந்துடன் இணைக்க உறுதியான நடவடிக் கைகளை இப்போது மேற்கொள்ள அரசர் துணிந்தார்.

**வேல்ஸ் சட்டம் 1284:-** கி. பி. 1284 ஆம் ஆண்டில் ருட்லான் என்னுமிடத்தில் வேல்ஸ் சட்டம் ஒன்றை அரசர் வெளியிட்டார். அதன்படி லெவ்லினிடமிருந்து கைப்பற்றப்பட்ட நிலப் பகுதிகள் ஐந்து ஷயர்களாகப் பிரிக்கப்பட்டன. அவை (1) கார்னார்வன் (2) ஆங்கில்சி, (3) மெரியானத், (4) கார்டிகன், (5) கார்மந்தன் என்பவையாகும். ஷயர்கள் அனைத்திலும் இங்கிலாந்தில் நடை பெறுவது போன்ற நீதி மன்றங்கள் நடைபெற்றன. கி.பி.1284 ஆம்

ஆண்டில் கார்னர்வனில் பிறந்த எட்வர்டின் மகன் கி.பி.1301 ஆம் ஆண்டில் வேல்ஸின் இளவரசராக அறிவிக்கப்பட்டார். எனினும் வேல்ஸின் எல்லைப்புற நிர்வாகம் எல்லைப்புற பிரபுக்கள் என்போரிடம் ஒப்படைக்கப்பட்டது. வேல்ஸின் மக்களை எட்வர்டு ஆங்கில பாராளுமன்றத்தில் அனுமதிக்கவில்லை. அத்துடன் பண்டைய வேல்ஸின் சட்டத்தையும் அவர் தீண்டவில்லை. வேல்ஸையும் இங்கிலாந்தையும் ஒரு குடைக் கீழ்கொண்டு வந்த அரசர் அப்பகுதிகளிலும் ஆங்கில மரபுப்படி அமைந்த நல்லாட்சிக்கு வழி வகுத்தார். அதைத்தவிர அவர் வேறொன்றையும் செய்யவில்லை. எட்வர்டு ஆட்சியின் பயனாகத்தான் வேல்ஸில் பூமாரிஸ், பர்ங்கர், கார்னர்வன், ஹார்வே போன்ற நகரங்களும் கோட்டைகளும் எழுந்தன. அவை ஆங்கிலச் செல்வாக்கின் நிலைக்களன்களாயின. கான்டர்பரி ஆர்ச்பிஷப் வேல்ஸ் திருச்சபையைத் திருத்தியமைத்து சமய போதனைக்கு வழி வகுக்கும் பணியைச் செய்தார். வேல்ஸிலிருக்கும் அழகான நகரங்களும், கோட்டைகளும் திருச்சபைகளும் எட்வர்டின் வெற்றிக்குப் பின் எழுந்தவையாகும்.

யூதர்களின் வெளியேற்றம்:- இடைக்காலத்தில் யூதர்களை ஐரோப்பா முழுவதும் தூற்றியும் வெறுத்தும் வந்தனர். யூதர்களை வாழ்வதற்கு இயல முடியாமல் என்னென்ன செய்ய வேண்டுமோ அத்தனை தொல்லைகளும் செய்தனர். யூதர்கள் இத்தொல்லை அனுபவிப்பதற்கு காரணம் புனித இயேசுநாதரை அவர்கள் சிலுவையில் அறைந்ததேயாகும். மேலும் யூதர்கள் ஐரோப்பா முழுவதிலும் இங்கிலாந்திலும் வட்டிக்குப் பணம் கொடுக்கும் இலாபகரமான தொழிலைச் செய்து வந்தனர். எட்வர்டு நியாயமானவராகவும் நீதிக்குத் தலைவணங்குபவராக இருந்தும் அவர் அந்த காலத்தின் சூழ்நிலைகளில் சிக்கி யூதர்களைக் கொடுமைப் படுத்தியதும் அல்லாமல் அவர்களை ஒரே விதமான ஒருவகையான ஆடைகளையே உடுத்தவேண்டுமென்று கட்டாயப் படுத்தினார். மேலும் அவர் 1290 ஆம் ஆண்டு அவர்கள் எல்லோரையும் இங்கிலாந்தை விட்டு வெளியேறும்படி செய்தார். இவர்கள் 360பது வருடங்களுக்குப் பிறகு தான் மீண்டும் இங்கிலாந்துக்குத் திரும்பினர்.

## (ஆ) முதலாம் எவர்ட்டு மன்னர் சட்டத்துறையில் ஆற்றிய பணிகள்

எட்வர்டு மன்னரை பாராளுமன்றத்தின் தந்தை என்று கூறுவர் 'பாராளு மன்றத்தின் அவசியத்தை உணர்ந்து அதனை உருவாக்கியவர் என்று கூறுவதும், பாராளு மன்றத்தைக் கூட்டிய வரையில் அவரை டிமான்ட்ஃபோர்டின் வாரிசு என்று கூறுவதும்

பிற்காலத் தலைமுறைகளின் கூற்றுகும். இக் கூற்றுகள் உண்மையல்ல. அதனால் முதலாம் எட்வர்டுக்கு பாராளுமன்றத்தைக் கூட்டிய பெருமை இல்லையென்பதும் பொருளல்ல. ஏனெனில் இவருக்கு முன்பாகவே சிலர் சட்டத் துறையில் பணிகள் செய்துள்ளனர். ஆனால் முதலாம் எட்வர்டைப் போன்று சட்டத்தை சீர்திருத்திய அளவுக்கு எட்டாம் ஹென்றியைத் தவிர வேறு யாரும் செய்யவில்லை. இச் சட்டங்கள் இன்றும் தொடர்ந்து பலனளித்து வருகின்றன. மாறி வந்த சமூக வாழ்க்கைக்கேற்ப படைமானிய சட்டங்களைத் திருத்தியமைத்த பெருமை எட்வர்டைச் சார்ந்ததாகும்.

எட்வர்டு சட்ட சீர்திருத்தத்தை மேற்கொள்ளத் தேவையான ஆயத்தங்களைத் தான் பதவியேறிய பத்தாண்டுகளுக்குப் பிறகு செய்ய ஆரம்பித்தார். இதற்கு முன்பாகவே சட்ட வல்லுநர்களான கிலான்வில்லி, பிராக்டன் என்பவர்கள் அக்கால சட்டங்கள் பலவற்றின் சாரத்தையும் சுருக்கி நூல் வடிவத்தில் வடித்துக் கொடுக்க முயன்றார்கள். அவற்றையே நீதிபதிகள் பயன்படுத்தினர். பிராக்டனை அடுத்து பிராட்டன் என்பவர் சட்ட வல்லுநராகப் பொறுப்பேற்றார். சட்ட தொகுப்பு ஒன்றை உருவாக்க மன்னரே திட்டமிட்டிருந்தார் என்று கருதவும் இடம் உண்டு. அவரையே முதல் சட்ட மன்ற உறுப்பினராகவும் கருத வேண்டும். பண்டைய பழக்க வழக்கங்களின் அடிப்படையில் இருந்த முற்கால சட்டங்கள் பல்வேறு அரசர்களால் தமக்கேற்ற முறையில் திருத்தியமைக்கப்பட்டிருந்தன. எட்வர்டு இவற்றை யாவும் சீர்த்திருத்தியமைத்தார்.

கி. பி. 1275 ஆம் ஆண்டில் அரசர் முதல் வெஸ்ட் மின்ஸ்டர் சட்டத்தை வெளியிட்டார். இச் சட்டம் நாட்டில் அமைதியையும் சமாதானத்தையும் வலியுறுத்தியது. அரசரின் நிலையான வருமானத்திற்கு வழி செய்ய ரோமம், தோல் ஆகியவற்றின் ஏற்றுமதியின் பேரில் வரி ஒன்று விதிக்கப்பட்டது. எட்வர்டு சிலுவைப் போரிலிருந்து இங்கிலாந்துக்கு வந்தவுடன் கவுன்டிகளின் பொதுவான நிலைமைகளைக் கண்டறிய விசாரணை ஒன்று நிகழ்த்தினர். இவ் விசாரணைக் குறிப்பு வெற்றி வீரர் வில்லியத்தின் காலத்து டூம்ஸ்டே புத்தகத்தைப் போன்றதொரு பெரிய குறிப்பாகத் திகழ்ந்தது. ஷெரிப்புகளின் விசாரணை பற்றிய குறிப்பு மற்றொன்று ஆகும். அரசருடைய உரிமைகள் நிலங்கள் முதலியவை பற்றியும், அவற்றை முறை தவறி பறித்துக் கொண்டவர்கள் பற்றியும், அதிகாரிகள் நடத்தை பற்றியும் நாட்டின் நீதியைத் தடைப்படுத்திய குறுக்கீடுகளைப் பற்றியும் ஜூரிகள் விசாரணை செய்து

அவற்றை குறிப்புகளில் பதிய வைத்தார்கள். இக் குறிப்புகளிலிருந்தும், இதற்குப் பின்னர் வந்த விசாரணைக் குறிப்புகளிலிருந்தும் நமக்குப் பல செய்திகள் தெரிய வருகின்றன. அவற்றை 'நூறு சுருள்கள்' என்பர். அவ் விசாரணைகளின் மேல் அவர் எடுத்த நடவடிக்கைகள் பாராளுமன்ற சட்டங்களுக்கு அப்பாற்பட்டவை: அவை அரசருடைய நிர்வாக ஆணைகளைப் போன்று முக்கியத்துவம் வாய்ந்தவை அன்று. நீதிபதிகளுடைய தீர்ப்புகளின் சக்தியையும் அவை பெறவில்லை. எனவே அச் சட்டங்களின் தோற்றுவாயைத் தெரிந்துக் கொள்வது கடினம்.

முதலாம் எட்வர்டு பாராளுமன்றத்தில் இயற்றிய சட்டங்களை ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். அவை முறையே 1. அமைதி நிலவ இயற்றிய சட்டங்கள் 2. நிலசீர்திருத்தத்திற்காக இயற்றிய சட்டங்கள் 3. நீதித்துறைக்காக இயற்றியவை, 4. திருச்சபையின் சீர்திருத்தத்திற்காக இயற்றியவை. 5. வாணிபத்திற்காக இயற்றிய சட்டங்கள் என்பனவாம்.

**1. அமைதி நிலவஇயற்றிய சட்டங்கள்:-ரேஜ்மன்சட்டம் 1276:-** கி. பி. 1276ஆம் ஆண்டு ரேஜ்மன் சட்டம் நிறைவேற்றப் பட்டது. குற்றத்திற்கும், தகாத நடத்தைக்கும், அத்துமீறிய செயல்களுக்கும், களவுக்கும், சதிக்குற்றம் பற்றிய சட்டங்களுக்கு மிடையே உள்ள அவசியமான வேறுபாடுகளை இச்சட்டம் சுட்டிக் காட்டியது.

**வின்செஸ்டர் சட்டம், 1285:-** கி. பி. 1285ஆம் ஆண்டில் வின்செஸ்டர் சட்டம் இயற்றப்பட்டது. அதன்படி போலீஸ் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட சட்டங்கள் தொகுக்கப்பட்டன. இச் சட்டத்திற்கு முன் ஜூரிகள் ஒரே ஷயரைச் சார்ந்தவர்களாக இருந்தமையால் அதே ஷயரில் குற்றம் புரிந்தவர்களைத் தண்டிக்க அஞ்சினர். மேலும், பணபலமும், வலிமையும் பெற்ற நிலச்சொந்தக்காரர்களை அவர்கள் பகைத்துக்கொள்ள விரும்பவில்லை. வின்செஸ்டர் சட்டத்தின்படி ஒவ்வொரு கிராமமும், ஹன்டிரடும், சுதந்திரக் குடிமகனும் குற்றங்கள் அனைத்திற்கும் கூட்டுப் பொறுப்பாளிகளாக இருக்க வேண்டும். ஹன்டிரடுகளும், சுதந்திரக் குடிமக்களும் படைக்கலக்காவலர்களை ஆண்டிற்கு இரு முறை அவர்தம் படைகளுடன் காணவேண்டும். இரண்டாம் ஹென்றி ஏற்படுத்திய படைக்கருவிகளின் அமைப்பை முதலாம் எட்வர்டு தம் காலத்திற்கேற்றபடி வலிமை வாய்ந்ததாக மாற்றி அமைத்தார்.

மேலும் போர்க்காலங்களில் அரசருக்கு மஸ்டர்ரோல்ஸ் என்ற போர்வீரர்கள் பட்டியலைத் தயாரித்து உதவ வேண்டும். செல்வம் படைத்தோர் பெருஞ்சாலைகளைச் சுத்தம் செய்து சாலைகளின் இரு மருங்கிலும் இருநூறு அடிக்குச் சாக்கடைப் பள்ளங்களோ, புதர்களோ இல்லாமல் அவற்றைத் துப்புரவு செய்ய வேண்டும். இப்பள்ளங்களிலும் புதர்களிலும் திருடர்கள் மறைந்திருந்து இரவு நேரங்களில் தொல்லைகள் கொடுத்தனர். அறுபது வயதுக்குட்பட்டவர் தத்தம் செல்வ நிலைக்கேற்ப படைவீரர்களை வைத்துக் கொள்ள வேண்டும். செல்வந்தர் குதிரைப்படை வீரர்களையும் ஏழை எளியவர்கள் வில் அம்புகளையும் வைத்திருக்க வேண்டும் போலீஸ்காரர்கள் நாட்டில் நிலவிய குற்றங்கள் பற்றிய விவரங்களை நைட் வீரர்களிடம் கூற வேண்டும். இந்த நைட் வீரர்கள் ஒவ்வொரு ஷயரிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். இவர்கள் அமைதி நிலவச்செய்யும் காவலர்கள். அந்த நைட்வீரர்கள் பாராளுமன்றத்தில் அரசர் கேட்கும்போது அவற்றிற்குப் பதிலிறுக்க வேண்டும். அந்நியர்களைக் கண்காணிக்க வேண்டுமென்றும், இரவு நேரத்தில் நகரத்தின் கோட்டைக் கதவுகளை அடைத்துவிட வேண்டுமென்றும் இச்சட்டம் வற்புறுத்தியது.

கி. பி. 1305 ஆம் ஆண்டில் வந்த 'டிரையல் பாஸ்டன் ஆணை' நாட்டின் அமைதியைக் குலைத்த திருடர்களையும் கொள்ளைக் காரர்களையும் கடுமையாகத் தண்டித்து அவர்களை அடக்க வழி செய்தது.

இவ்வாறு எட்வர்டு கி. பி. 1275, 1285, 1305ஆம் ஆண்டுகளில் இயற்றிய சட்டங்கள் நாட்டில் அமைதி நிலவ வழி வகுத்தன.

2. **நில சீர்திருத்தச் சட்டங்கள்:-** நில சீர்த்திருத்த சம்பந்தமாகக் கொண்டுவந்த சட்டங்களில் மிகச் சிறப்பானது கி. பி. 1285 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இரண்டாம் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டமாகும். இச்சட்டத்தின் தோற்றுவாயாக அமைந்துள்ள விதி 'டி- டோனிஸ் கன்டிஷனலிபஸ்' (De Donis Conditionalibus) அல்லது 'நிபந்தனைக்குட்ப்பட்ட மான்ய வெகுமதிகள் பற்றி' என்று தொடங்குகிறது. இச்சட்டம் மரபு உரிமையை கட்டுப்படுத்த உருவாக்கப்பட்டது. அதன்படி பெரும்பண்ணைகளை சொந்தமாகக் கொண்ட அதன் சொந்தக்காரர்கள் தாம் விட்டுச்சென்ற பண்ணைகளை எப்போதும் பிரிக்கக்கூடாது என்ற நிபந்தனையின் பேரில் தம்முடைய மூத்த மகனிடம் அப்பண்ணைகளை ஒப்படைப்பார். அப்படி கொடுக்கப்பட்ட பண்ணைநிலம் பிரிக்கப்படாமல் பாரம்பரியமாக ஒரு வாரிசுக்குப் பின்னர் மற்றொரு வாரிசுக்கு

சென்றது. இம்முறையால் ஊதாரிகள் கூட தம் நிலத்தைப் பங்கு போட முடியாதபடி கட்டுப்படுத்தப்பட்டனர். இன்றுவரை இச்சட்டப்படியே இங்கிலாந்தின் நிலங்களின் சொந்தம் பற்றிய அமைப்பு முறை நீடித்து வருகிறது. இதன் விளைவாகத்தான் இங்கிலாந்தின் பெரிய பண்ணைகள் இன்றும் நிலவி வருகின்றன. இல்லையேல் மக்கள் அனைவருக்கும் நிலம் பகிர்ந்து கொடுக்கப்பட்டு சிறு பண்ணைகள் உருவாகி நிலம் பிளவுபட்டுப் போயிருக்கும்.

கி. பி. 1290 ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட மூன்றும் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் நிலங்களை மானியமாகப் பெற்றவர்கள் அதை மற்றவர்களுக்கு விற்கும்போது கடைப்பிடிக்க வேண்டிய முறைகளை வலியுறுத்தியது. இதை 'க்வொ எம்ப்டோன்ஸ்' (Quo Emptones) என்றும் கூறுவர். இச்சட்டம் நிலமானிய பிரபுவின் சலுகைகளைக் குறைத்தது. பிரபுவின் மானியதாரர் எவரும் தம்முடைய நிலங்களைக் கீழ்மானியதாரருக்கு விற்கக்கூடாது. நிலத்தை தம்மைப் போன்ற சம அந்தஸ்து உள்ளவர்களுக்கு விற்கலாமேயன்றி, தம்மைவிடத் தாழ்ந்த நிலையிலுள்ளவர்களுக்கு விற்கக் கூடாது. இந்த நிதியிலிருந்து வழங்கப் பெற்ற புதிய மானியங்கள் அரசரால் வழங்கப்பட்டன. புதிய மேனர்ப் பண்ணைகளை இச்சட்டம் உருவாக்க முடியாமல் தடுத்து விட்டது. நிலமனைத்திற்கும் சொந்தக்காரர் அரசரே என்பதை வலியுறுத்திய இச்சட்டம், நிலமானிய அமைப்பு முறையில் கடைநிலை மானியதாரர்களை உருவாக்க முடியாமற் தடுத்தது. அதற்கு மாறாக மானியதாரர்கள் அரசரையே நேரிடையாக அணுக வேண்டியவராயினர். அவர்கள் அரசரிடம் நேரிடையாக நிலமானியங்களைப் பெற்றவர்களாய் அரசருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவராயினர். இதனால் பிரபுக்களின் அதிகாரம் குறைந்து, அரசரின் அதிகாரம் பெருகியது. கி. பி. 1285, 1290 ஆம் ஆண்டுகளில் இயற்றிய வெஸ்ட்மின்ஸ்டர் சட்டங்கள் தாம் எட்வர்டின் ஆட்சி காலத்தில் நில சம்மந்தமாக இயற்றப்பட்ட சட்டங்கள் ஆகும்.

3. **நீதித்துறையில் இயற்றிய சட்டங்கள்:-** கி. பி. 1278ஆம் ஆண்டில் வந்த கிளஸ்டர் சட்டம் பிரபுக்களின் அதிகாரத்தையும் தல நீதிமன்றங்களின் ஆளுமையையும் கட்டுப்படுத்தின. இச்சட்டத்தின் விதிகளைச் செயல்படுத்த நாடு முழுவதும் சுற்றி வருமாறு ஆணையர்கள் அனுப்பப் பெற்றனர். பிரபுகள் அனுபவித்து வரும் சலுகைகள் குறித்து ஆராய்ந்து அறிவது இவ்வாணையர்களின் பணியாகும். அரசர் பிரபுக்களுக்கு விடுத்த இந்த ஆணைகளுக்கு 'க்வொ வாரன்டோ' ஆணைகள் என்று பெயர். 'க்வொ வாரன்டோ' என்ற சொற்களை 'எத்தகுதி பற்றி' என்று தமிழில்

கூறலாம். அவ்வாணைகள் எத்தகுதி பற்றி என்கிற சொற்களில் தொடங்கினமையால் அச்சட்டத்தையும் 'க்வொ வாரன்டோ' என்று அழைத்தனர். இவ்வாணைகள் பிரபுக்களின் அதிகாரங்களின் மூலத்தைக்கண்டறிய பயன்பட்டன. பிரபுக்களின் நீதிமன்றங்கள், அப்பிரபுக்களின் பிறசலுகைகள் ஆகியவற்றை எத்தகுதி பற்றி அவர்கள் பெற்றனர் என்று வினவப் பெற்றன. இச்சட்டத்திற்கு எதிர்ப்பு எழுந்தது. தாம் பரம்பரையாகவும் சந்தேகமறவும் அனுபவித்து வரும் இவ்வுரிமைகளிலும் குறிக்கிடுவதாக அவர்கள் கருதினர். அச்சட்டத்தின் மூலம் முதலாம் எட்வர்டு மன்னர், அரசாங்க சாசனத்தின் மூலம் வழங்கப்பெருத நிலமானிய உரிமைகள் அனைத்தையும் பிரபுக்களிடமிருந்து பறித்துக்கொள்ள எண்ணினர். 'பட்டா எங்கே'? என்று அரசர் வினவிய கேள்விக்கு 'இதுதான் என்னுடைய பட்டா' என்று துருப்பிடித்த பழையகால வாளை உருவிக் காட்டினர் வாரன் என்றபிரபு. 'என்னுடைய மூதாதையர் இந்த வாளின் உதவியினால்தான் அவருடைய நிலங்களைப் பெற்றனர். என்னிடமிருந்து அவற்றைப்பறிக்க நினைப்பவர்களைத் தடுத்து நிறுத்தி என் உடைவாளைக் கொண்டே காத்துக்கொள்வேன்' என்று அப் பிரபு கூறினர். மேற்கூறிய அவற்றிலிருந்து பிரபுக்களின் மனப் பான்மையை ஒருவாறு அறியலாம். எட்வர்டு பிரபுக்களுடன் உடனடியாக சண்டை போட விரும்பவில்லை. எட்வர்டு முதலாம் ரிச்சர்டு மன்னர் முடிசூட்டிக் கொண்ட நாள்அன்று உரிமைப் படுத்திக்கொண்ட நிலங்களை அச்சட்டம் பாதிக்காது என்று கூறி விட்டு பிரபுக்களுடன் சமரசம் செய்து கொண்டார்.

இச்சட்டம் நிலசம்பந்தமாக இருந்தாலும் பிரபுக்களின் அதிகாரத்தையும் அவர்கள் ஆளுகைக்கு உட்பட்ட பகுதியில் நீதியையும் நிலைநிறுத்த உதவியதால் இஃது நீதித் துறையில் செய்யப்பட்ட சட்டமாகும்.

கி. பி. 1284ஆம் ஆண்டில் வந்த ருட்லான் சட்டம் அரசருடைய நீதிபதிகள் நீதிவிவகாரத்துறை வல்லுநர்கள் ஆகியோரின் பணிகளை எளிமையாக்கியது.

**4. திருச்சபையின் சீர்திருத்தத்துக்காக இயற்றியவை:-** கி. பி. 1279ஆம் ஆண்டில் மார்ட்டுமெயின் சட்டம் அல்லது மரித்த மானியச்சட்டம் நிறைவேற்றப்பட்டது. திருச்சபையை கட்டுபடுத்த இச்சட்டம் வந்தது. நல்லெண்ணமுள்ள பெரியோர்கள் கொடுத்த மானியங்களால் திருச்சபை செல்வவளமுற்றுத் திகழ்ந்தது. 12, 13 ஆம் நூற்றுண்டுகளில் சமய இல்லங்களும்,

மடாலயங்களும் ஏராளமான நிலங்களை மான்யமாக அடைந்திருந்தன. திருச்சபையின் செல்வாக்குக்குட்பட்ட நிலங்களின் வருவாயைப் பெறமுடியாமல் அந்நிலங்கள் அரசருக்குப் பெருத்த நஷ்டமாக கருதப்பட்டன. திருச்சபைக்கு சொந்தமல்லாத பிற நிலங்களிலிருந்து படைமானிய.வரிகள் கிடைத்து வந்தன. இவ்வரிகள் திருச்சபைக்கும் சொந்தமான நிலங்களிலிருந்து கிடைக்க வாய்ப்பு இல்லை. ஏனெனில் திருச்சபை ஒரு கார்ப்பரேஷன் தனி மனிதர் இறப்பது போல் கார்ப்பரேஷன் அல்லது பொதுக்குழு இறப்பதில்லை. எனவே திருச்சபைக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் இறந்தவர் கைகளுக்குச் சென்றது போல் கருதப்பட்டன. இதனால் இந் நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் அரசருக்கும் கிடைக்காமற் போயிற்று. இதைத்தவிர்க்க வந்ததே மார்ட்மெயின் அல்லது 'மரித்தமானியச்சட்டமாகும்'. இதன்படி, எந்த ஒரு நிலத்தையும் திருச்சபை சம்பந்தப்பட்ட தனிமனிதனுக்கோ. அல்லது அரசருடைய அனுமதிபெறாத மனிதனுக்கோ வழங்கப் படக்கூடாது. சுருங்கக்கூறின் முதலாம் எட்வர்டு மன்னர் இச் சட்டத்தின் மூலம் திருச்சபையை மேலும் தம்முடைய கட்டுப் பாட்டின் கீழ்க்கொண்டுவந்தார். திருச்சபை நீதிமன்றங்களில் கடன், ஒப்பந்தம் ஆகியவற்றுக்காக வழக்காடி வெற்றிபெற்றிருந்த திருச்சபை ஊழியர்களை அரசரின் நீதிபதிகள் மீண்டும் விசாரித்து அவசியம் என்று தோன்றினால் தண்டிக்கலாயினர். திருச்சபையினர் ஆத்திரமடைந்தனர். எனவே எட்வர்டு அவர்களுக்குச் சில சலுகைகள் அளித்தார். அதற்காக கி.பி.1286 ஆம் ஆண்டில் 'ஸர்கம்ஸ்பெக்ட் அகாடிஸ்' என்னும் சட்டத்தைக் கொணர்ந்தார். அதன்படி திருச்சபையினரை நீதிமன்றங்களில் விசாரிக்கும் முறைகளில் மிகுந்த விழிப்புடன் நடந்து கொள்ளுமாறு நீதிபதிகளை எச்சரித்தார். சமய சீர்திருத்தஇயக்க காலம்வரை திருச்சபையினர் எட்வர்டு மன்னர் அளித்த இச்சலுகைகளை அனுபவித்து வந்தனர். ஒழுக்கவீழ்ச்சி சம்பந்தமான குற்றங்கள், உதாசீனப்படுத்தப்பட்ட திருக்கோயில்கள், கோயில் முற்றங்கள் ஆகியவை பற்றிய குற்றங்கள், இறந்தவர்களை அடக்கம் செய்யு முன் பாதுகாத்து வைத்த இடங்கள், தைத் (பத்திலொருபங்கு) என்னும் வரிகள் உயில்கள், திருமணங்கள் பற்றிய வழக்குகள் பழிதூற்றல் சம்மந்தமான சில வழக்குகள் ஆகியவற்றில் திருச்சபையினர் சம்பந்தப்பட்டிருந்தால் அவ்வழக்குகள் ஆகியவற்றில் திருச்சபை நீதிமன்றங்களிலேயே விசாரித்து முடிவு காணும் உரிமையைப் பெறத் திருச்சபையினருக்கு வழிசெய்தது. இச் சட்டம். திருச்சபையினர் அரசருக்குப் பொருளை மான்யமாகக் கொடுக்க வேண்டுமென்பதையும் எட்வர்டு வற்புறுத்தினார். இதை போப்பாண்டவரும் ஆர்ச்பிஷப்பும் எதிர்த்தனர்.

கி. பி. 1037ஆம் ஆண்டில் கார்லைல் சட்டம் ஏற்படுத்தப் பட்டது. இது போப்பாண்டவர்கள் நிதி திரட்டுவதைத் தடுத்தது.

**5· வாணிபத்திற்காக :** முதலாம் எட்வர்டே ஆங்கில வர்த்தக சட்டத்தை உருவாக்கியவர், முதன் முதலில் கண்ட றிந்தவர் என்று கூறுவர். இவர் ஏற்படுத்திய சட்டம் பிற்காலத் தில் ஆங்கில வாணிபத்திற்கு மிகவும் உதவியாக இருந்தது. கி. பி. 1283 ஆம் ஆண்டில் வணிகர்கள் சட்டம் வெளியிடப்பட்டது. வர்த்தகத்திற்கு வாங்கிய கடன்களைச் சுலபமான தவணைகளில் திரும்பப் பெறுவதற்கு வழி வகை செய்தது இச்சட்டம். கி. பி. 1303 ஆம் ஆண்டு கார்டா மெர்கடோரியா (Carta Mercatoria) வில் எட்வர்டு அயல்நாட்டு வணிகர்களை இங்கிலாத்தில் உள்ள குற்றச்சாட்டுக்களைத் தீர்த்துவைக்க வெளிநாட்டினர்களும், ஆங்கி லேயர்களும் கலந்த கலப்பு ஜூரி முறை (Mixed Juries) ஏற்படுத் தித்தந்தார். முதலாம் எட்வர்டு மன்னர் சட்டத்துறையில் ஆற்றிய பணிகள் பிற்கால ஆங்கில சட்டத்துக்கு அடிக்கல்லாக அமைந்தன.

**6. நீதிமன்றங்கள்:-** நீதிமன்றங்களை சீர்திருத்தும் பணியிலும் எட்வர்டு முனைந்திருந்தார். நேரிடையாகவும், மறைமுகமாகவும் சட்டமன்றங்களின் மூலமாகவும், சட்டத்தை விஞ்ஞான ரீதியாக வளர்க்க அவர் காட்டிய பேரார்வத்தாலும், வழக்குகள் பெருகி வளர்ந்தமையாலும் சட்டங்களைச் சீரான முறையில் உருவாக்கி நீதிமன்றங்களைச் செம்மைப்படுத்த அவர் வகை செய்தார். நன்கு பயிற்சி பெற்ற வழக்குரைஞர் குழாம் ஏற்படவும் அவர் வழி செய்தார். அட்டர்னி வழக்கறிஞர்களும் பிற வழக்கறிஞர்களும் நாட்டில் உருவானவர்கள். நீதிபதிகள் பிற பணிகளில் ஈடுபாடு கொள்ளாமல் நீதித்துறையையே கவனிக்கலாயினர். தத்தம் நீதிமன்றங்களைச் சீரான முறையில் கண்காணிக்கவும் அவர்கள் முற்பட்டனர். நீதிமன்றங்களை அணுகும் முறையும் எளிதாக்கப் பட்டது. அவை விரைவாகவும் வேகமாகவும் செயலாற்றின. சாத்திர ரீதியான முறையில் நீதிமன்றங்களின் பணி அமையலா யிற்று. மேலும் அவை தொடர்ந்து பணியாற்றும் பழக்கமும் விரிவாக்கப்பட்டது. நாட்டில் அமைதி நிலைபெறலாயிற்று. மக்கள் நிம்மதியாக வாழத் தலைப்பட்டனர். அவர்கள் அரசருக்கு நன்றி விசுவாசத்தைக் காட்டி நாட்டின் ஒற்றுமையில் நம்பிக்கையுள்ள வர்களாக மாறினர்.

## (இ) முதலாம் எட்வர்டும், பாராளுமன்றமும்

எட்வர்ட் மன்னருடைய சட்டங்கள் பேரவையின் (Great Council) கூட்ட மன்றங்களில் சமர்ப்பிக்கப்பட்டன. பேரவைக்

கூட்டம் நடைபெற்ற பெயராலேயே அச் சட்டங்கள் பெரும்பாலும் அழைக்கப் பெற்றன. அவருடைய ஆட்சிக்காலத்தில் முழு பாராளு மன்றங்கள் கூடியிருந்தன. கி.பி.1275, 1295 போன்ற ஆண்டுகளில் அவை கூட்டப்பட்டன, எளிமையாகத் தொடங்கப் பெற்று பெரும் புகழும் பெற்றுப் பெருகி வளர்ந்தன. பல்வேறு நிறுவனங்களை போன்றே பாராளுமன்றத்தின் மூலத்தையும் ஆராய்வது கடினம். பாராளுமன்றம் என்கிற சொல் பல பொருள்களைக் கொண்டு மாறி வந்திருக்கிறது. பார்லெமெண்ட் என்ற பண்டைய பிரெஞ்சு சொல்லுக்கு 'பேசுதல்' என்று பொருள். தொடக்கத்தில் சட்டமன் றத்தில் பேசப்பட்டதைக் குறித்த இச்சொல் நாளடைவில் சட்ட மன்றத்தையே குறிப்பிட்டது.

பதின்மூன்றும் நூற்றுண்டில் பாராளுமன்றத்தின் இன்றியமை யாத உறுப்பினராக அரசர் திகழ்ந்தார். அவருக்கு அடுத்தபடி யாகத் திருச்சபைப் பிரபுக்களும், லௌகீகப் பிரபுக்களும் அரச ரால் அழைப்பாணைவிடப் பெற்ற பாராளுமன்றக் கூட்டத்தில் அரசரைச் சந்திக்க வேண்டும்படிக் கோரப்பட்டனர். கடைசியாக பொதுமக்களின் பிரதிநிதிகள் வந்தனர். நாட்டின் பேரவையே (Great Council) பாராளுமன்றமாக ஆரம்ப காலத்தில் கருதப் பெற்றது. இங்கிலாந்து முழுவதிலுமிருந்து வந்த பிரபுக்களிடம் பேரணிக் கூட்டத்தின்போது அரசர் அவர்களிடம் ஆலோசனை பெற்றார். அவர்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். பேரவை பெருகி வளர்ந்தபோது 'க்யூரியா ரெஜிஸ்' என்று அழைக்கப் பட்டது. இந்தமேற்சொன்ன மன்றமே அரசாங்கத்தின் ஆதாரமாக வும், ஆணிவேராகவும், சட்டம், நீதி ஆகியவற்றின் இருப்பிடமா கவும் கருதப்பட்டது. பேரவைக்கு அழைக்கப்படும் உறுப்பினரின் தகுதி குறித்துத் தொடக்க காலத்தில் எந்தவொரு கட்டுப் பாடும்இருக்கவில்லை. சாக்சானிய அரசர்களுக்கு விட்டான்என்னும் அறிஞர் சபை அறிவுரை பகன்றது போன்று, நார்மானியர்களும், பிளான்ட்ஜெனட்டுகளும் தாம் விரும்பியவரைப் பேரவைக்கு அழைத்தனர். பேரவைக் கூட்டத்தின்போது அரசாங்க அதிகாரி களும், அமைச்சர்களும் அவசியம் வருகை தர வேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். அத்துடன் சில பிஷப்புகள், சில மடாலயத் தலைவர்கள், சில ஏர்ல் பிரபுக்கள், சில பாரன் பிரபுக்கள் ஆகி யோரும் சிறப்பாணையொன்றினுல் அழைக்கப்பட்டு இக்கூட்டங் களில் பங்கு கொண்டனர். மேற்கூறியவர்கள் அனைவரும் நிலச் சொந்தக்காரர்கள் ஆகும்.

காமன்ஸ் என்னும் சாமானிய உறுப்பினர்:- மூன்றும் ஹென்றி யின் ஆட்சிக் காலத்தில் தான் இப்பேரவைக்குப் பாராளுமன்றம்

என்ற பெயர் வழங்கலாயிற்று. தேவைப்படும்போது இச்சபையின் கூட்டத்திற்கு ஷயர்களிலிருந்து இருவரோ அல்லது அதற்கு மேற்பட்ட உறுப்பினர்களோ அழைக்கப்பட்டனர். இம்முறையில்தான் கி. பி. 1213 ஆம் ஆண்டு ஜான் மன்னரின் ஆட்சியின்போதும், கி. பி. 1254 ஆம் ஆண்டில் மூன்றும் ஹென்றியின் ஆட்சிக் காலத்திலும் ஷயர்களிலிருந்து பிரதிநிதிகள் வரவழைக்கப்பட்டனர். ஷயர்களின் பிரதிநிதிகளாக நைட்டுகள் அரசருடைய அதிகாரிகளை ஷயர் மன்றங்களில் சந்திக்கும் பழக்கம் ஏற்கனவே நடைமுறையிலிருந்து, அவர்கள் நேரிடையாக அரசரைச் சந்திக்க வெஸ்ட்மின்ஸ்டருக்கு வந்தார்கள். பின்னர், வாணிகப் பெருக்கத்தால் நகரங்கள் வளர்ச்சியடையவே முக்கிய நகரங்களிலிருந்தும் இரு பிரதிநிதிகள் மூன்றும் ஹென்றியின் ஆட்சியின்போது பாராளுமன்றத்திற்கு வந்தனர். அவர்கள் சைமன்டி மான்ட்ஃபோர்டினுல் கி. பி. 1265 ஆம் ஆண்டில் அழைக்கப்பட்டிருந்தனர். ஷயர்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் வந்த இப்பிரதிநிதிகளிடம் உதவிப் பணமாக, அரசர் மானியம் கேட்டார். உதவிப் பணம் பெறச் செய்யப்பட்ட இம்முயற்சி எளிமையானதாக இருந்தது. ஏனெனில் நைட்டுகளும், பிரதிநிதிகளும் ஷயர், நகர் ஆகிய பகுதிகளின் சாமானிய மக்கள். அவர்களைக் 'காமன்ஸ்' என்றனர். இதிலிருந்து தான் காமன்ஸ் அல்லது சாமானியர் என்னும் சொல் பிறந்தது. சாமானியரின் சபையே பிற்காலத்தில் காமன்ஸ் சபை எனப்பட்டது.

வரிவிதிப்பு:- நாட்டை அரசாட்சி செய்யும் அரசருக்கு உதவ பொருளை மானியமாகப் பெற இப்பேரவை அல்லது பாராளுமன்றக் கூட்டம் எளிய சாதனமாக அமைந்தது. பொருளை மானியமாக வழங்கும் பொறுப்பு திருச்சபையினர், பிரபுக்கள், சாமானியர் என்ற முத்தரப்பினரையும் சேர்ந்தது. எனவே ஷயரின் பிரதிநிதியாகப் பொறுப்பேற்கப் பலர் அஞ்சினர். அது பெறற்கரிய சலுகையாகக் கருதப்படவில்லை. வெஸ்ட்மின்ஸ்டரில் கூடிய பாராளுமன்றக் கூட்டங்களிலிருந்து தம் கவுன்டிகளுக்குத் திரும்பிய நைட்டுகள், மக்களுக்குப் பிடித்தமில்லாத செய்தியான புதிய வரி விதிப்புகளையே கூற வேண்டியவராயினர். ஒரு சமயம் ஆக்ஸ்ஃபோர்டு ஷயர்லிருந்து பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியைக் கேட்ட இரு நைட்டுகள் மகிழ்ச்சி அடையாமல் அப்பொறுப்பேற்க அஞ்சி நாட்டை விட்டே ஓடி விட்டனர் என்றால் அப் பதவியின் சிறப்பைச் சொல்லவும் வேண்டுமோ! இக்கடினமான பொறுப்பைப் பயன் படுத்தி அரசரைக் கட்டுப்படுத்தியும், அவருக்குக் கொடுக்கும் உதவிப் பணத்தைக் கட்டுப்படுத்தி, அரசரின் கொள்கைகளையே கட்டுப்படுத்தும் காலம் அப்போது வந்திருக்கவில்லை.

**பாராளுமன்றத்தின் உயர்நீதிமன்றம்:-** பேரவையைப் போன்று பாராளுமன்றம் வெறும் வரிவிதிக்கும் இயந்திரமாக மட்டும் நின்று விடவில்லை. 'க்யூரியா ரெஜிஸ்' மன்றிலிருந்து தோன்றியதால் அது ஒரு நீதிமன்றமாகவும் இருந்தது. அதனால் தான் அதை இன்றும் நாம் பாராளுமன்றத்தின் உயர்நீதிமன்றம் என்கிறோம். இறுதியாக இவ்வதிகாரம் பிரபுக்களினிடம் மட்டும் சென்று நிலைத்து விட்டது. பாராளுமன்றக் கூட்டங்களுக்கு வரும்போது நைட்டுகள் விவரித்ததை அரசு செவிகொடுத்துக் கேட்பதும் வழக்கமாயிற்று. அதை அவர் அங்கீகரித்து ஏற்றுக் கொண்டபோது அரசர் அதை விரும்புகிறார் என்றும் அவர் அங்கீகரிக்க மறுத்தபோது அரசர் அதை கவனிக்கிறார் என்றும் சொல்லப்பட்டது. அரசர் அதை கவனிக்கிறார் என்றால் அக்கோரிக்கை ஏற்க முடியாது என்பதே அதன் பொருள்.

**பாராளுமன்றத்தின் பல்வேறு பணிகள்:-** உறுப்பினர்களைக் கொண்டிருந்தாலும் உறுப்பினர்கள் இல்லாவிட்டாலும் பாராளுமன்றம் பல்வேறு பணிகளைச் செய்ய அமைக்கப்பட்ட மன்றமாயிற்று. அது நீதிமன்றமாகவும், வரிகளின் மூலம் அரசருக்கு நிதிவழங்குவதாகவும், நாட்டின் கொள்கைகளை ஆராயும் விவாத மன்றமாகவும், காலப்போக்கில் சட்டமன்றமாகவும் ஆகியது. நைட்டுகளையும், குடிமக்களையும் இப்பல்வேறு பணிகளில் பங்கு கொள்ள அழைக்கப்படுவது மூன்றாம் எட்வர்டின் காலத்தில் தான் பழக்கமாக மாறியது. அவர் காலத்தில் கூட, நைட்டுகளும் குடிமக்களும் பிரபுக்களினின்றும் தனியாகப் பிரிந்து தனி மன்றமாக அமர்ந்தனர். அதையேகாமன்ஸ் சபை என்றனர். (House of Commons).

**மாதிரிப் பாராளுமன்றம், 1295:-** மாதிரிப் பாராளுமன்றம் என்பது கி. பி. 1295 ஆம் ஆண்டு கூடிய முழு பாராளுமன்றத்தை வரலாற்று ஆசிரியர்கள் 'மாதிரிப் பாராளுமன்றம்' என்று குறிப்பிடுவர். அது வருங்கால பாராளுமன்றங்களுக்கு மாதிரியாக அமைந்தது என்பதை முதலாம் எட்வர்டு அறிந்திருந்தால் வியப்பில் ஆழ்ந்திருக்கக்கூடும். 'எதுவொன்று அனைவரையும் பாதிக்கின்றதோ அதுஅனைவராலும் ஏற்றுக் கொள்ளப் படவேண்டும்' என்று சமயகுருமார்களுக்கு இப் பாராளுமன்றத்தில் பங்கு கொள்ள அனுப்பப் பெற்ற அழைப்பாணைகள் கூறுகின்றன. கி. பி. 1295 ஆம் ஆண்டு இங்கிலாந்தை பெரும் அபாயங்கள் சூழ்ந்திருந்தன. பிரான்ஸ் அரசர் நான்காம் பிலிப்புடன் போரில் இறங்கி இருந்தார் எட்வர்டு. காஸ்கனியின் மீது உரிமைகொண்டாடி அதனைப் பிடிக்க பிரெஞ்சு மன்னர் படையெடுத்ததே இப்

போருக்கு காரணம். அத்துடன் பிரெஞ்சியர் டோவரைச் சூறை யாடித் தீக்கு இரையாக்கினர். மற்றும் எட்வர்டு மன்னரால் ஸ்காட் லாந்து அரசராக நியமிக்கப்பட்ட பால்யால் (Balliol) ஸ்காட்டிய பிரபுக்களால் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அவ்வாண்டு கோடை காலத்தில் பால்யால் பிரெஞ்சு மன்னருடன் உடன் படிக்கை செய்துக் கொண்டார். எனவே கி.பி.1295 ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றத்தில் பங்கு கொள்ள வேண்டி தம் குடிமக் களின் எல்லா வகுப்பினரையும் அழைத்து நாட்டை எதிர் நோக்கி யுள்ள தேசிய அபாயத்தை சமாளிக்க நிதி உதவி கேட்டார். அவ்வுறுப்பினர்களில் சமய பிரபுக்கள், லௌகீக பிரபுக்கள், நைட்டுகள், குடிமக்கள், திருச்சபையின் பிரதிநிதிகள் ஆகி யோர் அடங்கியிருந்தனர். இவ்வனைவரும் ஒரே நாளில் வெஸ்ட் மின்ஸ்டர் மண்டபத்தில் கூடினர். நிதிகோரிய அரசருக்கு இப் பாராளுமன்றம் போதுமான அளவு பொருளை வரியாக அளிக்கத் தவறி விட்டது. பாரன் பிரபுக்களும் நைட்டுகளும் தம் பொருள் களின் மீது 11ல் ஒரு பங்கையும், திருச்சபையினர் 10ல் ஒரு பங் கையும் நகரங்களைச் சார்ந்தவர்கள் 7ல் ஒரு பங்கையும் வரியாகக் கொடுக்க இசைந்தனர். எட்வர்டு மன்னர் இன்னும் அதிகம் எதிர் பார்த்தார். இருப்பினும் தாம் மேற்கொண்ட இரு போர்களிலும் ஈடுபட அவர் தவறவில்லை. எட்வர்ட் மன்னரின் காஸ்கனின் படை யெடுப்பு தோல்வியில் முடிவுற்றது. ஆங்கில படை முழுவதும் அழிக்கப்படுவதினின்றும் தற்செயலாய் தப்பியது. பிரெஞ்சு கப்பற் படையொன்று இங்கிலாந்தின் மீது படையெடுக்க ஆயத்தமா யிருந்தது. அடுத்த ஆண்டில் அரசர் பிலிப்புடன் சமாதான உடன் படிக்கை செய்து கொண்டார். காஸ்கனின் பெரும்பகுதி பிரெஞ்சியரின் கைகளுக்குச் சிக்கியது. ஸ்காட்லாந்துடன் நடந்த போரில் வெற்றி கிட்டியது. டன்பார் என்னும் இடத்தில் ஸ்காட் டிய படை கி. பி. 1296 ஆம் ஆண்டு தோல்வியுற்றது. தோல்வி யின் விளைவாக பால்யால் பதவியிலிருந்து நீக்கப்பட்டார். தற்காலிகமாக ஸ்காட்லாந்து இங்கிலாந்துடன் இணைந்தது.

**மாதிரிப் பாராளுமன்றம் 1295:-** எட்வர்டு மன்னர் கி. பி. 1295ஆம்ஆண்டில் கூட்டிய பாராளுமன்றத்தை மாதிரிப் பாராளு மன்றம் என்பர். அதனைக்கூட்ட பல காரணங்கள் இருந்தன. அவையாவன:

**உடனடிக் காரணம்:-** மாதிரிப் பாராளுமன்றத்தைக் கூட்ட உடனடிக்காரணமாயிருந்தது அரசியல் சூழ்நிலையாகும். இங்கி லாந்தின் பகைவர்களாயிருந்த வேல்ஸ் மக்கள், பிரெஞ்சியர், ஸ்காட்டியர் ஆகியவர்களிடமிருந்து இங்கிலாந்தைக் காப்பாற்ற

நாட்டு மக்கள் அனைவரின் ஆதரவும் அவசியம் என்பதை எட்வர்டு மன்னர் உணர்ந்தார்.

**பொருள் பறிக்கும் நோக்கம்:-** மாதிரிப் பாராளுமன்றத்தின் உண்மையான நோக்கம் மக்களிடம் இருந்து பொருளை மானியமாகப் பெறுவதுதான். தேசியப் பாதுகாப்பிற்காக தேவைப்பட்ட பொருளைப் பெறும் நோக்கமே மாதிரிப் பாராளுமன்றத்தின் அடிப்படையாகும். ஷயர்களில் இருந்த நைட்டுகளும் பாரன் பிரபுக்களும் தம் வருவாயில் பதினொன்றில் ஒரு பங்கையும், சமயக் குருமார்கள் பத்திலொரு பங்கையும், பரோக்கள் ஏழில் ஒரு பங்கையும் மானியமாக வழங்கினர். இப் பாராளுமன்றம் நீதி சம்பந்தமாகவும் சட்டமியற்றும் சம்பந்தமாகவும் யாதொரு பணியையும் செய்யவில்லை என்பதை மறக்கக் கூடாது.

**அரசியல் அமைப்புத் திட்டம்:-** இப் பாராளுமன்றத்தில் நாட்டு மக்களின் எல்லா வகுப்புகளின் பிரதிநிதிகளும் கூடியிருந்தனர். இப் பாராளுமன்றத்தில் பங்குகொண்ட பிரதிநிதிகளை இருவகையாகப் பிரிக்கலாம்:- (1) விசேஷ அழைப்பாணைகள் மூலம் வரவழைக்கப்பட்டவர்கள், (2) நேரிடையாக அல்லாமல் மறைமுகமாக அழைக்கப்பட்ட பிரதிநிதிகள் என்பன அவை.

**விசேஷ அழைப்பாணை மூலம் அழைக்கப்பெற்ற பிரதிநிதிகள்:-** ஆர்ச்பிஷப்புகள், பிஷப்புகள், ஆபட் குருமார்கள், ஏர்ல் பிரபுக்கள், பாரன் பிரபுக்கள் முதலானோர் விசேஷ அழைப்பாணைகளைப் பெற்றனர்; விசேஷ அழைப்பாணை மூலம் அழைக்கப் பெற்ற உறுப்பினர்கள் பிரபுக்கள் சபையின் உறுப்பினர்களாயினர். ஆனால் அச் சபையின் முன்னோடியாகக் கருதப்பெற்ற 'கம்யூன் கன்சிலியம், என்ற சபைக்கு பிரபுக்களிடமிருந்து நிலமானியம் பெற்றவர்களின் பிரதிநிதிகள் அழைக்கப்பட்டனர். விசேஷ அழைப்பாணையைப் பெறுவது பரம்பரை உரிமையாக்கப் பட்டது. அதன்பயனாக பிரபுக்கள் சபையின் உறுப்பினர்களைப் பற்றி முதலாம் எட்வர்டு எடுத்த நடவடிக்கையால் அது நிலையான தன்மையைப் பெற்றுவிட்டது. அதன் காரணமாகத்தான் எட்வர்டை 'பிரபுக்கள் சபையின் பிதா' என்று கருதுவது ஓரளவுக்குப் பொருத்தமுடையதாகும்.

**மறைமுகமாக அழைக்கப்பட்ட உறுப்பினர்கள்:-** (1) தாழ்நிலை சமயக் குருமார்கள்: கான்டர்பரி, யார்க் ஆர்ச் பிஷப்புகளின் ஆணையின்படி வரவழைக்கப்பட்டவர்கள் பின்வருமாறு: கட்டளைக் குருக்களின் தலைவர்கள், மேற்றிராணியார் எனப்படும் ஆர்ச்டீகன்கள், ஒவ்வொரு திருச்சபை மாவட்டத்திலிருந்தும் இரண்டு

சமயக் குருமார்களின் பிரதிநிதிகள், திருக்கோயில் ஒவ்வொன்றி லிருந்தும் ஒருசமயக்குருமார் ஆகியோர் மறைமுகமாக அப் பாராளு மன்றத்திற்கு அழைக்கப்பட்டனர்.

ஆனால் சமயக் குருமார்கள் சமய மாநாடுகள் கூட்டி அரசர் கேட்ட மானியங்களைக் கொடுக்கத் தீர்மானித்தனர். பதினைன்காம் நூற்றாண்டில் அவர்கள் பாராளுமன்றக் கூட்டத் தொடர்களில் பங் கேற்க மறுத்தனர். லௌகீகர்கள் விடுக்கும் அழைப்பாணை களுக்குக் கீழ்ப்படிவது அவர்களுக்கு இழுக்கு தருவதாகும் என்ற கருத்தின் அடிப்படையில் அவர்கள் 'பங்கேற்க மறுத்தனர்.

அவர்கள் பாராளுமன்றத்தில் பங்கு கொள்ளத் தவறியதால் ஏற்பட்ட ஒரு நன்மை என்னவெனில், சமயக் குருமார்கள் நாட்டின் தனியான வரிசையைச் சார்ந்தவர்கள் என்ற கருத்து அடிபட்டுப் போனதுதான்.

(2) மறைமுகமாக வந்த உறுப்பினர்கள் ஷயர்கள், நகரங்கள், பரோக்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகள்.

ஒவ்வொரு ஷயரிலிருந்தும் இரண்டு நைட்டுகள், ஒவ்வொரு நகரத்திலிருந்தும் இரு குடிமக்கள், ஒவ்வொரு பரோவிலிருந்தும் இரு பரோவாசிகள் ஆகியோர் ஷெரிப்புகளின் பொது அழைப் பாணையின்படி கூட்டப் பெற்ற முழு கவுன்டி மன்றத்தால் தேர்ந் தெடுக்கப்பட்டார்கள். பாராளுமன்ற உறுப்பினர்களைத் தேர்தல் மூலம் தெரிந்தெடுக்கும் முறையும் இறுதியாக மேற் கொள்ளப்பட் டது. எட்வர்டு சொத்து அடிப்படையில் அமைக்கப்பட்ட புது முறையையும் பிரதிநிதித்துவ அடிப்படைகளில் உருவான பழைய கொள்கைகளையும் இணைத்தார்.

முதலாம் எட்வர்டை 'காமன்ஸ் சபையின் பிதா' என்று கருதக் கூடாது. நகரங்கள், பரோக்கள் ஆகியவற்றின் பிரதிநிதி களை அழைக்கும் கொள்கையை சைமன் டி மான்ட்போர்ட் கடைப் பிடித்திருந்தார். ஆனால் ஷயர் மூட்டுகளின் உறுப்பினர்களால் நிரப்பப்பட்ட சபை காமன்ஸ் சபை என்ற அதன் தன்மையை நிலைநாட்டுவதற்கு அவருடைய கொள்கை பெரிதும் உதவிற்று எனலாம்.

**பொதுவான குறிப்புகள்:-** மாதிரிப் பாராளுமன்றம் எட்வர்டு மன்னரின் வரையறுக்கப் பட்ட கொள்கைக்கு சீரிய எடுத்துக் காட்டாகும். சமயக் குருமார்கள், பாரன் பிரபுக்கள், மக்கள் ஆகி யோரின் பிரதிநிதிகளைப் போதுமான அளவுக்கு பங்குக் கொள்ள

அனுமதித்ததால் அப் பாராளுமன்றம் பிற்காலத்தவர்களுக்கு மாதிரியாக அமைந்தது உண்மை தான்.

சமயக்குருமார்கள், பிரபுக்கள், சாமானியர் எனப்படும் முப்பிரிவினரும் ஒன்றாக இணைவர் என்பது சாத்தியமாகப் படாத தொன்றாகும். சமயக்குருமார்கள் பாராளுமன்றத்தில் பங்குகொள்ள விரும்பாமல் நின்று விட்டனர். கி. பி. 1341 ஆம் ஆண்டு வாக்கில், பாராளுமன்றம் இரண்டு சபைகளைக் கொண்டு செயல் படத் தொடங்கியது. அவை பிரபுக்கள் சபை, காமன்ஸ் சபை எனப் பட்டன.

முதலாம் எட்வர்டு மன்னர், பாராளுமன்றம் வருங்காலத்தில் மிகச் சிறப்புடையதாக ஆகும் என நினைத்து, அக் கருத்தைக் கொண்டு பாராளுமன்றத்தை ஆய்ந்து பார்த்துத் தோற்றுவித்தார் என நாம் கருத்துக் கொள்வதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அதேபோல், அவர், தம்முடைய அதிகாரத்தை மக்களில் எந்தப் பிரிவினருடனும் கூட்டத்துடனும் பகிர்ந்துகொள்ள எண்ணியதாகக் கொள்வதும் பொருத்தமற்றதாகும்.

எட்வர்டு பாராளுமன்றங்களைக் கூட்டியது தமக்கு உடனடியாக நற்பயன் ஏற்படும் காரணத்திற்காகவே யன்றி அரசியல் உயர் நோக்கங்களில் புதுமையான கருத்தை எடுத்துக் காட்டும் நிறுவனத்தை தோற்றுவிக்கும் எண்ணத்தினால் அன்று என்பதை மறந்து விடக்கூடாது.

அதை மாதிரிப் பாராளுமன்றம், என்று கூற இயலுமா?

**சாலிஸ்பரியில் கூடிய பாராளுமன்றம் 1297:-** எட்வர்டு ஃபிரான்ஸ் நாட்டின்மீது மீண்டும் படையெடுக்கும் நோக்கம் பற்றிய விவகாரங்களை வெளியிட சாலிஸ்பரியில் (1297) மற்றொரு பாராளுமன்றத்தைக் கூட்டினார். அவருக்கு எதிராக இப் பாராளு மன்றத்தில் பிரபுக்களின் ஒரு பிரிவினர் வெகுண்டெழுந்தனர். இப் பிரிவினர் அரச அதிகாரம் பெருகுவதை நீண்டகாலமாக எதிர்த்து வந்திருந்தனர். நார்போக் பிரபுவான பிஹாடு அப் பிரபுக்களின் தலைவரானார். பிஹாடு ஆங்கிலப் படையொன்றுடன் காஸ்கனியின் மீது படையெடுக்க வேண்டுமென அரசர் எட்வர்டு கூறினார். எட்வர்டு பிளாண்டர்ஸ் மீது படையெடுத்துச்சென்றார். மார்ஷல் பிரபுவாக இருக்கும் பிஹாடு அரசருடனேயே செல்ல வேண்டுமென்ற மரபை சுட்டிக்காட்டி காஸ்கனிக்குத் தம்மால் செல்ல முடியாது என்று மறுத்துவிட்டார். காஸ்கனிக்கு அரசரும் வருவாராயின் தாம் படையை நடத்தி

செல்லுவதாக கூறினர். இதனைக் கேட்ட மன்னர் கோபங்கொண்டு 'பிஹாடு பிரபு அவர்களே! நீங்களே படையை நடத்திச் செல்ல வேண்டும்; இல்லையேல் உம்மை தூக்கிவிடுவேன்' என்று கூறிய அரசருக்கு என்னால் போகவும் முடியாது; சாகவும் முடியாது' என்று அமைதியாக பிஹாடு பதில் உரைத்தார். இந் நிகழ்ச்சியால் இப் பாராளுமன்றம் குழப்பத்தில் முடிவுற்றது. மீண்டும் ஒரு முறை பிரபுக்கள் போருக்கு எழுவது திண்ணம் போன்ற சூழ்நிலை நாட்டில் நிலவியது.

எட்வர்டு சட்டத்திற்குப் புறம்பாக பல்வேறு வரிகளை விதித்து வருமானத்தை வசூலித்துக் கொண்டு பிளாண்டர்ஸை நோக்கிக் கப்பலில் புறப்பட்டார். அரசர் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரி விதித்ததைக் கண்டிக்கவேண்டுமென பிரபுக்கள் தீர்மானித்து அவருடைய மகன் கார்னர்வான் இளவரசரை வற்புறுத்தி கி. பி 1215ஆம் ஆண்டின் ஜான் மன்னரால் வெளியிடப்பட்ட மகா சாசனத்தை உறுதி செய்து மீண்டும் வெளியிட வைத்தனர். கி. பி. 1215ஆம் ஆண்டுக்கும் கி. பி. 1297 ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட 82 ஆண்டு காலத்தில் பாராளுமன்றம் வெகுவாக வளர்ச்சியுற்று மகாசாசனத்தின் காவலனாக மாறியது. இதனை அறிந்த அரசர் பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வசூலித்த வரிகளை துறந்துவிட 'ஊர்ஜிதம்' செய்தது வரலாற்று சிறப்பு மிக்க தாகும். இதனை அரசர் கெண்டிலிருந்தபோது உறுதி செய்தார்.

### ஈ. எட்வர்டின் வெளிநாட்டுக் கொள்கை

**பிரான்சு :-** பிரான்சில் தமக்கிருந்த அக்குவிடெயின் பகுதிகளுக்காக எட்வர்டு தம் ஆட்சியின் தொடக்க காலத்தில் பிரெஞ்சு அரசர்களுக்கு இறைவணக்கம் செலுத்தி வந்தார். பிரெஞ்சு அரசர் எட்வர்டின் உறவினரும் கூட. கி. பி. 1279ஆம் ஆண்டு அவர் மனைவியின் சீதனமாக சோம் (Somme) ஆற்று கழிமுகப் பிரதேசம் கிடைத்த போது, ஃபிரான்சின் வடபகுதியில் இங்கிலாந்துக்கு மற்றொரு வற்றிடம் கிடைத்தது. கி.பி. 1297-ல் செய்யப்பட்ட ஆமியன்ஸ் உடன்படிக்கை இரு அரசர்களுக்கு இடையே திருப்திகரமான முடிவை உண்டாக்கியிருந்தது. அதனால் அடுத்த பத்தாண்டு காலத்தில் போர் ஏற்படாவிடினும், இருநாடுகளுக்குமிடையே அரசியல் சச்சரவுகள் இருந்து வந்தன. அப்போது புதியதாகப் பதவியேற்ற பிரெஞ்சு மன்னர் நான்காம் பிலிப்புக்கு எட்வர்டு இறைவணக்கம் செலுத்தினர். ஐரோப்பா வில் சமாதானத்தைச் செய்து கொண்டு, சிலுவைப் போரில் ஈடுபட அரசர் தம்மைத் தயார் செய்து கொண்டிருந்தார். போர்டோவில் வாணிகத்தைப் பெருக்கி தமக்குச் சொந்தமான பகுதிகளில் புதிய

நகரங்களை நிர்ணயிக்கவும் அவர் முயன்றார். அதனால் ஃபிரான்சு மன்னருடன் அவர் செய்து கொண்ட உடன்படிக்கை நீண்ட காலம் நீடிக்கவில்லை. எட்வர்டினால் தென்பாகத்தில் வளர்க்கப் பெற்ற வாணிபம் வடபாகத்துடன் போரை மூட்டக் காரணமா யிற்று. காஸ்கனிக் கடற்படையினரும், நார்மண்டி கடற்படை யினரும் ஆங்கிலக் கால்வாயில் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டனர். ஃபிரெஞ்சு கப்பல்கள் கைப்பற்றப்பட்டதற்கு ஈடு செய்யுமாறு பிலிப், எட்வர்டை கூறினார். தவறு செய்தவர்கள் எல்லோரும் ஆங்கில நீதிமன்றங்களில் விசாரிக்கப் பெற்று உரிய தண்டனையைப் பெறுவர் என்று ஆங்கில அரசர் பதில் விடுத்தார். பிலிப் மன்னர் அவரை பாரிஸ் மாநகருக்கு வரவேண்டுமென்று கோரிக்கையை விடுத்து அது நிராகரிக்கப்பட்ட போது அக்குவி டெயின் மாநிலந்தைப் பறித்துக்கொண்டதாக பிலிப் அறிவித்தார். வேண்டுமென்றே காலம் தாழ்த்தும் நோக்குடன் பேச்சுவார்க்கில் ஈடுபட்ட பிலிப் நயவஞ்சகமாகப் பல்வேறு கோட்டைகளை கைப் பற்றியதுடன் காஸ்கனி முழுவதையும் பிடித்துக் கொண்டார். பிலிப்புக்கு எதிராக ஐரோப்பிய கூட்டுறவு ஒன்றை எட்வர்டு உருவாக்கினார். ஸ்காட்லாந்திலும், வேல்ஸிலும் மூண்ட கலவரங் களினாலும், இங்கிலாந்தில் உள்நாட்டில் எழுந்த இடர்பாடுகளா லும்,அவர் ஃபிரெஞ்சிய போரில் முழுமனதுடன் ஈடுபடாதவாறு குறிக்கிட்டனர். இருப்பினும் பல்லாண்டுகள் போர் நடை பெற்றது.வெற்றி பண்முறை கைமாறியது. ஃபிரான்சு ஸ்காட்டியர் களுக்கு இத் தருணத்தில் தொடர்ந்து உதவி செய்தது. எட்வர்டு பிளாமியருடன் ஃபிரான்சுக்கு எதிராகச் சேர்ந்துக் கொண்டார். கி.பி.1299ஆம் ஆண்டில்இருதரப்பாரும் போர் நிறுத்தம்செய்தனர். இரண்டாம் தாரமாக பிலிப்பின் சகோதரி மார்க்கரெட் என்பாளை எட்வர்ட் மணந்து கொண்டார். கி. பி. 1303ஆம் ஆண்டின் மே மாதம் 20ஆம் நாள் ஏற்பட்ட உடன்படிக்கைப்படி ஆங்கில அரசர் காஸ்கனியை திரும்பப் பெற்றார்.

ஸ்காட்லாந்து வாரிசு உரிமை:- எட்வர்டு ஸ்காட்லாந்து விவகாரத்தில் மிகுந்த அக்கறை காட்டினார். கி. பி. 1286ஆம் ஆண்டில் பண்டைய ஸ்காட்டிய அரச வம்சத்தை சார்ந்த கடைசி அரசரான மூன்றாம் அலெக்சாந்தர் காலமானார். அவ ருடைய வாரிசாக இருந்தவர் அவருடைய பேத்தி ஒருத்தி தான். அவள் அலெக்சாண்டரின் மகள். மார்க்கரெட்டுக்கும், நார்வே யின் மன்னர் எரிக் என்பவருக்கும் பிறந்தவள். அவள் ஸ்காட்லாந் துக்கு வரவேண்டுமென்றும் இங்கிலாந்து இவளரசர் எட்வர்டு (அரசரின் மூத்தமகன்) அவளை திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்றும் ஏற்பாடாயிற்று. ஆனால் அவள் நார்வேயிலி

ருந்து ஸ்காட்டிற்கு வரும் வழியில் கி. பி. 1290ஆம் ஆண்டில் இறந்து போனுள். இப்பொழுது ஸ்காட்லாந்தின் அரியணை யேறும் உரிமை பெற்றவர் ஒருவரும் இல்லை. ஸ்காட்லாந்தின் அரசுரிமை வாரிசாகப் பலர் தங்களைக் கூறிக்கொண்டு போட்டி யிட்டனர். போட்டிபோட்ட அனைவரும் முதலாம் எட்வர்டைத் தலைவராக ஏற்றுக்கொண்டு அவருடைய முடிவின்படி நடப்பதாகத் தீர்மானித்தனர். அப்போது இங்கிலாந்துக்கு ஸ்காட்லாந்து மீது இருந்த உரிமை முடிவானதாகவும், சந்தேகமற்றதாகவும் இருக்க வில்லை. ஸ்காட்லாந்தின் உரிமை 'வல்லவன் வகுத்ததே வாய்க்கால்' என்றபடி போட்டியிட்ட அரசர்களின் சக்தி சாமர்த்தி யத்தை பொருத்ததாக இருந்தது. போட்டியிட்ட அனைவரை யும் சட்டப்படி தகுதியுள்ளவர்கள் எனக் கருதி எட்வர்ட் தம்மை நடுவர்என்ற நிலையில் வைத்து எல்லா தரப்பு வாதங்களையும் ஆய்ந் தார். ஸ்காட்லாந்தின் அரியணைக்கு ஹேஸ்டிங்ஸ் பிரபுவான ஹென்றி ஜான்பால்யால், ராபர்ட் புரூஸ் ஆகிய மூவர் போட்டியிட் டனர். கி. பி. 1292ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் நாள் ஸ்காட்லாந் தின் அரசுரிமை ஜான்பால்யாலைச் சேரவேண்டுமென எட்வர்டு அறிவித்தார். தாம் பெற்ற அரசுரிமைக்கு நன்றி செலுத்தும் வகை யாக அவர் எட்வர்டுக்கு இறைவணக்கம் செலுத்தினர். இங்கி லாந்தின் அடிமையாக ஜான்பால்யால் ஸ்காட்லாந்தைச் சிறிது காலம் ஆண்டார். ஆனுல் ஃபிரெஞ்சியப் போரும், எட்வர்டின் பொருளாதார நெருக்கடிகளும் நாட்டில் பெரும் கலவரத்தை மூட்டக் காரணங்களாயின.

**எட்வர்டு மன்னரின் பொருளாதார நெருக்கடி:-** பொருள்பற்றுக் குறையினுல் எட்வர்டு சொல்லொண்ணு துயர்உற்றுர். இப்பொருள் பற்றுக்குறை அவர்ஆட்சிக்கு வந்ததிலிருந்தே இருந்தது. சிலுவை போரினுலும் தந்தையாரின் கடன்கள் காரணமாகவும் பொருள் பற் றுக்குறை அவர் ஆட்சியின் ஆரம்பத்தில் ஏற்பட்டது. தேவைக்கு அதிகமாக பொருள் கிட்டாவிடினும், சிலகாலம் அவர் சமாளித் தார். எனினும் அவர் அக்கிரமமான வரிவிதிப்புகளில் ஈடுபடவில்லை. யூதர்கள் அரசருக்குத் தேவையான பொருள் உதவி செய்து வந் தார்கள். அவர்களை மக்களின் கருத்துக்கு செவிசாய்த்து விரட்டி அடித்ததால் அரசருக்கு பொருள் கொடுக்க ஆள் இல்லை. இத் தருணத்தில் மேலும் பல தொல்லைகள் நேரலாயின. அவரது அன்புக்குப் பாத்திரமான மனைவி காஸ்டையில் இளவரசி இலியனுர் கி. பி. 1290 ஆம் ஆண்டு காலமானுர். இலியனுரை 'அமைதிக் காவலர்' என்று மக்கள் அழைத்தனர். பிலிப்பு கிர்க்பியும் அதே ஆண்டில் பொருள் காப்பாளராக இருந்து காலமானுர். கி. பி. 1292 ஆம் ஆண்டில் தலைசிறந்த வல்லுனரான பர்னெல் காலமானுர்.

கி. பி. 1294 ஆம் ஆண்டில் வேல்ஸில் பெரியதொரு கலகம் மூண்டது. வேல்ஸியருடன் ஃபிரான்சு மன்னர் பிலிப் உறவு கொண்டிருந்ததுடன், ஸ்காட்லாந்து மன்னராக இருந்த பால்யாலே யும் தம்முடன் இணைந்து கொள்ளுமாறு தூண்டினார். எட்வர்டு மன்னர் ஸ்காட்லாந்து உள்நாட்டு விவகாரத்தில் தலையிட்டதை அடுத்து அவருடைய அதிகாரத்தைப் புறக்கணிக்க முற்பட்டார். ஸ்காட்டிய அரசர். ஸ்காட்டிய வழக்குகளைத் தீர்த்துக் கொள்ள ஸ்காட்டியரை வெஸ்ட்மின்ஸ்டர் நீதிமன்றத்துக்கு வருமாறு எட்வர்டு அழைத்தார். இதன் விளைவாக அரசர் ஸ்காட்லாந்தின் உள்நாட்டின் விவகாரத்தில் தலையிட்டதாகக் குற்றம் சுமத்தப் பட்டார்.

## உ. ஸ்காட்டியப் போர்

இப்படிப்பட்ட இடர்பாடுகளின் இடையில்தான் கி. பி. 1295 ஆம் ஆண்டில் எட்வர்டு தம்முடைய மாதிரிப் பாராளு மன்றத்தைக் கூட்டினார். நாட்டிற்கு ஏற்பட்ட இந்த நெருக்கடியில் பொருளுதவியும், அறிவுரையும் அளிக்குமாறு எட்வர்டு தம் மக்களைக் கேட்டுக் கொண்டார். அரசருக்கு உதவி கிட்டியது. திருச்சபையினர், பிரபுக்கள், நைட்டுகள், நகரவாசிகள், ஆகி யோர் தாராளமாக வரிகளின் மூலம் ஏராளமான பொருள்களை வாரி வழங்கினர். தங்கள் வருமானத்தில் பதினொன்றிலொரு பங்கிலிருந்து ஏழிலொரு பங்கு வரை மக்கள் நிதியாக வழங்கினர். இப்பொருளுதவியுடன் தம்மை எதிர்த்திருந்த அபாயங்களை சாட எட்வர்டு ஆயத்தமானார். காஸ்கனிக்கும் பெரும்படை அனுப்பினார். பின்னர் அவர் ஸ்காட்டியரைச் சந்திக்கத் தயாரானார். தம்முடைய பிரபுக்களுடன் அவரை கி. பி. 1295 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 1 ஆம் தேதி நியூகாசில் என்ற நகரில் சந்திக்க ஏற்பாடுகள் நடந்தன. அங்கு நடந்த பாராளுமன்றக் கூட்டத்திற்கு ஸ்காட்டிய அரசர் பாலியால் வரவேண்டுமென முதலில் எட்வர்டு சொன்னார். ஆனால் அவர்கள் அரசரின் கோரிக்கையை மதிக்கவில்லை, எனவே அவர்களுக்கெதிராக படையுடன் செல்வதென முடிவு செய்தார் அரசர். இதற்கிடையில் ஸ்காட்டிய படை கம்பர்லாந்தின் மீது நாற்பதினாயிரம் வீரர் கொண்ட படைகளுடன் படையெடுத்து அதனைச் சுற்றியிருந்த பிரதேசங்களைச் சூறையாடியது. எண்ணற்ற கொடுமைகளை செய்தனர். வலிவுற்றோரைக் கைப்பற்றத் தவறிய ஸ்காட்டியர் வலிவற்றோர், நோயுற்றோர், பச்சிளங்குழந்தைகள் என்று பாகுபடுத்தாது பழி வாங்கினர். மூன்று வயது குழந்தைகளை ஈட்டியால் குத்தி வானத்தில் வீசினர். திருச்சபைகள் தீக்கிரை யாயின. மாதர்களைக் கொன்று குவித்த அந்தப் பாவிகள் அவர்களை

இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதாகக் கூறினர். கார்லைல் நகர மக்கள் மட்டும் ஸ்காட்டியப் படைகளுக்குப் பலத்த எதிர்ப்புக் காட்டி அவர்களை முன்னேறாமல் தடுத்தனர்.

**ஸ்காட்லாந்து கைப்பற்றப்படல்:-** எட்வர்டு ஸ்காட்லாந்தை கைப்பற்ற தமது படையுடன் சென்றார். பெர்விக் என்ற நகரம் எளிதாக அவர் கைவசம் ஆனது. டன்பார்க் கோட்டை அரசருக் கெதிராக நின்றது. அக் கோட்டையின் சீமாட்டி எட்வர்டை எதிர்த்தாள். ஆனால் அவர் கணவரோ எட்வர்ட் படையுடன் இருந்தார். டன்பார்க் கோட்டையைக் காக்க ஸ்காட்டியர் பெரும் படையொன்றை அனுப்பினர். ஆனால் எட்வர்டின் தளபதிகள் வெற்றி பெற்றனர். ஏப்ரல் 27ஆம் நாள் 1296 ஆம் ஆண்டில் அக் கோட்டை எட்வர்டு வசம் ஆனது. மூன்று ஸ்காட்டிய ஏர்ல் பிரபுக்கள், நான்கு பாரன் பிரபுக்கள், எழுபது நைட்வீரர்கள் கைது செய்யப்பட்டனர். அங்கிருந்து புறப்பட்ட எட்வர்டு ராக்ஸ் பரோ, டம்பார்ட்டன், ஜட்பரோ ஆகிய இடங்களைக் கைப்பற்றினர். எட்டு நாட்களின் முற்றுகைக்குப் பின்னர் எடின்பரோ வீழ்ச்சி யுற்றது. அதனையடுத்து ஸ்டாரிலிஸ்பெர்த் ஆகிய இடங்கள் பிடி பட்டன. ஜூலை 10ஆம் நாள் பால்யால் பிரிசின் (Brechin) என்ற ஊரில் எட்வர்டிடம் கீழ்ப்படிந்தனர். நன்றி கெட்டதனமாக நடந் துக் கொண்டதை ஒப்புக் கொண்ட பால்யால் ஸ்காட்லாந்தையும் எட்வர்டுக்குக் கொடுத்துவிட வேண்டியவரானார். பெர்விக்கில் ஆகஸ்டுமாதம் 28ஆம் நாள் கூடிய பாராளுமன்றத்தில் ஸ்காட்டிய பாரன் பிரபுக்கள் விசுவாச பிரமாணம் எடுத்துக் கொண்டதோடு, பிரான்சுடன் தமக்கு இருந்த உறவையும் துண்டித்துக் கொள்ள ஒப்புக் கொண்டனர். எடின்பரோ, ராக்ஸ்பரோ, ஜட்பரோ, பெர்விக் போன்ற இடங்களை எட்வர்ட் தம் கையிலேயே வைத்துக் கொண்டு பாரன் பிரபுவை ஸ்காட்லாந்தின் காவலராக நியமித் தார். அரசர் ஒருவரையும் பழிவாங்கவில்லை. பாலியலும் மூன்று ஆண்டுகள் கௌரவமாக சிறையில் நடத்தப்பட்டார். பின்னர் நார்மண்டியிலிருந்த தம் பண்ணைகளுக்குச் சென்றுவிட அவர் அனுமதிக்கப்பட்டார். பாரன் பிரபுக்களையும் அரசர் மன்னித்து விட்டார். இங்கிலாந்து திரும்பும் போது கல்லால் ஆன ஸ்காட்டி யரின் சிம்மாசனத்தைத் தம்முடன் கொண்டு வந்தார். அதனை இன்றும் வெஸ்ட்மின்ஸ்டர் திருக்கோயிலில் காணலாம். இச்சிம்மா சனத்தின் மீது அமர்ந்து ஆங்கில அரசர்கள் முடிசூட்டிக் கொண் டார்கள். இறுதியில் ஸ்காட்லாந்து பணிந்து விட்டது.

**திருச்சபையுடன் சச்சரவு :-** எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் போனிபேஸ் (Boniface VIII) என்பவர் அப்போது போப்பாண்டவ

ராகத் திகழ்ந்தார். போப்பாண்டவரின் அனுமதியின்றி திருச்சபை சொத்துக்களுக்கு வரி ஒன்றையும் கொடுக்கக் கூடாது என்று அவர் ஆணை ஒன்றின் மூலம் தடுத்திருந்தார். வேறு சில நடவடிக்கைகளின் பேரில் ஏற்கனவே எட்வர்டின் மேல் திருச்சபையினர் கோபமுற்று இருந்தனர். அரசருடைய அதிகாரத்தை குறைகூறும் திருச்சபை விதிகள் சிலவற்றை விளக்கிக்கூறவேண்டுமென எட்வர்ட் ஆர்ச் பிஷப்பு பெக்ஹாமை வற்புறுத்தியிருந்தார். மரித்த மான்ய சட்டத்தால் (Statute of Martmain) திருச்சபைக்கு மானியமாக நிலம் வழங்கப்படும் அதிகாரத்தை அவர் ஏற்கனவே பெற்றிருந்தார். பெரும் தொகைகளை திருச்சபை குருமார்கள் கொடுக்க வேண்டுமென அரசர் கூறியிருந்தார். கி. பி. 1294ஆம் ஆண்டில் இத்தொகை குருமார்களின் வருமானத்தில் பாதியாக இருந்தது என்றால் திருச்சபையின் குருமார்களின் கோபத்திற்கான காரணத்தை நம்மால் அறியமுடியும். 1295-ஆம் ஆண்டில் கூடிய தேசிய பாராளுமன்றத்தில் (மாதிரி பாராளுமன்றத்தில்) பங்குகொள்ள திருச்சபையினர் தொடக்கத்தில் ஆர்வம் காட்டாதது அதனால்தான். போப்பாண்டவரின் ஆணை திருச்சபையுடன் அரசரின் நேரிடையான மோதலுக்கு வழி வகுத்தது. கி. பி. 1294ஆம் ஆண்டில் ஆர்ச்பிஷப்பான வின்செல்சி (Winchelsey) மேலும் மானியமாக பொருள் கொடுக்க அனுமதி மறுத்தார். இதனை அடுத்து அரசரும் நடவடிக்கைகளை மேற்கொண்டார். தாம் கேட்ட பொருளை மானியமாக வழங்கத் தவறிய திருச்சபை குருமார்கள் அனைவரும் நாடு கடத்தப்படுவார் என்று அரசர் அறிவித்தார். இத்தருணத்தில் ஏனைய வகுப்பைச் சார்ந்தவர்களும் பெரும்பாலும் அரசருக்கு எதிராக நின்றனர். தாம் அனுபவிக்கும் சலுகைகளையும் உரிமைகளையும் விசாரித்து கட்டுப்படுத்த எண்ணிய அரசரின் நடவடிக்கைகளை பிரபுக்கள் எதிர்த்தனர் சுங்கவரிகளை உயர்த்தியதை வணிகர்கள் கண்டித்தனர். குறிப்பாக, உரோம (கம்பளம்) ஏற்றுமதிக்கு அதிக வரியைக் கட்டவேண்டியவர்களானார்கள். இதனால் வணிகர்களும் அரசரை எதிர்த்தனர்.

**பிரபுக்களுடன் சச்சரவு:-** கி. பி. 1297ஆம் ஆண்டில் அரசர் பிரபுக்களை அழைத்தார். திருச்சபையினரை நாட்டை விட்டு வெளியேற்றியதாலும் காமன்ஸ் பிரதிநிதிகளை அழைக்காததாலும் அவருடைய மாதிரி பாராளுமன்றம் உடைந்து போய் விட்டதோ என்று எண்ணப்படலாயிற்று. காஸ்கனியை திரும்பப்பெற பிரபுக்கள் தமக்கு உதவ வேண்டுமென எட்வர்டு கூறினார். வடக்கிலிருந்து பிரான்ஸைத் தாக்க அரசரே பிளாண்டர்ஸ்க்குச் சென்றார். நார்

போக் பிரபு பீகாட் அரசருடன் செல்ல மறுத்ததை ஏற்கனவே அறிந்திருக்கிறோம். 1207 ஆம் ஆண்டு ஜூலையில் அனைவர் மீது வரி ஒன்று போடப்பட்டபோது பிரபுக்களுடன் போர் செய்ய வேண்டிய நிலைமாறி சமாதானம் ஏற்படுவதுபோன்ற நிலை நிலவியது திருச்சபையினர் தாம் விரும்பிய தொகையை மானியமாக வழங்கப் போப்பாண்டவர் அனுமதித்தார். அரசருக்கும் திருச்சபைக்கும் உடன்பாடு ஏற்பட்டது. அதற்கு பின்னர் அரசர் பிளாண்டர்ஸ் சென்றார். அரசர் இல்லாத சமயத்தில் அவருடைய மகன் எட்வர்டு மகாசாஸனத்தை ஊர்ஜிதம் செய்துள்ளதையும் அறிந்துள்ளீர்கள். இதை சாசன ஊர்ஜிதம் என்பர் (Confirmation of the Charter)ஆங்கில அரசியல் சாஸனங்களில் இது முக்கியமானதாக கருதப்படுகிறது. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி இனி அரசர் வரிவிதிக்க மாட்டார் என்பதை இச்சாசனம் மீண்டும் ஊர்ஜிதம் செய்தது. எட்வர்ட் மன்னர் இதனை ஏற்றுக் கொண்டார். கி. பி. 1300 ஆம் ஆண்டு வந்த ஆர்டிகுலி சூப்பர் கார்டாஸ் (Articuil Super Cartas) என்ற சட்டம் அரசு அதிகாரிகளின் அதிகாரத்தை கட்டுப்படுத்தியது. அது மற்றொரு முறை காடுகள் பற்றிய தணிக்கையை மேற்கொள்ள வழி செய்தது. கி. பி. 1301 ஆம் ஆண்டில் சாஸனங்கள் புதிப்பிக்கப் பெற்று பல சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. பாராளுமன்றத்தைத் தவிர பொருள்சேகரிக்க அரசருக்கு பலவழிகள் இருந்த போதிலும் தாம் கொடுத்த வாக்குறுதியை மீறாமல் தம் அதிகாரத்துக்கு உட்பட்டு அளவோடுபொருள் சேகரிக்கும் நேர்மையைப்பெற்றிருந்தார். இருப்பினும்ஆர்ச்பிஷப்பு பாரன் பிரபுக்களும் அவரை சந்தேகப் பார்வையுடன் நோக்கினர். அவர்களின் அவநம்பிக்கையுடனேயும், எதிர்ப்புடனேயும் அரசரின் இறுதி ஆண்டுகள் இடர்பாடுகளில் கழிந்தன.

எட்வர்ட் தம் கடைசி ஆண்டுகளிலும் ஸ்காட்லாந்துடன் மீண்டும் போர் செய்ய வேண்டியவர் ஆனார். வேல்ஸ் மெதுவாக எட்வர்டுக்கு கீழ்ப்படிய சம்மதித்த தம் மகன் மூத்த எட்வர்டை வேல்ஸின் இளவரசராக்கினார். கி.பி. 1296ஆம் ஆண்டு போருக்கு பின்னரும் ஸ்காட்டியர் அமைதியாக வாழவில்லை. எட்வர்டின் அமைச்சரான வாரன் பிரபுவை காலவேயைச் (Galloway)சார்ந்த வில்லியம் வால்லஸ் என்பவர் தாக்கி அவரை கி.பி. 1297ஆம் ஆண்டு செப்டம்பர் 10ஆம் நாள் ஸ்டர்லிங் என்னுமிடத்தில் படு தோல்வி அடையச் செய்தார். சிறிது காலம் வால்லஸ் ஸ்காட்லாந்து அரசர் ஆனார். ஸ்டர்லிங்கில் பெற்ற வெற்றிக்குப் பின்னர் ஸ்காட்லாந்து வால்லஸின் வசம் சிக்கிக் கொண்டது. அவர் ஒரு கொடுங்கோலர். அவர் இங்கிலாந்தின் மீது படையெடுத்தபோது ஆண் என்றும் பெண் என்றும் பாராது எல்லா வயதினரையும் பழி

வாங்கினுர். ஆங்கில எல்லை பிரபுக்கள் அதே போன்று ஸ்காட் லாந்திய கிராமங்களை பதிலுக்குச் செய்தனர். வாலஸின் படை யெடுப்பை முறியடிக்க உறுதி பூண்டார் எட்வர்டு. வாலஸை 'ஸ்காட்லாந்து கவர்னர்' என்று எட்வர்டுகூறினுர். எட்வர்டு மன் னர்வாலஸை பழிக்கு பழிவாங்க யார்க்கில்பெரும் பனடயொன்றை திரட்டினுர். இருப்பினும் படைகள் உடனே புறப்பட முடியாமல் ஓராண்டு தாமதம் ஏற்பட்டது. இவ்விடைவெளியில் ஃபிரான்சுடன் எட்வர்டு உடன்படிக்கை செய்து கொண்டார். எட்வர்டின் படை வால்லஸை பால்கிர்க் (Falkirk) காடுகள் வரை துரத்திச் சென்றது. கி பி 1298ஆம் ஆண்டு ஜூலைமாதம் 22ஆம் நாள் வாலஸைப் படுதோல்வியுறச்செய்து மாபெரும் வெற்றியொன்றை எட்வர்டு பெற்றுர். 'கவர்னர்' பதவியை துறந்து விட்டு நாட்டை விட்டே ஓடிப்போனுர் வால்லஸ்.

**ஸ்காட்லாந்தில் கலகம்:-** வாலல்ஸுக்குப் பிறகும் ஸ்காட் லாந்து எட்வர்டுக்குப் பணிவது எளிதாகப் படவில்லை. ஜான் பால்யாலே தம் அரசர் என்று ஸ்காட்டியர் கூறிக் கொண்டனர். ஜான் பால்யாலே எட்வர்டு சிறைப்பிடித்தார். பால்யாலின் பிரதி நிதியாக மூவரை ஸ்காட்டியர் நியமித்திருந்தனர். எட்வர்டுக்கும் ஸ்காட்டியருக்கும் தீர்மானம் முடிவு ஏற்படாமலேயே போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது. போப்பாண்டவர் எட்டாம் பானிருபஸ் ஸ்காட்லாந்து விவகாரத்தில் குறுக்கிட்டு ஜான் பால்யாலே ஸ்காட்லாந்தின் அரசர் என அறிவித்தார். ஆங்கில பாராளுமன்றம் போப்பாண்டவரின் தீர்ப்பு நியாயமற்றது என்று கூறியதுடன் எட்வர்டுக்கே ஸ்காட்லாந்தை ஆளும் உரிமை உண்டு என்று கி. பி. 1301 ஆம் ஆண்டு கூறியது. பல்லாண்டுகள் போர் தொடர்ந்தது. வெற்றியும் பன்முறை கைமாறியது. கி. பி. 1303 ஆம் ஆண்டில் இறுதியாக எட்வர்டு ஸ்காட்லாந்து முழு வதையும் வெற்றி கண்டதுடன் பால்யாலின் பிரதிநிதிகளும் அவருக்குக் கீழ்ப்படிய ஒப்புக்கொண்டனர். கி. பி. 1304 ஆம் ஆண்டில் ஸ்டர்லிங்கை அரசர் கைப்பற்றிய பின்னர் ஸ்காட் லாந்தை ஆளும் திட்டம் ஒன்றைத் தீட்டினுர். அதன்படி ஸ்காட்டிய நீதிபதிகளுடன் ஆங்கில நீதிபதிகளும் சேர்ந்து பணி யாற்ற வேண்டுமென்றும், ஸ்காட்டிய பாராளுமன்றம் ஆண்டு தோறும் பிரதிநிதிகளை ஆங்கில பாராளுமன்றத்திற்கு அனுப்ப வேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று. ஸ்காட்லாந்து இரண்டாம் முறையாக ஆங்கில அரசருக்குக் கீழ்ப்படிந்தது. அப்போது அரசரை எதிர்க்கத் துணிந்த தலைவர்கள் யாரும் இல்லை. வால்லஸ் நாடு கடத்தப்பட்டார். அவரும் கீழ்ப்படிந்துவிட

விழைந்தார். அரசரும் வால்லஸின் சரணுகதியை எதிர் பார்த்தார் ஃபிரான்சிலிருந்து ஸ்காட்லாந்து திரும்பிய வாலஸ் எட்வர்டிடம் சரணடைய மனமன்றி அங்கும்இங்கும் ஒளிந்து திரிய லானுர். வால்லஸ் கைப்பற்றப்பட்டு லண்டனில் சிரச்சேதம் செய் யப்பட்டார். கொலை, கொள்ளை, வஞ்சகம் ஆகிய குற்றங்களுக்காக அவர் கழுவேற்றப்பட்டதாக எட்வர்டு அறிவித்தார்.

### ஊ. எட்வர்டின் கடைசி படையெடுப்புகள்:-

ஸ்காட்லாந்தில் இப்போது அமைதி நிலவியதாக எட்வர்டு நம்பினுர். எனினும் அது நீண்டநாட்கள் நீடிக்கவில்லை கி. பி. 1305 ஆம் ஆண்டில் ஜான்பால்யாலை எதிர்த்த ராபர்ட்புருஸின் பெரரான ராபர்ட் புருஸ் என்பவர் அரசபிரதிநிதிகளில் ஒருவரைக் கொன்றுவிட்டு ஸ்காட்லாந்தின் அரசராக முடி சூட்டிக் கொண்டு ஆங்கில அரசருக்கு எதிராக கலகம் செய்தார். தம் படை தளபதி யாக பெம்ப்ரோக் பிரபுவான எய்மர் - டி - வாலன்ஸ் (Amer-de Valence) என்பவருடன் மீண்டும் வடக்கு நோக்கி படை யெடுத்தார். எட்வர்டு சென்ற இடமெல்லாம் வெற்றிவாகைசூடிய அரசரால் ராபர்ட் புருஸை கைப்பற்ற முடியவில்லை. அடர்ந்த காடுகள் அடங்கிய வடபகுதிக்கு ராபர்ட்புருஸ் ஓடிச்சென்றுர், தம் படைகள் அனைத்தையும் திரட்டி ஸ்காட்லாந்தையே அழித்து விடும் நோக்குடன் எட்வர்டு புறப்பட்டார். படையெடுத்த அரசர் வழியில் நோயுற்றுர். கார்லைல் என்ற நகரத்தில் அவர் பல மாதங் கள் தங்க வேண்டியவர் ஆனுர். மீண்டும் முன்னேறிச் செல்ல முயன்றபோது பரோ- ஆண் -சான்ட்ஸ் (Burgh-on-Sands) என்னு மிடத்தில் கி.பி.1307 ஆம் ஆண்டு ஜுலை 7 ஆம் நாள் எட்வர்டு மன் னர் காலமானுர். எட்வர்டு வேல்ஸில் நினைத்ததை முடித்ததை போல ஸ்காட்லாந்தில் இயலவில்லை. அதற்குக் காரணம் எட்வர்டு ஸ்காட்லாந்தின் தேசபக்தியை அறிந்து கொள்ளவில்லை. அதனுல் தான்ஸ்காட்லாந்தில் அடிக்கடி தொல்லைகள் வந்து கொண்டே யிருந்தன.

**முதலாம் எட்வர்ட் சிறந்த மன்னர் என்பதற்குரிய காரணங்கள்:-** முதலாவதாக சட்டத்துறையில் மிகச்சிறந்த பணிகளைச்செய்த ஆங்கில மன்னராக விளங்கினுர். அவர்இயற்றிய சட்டங்கள் ஆங்கில நாட்டின் வழக்கில் இன்றும் நிலவி வழங்கி வருகின்றன. இதனுல் இவரை மிகச்சிறந்த சட்டவல்லுநர் என்று கூறலாம். இரண்டாவதாக, எட்வர்டு சிறந்தபடைவீரராக சிலு வைப் போரிலும், வேல்ஸிய போரிலும்ஸ்காட்லாந்துடன் செய்த போரிலும் புதியதாக வில்எய்தல் (Archery) முறையிலும், தம்மை

சிறந்த படைவீரன் என்பதை நிரூபித்தார். மூன்ருவதாக, அவர் சிறந்த நாட்டுமகன் என்பதை நிரூபிக்க அவர் நீதித்துறையை விரிவுபடுத்தி ஆற்றிய பணிகளும், நாட்டின் வருவாயை நிர்ண யிக்க 'வருவாய்காப்பகம்' (Court of Exchequer) என்பதனையும் பொது மக்களின் குறைபாடுகளைச் செவிமடுக்க (The court of Royal Pleas for litigation) என்னும் அமைப்பையும் ஏற்படுத்தி ஞர். அவரது வேல்ஸிலும் ஸ்காட்லாந்திலும் செய்த தொண்டு கள் மிகச் சிறந்ததாக விளங்கின. (ஸ்காட்லாந்து இறுதியில் அவருக்கு தோல்வியையளித்தாலும் அவரது பணிகள் சிறந்த தாகும்). அவர் மாதிரிபாராளுமன்றத்தைக் கூட்டி அதன்கருத்தை தேசிய பிரச்சனைகளுக்கு அறிய வேண்டும் என்னும் கொள்கை யினை உருவாக்கியது சாலச் சிறந்ததாகும். மேலேகூறிய கார ணங்கள் யாவும் அவரை மிகச் சிறந்த அரசர் என்பதை பறை சாற்றும்.

மதிப்பீடு:- எட்வர்டு சிறந்த போர்வீரர்; மாபெரும் சட்ட வல்லுனர்; சீரிய பணியாளர்; பணிபுரிந்துக்கொண்டே மறைந்த மாமேதையவர். எட்வர்டு மன்னர் ஆட்சிகாலத்தில் ஆங்கில அரசியல் அமைப்பு வெகுவாக மாற்றப்பட்டது. அடுத்த 200 ஆண்டுகளிலும் அத்தகைய மாறுதல் ஏற்படவில்லை. தம் மக்களுக்குச் செய்ய விரும்பியதை அவர் முழுமனதுடன் செய்ய முனைந்தார். ஆனுல் ஒருவராலும், என்றும் அழிக்க முடியாத அடையாளச் சின்னங்களை அவர்விட்டுச் சென்ருர். அவர் குற்றம் செய்தார். அதிலும் அவர் நல்லவராகவும், வல்லவராகவும் விளங்கினர். மக்களை வாட்டும் கொடுமைகள் பலவற்றை அவர் புரிந்திருந்தபோதிலும் அவர் தம்மக்களைப் பெரிதும் நேசித்தார் என்பதை மறுக்கவோ மறைக்கவோ மறக்கவோ முடியாது.

# 24. இரண்டாம் எட்வர்டு மன்னரின் ஆட்சி (1307-1327)

முதலாம் எட்வர்டின் மகனை இரண்டாம் எட்வர்டு தாம் இருபத்து மூன்று வயது நிரம்பியவராக இருக்கும்போது பட்டத்திற்கு வந்தார். அவர் முதலாம் எட்வர்டினின்றும் முற்றிலும் மாறுபட்டவர். இங்கிலாந்தை ஆண்ட தம் மூதாதையர்களிலிருந்தும் அவர் வெகுவாக முரண்பட்டிருந்தார். எல்லா ஆஞ்சுவின் அரசர்களும்-அவர்கள் நல்லாட்சி நடத்தினும் சரி அல்லது கொடுங்கோலாட்சி புரியினும் சரி-ஆட்சி செய்வதைப் பெரிதும் விரும்பினர். ஆனல் இரண்டாம் எட்வர்டுக்கு ஆட்சி செய்யும் ஆசை கூட இல்லாது போனது குறிப்பிடத்தக்கது. நாட்டுப்புற பாரன் பிரபுவாகவோ அல்லது வர்த்தகராகவோ இருந்திருப்பின் மகிழ்ச்சியாக வாழ்ந்திருக்கக்கூடும். அரசராக இருப்பதற்கு முற்றிலும் தகுதியற்றவர்; பொருத்தமற்றவர். அவரது தந்தையாரோ இடையருது பணிபுரிவதில் இன்பம் கண்டார். ஆனல் இரண்டாம் எட்வர்டோ சும்மாயிருந்து சுகம் கண்டார். அவருடைய முன்னோர்கள் விறல் வீரர்கள்; அவரோ பலவீனர்; வீம்புக்கும் வகையற்ற தன்மைக்கும் பெயர் பெற்றிருந்தாரேயன்றி வழுவாத ஒழுக்கத்தை அவரால் கடைப்பிடிக்க முடியவில்லை. எந்தவொரு அரசரும் சோம்பலற்று வாழக்கூடாத காலத்தில் சோம்பலின் இருப்பிடமாக இருந்த இரண்டாம் எட்வர்டு அதனலேயே அழிந்தார்; சீர்குலைந்தார்.

**தந்தையைப் புறக்கணித்த தனயன்:-** தம் தந்தையாரின் இறுதிகாலக் கட்டளைகளைப் புறக்கணித்துவிட்டு ஆட்சியைத் தொடங்கினர் இரண்டாம் எட்வர்டு. முதலாம் எட்வர்டு மன்னரின் கொள்கைகளிலிருந்த சிற்சில முரண்பாடுகளின் விளைவாக அடுத்த ஐம்பது ஆண்டுகளில் நாட்டு மக்கள் ஆங்கில மக்களைப் பழிவாங்கினர். முதலாம் எட்வர்டு கடுமை நிறைந்த தந்தையாகக் காட்சியளித்திருந்தார். தம் மகனின் குற்றங்களுக்கான தண்டனையை விதிக்க அவர் தவறியதில்லை. வருங்காலத்தில் நல்லாட்சி நடத்த வேண்டி, அதற்கான பயிற்சிகளை வகையாகக் கொடுக்க அவர் முயன்றிருந்தார். அவரது மரணத்தால் தந்தையாரின் கட்டுப்

பாடுகளிலிருந்து விடுதலையடைந்த மகன் தந்தையாரின் நினைவை அகற்ற முயன்றார். எப்பொழுதும் கேளிக்கைகளிலும், ஆடல் பாடல்களிலும் மற்ற உல்லாசம் வழங்கும் இன்பங்களிலும் தம் பொழுதைச் செலவிட்டார். அரசு நிர்வாகத்திலும், அரச காரியங்களிலும் தமது கவனத்தைச் செலுத்தி மிகவும் வருத்தமுற்றார். ஸ்காட்டியருடன் நடத்தியப் போரைத் தீவிரமாக செயல்படுத்த வேண்டுமென முதலாம் எட்வர்டு தமது மகனுக்கு கூறியிருந்தும் அதனைப் பற்றி இரண்டாம் எட்வர்டு கவலைப்படவில்லை. முதலாம் எட்வர்டு பரோ-ஆன்-சான்ட்ஸ் (Burgh-on Sands) என்னுமிடத்தில் எய்மர்-டி-வாலன்ஸ் என்பவரிடம் படைத்தலைமையினைவிட்டு மடிந்தார். அவர் நிலைநாட்ட முடியாமல் போன ஆங்கில ஆட்சியின் ஸ்காட்லாந்தில் இரண்டாம் எட்வர்டு நிலைநாட்ட முயலவில்லை. இரண்டாம் எட்வர்டு தமது நண்பரான பியர்ஸ் கேவஸ்டனை மிகவும் விரும்பினார். பிரபுக்களை வெறுத்தார். அதனால் பல இன்னல்களுக்கு ஆளானார்.

முதலாம் எட்வர்டுக்குபின் நாட்டின் நிலை:- ஸ்காட்லாந்தில் ஆங்கில ஆட்சியின் நினைவாக இப்பொழுது முதலாம் எட்வர்டு கட்டிய திருச்சபை மட்டுமே இருந்தது. காஸ்கனி இங்கிலாந்துடன் இணைந்திருந்து உதவி செய்தாலும் இடையறாத போர்கள் அதன் பலவீனத்தை வெளிக்காட்டின. முதலாம் எட்வர்டு ஒருமைப் படுத்தப்பட்ட மத்திய ஆட்சியை நிறுவ முயன்றார். அவர் இறந்த பிறகு அவ்வெண்ணம் கை கூடாமல் நாட்டில் புரட்சிகள் மிகலாயின. ஆனால் முதலாம் எட்வர்டு செய்து இருந்த மூன்று அரும் பெரும் பணிகள்தான் நாட்டைப் பாதுகாத்து வந்தன. அம் மூன்றும் பின்வருவன: முதலாவது, எட்வர்டு மன்னர் திறமை வாய்ந்த நிர்வாகிகளை நாட்டில் ஏற்பாடு செய்திருந்தார். இரண்டாவது, அவர் அமைத்துச் சென்ற பொதுச் சட்டங்கள். மூன்றாவது, பாராளுமன்றம். இம் மூன்றும் நாட்டைக் காத்தன.

வரலாற்றில் ஒழுக்க முறைகளைத் தடை செய்ய முடியாது. வேறு எதனை வேண்டுமானாலும் தடை செய்ய அரசாங்கத்தால் முடியும். எனவே, ஒரு நாட்டின் நற்காலத்திற்கும் தேசிய குணத்திற்கும் தொடர்புகள் இருப்பது அவசியம். ஆனால், இவற்றிற்கான காரண காரியங்களைத் துணிந்துகூறுவது அவ்வளவு எளிதுஅல்ல. தேசிய குணம் இல்லாதபோது கி. பி. 1314 ஆம் ஆண்டில் பானக்பர்ன் என்ற இடத்தில் தோற்றதற்கு இங்கிலாந்தின் தேசிய குணமின்மையே காரணமாகும். நாட்டிற்கு ஏற்பட்ட தோல்வி மேலும் ஒழுக்க வீழ்ச்சியை உண்டாக்குகிறது. பொதுவாக இப்படிக் கூறுமிடத்து இங்கிலாந்தில் 14 ஆம் நூற்றாண்டில் தேசிய

குணமின்மையால் வீரர்களே அற்றுப் போயினர் என்று கூற முடியாது. நாட்டில் வீரர்களைப் போன்று உண்மையுள்ள எளிய மக்களும் அந்நூற்ருண்டில் இருக்கத்தான் செய்தார்கள். ஆனுல், நாட்டில் நிலவிய நற்குணங்கள் கவனிப்பாரற்றுக் காற்றில் பறந்தன. நாட்டு மக்கள் ஸ்கூட்டேஜ் வரியில் நிலுவை வைத்தனர். ஷெரிப்புக்கள் பற்ருக்குறை கணக்கையே காட்டி வந்தனர். இதனுல் வருவாய் குறைந்து காணப்பட்டது. போதாக்குறைக்கு இத்தாலிய பாங்கர்களிடம் மன்னர் கடன் பெற்றிருந்தார். நாட்டின் சட்ட முறையில் பல தகராறுகள் விளைந்தன. மேலும் இந்நிலையில் நாடு போரிலும் ஈடுபடலாயிற்று. கானகங்களில் கடைந்தெடுக்கப் பெற்ற வல்லாட்சி ஆங்காங்கே நிலவியது. கானக அதிகாரிகள் கள்ள வேட்டைக்காரர்களைக் கண்டதும் சுட்டுக் கொன்றனர். அரசர் முதலாம் எட்வர்டு வேட்டை விளையாட்டுக்களில் ஈடுபட்டவராதலால் கானகங்களைச் சுற்றியிருந்த பண்ணைகள் பாழாயின. பரம்பரைக் குடும்பத் தகராறுகளினுல் வேல்ஸின் எல்லைப்புறப்பகுதி நலிந்து மெலிந்தது. வடக்கே கிராமங்களைக் கொள்ளையிட்டும், தீயிட்டுக் கொளுத்தியும் ஸ்காட்டியர் கொடுத்த இன்னல்களால் வருமானம் மிகக் குறைந்தது. எட்வர்டு ஏற்படுத்திய சட்டங்கள் பொது சட்டத்தின் பெருமையைப் பரவச்செய்தன என்பது உண்மைதான். ஆனுல் அச்சட்டங்களை விழிப்புணர்ச்சியுடன் பாதுகாக்காவிடில் அவை கொடுங்கோன்மையின் கருவிகளாக அமையுமன்ரோ? அப்படி அமையின் கீழ்த்தர வேலையாட்கள் கூட அவர்களுக்கான ஊதியத்தைப் பெற இயலும். பிணத்தைப் பார்வையிடவும், கரோனர் என்ற பிணஆராய்ச்சியாளர்கள் பணம் கேட்டனர். லஞ்சம் வாங்கிக்கொண்டு ஷெரிஃப்புகள் ஜூரி பதவி வகித்தவர்களை அப்பதவியிலிருந்து விலக்கினர். மேனர் நிதிமன்ற பெய்லிப்புகள் (அமினு) பணம் பெற்றுக்கொண்டு ரீவாக மாறவேண்டிய சிறுகுடியானவர்களுக்கு விலக்களித்துப் பாதுகாத்தனர். நாட்டில் பதிவான ஒவ்வொரு ஏட்டிலும் நாட்டு மக்கள் பட்ட கொடுமைகளும் இன்னல்களும் பதிவாகியுள்ளன. ஷெரிஃப்புக்கள் தங்கள் குற்றவாளிகளை ஆழ்ந்த பள்ளங்களில் தள்ளிக்கொன்றனர். அஞ்ஞானிகளான ஏழை குடியானவர்களிடமிருந்து அபராதங்கள் பறிக்கப் பெற்றன. எண்ணத்தால் கொலை குற்றங்கள் புரிந்தோரும் தண்டனை பெருத காட்சியும் நாட்டில் நிலவியது. இவ்வாருன நிலை நிலவியதற்குக் காரணம் பலவீனமான அரசர் ஆக இரண்டாம் எட்வர்டு இருந்ததே ஆகும்.

**இரண்டாம் எட்வர்டின் இனிய நண்பர் கேவஸ்டன்:-** இரண்டாம் எட்வர்டின் இணைபிரியா நண்பர் பியர்ஸ் கேவஸ்டன்; அவர்

ஒரு காஸ்கானிய நைட்; சாதாரணமானவர், வீணர். அவர் இளம் பிராயத்திலிருந்து இரண்டாம் எட்வர்டுடன் வளர்ந்தவர். முதலாம் எட்வர்டு இந்த வீணனை நாடு கடத்தியிருந்தார். தந்தையின் மரணத்திற்குபின் இரண்டாம் எட்வர்டு கேவஸ்டனைத் திரும்பவும் அழைந்துக் கொண்டார். அவரை கார்ன்வால் பிரபுவாகவும் அரசர் நியமித்தார். பின்னர் ஃபிரெஞ்சு இளவரசி இஸபெல்லாவைத் திருமணம் செய்துகொள்ள ஃபிரான்ஸ் நாடு சென்றார் இரண்டாம் எட்வர்டு. இஸபெல்லா பிரான்ஸ் மன்னர் எழிலோன்பிலிப் (Philip the lair) என்பவரின் மகள். அரசர் நாட்டில் இல்லாதபோது கேவஸ்டனே அரசபிரதிநிதியாய் ஆட்சி புரிந்தார். கி. பி. 1308 ஆம் ஆண்டு பிப்ரவரி எட்டாம்நாள் அரசரும் அரசியாரும் வின்செஸ்டரில் முடிசூட்டப்பட்டனர். கிளஸ்டர் பிரபுவின் சகோதரியை அரசர் கேவஸ்டனுக்கு மணம் முடித்தார். மன்னரிடம் தமக்கிருந்த அபிமானத்தைக் கேவஸ்டன் வெளிப்படையாகப் பயன்படுத்தி கொண்டார். அதன் விளைவாகப் போர்டோவிலிருந்த தம் உறவினர்களை இங்கிலாந்திற்கு வரவழைத்து, கார்ன்வால் சுரங்கங்களில் அவர்களுக்குவேலைகொடுத்து அவர்கள் பெரும் ஊதியம் பெற கேவஸ்டன் வழிகாட்டினார். இன்னும் பலர் பிரான்ஸ் நாட்டில் வேலை பெற்றனர். பெரும் பிரபுக்களை நித்தையான பெயர்களிட்டுக் கேலி செய்த கேவஸ்டன் லங்காஸ்டர் பிரபுவை 'நாடகமாடி' என்றும் பெம்ப்ரோக் பிரபுவை 'யுகஜோஸப்' என்றும் வார்விக்பிரபுவை 'ஆர்டன் காட்டுக்கறுப்புநாய்' என்றும் நிந்தை மொழிகளில் கேலி செய்தார். கேவஸ்டனினால் இரண்டாம் எட்வர்டுக்குப் பிரபுக்களிடம் பகை ஏற்பட காரணம் ஆகவும் இருந்தது.

**பிரபுக்களும் இரண்டாம் எட்வர்டும்:-** முதலாம் எட்வர்டுக்குப் பின் நாட்டின் நிலையை ஓரளவு முன்னர் கூறியுள்ளோம். ஆனால் திருச்சபை பற்றி கூறவில்லை. போப்பாண்டவர் வருவாய் குறைவினால் பிரான்ஸின் கைப் பொம்மையாக மாறினார். வருமான குறைவை ஈடு செய்ய, எண்ணற்ற கட்டணங்கள். குருமார்களின் ஆண்டு வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட பங்குத் தொகை முதலியவற்றை வசூலிக்க முயன்றார். இதைக் கண்ட ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும், திருச்சபையினரும் வெகுண்டெழுந்தனர். கி. பி. 1312 ஆம் ஆண்டில் பிரான்சு மன்னர் திருச்சபையினர் காவற் படைகளை வைத்திருக்க கூடாது என்று வற்புறுத்தினார். அவர்களில் பலர் நசுக்கப்பட்டும், தீயில் கொளுத்தப்பட்டும் அழிக்கப்பட்டனர் அவர்களுடைய சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன. இதுபெரும் கொடுமை என்றாலும் இரண்டாம் எட்வர்டு மன்னரும் அவருடைய பிஷப்புக்களும் அதையே பின்பற்ற வேண்டியவ

ராயினர். எனினும் வல்லாட்சிக்கெதிராக உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும் என்பது எட்வர்டு ஆட்சியிலும் அவரது மகன் ஆட்சியிலும் எழுந்து நின்ற தலையாய கருத்து ஆகும். இப்போராட்டத்தில் ஈடுபட்ட திருச்சபைக்கு போதியப் பலம் இல்லை. அரசரின் நீதிபதிகள் அரசரை ஆதரிக்க கடமை பெற்றவர்களாதலால் நாட்டின் சட்டங்கள் அனைத்திற்கும் அரசரே பொறுப்பானவர். ஏனெனில், சட்டங்கள் 'அரசரின் தனிச்சிறப்பதிகாரங்களாகும் (prerogatives)என்று வாதித்தனர். இந்நிலையில் பிரபுக்களைத் தவிர வேறு எவராலும் எதனையும் செய்யமுடியாது. பிரபுக்களிடம்பலம் இருந்தது. பிரபுக்களில் பெரும்பாலோர் கொடுங் கோலர்கள்,சுயநலமிகள் என்பது உண்மை தான். ஆனால், மக்களின் கருத்துப்படி அரசாங்கம் உலகத்தில் அழியாமல் நடக்க வேண்டுவதைப் பாதுகாக்கும் வலிமை பிரபுக்களிடம் இருந்தது. பிரபுக்கள் மக்களின் உரிமைகளைப் பாதுகாக்க ஈடுபட்ட நடவடிக்கைகள் புரட்சிகரமானவை. ஆனால்பெரும்பாலும் புரட்சிகள் தன்னலம், அல்லது சுயநல பாதுகாப்புக்காக தொடங்கப் பெற்றதைப் போன்றே இப்பிரபுக்களும் தங்களுடைய சுய உரிமைகளைப்பாதுகாக்கப் புரட்சிசெய்தனர். அது நாட்டின் நலனில் முடிவுற்றது. இதற்கு உதாரணமாக பிரபுக்களின் தலைவராக இருந்த லங்காஸ்டர் பிரபுவான தாமஸ்ஸைக் கூறலாம். எட்வர்டும் பலவீனர். அவரை பிரபுக்கள் தம் உரிமைகளை உறுதிப் படுத்தி கொள்ள முயன்றனர். தாமஸ் விறல் விரர்; அரசரின் உறவினரும் கூட. மூன்றும் ஹென்றியின்காலத்தில் போப்பாண்டவர் சிசிலியை ஆளும்படி பணித்த எட்மண்ட் என்பாரின் மகன் லங்காஸ்டர் பிரபுவான தாமஸ். அவர் முதலாம் எட்வர்ட்டின் விசுவாச அமைச்சர் லிங்கன் பிரபு ஹென்றி-டி-லாசி என்பவரின் மகளை மணந்திருந்தார். லங்காஸ்டர், டெர்பி, லெசெஸ்டர் ஆகியவற்றின் பிரபுவாக இருந்தார். தம் மனைவியின் சீதனமாக சாலிஸ்பரி, லிங்கன் ஆகிய பகுதியின் ஆட்சியையும் பெற்று இருந்தார். தாம் பெற்று இருந்த நிலப்பரப்புக்களைப் போன்றேஅவருடைய பேராசையும் பரந்திருந்தது. சந்தர்ப்பத்தை நழுவவிடாது ஒவ்வொரு முறையும் தம் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்வதில் கண்ணும் கருத்துமாயிருந்தார். அரசருக்கு எதிராக தம் எதிர்ப்பை கூறவும் தயங்கவில்லை. இதனால் பிரபுக்கள் யாவரும் இவர் தலைமையில் ஒன்று சேர்ந்து அரசரின் நடவடிக்கைகளை எதிர்க்க முயற்சி செய்தனர். அதன் முதல் வெற்றிதான் கேவஸ்டனின் வீழ்ச்சி.

**கேவஸ்டனின் வீழ்ச்சி:-** இரண்டாம் எட்வர்டின் முதல் பாராளு மன்றக் கூட்டத்திலேயே பிரபுக்கள் அனைவரும் கேவஸ்டனுக்கு எதிராக ஒன்று பட்டனர். கேவஸ்டனை நாடு கடத்த பிரபுக்களின் வற்புறுத்தலின் பேரில்

அரசர் இசைந்தார். கேவஸ்டன் அயர்லாந்தில் அரசபிரதிநிதி யாக நியமிக்கப்பட்டார். தம்முடைய இணைபிரியா நண்பரின் வீழ்ச்சியாவது இரண்டாம் எட்வர்டை நல்லாட்சி நடத்தத் தூண்டியதா என்றால் அதுதான் இல்லை மீண்டும்பாராளுமன்றம் அடுத்த 19 மாதங்களுக்குக் கூட்டப்படவில்லை. பிரெஸ்கோபால்டி எனப் படும் இத்தாலிய வங்கிச் சொந்தக்காரர்களிடமிருந்து அரசர் பெரும் தொகையை கடனாக வாங்கிச் சுங்கவரிகளை வசூலித்துக்கொள்ளும் உரிமையை அவர்களுக்கு வழங்கினார். மீண்டும் பாராளுமன்றம் கூடியபோது காமன்ஸ் சபையினரும் பிரபுக்களுடன் சேர்ந்து அரசரின் முறைகேடான ஆட்சியினைக் கண்டித்தனர். நாடு கடத்தப்பட்ட கேவஸ்டனை அரசர் மீண்டும் அழைத்துக் கொண்டார், மூன்று மாதங்களில் பெரும் பிரபுக்களின் வெறுப்புக்காளாக வேண்டியவரானார் கேவஸ்டன். வார்விக் பிரபுவான கைபோசாம்ப் (Guy Beauchamp) அவருடைய பரமவைரியனார். லங்காஸ்டர்பிரபு நடுநிலைமை வகித்திருந்தார். இப்போது அவரும் லிங்கன், ஆக்ஸ்போர்டு, அருண்டேல், ஹெரிபோர்டு, பெம்ப்ரோக் பிரபுக்களுடன் சேர்ந்துகொண்டு கேவஸ்டனுக்கு எதிராகத் திரும்பினார்.

இதுவரை அரசர் மூன்று ஆண்டுகள் வறிதே கழித்தார். கி பி. 1310 முதல் கி. பி. 1322 வரை பல ஏற்றத்தாழ்வை சந்தித்தார். கி. பி. 1310 ஆம் ஆண்டு பிரபுக்களின் குழுவினர் தம் குறைகளைப் போக்கவேண்டி இருபது பேர் கொண்ட குழுவொன்றை ஏற்படுத்தினார். திருச்சபை, அரசர், மக்கள் ஆகியோரின் கருத்தை மதித்து முடிசூட்டிக் கொண்டபோது கொடுத்த வாக்குறுதியின்படி நாட்டிற்கேற்ற சட்டங்களை உருவாக்க ஏற்பாடு செய்வது அக்குழுவின் பணியாகும். இப்பிரபுக்களின் குழுவுக்கு 'ஆர்டெயினர் பிரபுக்கள்' என்று பெயர். நாடு கடத்தப் பெற்று அப்போதுதான் நாடு திரும்பியிருந்த ஆர்ச் பிஷப் வின்செல்சி, வார்விக், லங்க்காஸ்டர், லிங்கன் ஆகியவற்றின் பிரபுக்கள் 'ஆர்டெயினர் பிரபுக்களின்' குழுவில் இடம் பெற்றவர்களில் சிலர் ஆவர். கி. பி. 1311 ஆம் ஆண்டில் லண்டன் அவசர சட்டங்களைக் கொண்டு வந்தனர். அதன்படி கேவஸ்டன் மீண்டும் நாடு கடத்தப்பட்டார். இது மூன்றும் முறையாக அவர் நாடு கடத்தப்பட்டதாகும்..அரசருக்குகடன் கொடுத்த அயல்நாட்டைச் சேர்ந்த பிராங்கோபால்டி வங்கிக்காரர்கள் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டனர். மேலும் லண்டன் அவசர சட்டங்கள் வருங்காலத்தில் எல்லா அரசாங்க அதிகாரிகளையும் பிரபுக்களின் அறிவுரைப்படியும் அவர்களின் அனுமதியின்றிப் போர்களில் ஈடுபடுவதோ அன்றிப் படைகளைச் சேகரிப்பதோ கூடாது என்றும் வலியுறுத்தியது. நாட்டை ஆளும் உரிமை பிரபுக்களுக்கு இருந்ததைச்

சுட்டிக்காட்டும் அரசியலமைப்புச் சான்ருக இவ்வரசச் சட்டங்கள் திகழ்ந்தன. கி. பி. 1258 ஆம் ஆண்டில் வெளியான ஆக்ஸ் போர்டு ஏற்பாடுகளை அவை ஒத்திருந்தன. சட்டங்கள் நிறை வேற்றுவதில் காமன்ஸ்க்கு முதலாம் எட்வர்டு தந்த பங்கைப்புறக் கணித்தது இச்சட்டங்கள். அரசர் அதிகாரமில்லாது சூன்ய மாக்கப்பட்டுப் பாராளுமன்றத்தின் மூன்ருவது அங்கமான காமன்ஸ் சபை ஆலோசனை கூறும் உறுப்பாக இருப்பதற்குப் பதி லாக, பிரபுக்கள் கூறுவதை ஆமோதிக்கும் சபையாக குறைந்த அதிகாரத்துடன் திகழ வழி செய்தன இச் சட்டங்கள்.

**கேவஸ்டன் கொலையாதல்:-** ஆர்டெயினர் பிரபுக்களின் கோரிக்கைகளை எதிர்க்கத் திறனற்றவராய் இருந்தார் இரண்டாம் எட்வர்டு மன்னர். அதில் அவருடைய பலவீனம் வெளிப்பட்டது. எனவே இலண்டன் அவசர சட்டங்களை கி. பி. 1311 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 5ஆம் நாள் அவர் ஏற்றுக் கொண்டார். அடுத் தாண்டின் தொடக்கத்தில் அவர் ஸ்காட்லாந்தின் மீது படைகள் நடத்திச் சென்றபோது கேவஸ்டனை திரும்ப அழைத்து, அவரு டைய நிலங்களை அவருக்கு மீண்டும் வழங்கினர். உடனே அரச ருக்கு எதிராக போர்புரிய பிரபுக்கள் திரண்டனர். அவர்கள் யார்க் ஷயருக்குப் படையுடன் சென்று ஸ்கார்பரோ கோட்டையில் கேஸ்வடனை முற்றுகையிட்டு, கி. பி. 1312 ஆம் ஆண்டு மே மாதம் 19ஆம் நாள் சரணடைய வற்புறுத்தினர். பின்னர் பாராளு மன்றக் கூட்டத்தில் தம் தேவைகளை அறிவிப்பான் வேண்டி தென்திசை சென்ற கேவஸ்டனை வார்விக் பிரபு கைப்பற்றிப் பிளாக்லோஹில் என்னுமிடத்தில் அவரைச் சிரச்சேதம் செய்தார். இந்நகர் வார்விக்கிலிருந்து இரண்டு கல் தொலைவிலிருக்கிறது. 1312, ஜூன் திங்கள் 13ஆம் நாள் கேவஸ்டன் கொல்லப்பட்டார். அரசருடைய கொலைக்குக் காரணங்களாயின. பிரபுக்களை நிந்தை மொழிகளால் அழைத்த கேவஸ்டன் சரியானபடி வழங்கப்பட் டார்.

கேவஸ்டன் மரணத்திற்குப் பின்னும், கொலைக்குக் காரணமா யிருந்தவர்களைத் தண்டிக்க முடியாமல் இருந்தார் எட்வர்டு. போப் பாண்டவர், கேவஸ்டனின் மனைவியின் சகோதரர் கிளாஸ்டர் பிரபு. அரசரின் மைத்துனரான பிரான்ஸ் மன்னர் பிலிப் ஆகி யோர் அரசரை அமைதியுடன் இருக்கும்படி கூறினர். கேவஸ்ட னைக் கொன்ற பிரபுக்களின் நடத்தையை மறந்துவிட்டதாக கூறிக் கொண்டார். ஒவ்வொரு ஆண்டும் தமக்கு இருந்த ஒரு சிறிது சக்தியையும் அரசர் சிறிது சிறிதாக இழந்து வந்தார். அவசர சட் டங்களை வெளியிடும் முறையை கையாண்டதால் தம் தந்தையார்

செயல் படுத்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படை யில் அரசாங்கத்தை ஆளும் முறையை அவர் கைகழுவ வேண்டி யவரானூர். கி. பி. 1313 ஆம் ஆண்டு ஆர்ச் பிஷப்பின் செல்சி காலமானூர். அவருக்குப் பின்னர் சான்ஸ்சலராகப் பணியாற்றிய கிரெய்லாட்ஸ் என்பவர் ஆர்ச் பிஷப்பானூர். ஹென்றி–டி–லாசியும் காலமானூர். அவருக்குப் பின்னர் அவருடைய பிரதேசத்திற்கு லங்காஸ்டர் தாமஸ் பிரபுவானூர். இப்படியாக இங்கிலாந்து அரசர் மேன்மேலும் பிரபுக்களின் கைப்பாவையாக மாறி வந்தார்.

**இரண்டாம் எட்வர்டும் ஸ்காட்லாந்தும்:-** முதலாம் எட்வர்டின் மரணத்தால் பெரும் பயன் அடைந்தவர் ஸ்காட்லாந்தின் ராபர்ட் புருஸ்தான். முதலாம் எட்வர்டிடம் சண்டையிட்டு ஓரடி நிலத்தை வெல்வதில் இருந்த பெருமையும் மதிப்பும் அவருடைய மகனிட மிருந்து ஓர் இராச்சியத்தையே பறித்துக் கொள்வதில் கூட இருக்க முடியாது என்று புருஸ் கூறிக் கொண்டார். முதலாம் எட்வர்டை அவர் ஸ்காட்டியரை அடித்து நொறுக்கிய சுத்தியாகக் கருதியிருந்தார். இரண்டாம் எட்வர்டைத் தம்முடைய பலவீன மான எதிரி என்று கணக்கிட்டுக் கொண்டார் புருஸ்.

இரண்டாம் எட்வர்டின் நிலை ஸ்காட்லாந்தில் படுமோசமாக இருந்தது. படிப்படியாக புருஸ் தம் நிலையை உயர்த்திப் பெருக்கி வந்தார். அபர்டின் அவர் வசமாகியிருந்தது. அவருடைய தமயன் எட்வர்டு புருஸ் காலவேயைத் தம் வசப்படுத்தியிருந் தார். பிரெஞ்சு மன்னர்கள் புருஸுக்கு ரகசியமாக உதவி செய்த னர். சமயவிலக்கம் செய்யப்பெற்றிருந்த புருஸ்ஸை கி. பி. 1310 ஆம் ஆண்டு போப்பாண்டவர் ஸ்காட்லாந்தின் சட்டப்படியான அரசர் என்று அறிவித்திருந்தார். ஸ்காட்லாந்தில் ஆங்கிலேயர் பிடியிலிருந்த கோட்டைகள் ஒவ்வொன்ருக அவரால் கைப்பற்றப் பட்டன. ஸ்காட்டியரான ஜேம்ஸ் டக்ளஸ் பிரபு ராக்ஸ்பரோவை கைப்பற்றிக் கொண்டார். முப்பதுபேரைக் கொண்டு மோரேயின் பிரபுவான ரண்டால்ப் எடின்பரோவைத் தம்வசமாக்கிக்கெண்டார். அப்படி பிடிக்கப்பட்ட கோட்டைகள் புருஸ் வசமாயின. பின்னுக் (Binnock) என்ற குடியானவர் ஒருவர் நாட்டுப்புற வாசிகளின் துணைகொண்டு லின்லித்கோவைக் கைப்பற்றிக் கொண்டார்.

**பானக்பர்ன் போர், 1314:-** கி. பி. 1314ஆம் ஆண்டில் புருஸ்ஸிடம் ஸ்டர்லிங் கோட்டை ஒன்று மட்டுமே கிட்டாமல் இருந்தது. புருஸ் ஸ்டர்லிங் கோட்டையை முற்றுகையிட்டார். அதை விடுவிக்க இரண்டாம் எட்வர்டு 20,000பேர் கொண்ட படையொன்றுடன் வடபால் சென்ருர். ஸ்டர்லிங் நகருக்கு அருகே

அரசின் படையை எதிர்பார்த்து காத்திருந்தார். கி. பி. 1314 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22 ஆம் நாள் புரூஸின் படைகள் ஸ்டர்லிங் கோட்டையின் தென் திசையில் போர்த் ஆற்றுக்கும் அதன் உபநதியான பானக்பர்ன் ஆற்றுக்கும் இடையே வந்திருந் தன. புரூஸினிடம் 5000படை வீரர்களேயிருந்தனர். புரூஸின் சகோதரர் எட்வர்டு, ஜேம்ஸ்டக்லஸ்பிரபு, வால்ட்டர், மோரேயின்




படம்-7
பானக்பர்ன் போர் 1314-

பிரபு ரண்டால்ப் ஆகியோர் அவருடைய துணைவர்கள். அத்து டன் 10,000 பேர்கொண்ட குடியானவர் படையொன்றும் அவ ருக்குத்துணைநின்றது. அப்படையினர் பெரும்பாலோர்காலாட்படை யினரேயாவர். ஆங்கிலப்படையில் வலிமை வாய்ந்த குதிரைப் படையினர் இருந்தனர். காலாட் படையினர் அவருக்குத் துணை நின்றனர்,

ஜூன் மாதம் 23ஆம் நாள் ஆங்கிலேயர் பானக்பர்ன் அருகில் தென்பட்டனர். கிளிப்போர்டு என்பவரின் தலைமையில் ஆங்கில குதிரைப் படையின் ஒருபிரிவினர் பானக்பர்ன் ஆற்றைக் கடந்து சென்றபோது அப்பிரிவினரை ரண்டால்ப் சிதறடித்தார். எஞ்சி யிருந்த ஆங்கிலப்படையினர் செய்வதறியாது சீர்குலைந்தனர். 24ந் தேதி காலையில் புரூஸின் படையினரை ஆங்கில படையினரால் விரட்ட முடியவில்லை ஆங்கில வில்லாளிகளும் செயலிழந்து போகும்படி ஸ்காட்டியர் செய்தனர். போர்க்களம் பெரும்படைக்கு ஏற்றதாக அமைந்திருக்காமையால் எட்வர்டால் தம் முழுப்படை யையும் அங்கு கொண்டுவர முடியவில்லை.

ஸ்காட்டிய ஈட்டிப் படையினர் செய்த நாசத்தால் ஆங்கிலப் படையில் பெரும் குழப்பம் ஏற்பட்டது. இத்தருணத்தில் புரூஸ் தம்முடைய குடியானவர் படையை முன்னேறும்படி ஏவினார். புதிய படையொன்று மற்றொருபுறம் தம்மைத் தாக்கியதை அறிந்த ஆங்கில படையினர் சித்தம் குலைந்து செயல் இழந்தார்கள் எட்வர்டு மன்னர் போர்க்களத்தைவிட்டு ஓடிப்போனார். அவரு டைய படையை ஸ்காட்டியர் நையப் புடைத்தனர். பானக்பர்ன் போர் ஆங்கிலேயரின் தோல்வியில் முடிந்தது. ஆங்கிலேயரால் ஸ்காட்லாந்தை கைப்பற்ற இயலாது என்பதும் தெளிவாக தெரியப் படுத்தியது.

**ஸ்காட்டியர் இங்கிலாந்தைத் தாக்குதல்:-** பானக்பர்ன் போரில் ஏற்பட்ட தோல்வியை இரண்டாம் எட்வர்டு ஏற்க மறுத்து, மீண்டும் ஸ்காட்லாந்தை கைப்பற்ற எண்ணினார். ஆனால் அப் போருக்குப் பின்னர் ஸ்காட்டியரின் கையே ஓங்கியிருந்தது. ஸ்காட்டியர் பெர்விக்கைக் கைப்பற்றினர். அவர்களுடைய படை யெடுப்பால் ஆங்கில எல்லைப்புறத்தில் படுநாசம் விளைந்தது. ரண்டால்பின் தலைமையில் வந்த ஒரு படையெடுப்பின் விளைவாக யார்க்ஷயர் சூறையாடப்பட்டு தீக்கிரையானது. அங்கு ஸ்காட் டியர் எண்ணற்ற ஆங்கிலேயரை கொன்றனர். கி. பி. 1322 ஆம் ஆண்டில் மேலும் பல ஸ்காட்டிய படையெடுப்புகளும் அவற்றை எதிர்த்து ஆங்கிலப் படையெடுப்புகளுமாகக் காலம் கழிந்தது. ராபர்ட் புரூஸ் யார்க்ஷயர் வரை படையெடுத்து, பைலாந்து ஆப்பி (Byiand Abbey) என்னுமிடத்தில் சிறு வெற்றியொன்றைப் பெற்றனர். கி. பி. 1323 ஆம் ஆண்டில் இறுதியாக போர் நிறுத்த உடன்பாட்டினால் போர் நின்றது. அடுத்த பதின்மூன்று ஆண் டுகளில் அமைதி நிலவியது. இருப்பினும், ஸ்காட்லாந்தின் சுதந் திரத்தை இரண்டாம் எட்வர்டு அங்கீகரிக்க மறுத்துவிட்டார்.

அயர்லாந்திலும் வேல்ஸிலும் கூட கலகங்கள் மூண்டன. வேல்ஸில் மூண்ட கலகம் விரைவில் அடக்கப்பட்டது. ஆனால் அயர்லாந்தில் எட்வர்டு புரூஸ் அரசராக முடிசூட்டப் பெற்றார். முடிசூட்டு விழாவில் ஸ்காட்டிய அரசரும் எட்வர்டின் சகோதரருமான ராபர்ட் புரூஸும் கலந்து கொண்டனர். மூன்றாண்டுகள் அயர்லாந்து சூறையாடப்பட்டது. கி. பி. 1318ஆம் ஆண்டில் எட்வர்டு புரூஸை ஆங்கிலப் பிரபுக்கள் தோற்கடித்து டன் டால்க் (Dundalk) என்னுமிடத்திற்கருகில் அவரைக் கொன்றனர்.

**இங்கிலாந்தில் லங்காஸ்டர் பிரபுவின் ஆட்சி:-** பானக்பர்ன் தோல்வியை இங்கிலாந்தில் தமக்குச் சாதகமானதாக்கிக்கொண்டவர்களில் முக்கியமானவர் லங்காஸடர் பிரபு தாமஸ். இவர் முதலாம் எட்வர்டு மன்னரின் தம்பி மகன். தம் தந்தையின் மரணத்திற்குப் பிறகு தம் மனைவியின் சீதனமாக பல இடங்களைப் பெற்று தமது அதிகாரத்தை வளர்த்துக் கொண்டவர் கேவஸ்டனை அழித்ததும், எட்வர்டுடன் பானக்பர்ன் போருக்குச் செல்ல மறுத்ததுமே அவருடைய அரும்பணிகளாம். பானக்பர்ன் போருக்கு லங்காஸ்டர் பிரபுவும் கூடச் சென்றிருந்தால் தோற்றதன் பழி பாவம் அவரையும் சார்ந்திருக்கும். போருக்கு செல்லாமையால் லங்காஸ்டர் அப்பழியினின்றும் தப்பினார். இதனால் இரண்டாம் எட்வர்டு அரசரே பானக்பர்ன் போரில் ஏற்பட்ட தோல்விக்கு முழு பொறுப்பையும் ஏற்க வேண்டியவரானார். ஓரிரு ஆண்டுகள் லங்காஸ்டர் பிரபுவே ஆட்சியை பெரும்பாலும் நடத்தினார். எட்வர்டு அவருடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள முயன்றார். வேல்ஸ் எல்லைப்புறத்திலிருந்த ஹெரிபோர்டு, மார்டிமர் பிரபுக்கள் லங்காஸ்டர் பிரபுவின் உற்ற நண்பர்களாயிருந்தனர். இதை காணப் பொறுக்காத அரசர் தமக்கு உற்ற நண்பர்களாய் இருவரை தேர்ந்தெடுத்தார். தந்தையும் மகனுமான அவ்விருவரையும் 'டென் பென்ஸர் பிரபுக்கள்' என்பார்கள். அவர்கள் பெரும் செல்வத்தையும் நில புலன்களையும் பெற்று இருந்தனர். இதன் விளைவாக நாட்டில் குழப்பம் ஏற்பட வழியாயிற்று. கி. பி. 1321 ஆம் ஆண்டில் டென் பென்ஸர்கள் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர். கோபம் கொண்ட அரசர் படையொன்றை திரட்டி லங்காஸ்டரின் நண்பர்களான ஹென்றி போர்டு, மார்டிமர் பிரபுக்களை தோற்கடித்தார். லங்காஸ்டர் பிரபு அச்சமுற்று வடதிசை நோக்கி ஓடினார். அரசரின் படைகள் அவரை பரோ பிரிட்ஜ் என்னுமிடத்தில் தோற்கடித்தனர். ஊர் (Ure) ஆற்றைக் கடந்து அப்பால் செல்லவிருந்த லங்காஸ்டர் பிரபு கைது செய்யப்பட்டு பான்டிப் ராக்ட் என்னுமிடத்தில் சிரச்சேதம் செய்யப்பட்டார். அவரைப் பின்பற்றியவர்களில் பலர் கழுவேற்றப் பட்டோ சிறையிலடைக்கப்

பெற்றே தண்டிக்கப்பட்டனர். அவ்வாறு கைது செய்யப்பட்டவர்களில் இராஜர் மார்டிமரும் ஒருவர்.

**எட்வர்டு மன்னரின் வீழ்ச்சி:-** அரசருக்கு எதிராக போரோ அல்லது கலகமோ மூள்வதற்கு பல காரணங்களிருந்தன. இருப்பினும் சிறிதுகாலம் நாட்டுமக்கள் பொறுத்திருக்க வேண்டியவராயினர். அரசர் வாக்குறுதியை அள்ளி தமது இச்சைப்படி வீசியிருந்தார். வாக்குறுதிகள்சொல்லளவில் இனித்தன. ஆனல் அவற்றைச் செயல்படுத்தும் திறமை மன்னருக்கு இருக்கவில்லை. கி.பி. 1322ஆம் ஆண்டு அரசரும் மீண்டும் பதவியில் அமைக்கப்பட்ட டெஸ்பென்ஸர் பிரபுக்களும், அவசரச்சட்டங்களைத் தள்ளி வைத்தனர். பாராளுமன்றத்தை முறைப்படி கூட்டி தாம் ஆட்சி புரியப்போவதாக அறிவித்தார். எனவே அரசரின் பலவீனமும் டென்பென்ஸர்களின் பேரரசையும் புதிய சதிதிட்டம் ஒன்றை அவர்களுக் கெதிராகக் கிளப்பி விட்டது. இம்முறை இச்சதிதிட்டம் ஃபிரான்ஸ் நாட்டில் உருவாகியது. இறைவணக்கம் செலுத்த ஃபிரான்ஸ் நாடு சென்றிருந்த எட்வர்டின் மனைவியும், அரசியுமான இஸபெல்லாவும், ரோஜர் மார்ட்டிமரும் இச்சதித்திட்டத்தைத் தயாரித்தனர். அரசியருடன் அவருடைய மகனும் வந்திருந்தார். அரசியர் இஸபெல்லா இங்கிலாந்து திரும்ப மறுத்து விட்டார். திரும்ப மறுத்தது திருமண காலத்தில் கொடுக்கப்பட்ட வாக்குறுதிகளுக்கு எதிரானது என்று கருதப்பட்டது. கி. பி. 1326ஆம் ஆண்டில் சதிதிட்டம் வெளியாயிற்று. சதிதிட்டக்காரர்கள் பிரான்சிலிருந்து வந்து இறங்கியபோது, இங்கிலாந்தில் இரண்டாம் எட்வர்டின் ஆட்சியில் அதிருப்தியுள்ளவர்கள் அனைவரும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். கி. பி. 1327ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றம் இரண்டாம் எட்வர்டு மன்னரை அரச பதவிக்குத் தகுதியற்றவர் என்று தீர்மானித்து அரசப் பதவியை தமது மகனுக்கு அளிக்க வேண்டும் என்றும் தீர்மானித்தது. ஆனல் அரசர் உயிருடன் இருப்பது என்றைக்கேனும் ஒருநாள் தம் அதிகாரத்தை கைப்பற்றக்கூடும் என அஞ்சியது. அரச பதவியில் இருந்து நீக்கப்பட்ட அரசர் சிறையில் அடைக்கப்பட்டார். அரசரும் தம்மை ஆதரிப்பார் யாரும் இல்லை என்பதனை அறிந்து சிறையிலிருந்து தப்பி ஓடினர், அவரும் அவரது நண்பர்களும் வேல்ஸ் எல்லைபுறத்தில் கைது செய்யப்பட்டனர். அரசரை பட்டினியிட்டுக்கொல்ல முயன்றார்கள் ஆனல் கி பி 1327ஆம் ஆண்டில் செப்டம்பர் மாதம் பெர்க்லி கோட்டையில்சித்திரவதை செய்து கொல்லப்பட்டார்.

இரண்டாம் எட்வர்டின் வீழ்ச்சிக்கு அரசரின் சுயநலம், கொடுமை, பேராசை ஆகியவையே காரணங்களாகும், துரோக

மும் கொலையும் இரண்டாம் எட்வர்டின் ஆட்சியின்போது ஆங்கில வரலாற்றை கறைபடுத்தின. வருங்கால மக்களுக்கு அவை தவருன வழிகாட்டும் முன்னோடிகளாக அமைந்தன. அக்காலத்தில் நாட்டில் நடைபெற்ற நாடகத்தின் பிரதான பாத்திரங்களான கேவஸ்டன், லங்காஸ்டர் பிரபு தாமஸ், டென்பென்ஸர்கள், அரசர் இரண்டாம் எட்வர்டு ஆகியோர் தூக்கிலிடப்பட்டோ, கொலை செய்யப்பட்டோ இறந்தார்கள். நாட்டில் நிலவிய அரசியல் சச்சரவுகளை அவை படம் பிடித்துக் காட்டின. இக்காலத்தில் மேற்கூறிய அரசியல் சச்சரவுகளினூடேயும் பாராளுமன்ற வளர்ச்சி குறிப்பிடத்தக்கது. சச்சரவுக்குக் காரணமான இருதரப்பினரும் தேசிய நோக்கையும், தேசிய முன்னேற்றத்தையும் தம் கருத்தில் கொள்ளவில்லை. இருப்பினும் வெற்றி பெற்றவர் யாராயினும் சரி, பதவிக்கு வந்தவுடன் அவர்கள் பாராளுமன்றத்தைக் கூட்டி, அவர்களின் வெற்றியை உறுதி செய்யும்படி வேண்டினார். கி. பி. 1311ஆம் ஆண்டில் பாராளுமன்றம் பல அவசரச்சட்டங்களை ரத்துசெய்தது. அதே பாராளுமன்றம் எட்வர்டைப் பதவியிலிருந்து நீக்கவும் மூன்றும் எட்வர்டை பதவியில் அமர்த்தவும் முடிவு செய்தது. பாராளுமன்றம் செய்ததனைத்தும் இதுதான்: யார் பதவியிலிருந்தனரோ அவர்களை அது அங்கீகரித்தது. அதில், சிறப்பென்னவென்றால் பதவியில் இருந்தோர் பாராளுமன்ற அங்கீகாரத்தை அவசியம்என்று கருதியதுதான். பாராளுமன்ற அதிகாரம் படிப்படியாகப் பெருகலாயிற்று. போட்டியிட்ட கோஷ்டிகளின் சச்சரவுகளின் இடையே இங்கிலாந்தின் எதிர்காலத்தை உருவாக்கிய கருவியாகிய பாராளுமன்றம் பெயரளவில்தான் இருந்தது; அதனிடம் சட்டங்களைச் செயல்படுத்தும் திறமை இருக்கவில்லை. பாராளுமன்றத்தினிடம் கருத்துக்கள் இருந்தன; ஆனால் அதனல் அக்கருத்துக்களை நடைமுறைப்படுத்த முடியவில்லை.

# 25. இடைக்கால நாகரிகம்

இடைக்கால நாகரிகம் பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றுண்டுகளில் சிறப்புற்று விளங்கியது. எனினும் அதன் முன்னேற்ற நிலைகளை திட்டவட்டமான தேதிகளில் வரையறுத்துக் கூறுதல் கடினம். இந்நூற்றுண்டுகளில்தான் இடைக்கால நாகரிகம் பூத்துக் காய்த்து இனிய பலன்களை நல்கத் தொடங்கியது. ஐரோப்பாவின் மிக முக்கியமான நாடுகளில் கத்தோலிக்கக் கிறிஸ்தவ சமயப் போதனைகளை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். மகா கிரகரி போப்பாண்டவராகத் திகழ்ந்த காலம்முதல் சமய சீர்திருத்தம் தோன்றும்வரை சற்றேறக் குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு கிறிஸ்தவ சமயம் சமாளிக்க முடியாத சவால்கள் ஏதுமின்றி உன்னத நிலையில் உயர்ந்திருந்ததும் இந்நூற்றுண்டுகளில் தான்.

## (அ) இடைக்காலத்தில் திருச்சபையின் நிலை,

நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு துவங்கிய திருச்சபையின் செல்வாக்கு மக்களின் சிந்தனையைக் கவர்ந்திழுத்த காலகட்டம் இது. ஆன்மாக்களைப் பிடித்த நோய்க்கு மருந்தாகத் தொடங்கிய கிறிஸ்தவ சமயத்தின் செல்வாக்கு; கிறிஸ்தவ உலகம் முழுதும் திருச்சபை போதனைகளை இலத்தீன் மொழியில் நடாத்தி கிறிஸ்தவர்களிடையே சமய ஒற்றுமை இணக்கத்தை ஏற்படுத்தியது. அக்காலத்தில் போப்பாண்டவரைக் கிறிஸ்தவர் அனைவரின் பாரமார்த்திக வாழ்வுக்கும் வழிகாட்டிய தலைவரென்று ஏற்றுக் கொண்டனர். திருச்சபைப் பெரியோர்களோ அக்காலத்துக் கல்வி கற்ற அறிஞர்களும், கற்பிக்கும் நல்லாசிரியர்களுமாய் திகழ்ந்தனர். சாதாரண கிறிஸ்தவர்களுக்கு படிக்கவும் எழுதவும் தெரிந்திருக்கவில்லை. எளிய குடும்பத்தில் பிறந்தவர்களும் திறமைசாலிகளாக மட்டும் இருப்பார்களேயாயின் திருச்சபை அவர்களுக்கு வாழ வழி காட்டியது எனலாம். எடுத்துக்காட்டாக ஹில்டிபிரரண்ட் சாதாரண குலத்தில் உதித்தவராயினும் போப்பாண்டவராக தம் திறமையால் உயர முடிந்தது. முதலாம் ரிச்சர்டு மன்னரின் சான்சலராகவும் ஈலியின் பிஷப்பாகவும் பதவிவகித்த லாங்காம்ப் என்பார் பிரான்ஸ் நாட்டு அடிமையொருவரின் மகன்; உழைப்பால் திருச்சபை அலுவலகத்தில் உயர்ந்தவர் என்பதற்கு

இவர்கள் எடுத்துக் காட்டுகள். திருச்சபைக்கு அதற்கென்று தனியான நீதிமன்றங்கள் இருந்தன· குற்றம் புரிந்த சமய ஊழியர்களை இந்நீதிமன்றங்கள் விசாரணை செய்து தண்டித்ததுடன், மக்களின் அறவாழ்விலும், தினசரி நடவடிக்கைகளிலும் எழுந்த பிரச்சினைகளுக்கும் அவை உதவின. எடுத்துக் காட்டாக திருமண சட்டங்களைச் செயல் படுத்துவதில் ஏற்பட்ட பிரச்சினைகளைக் குறிப்பிடலாம்.

**திருச்சபைக்கும் அரசுக்குமிடையே சச்சரவுகள்:-** திருச்சபை தேசியத்திற்கப்பாற்பட்டுச் சர்வதேசியமாயிருந்த போது, அரசுகள் தேசிய நிறுவனங்களாயின. அதன் பயனாக திருச்சபைக்கும் அரசுக்குமிடையே சச்சரவுகள் எழுந்தன. போப்பாண்டவருக்கும், பேரரசருக்குமிடையே மூண்ட சச்சரவின் விளைவாக போர் மூண்டது. ஏழாம் கிரகரியின் காலம் முதல் நான்காம் இன்னசென்ட் காலம் வரை இருநூறு ஆண்டுகள் இச்சச்சரவுகள் நீடித்தன. ஆங்கில வரலாற்றிலும் இதற்கு எடுத்துக் காட்டுகளாக ஏழாம் கிரகரிக்கும் முதலாம் வில்லியத்திற்கும் இடையே மூண்ட கருத்து வேற்றுமைகளும், ஆன்ஸ்லெமுக்கும் இரண்டாம் ஹென்றிக்கும், மூன்றும் இன்னெசன்டிற்கும் ஜான் மன்னருக்குமிடையே தீவிரமான கருத்து வேறுபாடுகளும் இருந்தன என்பதைச் சுட்டிக்காட்டலாம். மூன்றும் இன்னசன்ட் போன்ற போப்பாண்டவர்கள் பேரரசைக்கூட தம் கீழ்ப்படிந்த அடிமைகளைப் போல் நடத்தி இடைக்காலத்தில் தம் வலிமையை நிலைநாட்டினார்கள். அவருடைய மரணத்திற்குப் பின்னர் பேரரசரான இரண்டாம் பிரடரிக் போப்பாண்டவரின் கடுமையான பகைவர்களில் ஒருவராக இருந்ததைக் காணலாம். இரண்டாம் பிரடரிக்கின் முயற்சியில் பேரரசரின் அதிகாரம் உச்சக்கட்டத்தை அடைந்திருந்தது.

கிறிஸ்தவ உலகத்தை இணைக்க போப்பாண்டவர்கள் சிலுவைப் போர்களைப் பயன் படுத்தினர். ஆனால் அவர்கள் கொண்ட நம்பிக்கை வீணாயிற்று. கிறிஸ்தவர்களை உற்சாகப் படுத்தி இச்சிலுவைப் போர்களை வெற்றிகரமாக நடத்த முடியாமல் தோற்றனர் எனில் மிகையாகாது. மூன்றும் இன்னசன்ட் போன்ற பேரதிகாரத்தைக் கொண்டிருந்த போப்பாண்டவர்களால் கூட இப்பணியைச் செய்ய இயலவில்லை. பிரான்ஸ் மன்னர் செயின்ட்லூயி பிற்காலச் சிலுவை போர்களில் பங்கு கொண்ட மாவீரர். அவர் முடிவேற்படும் வகையான பலனைப் பெறத் தவறி விட்டாராயினும் எகிப்திலும் டுனிஸ் போன்ற பகுதிகளிலும் போரிட்டு அங்கேயே கொள்ளை நோய்வாய்ப்பட்டு மடிந்து போனார். இவ்வரசரே

சிலுவைப் போர் வீரர் வரிசையில் கடைசியாக எண்ணப்பட வேண்டியவர்; தூய்மையானவர்; அடக்கத்தின் உருவகமானவர். இடைக்கால நைட்வீரர்களில் சிறப்பாகப் போற்றத் தக்கவர்; பின்னர் முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களை விரட்டியடித்து ஏக்கர் போன்ற இடங்களைக் கைப்பற்றிக் கொண்டபோது புனித பூமியில் கிறிஸ்தவர்களின் ஆதிக்கம் அடியோடு மறைந்து விட்டது. ஜெருசலமும் வீழ்ச்சியுற்றது; கிறிஸ்தவர்கள் அதை முதல் உலகப் போர் மூளும் வரை திரும்பவும் கைப்பற்ற முடியாமல் கைவிட்டனர்.

போப்பாண்டவர்கள் பங்கு கொண்ட படையெடுப்புகள் அனைத்தையும் சிலுவைப்போர் என்ற பெயரிலேயே அழைத்தனர். கிறிஸ்தவரல்லாதவர்களுக்கெதிராக அவர்கள் நடத்திய போர்களையும், இங்கிலாந்து மன்னர் ஜானுக்கு எதிராக போப்பாண்டவர் நடத்திய போர்களையும், பேரரசர் இரண்டாம் பிரடிரிக்குக்கெதிராக நடத்திய போர்களையும் கூட சிலுவைப் போர்கள் என்றே கூறிக் கொண்டார். அதைப் போன்றே தென் பிரான்ஸில் நிலவியிருந்த ஆல்பிஜீனிய சமய நிந்தனையாளருக்கு எதிராக நடைபெற்ற போரையும் போப்பாண்டவர்கள் சிலுவைப் போர் என்றே பறைசாற்றினர். சமய நிந்தனையைக் கருவறுக்க புனித இன்குவிசிஷன் மன்றத்தையும் திருச்சபையினர் நிலைநாட்டி சமயப் பொறைவுடைமையின்றி, எதிர்த்தோரை ஒறுத்தனர்.

சமய ஒறுக்கம் இடைக்காலத்தின் பிற்பகுதியில் திருச்சபையின் புகழுக்குக் களங்கம் விளைவித்ததெனினும், புகழோங்கிய சம்பவங்களையும் திருச்சபை ஊக்குவித்தது. அசிசியைச் சார்ந்த செயின்ட் பிரான்சிஸ் என்பாரின் வாழ்க்கையையும் தொண்டுகளையும் இதற்கு எடுத்துக் காட்டாக குறிப்பிடலாம். திரிதுறவிகள் திருச்சபையை சாதாரண மக்களின் நெருங்கிய தொடர்புக்குக் கொணர அரும்பாடுபட்டனர். அவர்கள் கல்வி கற்பித்தார்கள். தொடக்கக் காலப் பல்கலைக் கழகங்களை நிறுவும் பணியிலும் திருச்சபையின் தொண்டு சிறப்புற்று இருந்தது. அதன் பயனாக 12, 13ஆம் நூற்றுண்டுகளில் போலக்னு, பாரிஸ், ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற பல்கலைக் கழகங்கள் தோன்றின. நவீன காலத்திற்கு இடைக்காலத்தின் சீரிய நன்கொடைகளென இப் பல்கலைக்கழகங்களைக் கொள்ளலாம்.

இடைக்காலத்தின் பிற்பகுதியில் கிறிஸ்தவ உலகம் முழுவதிலும் கோத்திய அமைப்பில் திருக்கோயில்கள், திருச்சபைகள், மடாலயங்கள், முதலியன கட்டப்பெற்றன. பதின்மூன்றும் நூற்றுண்டில் இங்கிலாந்தில் இருபெரும் கலைநுட்பம் வாய்ந்த

கட்டிடங்கள் கட்டப்பட்டன. அவையே வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயமும், சாலிஸ்பரி திருக்கோவிலும் ஆகும், நம்பிக்கை யுகமெனக் கருதப்பெற்ற இடைக்காலத்தின் புகழ்பாடும் சின்னங்களாக இக் கட்டிடங்கள் இன்றும் நிலைத்து அக்கால இலட்சியங்களைப் பறை சாற்றுகின்றன.

இறுதியாக பரோக்களிலிருந்த கில்டுகள் எனப்படும் கூட்டுற வுக் கழகங்கள் திருச்சபையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டி ருந்தன. இக்கூட்டுறவுக் கழகங்கள் மேனர்ப் பண்ணை அல்லது சிறு நகரங்களிலிருந்து உருவானதைப் போன்று, இங்கிலாந்தில் பரோக்கள் அவற்றின் ஆண்டான்களின் கட்டுப் பாட்டிலுல் செழித்து வளர்ந்தன. அதன் விளைவாக ஆயுதந்தரித்த நைட் வீரனை விட வாணிபம் செய்த வணிகர் மிக முக்கியமானவராக கருதப்படும் நிலையேற்பட வழிபிறந்தது. இத்தகைய கூட்டுறவுக் கழகம், பல்கலைக்கழகம், மடாலயம், நைட்வீரர் பெற்ற பதவி ஆகியவை ஒரு நகர மக்களை மற்றொரு நகர மக்களுடனும், ஒரு மாணவனை மற்றொரு மாணவனுடனும், ஒரு துறவியை மற்றொரு துறவியுடனும், ஒரு நைட்வீரரை மற்றொரு நைட்வீரருடனும் இணைக்கும் கருவிகளாயின. இடைக் காலத்தில் இத்தகைய சகோதரத்துவ நிறுவனங்கள் அல்லது கூட்டுறவு அமைப்புகள் மக்களை இணைத்துப் பிணைத்த எடுத்துக் காட்டுகள் எனில் மிகை யாகாது. திருச்சபையே இவ்வனைத்தையும் பொதுவாக இணைத்த சங்கிலியாகும்.

### (ஆ) பள்ளிகளும், பல்கலைக் கழகங்களும்:

இடைக்கால கல்வி திருச்சபையையே முழுதும் சார்ந்திருந் தது. தம் மடாலயத்தில் பயிற்சி பெற வந்த புதிய நபர்களுக்குக் கற்றுத்தர மடாலயத் துறவிகள் பள்ளிக் கூடங்களை அமைத்தனர். லௌகீக குருமார்கள் திருச்சபையைச் சாராத மாணவர்களுக்கு கல்வி கற்பித்தனர். பள்ளிகள் திருக்கோயிலுடனும், கல்லூரி திருச்சபைகளுடனும் இணைக்கப் பெற்றிருந்தன. நார்மானிய வெற்றிக்குப் பின் மேலும் பல பள்ளிகள் நிறுவப் பெற்றன. இப் பள்ளிகளில் இலத்தீன் இலக்கணம் கற்றுத் தரப்பட்டது. இதனுல் இடைக்கால பள்ளிகளை இலக்கணப் பள்ளிகள் என்று கூறுகிறோம். இலக்கணத்தோடு, சொல்லாட்சிக்கலை (அணியிலக்கணம்) தர்க்க சாத்திரம் ஆகியவையும் கற்றுத் தரப்பட்டன. இவையே முக்கலை கள் (Trisium) எனப்பட்டன. (இலக்கணம் சொல்லாட்சிக் கலை, தருக்கம்கணக்கு, வடிவியல் கணக்கு (Geometry) இசை, வானசாத்திரம் ஆகிய நாற்கலைகளைக் கற்பது உயர் படிப்பாக கருதப்பட்டது. எல்லா நூல்களும் இலத்தீன் மொழியிலேயே

எழுதப்பெற்றிருந்தமையால் இலத்தீன் இலக்கணக் கல்வி இடைக் கால பள்ளிகளில் வலியுறுத்தப்பட்டது. அனைவருக்கும் இம்மொழி தெரிந்திருந்தமையால் மொழி பிரச்சனை யொன்றும் அக்காலத்தில் எழவில்லை.

பல்கலைக் கழகங்கள்:– முதன் முதலாக தொடங்கப் பெற்ற பல்கலைக்கழகங்கள் பன்னிரண்டாம் நூற்றுண்டில் தான் நிறுவப் பெற்றன. சாதாரணப் பள்ளியிலிருந்து பல்கலைக்கழகம் வரை தொடக்க காலத்தில் மாறுபட்டிருக்கவில்லை. பள்ளிகளைப் போன்று பல்கலைக் கழகங்களும் திருச்சபையையோ அன்றித் திருக்கோயிலையோ சுற்றி எழுந்தன. இக்கல்விக்கூடங்களில் பணியாற்றிய ஆசிரியர்களும் திருச்சபை குருமார்களே. நாட்டின் எல்லா பகுதிகளிலிருந்தும் மாணவர்கள் கல்வி கற்க வந்தபோதுஇப் பள்ளிகள் பல்கலை கழகங்கள் என்றழைக்கப்பட்டன. பாரிஸ் பல்கலைக் கழகத்தில் தத்துவமும் இறைமையியலும் கற்பிக்கப்பட்டன. போலக்னுவில் சட்டமும், சலார்னோவில் மருத்துவமும் கற்பிக்கப்பட்டன. கற்றறிந்தவரின் கூட்டுறவுக் கழகமே பல்கலைக் கழகம் எனப்பட்டது. கற்போர் கற்பிப்போர் ஆகியோரின் மன்றமே பல்கலைக் கழகமாயிற்று. அவற்றிற்கும் சட்ட திட்டங்கள் எழுந்தன.

இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. பெக்கெட்டுக்கும் அரசருக்கும் சச்சரவேற்பட்ட ஞான்று, பிரான்ஸ் நாட்டு மன்னர் பெக்கெட்டை ஆதரித்தார். ஆனால் ஃபிரான்ஸில் கல்வி கற்று வந்த எல்லா மாணவர்களையும் இங்கிலாந்து திரும்பக்கோரி கி. பி. 1167 ஆம் ஆண்டில் இரண்டாம் ஹென்றி ஆணையொன்றை பிறப்பித்தார். இதன் பயனாக ஆங்கிலம் பேசத்தெரிந்த மாணவர்களும் ஆசிரியர்களும் திடீரென பாரிஸிலிருந்து ஆக்ஸ்ஃபோர்டு வந்து சேர்ந்தனர். இங்ஙனம் வந்துற்றவர்களை ஆதாரமாகக் கொண்டு தான் ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக் கழகம் தொடங்கப்பட்டது. ஆக்ஸ்போர்டிலிருந்து அங்ஙனம் வெளியேறிய அறிஞர்களை ஆதாரமாகக் கொண்டேகேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் நிறுவப் பெற்றது.

ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகத்தில் ஒவ்வொரு துறைக்கும் தனித்தனி கல்லூரிகள் பல்கலைக்கழக கட்டிடத்தினுள்ளேயே தொடங்கப்பட்டன. தொடக்க காலத்தில் மாணவர்கள் 'இல்லங்கள்' என்று கூறப்பட்ட கட்டிடங்களில் ஒன்று சேர்ந்தே வாழ்ந்தார்கள். இவ்வில்லங்களிலிருந்தே பல் வேறு கல்லூரிகள். ஆக்ஸ்ஃபோர்டிலும் கேம்பிரிட்ஜிலும் தொடங்கப்பட்டன. பல்கலைக்கழகபேரில்லாம் என்ற இல்லத்திலிருந்து தான் ஆக்ஸ்ஃ போர்டு பல்கலைக்கழகக்கல்லூரி பிறந்தது. வால்ட்டர் டி மெர்ட்டன்

என்பார் இங்கிலாந்தின் சான்ஸ்சலராகப் பணியாற்றியபோது தான் தற்கால அமைப்பில் கல்லூரியொன்று தொடங்கப்பட்டது. இப்படி உருவான கல்லூரிகளைச் செம்மையாக நடத்த பல்வேறு சட்டதிட்டங்கள் உருவாயின. கி. பி. 1264ஆம் ஆண்டு ஆக்ஸ்போர்டில் தொடங்கப்பெற்ற மொட்டன் கல்லூரி முற்றத்தைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள தற்காலக் கல்லூரிகளின் அமைப்பைப் போன்று கட்டப்பட்டதாகும்.

இடைக்காலப் பல்கலைக் கழகங்களில் கட்டுப்பாடு துளியும் இருக்கவில்லை. கட்டுப்பாடு விதிகள் பிற்காலத்தில் எழுந்தவையாம். ஆக்ஸ்போர்டு கேம்பிரிட்ஜ் போன்ற கல்விக் கூடங்களில் கற்ற பிள்ளைகளும், இளைஞர்களும் கடினமான உழைப்பை மேற்கொண்டிருந்தனர். தொழில்செய்வது, விளையாடுவது, வணிகர்களுடன் அறுவடைக்காலத்தின் போது நீண்ட விடுமுறை பெற்று வீடுதிரும்பினர். பதின்மூன்றும் நூற்றுண்டில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் அமைதி நிலவியிருக்கவில்லை. மாணவர்கள் ஆசிரியர்களுடன் கூடி வாழ்ந்தனர். ஆசிரியர்களைப் போன்று மாணவர்களும் ஏழைகளாயிருந்னர். குடித்து, கூத்தாடி, விளையாடி, தெருவோரங்களில் பிச்சையெடுத்து ஆசிரியர்களும், மாணவர்களும் வாழ்ந்ததாகக் கிரீன் என்ற நூலாசிரியர் குறிப்பிடுகின்றூர். மாணவர்களின் வாழ்க்கை சிரமம் மிகுந்தயிருந்தது. சாளரங்களில்லாத அறைகளில் அவர்கள் படித்தும், படுத்தும் உறங்கினர். புகைபோக்கியாகச் சுவரில் ஒரு துளை போட்டிருந்தனர்.

சொற்பொழிவாற்றி ஆசிரியர்கள் கல்வி கற்பித்தனர். கற்றறிந்த ஆசிரியர்கள் இவ்வாறு சொற்பொழி வாற்றினர். அரிஸ்டாடில் என்ற கிரேக்க பெரியாரின் போதனைகளும் தத்துவங்களும் கல்வியின் அடிப்படையாய் இருந்தன. கிறிஸ்தவ பாதிரிகள் ஆசிரியர்களாகப் பணியாற்றினர். பாரிஸ், ரோமாபுரி, போலக்ஞ போன்ற பல்கலைக் கழகங்களில் பணியாற்றியவர்தான் செயின்ட் தாமஸ் அக்குவினுஸ் என்ற திருச்சபைப் பேராசிரியர்.

## (இ.) திரிதுறவியர்

பதின்மூன்றும் நூற்றுண்டில் உருவான திரிதுறவியர் மக்களின் அன்றுட வாழ்க்கையில் பெரும் புரட்சியை உண்டு பண்ணினர். திரிதுறவியர் நிறுவனத்தை செயின்ட் டாமினிக் என்ற பெரியார் 1216ஆம் ஆண்டில் தொடங்கினூர். தென் பிரான்சில் சமய நிபந்தனையை எதிர்க்கப் பிரசாரம் செய்யும் பொருட்டு இந்நிறுவனம்

அருந்தொண்டாற்றியது. டாமினிகன் திரிதுறவியர் தம் பயிற்சியில் கல்விக்கு முதலிடம் கொடுத்திருந்தனர். பெருகி வளர்ந்த பல்கலைக் கழகங்களுக்கு அவர்கள் பேருதவி செய்தனர்.

அசிசி என்ற நகரைச்சார்ந்த செயின்ட் பிரான்சிஸ் என்பார் பிரான்சிஸ்க திரிதுறவியர் நிறுவனத்தை நிறுவினார். அவர் அனைத்துக் கிறிஸ்தவர்களின் அன்புக்குப் பாத்திரமாயிருந்தார் எனில் தவறாகாது. அவர் இத்தாலிய வாணிகர் ஒருவரின் மகன். இருபத்தோரு வயது வரை இன்பக்களியாட்டங்களில் காலத்தைக் கழித்த அவர் நோய்வாய்பட்டபோது விநோதமான கனவுகளைக் கண்டார். கிறிஸ்துவின் போதனைகளால் கவரப்பட்ட அவர், போகவாழ்வைப் புறக்கணித்துவிட்டு வறியவர்களுக்கும் தொழு நோயுற்றவர்களுக்கும் மருத்துவ உதவி புரிந்தார். அவரால் கவரப் பெற்ற சீடர்கள் ஏழை எளியவர்களிடையே மதப் பிரசாரத்தையும், பணிகளையும் தொடங்கினர். செயின்ட் பிரான்சிஸ் ஏழ்மைதாயைப் போற்றினார். தம்மைப்போன்ற மக்களிடம் அன்பு காட்டினார். கடவுள் படைப்புகள் அனைத்தும் அவருடைய அன்புக்கும் ஆதரவிற்கும் ஆட்பட்டன. பிச்சையேற்று வாழும் வாழ்க்கையை அவருடைய சீடர்கள் மகிழ்வோடு ஏற்றனர். உலகில் ஆன்மிகப் புரட்சியை செய்வித்தவர் செயின்ட்பிரான்சிஸ் என்றால் மிகையாகாது.

டாமினிகத் திரிதுறவிகளே இங்கிலாந்தில் வந்துற்ற முதற் பாதிரிகளாகும். அவர்கள் மூன்றும் ஹென்றியின் காலத்தில் இங்கிலாந்து வந்தார்கள். ஆக்ஸ்போர்டில் முதல் வீட்டை கட்டினார். டாமினிக துறவிகள் பிரான்சிஸ்க துறவிகளை போன்றே சொத்து சுகத்தைப் புறக்கணித்தார்கள்.

1224ஆம் ஆண்டுவாக்கில் பிரான்ஸிஸ்க பாதிரிகள் இங்கிலாந்து வந்தனர்; வந்த ஒன்பது பேரில் மூவர் ஆங்கிலேயர்கள். கான்டர்பரி, இலண்டன், ஆக்ஸ்போர்டு போன்ற இடங்களில் அவர்கள் குடியேற்றங்களை அமைத்துக் கொண்டனர். இத்துறவிகள் நகர்ப்புறங்களில் அரும் பணியாற்றினர். வெறுங்காலுடன் திரிதல், எளிய உடை உடுத்தல், பணத்தை ஏற்றுக் கொள்ளாமை ஆகிய இம் மூன்றும் இந் நிறுவனத்தின் குறிக்கோள்களாம். அவர்கள் பிரசாரத்தில் வல்லவர்கள். அவர்கள் தெருக்களில் பிரசாரம் செய்தனர். அவர்களின் சொற்பொழிவுகள் சாமானிய மக்களைக் கவர்ந்தன.

செயின்ட் டாமினி நிறுவனத்தைச் சார்ந்தவர்கள் கல்விமான்கள், கற்றறிந்த பெரியார்கள். ஆனால் செயின்ட் பிரான்சிஸ்

கல்வி கற்றலை ஆதரிக்கவில்லை. இராஸ்டெஸ்ட் ஆக்ஸ்போர்டில் பிரான்சிஸ்க விரிவுரையாளரானார். இங்கிலாந்தில் பிரான்சிஸ்க போதனையின் புதிய துறையொன்றை நிலைநாட்டியவர் இராஸ் டெஸ்ட். இப்புதுத்துறை இங்கிலாந்தில் மட்டுமல்லாமல் பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி போன்ற நாடுகளிலும் பரவிற்று. இப்பள்ளி களில் கற்றவர்கள் மொழிநூல், கணிதம், பௌதீகம் மற்றும் இறை மையியல் போன்ற கலைகளைக் கற்றனர். இப்பள்ளியைச் சார்ந்த வர்களில் தலைசிறந்தவர் துறவியர் ரோஜர் பேகன் என்பாராகும். அவரை நவீன விஞ்ஞானத்தின் தந்தை எனப் போற்றுவர். மூக்குக்கண்ணாடி, தொடக்ககால டெலஸ்கோப் எனும் தொலைக் காட்சிக் கருவி, வெடிமருந்து முதலானவற்றை கண்டுபிடித்தவர் அவர். கற்பனைத் திறன் வாய்ந்த அவர் கார்கள், பறக்கும் இயந் திரங்கள் முதலானவை குறித்து எழுதி வைத்தார். இராஸ்டெஸ் டும், பேகனும் ஆராய்ச்சி மனப்பான்மையைத் தூண்டி பின்னர் வந்த மறுமலர்ச்சிக்கு ஊக்கம் தந்தார்கள்.

## (ஈ) இடைக்கால கட்டிடக்கலை

இடைக்காலத்தில் ஐரோப்பாவில் கட்டப்பெற்ற திருக்கோயில் களை மக்களினத்தின் அரும்சாதனைச் சின்னங்கள் எனலாம். இடைக்கால கட்டிட வல்லுநர்கள் தாம் கட்டிய திருக்கோயில்கள் காலமெல்லாம் நிற்க வேண்டுமென்ற நோக்குடன் கட்டினர். கட்டிடக்கலை வல்லுநர்கள் தம் பணியில் பேரார்வம் காட்டினர்.

இங்கிலாந்தில் கட்டப் பெற்ற திருக்கோவில்களும், திருச்சபை களும் ஐரோப்பாவிலிருந்த நார்மானிய கட்டிடக் கலையைப் பின் பற்றி அப்பாணியிலேயே கட்டப்பெற்றன. நார்மானிய திருக் கோவில்களில் சுவர்கள் தடித்து, கனமாக இருந்ததுடன் வட்ட வடிவமான தூண்களையும், வட்ட வளைவுகளையும் தாங்கியிருந்தன. சுவர்களில் சாளரங்கள் பொறுத்தப்பெற்றன. அழகூட்டும் வண்ண வேலைப்பாடுகளும் பெருமளவில் இக்கோவில்களில் இணைக்கப் பட்டன.

இங்கிலாந்தில் இன்றும் நார்மானியப் பாணியில் அமைக்கப் பட்ட திருக்கோயில்களைக் காணலாம். ஹாம்ப்ஷயரிலுள்ள ராம்சே மடாலயத் திருக்கோயிலை அதனைச் சுட்டிக்காட்டும் சீரிய எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நார்மானியக் கட்டிடக் கலைக்கு மாறாகப் புதிய பாணியொன்று படிப்படியாக உருவாகத் தொடங்கியது. இப் புதியபாணியை கோத்தியக்

கட்டிடக்கலை என்பர். தொடக்கத்தில் இப்புதியகலை வட பிரான்சில் பிறந்தது. 12, 13ஆம் நூற்றாண்டுகளில் இக் கலை உச்ச கட்டத்தை அடைந்தது. சார்ட்ரீஸ், ரீம்ஸ், ஆமியன்ஸ், பாரிசில் நாட்டர்டாம் முதலான திருக்கோயில்கள் இதற்கு எடுத்துக்காட்டுகளாம்.

நார்மானியப் பாணியில் அமைக்கப்பட்ட திருக்கோயில்கள் தடித்த சுவர்கள், தூண்கள், வட்ட வளைவுகள், சிறு சாளரங்கள் முதலியவற்றுடன் பெரும் பரப்பையும், உருவையும் கொண்டு விளங்கின. கோத்தியப் பாணியில் அமைக்கப்பெற்ற கோவில்களோ முனைப்புடைய வளைவுகள், பெரும் சாளரங்கள் ஆகியவற்றுடன் பருமன் குறைந்த சுவர்களுடன், காற்றோட்ட வசதி கொண்டதாயும், எளிமையான தோற்றத்துடனும் கம்பீரமாயும் காட்சியளித்தன. அவை கற்களால் கட்டப்பட்டன. குடைக்குக் கம்பிகள் இருப்பதைப் போன்று இவ்வளைவுகளுக்கு ஏந்து கோல்கள் இருந்தன. பின்னர் அவற்றின்மீது சுவர்கள் எழுப்பப் பட்டன. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் முனைப்பு வளைவுகளைக் கொண்ட நார்மானியப் பாணி கோவில்களுக்கு மாறாக கோத்தியப் பாணியில் கோவில்களைக் கட்டும் பழக்கம் வந்தது. அத்துடன் சுவர்களின் சுமையைத் தாங்க சுவர் தாங்கிகளும் வெளிச்சம் புகுமாறு பெரும் சாளரங்களும் பொருத்தப்பட்டன.

இங்கிலாந்தில் கோத்தியக் கலை கட்டிடங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை (1) பண்டைய ஆங்கிலப்பாணி (2) சித்திர அணி ஒப்பனைப்பாணி (3) செங்குத்தான கட்டிடப்பாணி என்பனவாம்.

பண்டைய ஆங்கிலப்பாணியைப் பண்டைய கோத்தியப் பாணியெனக் கூறுவது பொருத்தமாகும். யார்க்ஷயர், ரியிவால்க், புவுன்டெயின்ஸ் ஆகிய பகுதிகளிலுள்ள சிஸ்டர்சிய மடாலயங்களில் இப்பாணியைக் கையாண்டனர். பெரும்பாலான ஆங்கிலத் திருக்கோயில்களின் சில பகுதிகள் பண்டைய ஆங்கிலப்பாணியில் அமைக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம், சாலிஸ்பரி, வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயம், வேல்ஸ் ஆகிய இடங்களிலுள்ள திருக்கோவில்கள் இப்பாணியின் சிறந்த எடுத்துக்காட்டுகளாம்.

சித்திர அணி ஒப்பனைப் பாணியில் இங்கிலாந்தில் எக்ஸிடார் திருக்கோயில் அமைக்கப் பெற்றுள்ளது.

பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செங்குத்தான கட்டிடப் பாணியைக் காண்கிறோம். டெவன், கீழ்நார்பக், நார்த்விச்

சிப்பிங், காம்ப்டன் ஆகிய இடங்களிலுள்ள திருக்கோவில்கள் இப்பாணியில் கட்டப்பட்டுள்ளன.

கோட்டை வடிவில் அமைந்த அரண்மனை போன்ற கட்டிடங்களுக்கு மாறாக வாழ வசதியான வீடுகள் அமைக்கப் பெற்றதும் இக்காலத்தில் தான் கெனில்வொர்த் கோட்டை இதற்கு எடுத்துக் காட்டாகும். கெனில்வொர்த் நார்மானியக் கோட்டையாகத் தொடங்கப் பட்டு, இன்றும் நார்மானியப் பாணியுடன் இருப்பதைக் காணலாம். ஜான் மன்னர் ஆட்சிக் காலத்திலும், மூன்றும் ஹென்றியின் ஆட்சிக் காலத்திலும், அதனைச் சுற்றிக் கட்டப் பெற்ற சுற்றுச்சுவருடன் இக்கோட்டை பெரிதாக்கப்பட்டது. சுற்றுச் சுவருக்கு வெளியில் செயற்கை குளமொன்றும் கட்டி அதனைப் பலப்படுத்தினர். அப்படி கட்டப் பெற்றதால் கெனில்வொர்த் கோட்டை யாராலும் அசைக்க முடியாத வலிமையைப் பெற்றது. லங்காஸ்டர் பிரபுக்களின் வசமான ஒரு நூற்றுண்டுக்குப் பின்னர் கெனில்வொர்த் கோட்டை அமைதியான கால கட்டத்தை எய்தியது எனலாம். மூன்றும் எட்வர்டு மன்னரின் மகனுன லங்காஸ்டர் டியூக் ஜான் காண்ட் 14 ஆம் நூற்றுண்டில் கெனில்வொர்த் கோட்டையில் விருந்தினர் மண்டபம் ஒன்றினைக் கட்டுவித்தார். அதன் அழிவுச் சின்னங்களை இன்றும் காணலாம்.

சிறு கோட்டைகள் அல்லது மதிள்சுவர்களைக் கொண்ட மேனர்ப்பண்ணை வீடுகள் மெதுவாக 12, 13 ஆம் நூற்றுண்டுகளில் அமைக்கப்பட்டன.

பழைய மேனர்ப்பண்ணை வீடுகள் சிலவற்றுள் அவற்றைச் சுற்றிலும் அகழிகள் இருப்பதை இன்றும் காணலாம். ஆனல் மதிள்சுவர்களைக் கொண்ட மேனர்ப்பண்ணை வீடுகள், பெருங் கோட்டைகளைப் போன்று, படிப்படியாக தம் இராணுவ இயல்பினை இழந்தன.

நகரங்கள், கிராமங்கள், திருச்சபைகள், பாலஸ்கள், வீடுகள் ஆகியவற்றைக் கொண்டிருந்த இங்கிலாந்தின் கருத்தைக் கவரும் கட்டிடங்கள் நம் நெஞ்சில் நிலைத்து நின்று இடைக் காலத்தின் சிறப்புகளை எடுத்தியம்புகின்றன. இங்கிலாந்தினை உருவாக்குவதில் கட்டிடக்கலை வல்லுநர்கள் சீரிய இடத்தைப் பெற்றனர். அவர்களின் பணிகளில் பெரும்பாலான கட்டிடங்கள் அழிந்து போனாலும், இன்றும் பல நிலைத்து நிற்கின்றன. அவற்றைக் கண்டு களிப்பது இங்கிலாந்தின் வரலாற்றை அறிந்து கொள்ள உதவும் சாதனமாகும் என்றால் மிகையன்று.

## (உ) நகரங்களும், கில்டுகள் என்னும் கூட்டுறவுக் கழகங்களும்

(க) நகரங்களின் தொடக்கமும் வளர்ச்சியும்:- இடைக்காலத்தில் எழுந்த பெரும்பாலான நகரங்கள் சாக்சானிய ஆட்சியின் போது நிறுவப் பெற்றன. அவை தொடக்கத்தில் கிராமங்களாய் இருந்தன. பல்வேறு காரணங்களால் அக்கிராமங்கள் நகரங்களாக மாறின. வாணிபக் கேந்திரங்களாயிருந்த கிராமங்கள் நகரங்களாயின. ஒரு கிராமத்தின் இயற்கை அமைப்பு அதனை வாணிபக் கேந்திரமாக்க காரணமாயிற்று.

இலண்டனுக்கடுத்தபடியாக எழுந்த பிரிஸ்டல் நகரம் அவான் மீது கட்டப்பெற்ற அதன் பாலத்தின் விளைவாக செல்வாக்குற்றது. அதனால் ஆங்கிலக் கால்வாயுடன் ஆற்றுவழிப் போக்குவரத்திற்கு சுலபமான வழி பிறந்தது. அதனால் மேற்கத்திய ஐரோப்பிய துறைமுகங்களுடன் தொடர்பு கொள்ள வழிவகை கிட்டியது. சௌத்தாம்டன், யார்மௌத், போர்த்ஸ்மத், தென்பால் கடற்கரைத் துறைமுகங்கள் போன்றவை சிறந்த துறைமுக நகரங்களாயின. ஆற்றங்கரையில் அமைந்த கிராமங்களும் நகரங்களாகப் பெருகி வளர்ந்தன. கிளசெஸ்டர், ஆக்ஸ்போர்டு, ஸ்டார்ட்போர்டு முதலியன ஆற்றங்கரை நகரங்களாம்.

பெரும் மடாலயத்தைக் கொண்டிருந்த இடங்களும் பெரும் நகரங்களாயின. மடாலயத் துறவிகளைக் காணவந்த பிரபுக்களும் அவர்களின் படைவீரர்களும், துணைவர்களும் வாணிபம் பெருகி வளர வாய்ப்பினை நல்கினர். பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ், செயின்ட் ஆல்பன்ஸ், ஆபிங்டன் முதலானவை மடாலய நகரங்கள். வார்விக், அருண்டேல், லங்காஸ்டர் முதலானவை கோட்டையைச் சுற்றி எழுந்த நகரங்களாகும்.

சில நகரங்கள் மேற்கூறிய பல்வேறு காரணங்களையும் ஒன்றிணைத்துப் பெருகி வளர்ந்தன. எடுத்துக்காட்டாக ஆக்ஸ்போர்டு பாலநகரமாயிருந்ததுடன், நார்மானிய கோட்டையொன்றையும், இரு மடாலயங்களையும் கொண்டிருந்தமையால் பெருநகரமாக வளர்ந்தது. டர்ஹாமில் பிஷப்பின் கோட்டையும். திருக்கோயிலும் இருந்தன. செப்ஸ்டோவ் கடற்கரைத் துறைமுகமாயிருந்ததுடன் எல்லைப் பிரபுவின் கேந்திரமாகவும் இருந்த நகரமாகும்.

இலண்டன் நகரம் ரோமானியர் காலந்தொட்டு இங்கிலாந்தின் தலைசிறந்த நகரமாய் இருந்தது. அந்நகரத்துக்கு நில நீர்ப்போக்கு

வரத்துத் தொடர்புகளைப் பெற்று ஏனைய ஆங்கில நகரங்கள் பெருத சிறப்பினைப் பெற்றிருந்தது. அந்நகரத்திலிருந்த சிறப்பான பாலம் அந்நகரத்திற்கு வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் வந்த சாலைகள்ச் சந்திக்கும் இடமாக அமைந்து வளர்ச்சியுற வழியாயிற்று. மேற்கத்திய ஐரோப்பிய கப்பல்கள் கிழக்கில் தேம்ஸ் ஆற்றுக் கழிமுகத்தில் அமைக்கப்பெற்ற துறைமுகத்தால் சிறப்பு பெற்றது.

டேனியப் படையெடுப்பினுல் பல நகரங்கள் அமைக்கப் பெற்றன. டேனியர் பெருநகரங்களை அமைத்தவர்கள். டெர்பி, நாட்டிங்ஹாம், லிங்கன், லெஸ்டர், ஸ்டாம்போர்டு ஆகிய பரோக்கள் டேனியர் காலத்தவை. நார்ஸ் குடியேற்ற நகரமாக எழுந்தது நார்விச்· பிரிட்ஜ்நார்த், டாம்வொர்த், வார்விக், டௌசெஸ்டர், பங்கிங்ஹாம், மால்டன் போன்ற நகரங்களை ஆல்பிரட் அரசரும், அவருடைய சந்ததியாரும் அமைத்தனர். மரச்சுவர்களைச் சுற்றிப் பாதுகாப்பாக அமைக்கப்பட்ட இடங்கள் பரோ எனப்பட்டன. டூம்ஸ்டே நூலில் ஏறக்குறைய· நூறு பரோக்கள் கூறப்பட்டுள்ளன. இலண்டன், பிரிஸ்டல், நார்விச், வின்செஸ்டர், லிங்கன், யார்க் முதலானவை பெரும் பரோக்கள். இலண்டனைத் தவிர ஏனைய நகரங்களில் ஏழு அல்லது எட்டாயிரம் பேர்களுக்கு மேல் மக்கள்தொகை வாழவில்லை.

நகரங்கள் பல்வேறு படைமானிய வரிகளுக்காளாயின வாணிகப்பெருக்கத்தால் இந்நகரங்கள் செல்வ வளம்பெற்று படைமானிய வரித்தொல்லைகளிலிருந்து பெரும் பொருள் கொடுத்துத் தம்மை விடுதலையாக்கிக் கொண்டன. நார்மானிய வெற்றியின் போது பெரும்பாலான நகரமக்கள் படைமானிய அடிமைத் தளையிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டனர். சொந்தத் தொழில்களைச் செய்யவும், எங்கு வேண்டுமானுலும் செல்வதற்குமான சுதந்திரத்தையும் நாளடைவில் அவர்கள் பெற்றுர்கள். ஆண்டானின் சேவகத்திலிருந்து தப்பியோடிய அடிமைகள் ஓராண்டும் ஒரு நாளும் நகரமொன்றில் வாழ்ந்து விட்டார்களானுல் அவர்களைச் சுதந்திரக் குடிமக்கள் எனக் கொண்டனர்.

எனினும் சில நகரமக்கள் பல்வேறு பணிகளைச் செய்யவும், வரிகளை ஏற்கவும் வேண்டியவராயினர். இது பல நூற்றுண்டுகள் தொடர்ந்தது. நகரமக்கள் சுதந்திரம் பெற்றது அவர்களின் ஆண்டானையும் பொறுத்திருந்தது. அரசரையே ஆண்டானுகக் கொண்ட நகரங்கள் எளிதில் சுதந்திரம் பெற்றன. யார்க், நார்விச், வின்செஸ்டர் சவுத்தாம்ப்டன், கிளசெஸ்டர் போன்ற நகரங்கள் அரச சாசனம் பெற்று விடுதலை யடைந்தன,

நகரங்களுக்கும் மடாலயத் துறவிகளுக்கும் சச்சரவேற்பட்டது. நகரங்கள் விடுதலை பெறுவதை மடாலயங்கள் விரும்பவில்லை. அதனால் சச்சரவேற்பட்டது.

நகரங்களை ரீவு எனப்படும் அதிகாரி ஆண்டார். அவர் அந் நகரம் அமைந்திருந்த கவுன்டியின் ஷெரிப்புக்கு அடங்கியவர். ஷெரிப் அரசாங்கப் பிரதிநிதி. வரிகளை வசூல் செய்வதும் நகரத்தைப் பாதுகாப்பதும் ரீவின் பணிகளாம்.

சாசனம் பெற்ற நகரக் குடிமக்கள் பர்ஜஸ் எனப்பட்டனர். தொடக்கத்தில் நிலபுலன், வீடு ஆகிய வசதி பெற்றவர்களையே பர்ஜஸ் என்றனர். நகரங்கள் வளர்ச்சியுற்ற போது பிற குடிமக் களின் எண்ணிக்கையை விடக் குறைவாக இருந்த இப் பர்ஜஸ் மக்கள் தங்கள் சலுகைகளைக் காத்துக் கொள்ள முயன்றனர்.

சிறுபான்மையினரான அவர்களின் கையில் தான் நகரத் தின் நிர்வாகப் பொறுப்பு விடப்பட்டது. நகரத்தை ஆளும் முக்கிய அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பும் அவர்கள் வசமேயிருந்தது. அப்படிப்பட்ட அதிகாரிகளில் தலையானவர் மேயர் எனப்பட்டார். பிற உறுப்பினர்கள் ஆல்டர்மன் எனப் பட்டனர். கி.பி. 1191ஆம் ஆண்டு இலண்டன் மாநகர் அதன் முதல் மேயரைத் தேர்ந்தெடுத்தது. லின் என்ற நகர் கி.பி. 1204ஆம் ஆண்டிலும், பிரிஸ்டல் 1217 ஆம் ஆண்டிலும் தத்தம் மேயர்களைத் தேர்ந்தெடுத்தன. மடாலயத் தலைவர் படைமானிய உரிமைகளை நுகர விழைந்ததால், காவன்ட்ரி என்ற மடாலய நகரம் கி.பி. 1348ஆம் ஆண்டு வரை மேயரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை.

இடைக்கால ஆங்கில நகரங்கள் இத்தாலிய பிளாண்டர்ஸ் அல்லது ஜெர்மானிய நகரங்களைப் போன்று செல்வச் செழிப்பை யும், சுதந்திரத்தையும் பெற்றிருக்கவில்லை என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். இங்கிலாந்தில் அரசியல் ஒற்றுமை உணர்வு வளர்ந்து வந்ததால் சுதந்திர வகுப்புகள் ஏற்படுவதை அவ் வுணர்ச்சி தடுத்து விட்டது. இருப்பினும் இங்கிலாந்து நகரங்கள் உண்மையிலேயே நல்ல முறையில் தல சுயாட்சி நிறுவனங்க ளால் ஆளப்பட்டன. நகரங்களும், ஷயர்களும் சேர்ந்து காமன்ஸ் எனப்பட்டது. காமன்ஸ் பிரதிநிதிகள் தான் காமன்ஸ் சபைக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். காமன்ஸ் சபை உறுப்பினர்கள் நகரங்களிலும், ஷயர்களிலும் தல ஆட்சி முறையைக் கற்றுக் கொண்டனர்.

பர்ஜஸ் குடிமக்கள் நகரங்களில் பொதுக் கூட்டங்களைக் கூட்டுவதில் பெருமை கொண்டனர்.

நகர வாழ்வில் சில குறைபாடுகளும் இருந்தன. முதலாவது, மக்கள் இந் நகரங்களில் நரக வாழ்க்கையே வாழ்ந்து வந்தனர். அவர்கள் சொல்லொணுத் துயர்களுக்கு ஆளாயினர். பணக்காரர் களின் வீடுகளைத் தவிர, ஏனையோர் மரத்தாலும், கூரையாலும் வேயப்பட்ட வீடுகளில் வாழ்ந்தனர், இவ் வீடுகள் சுலபமாகத் தீப்பற்றி எரியக் கூடியவை. குறுகிய தெருக்களையும், அசுத்த மான சுற்றுப் புறங்களையும் இவ்வீடுகள் கொண்டிருந்தன. இரண் டாவது, இந்நகரங்களில் சுகாதாரவாழ்க்கை என்பதே தெரிந்தி ருக்கவில்லை. மூன்ருவது, இந்நகரங்களில் பொருள் விற்போர், போக்கிரிகள், திருடர்கள் ஆகியோர் வாழ்ந்து வந்தனர். பெருங் கூச்சல்களாலும் இந்நகரங்கள் அவதியுற்றன.போலீஸ் படையினர் அப்போது உருவாக்கப்படவில்லை. மக்கள் பல்வேறு வண்ணங் களினுலான அழகிய உடைகளை உடுத்திருந்தனர். எனினும் வறியோரும் வாழ்ந்து வந்தனர். தொற்று நோய்களுக்கு ஆளான இம் மக்கள் சுத்தமாக வாழும் முறையை அறிந்திருக்கவில்லை.

(கா) கில்டுகள் எனப்படும் கூட்டுறவுக் கழகங்கள்:- இடைக் காலத்து நகரமக்கள் தங்கள் அண்டை வீட்டுக்காரர்களைப் பொருமையுடன் நோக்கினர். தம் நகரத்தவர்களைத்தவிர ஏனைய நகரமக்களை அவர்கள் 'அந்நியர்கள்' எனக் கருதி அவர்களை சந்தேகக் கண்கொண்டு பார்த்தனர். அந்நிய வணிகரை நகரின் சுற்றுச்சுவருக்கு வெளியே நிறுத்திவிட்டு, அவர் வரி யொன்றைக் கட்டின பின்னர் நகரவாயிலுக்குள் அனுமதித்தனர். பெரும்பாலான இடங்களில் நகரத்தின் வாணிபத்தைக் கட்டுப் படுத்திய நிறுவனத்திற்கு வாணிபக் கில்டு அல்லது வாணிபக் கூட்டுறவுக் கழகம் என்றனர். இத்தகைய கழகம் நார்மானிய வெற்றிக்குப் பின்னர் இங்கிலாந்தில் பிரபலமானது. பர்போர்டில் இருந்த கூட்டுறவுக்கழகமே இங்கிலாந்தின் தொன்மையான கில்டு என்று குறிப்புகள் கூறுகின்றன.

தொடக்கத்தில் எல்லா வணிகர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டு இக் கூட்டுறவுக் கழகம் செயல் பட்டது. ஒவ்வொரு பரோவிலும் பொருளை விற்பதும் வாங்குவதும் இக்கழகத்தின் சிறப்பான பணியாகும். இக்கழக விதிகளை வணிகர் ஒவ்வொரு வரும் கடைப்பிடிக்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டனர். நியாயவிலைக்குப் பொருள்களை விற்பதும், நியாயமான இலாபத் தைப் பெறுவதும் இக் கழகத்தின் இலட்சியங்கள். ரொட்டி,

சாராயம் ஆகியவற்றை விற்க தனிக் கழகங்கள் இருந்தன. கோதுமை, பார்லி ஆகியவற்றின் விலைக்கேற்ற இவற்றின் விலைகள் நிர்ணயிக்கப்பட்டன. மக்களை ஏமாற்றிய வணிகர்கள் தண்டிக்கப் பட்டனர். குற்றவாளிகளான வணிகர்களைத் தண்டிக்கச் சந்தை கடையிலேயே மரச்சட்டம் ஒன்று வைக்கப்பட்டிருந்தது.

வணிகர் கழகம் நகரத்தின் வர்த்தகத்தையும் விலையையும் கட்டுப்படுத்தியது என்பதை இதன்மூலம் அறிகிறோம்.

வணிகர் கழகத்தைப் போன்று தொழிலாளர் கழகமும் அமைக்கப் பெற்றிருந்தது. பொற்கொல்லர், நெசவாளர்கள், மீன்பிடிப்போர், துணிக்கடைக்காரர்கள், சிறு பொருள் விற்போர் ஆகியோருக்குத் தனித்தனியாக தொழிற் கழகங்கள் அமைக்கப்பட்டன. இத்தொழில்களில் இறங்குபவர் களைப் பயிற்றுவிக்கப் பல படிகள் இருந்தன. இளம் வயதில் தொழிலைக் கற்றுக்கொள்ளச் சென்ற ஏழு வயது பிள்ளைகளைக் கற்றுக்குட்டிகள் என்றனர். சிலகாலம் தொழிலைக் கற்றுக் கொண்ட பின்னர் அவர்களைக் கூலிக்கு உழைக்கும் தொழிலாளி கள் என்றனர். இந்நிலையிலிருந்து கடுமையாக உழைத்து முன்னேறிய தொழிலாளர்களை எஜமானத் தொழிலாளர்கள் என்றனர்.

தொழிலாளர்களுக்குரிய ஊதியத்தையும் கூலியையும் இத் தொழிலாளர் கழகங்கள் நிர்ணயித்தன. தொழிலின் தரத்தை யும் அவை தீர்மானித்தன. சீரிய தொழில்திறனையே இக்கழகங் கள் குறிக்கோளாகக்கொண்டன. தொழிலில் தவறு செய்யும் தொழிலாளியை அவனுடைய நண்பர்கள் பழித்துத் தூற்றினர். இருப்பினும் தொழிலாளர்கள் பன்முறை மக்களை ஏமாற்றினர்.

இக்கழகங்கள் பல சமூகத் தொண்டுகளைச் செய்தன. வயதான வர்களுக்கும், பிணியுற்றோர்க்கும் நிதியுதவின. இறந்துபோன தொழிலாளியின் குடும்பத்தினர் வறுமையால் வாடாதிருக்கப் பொருளுதவி செய்தன. இளம் பிள்ளைகளுக்கான கல்வியைக் கற்றுக் கொடுக்கத் தேவையான ஏற்பாடுகளையும் இக் கழகங்கள் செய்தன. அவை முயற்சி செய்ததன் பலனாக பல இலக்கணப் பள்ளிக் கூடங்கள் கார்பஸ் கிறிஸ்டி கழகம் கேம்பிரிட்ஜில் கல்லூரி யொன்றைத் திறந்தது. இன்று கூட இலண்டன் துணிக்கடை வணிகர் கழகமும், பொற்கொல்லர் கழகமும் மாணவர்களுக்கு உதவிப் பணம் கொடுத்து வருகின்றன.

இவற்றைத் தற்காலத் தொழிற் சங்கங்களுக்கு ஒப்பிடலாம். இருப்பினும் தொழிலாளர் கழகமும் இன்றைய தொழிற் சங்கமும் பல வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. தற்காலத் தொழிற் சங்கம் தரத்தைப் பற்றி அக்கறைகாட்டுவதில்லை. ஆனல் இடைக்காலத் தொழிலாளர் கழகம் தரத்தைக் காத்து வந்தது.

தொழிலாளர் கழகங்கள் புனிதத் துறவிகளின் பெயர்களைத் தாங்கி வந்தமையால் அவை சமயத்தோடு நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தன. கில்டு மன்றங்களுடன் இணைந்து திருக்கோயில்கள் கட்டப்பட்டன. இதனல் சமய நாடகங்கள் எழவும் வாய்ப்பேற்பட்டன. ஆண்டிற் கொருமுறை இத்தொழிலாளர் கழகங்களும், வணிகர் கழகங்களும் மக்களுக்கு பொழுது போக்கும் நிமித்தமாக பல கலைவிழாக்களை நடத்தின. யார்க், நார்விச், கவெண்டரி போன்ற பெரு நகரங்களில் இந்நாடகங்கள் வெகு சிறப்பாக நடத்தப்பட்டன. பிற்காலத்தில் எழுந்த ஆங்கில நாடகங்களின் தொடக்கத்தை இக்கலைவிழாக்களில்காணலாம். நார்விச் தொழிலாளர்கள் பன்னிரண்டு குழுக்களாகப் பிரித்து ஒவ்வொரு குழுவும் ஆண்டிற்கொருமுறை கலைக் காட்சிகளை நடத்தின. துணிக்கடை வணிகர்கள் உலகம் உண்டான விதத்தை நாடகமாக நடத்திக் காட்டின. பலசரக்குக் கடைக்காரர்கள் சுவர்க்கத்தை படம் பிடித்துக் காட்டி கொல்லர்கள்னர். டேவிட் மற்றும் கோலியாத் போன்ற நாடகங்களை நடித்தனர். இந்நாடகங்கள் பல முறைகள் வெவ்வேறு நகரங்களில் நடித்துக் காட்டப் பெற்றன. இலண்டன் நகர மேயர் இன்றும் இது போன்ற நாடகங்களை நடத்திக் காட்டுவது இடைக்காலத்தின் தொடர்பினை நினைவு கூர்வதாக இருக்கிறது. நடித்தவர்கள் தத்தம் சொந்த ஆடை அலங்காரங்களை தைத்துக் கொண்டனர். அவர்கள் தங்கள் முகத்தில் விகாரமான வண்ணங்களையும் பூசிக் கொண்டு நடித்தனர். பொது மக்களைத் திருப்திப் படுத்த முயன்ற இந்நாடகங்களின் போது இசையும் இணைந்திருந்தது. பல்வேறு இசைக் கருவிகள் இருந்தன.

# 26. மூன்றும் எட்வர்டு மன்னரின் ஆட்சி [1327-1377]

## (அ) ஆட்சியும் குணவியல்புகளும்

மூன்றும் எட்வர்டு அரசராக முடி சூட்டப்பட்டபோது அவருக்கு பதினுன்கு வயதே நிரும்பியிருந்தது. இவரது ஆட்சியின் முக்கியத்துவம் இவரது குணத்திலும் பணி செய்த முறையிலும் அறியப்படுவதன்று. இரண்டாம் ஹென்றி, முதலாம் எட்வர்டின் ஆட்சியின் சிறப்பு அவர்களது பணியிலும், குணத்திலுமே அறிய முடியும். மூன்றும் எட்வர்டு மற்றொரு முதலாம் ரிச்சர்ட் போன்று சேவை செய்தார். இவரது முக்கிய பங்கு போரிலும் மற்றவற்றிலும் நன்கு புலப்படும். தம் தந்தையால் புறக்கணிக்கப் பட்டிருந்த அவரை அவருடைய தாயார் கண்காணித்து வந்தார். அரசியார் இஸபெல்லா தம் கணவனை வெறுத்து ரோஜர் மார்டிமருடன் காதல் கொண்டிருந்தார் என்பதை அறிந்த எட்வர்டு வெட்கமும் வேதனையும் உற்றூர். கி. பி. 1327 இல் கூடிய பாராளுமன்றம் இளம் அரசருக்கு நிர்வாகத்தில் உதவி செய்யக் குழுவொன்றை நியமித்தது. இக்குழுவில் 4 ஏர்ல் பிரபுக்களும், 4 பிஷப்புகளும், 6 பாரன் பிரபுக்களும் உறுப்பினராய் நியமிக்கப்பட்டனர். இருப்பினும் அரசியார் இஸபெல்லாவே அரசரின் பிரதிநிதியாக நிர்வாகம் முழுவதையும் கவனித்துக் கொண்டார். ரோஜர் மார்ட்டிமர் அரசியின் பின்னல் இருந்து ஆட்டிவைத்தார். இளம் அரசருக்கு அரசியல் விவகாரங்களை அறிவிக்காமலும் தம்மை எதிர்த்தவர்களுடன் அரசருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்படாமலும் தடுத்து வந்தனர். பிரபுக்களும் நாட்டு மக்களும் நாட்டின் உண்மை நிலவரம் புரிய நீண்ட நாட்கள் ஆயின. அரசருக்கு அதைவிட அதிக காலம் தேவைப்பட்டது.

தொடக்கத்தில் அரசியலமைப்பின் அடிப்படையிலேயே அரசாங்க நிர்வாகம் அமைந்திருந்தது. பழைய சாசனங்கள் மீண்டும் உறுதி செய்யப்பட்டன். நல்லாட்சியை நிலை நிறுத்த அரசாங்கம் ஆவன செய்யுமெனப் பாராளுமன்றத்திற்கு வாக்குறுதிகள் வாரி வழங்கப்பட்டன. இரண்டாம் எட்வர்டு மன்னரின்

ஆட்சிக் காலத்தில் தண்டிக்கப் பெற்றிருந்தவர்களின் பண்ணை களும், பதவிச்சின்னங்களும் திரும்பி வழங்கப் பெற்றன. மார்ட்டி மரின் அதிகாரம் இன்னும் வெளிப்படையாகத் தென்படவில்லை. புதிய அரசர் முடிசூட்டிக் கொண்ட மூன்று மாதங்கள் பூர்த்தி யாகும் முன் ஸ்காட்டியர் கி. பி. 1323 இல் செய்து கொண்ட போர் நிறுத்த ஒப்பந்தத்தை மீறி இங்கிலாந்தின் வட எல்லையில் நார்த்தம்பர்லர்ந்து, டர்ஹாம் ஆகிய மாவட்டங்களைத் தாக்கினர். உள்நாட்டிலும் நாட்டுப்புறங்கள் சூறையாடப் பட்டன. ஸ்காட்டிய அரசர் ராபர்ட் புரூஸ் இப்பொழுது தலைவராக இருக்கவில்லை. குட்ட நோயுற்றுப் படுத்த படுக்கையாக இருந்த அவர் சிறிது காலத்தில் காலமானார். அவருடைய நண்பர்களான சர் ஜேம்ஸ் டக்லஸும் மோரேயின் பிரபுவான ரண்டால்ப்பும் படையெடுப்பாளர்களின் தலைவர்களாயினர். 20,000 பேர் கொண்ட இப் படையெடுப்பாளர் கள் இங்கிலாந்திற்கு சொல்லொணுத் துயர் விளைவித்தனர்.

**நார்த்தாம்டன் உடன்படிக்கை:-** இப்படையெடுப்பை முறி யடிக்கும் பொறுப்பினை இளம் அரசரே ஏற்ருர். மார்ட்டிமரும் அரசருடன் கூடச் சென்ருர். படைமானிய படைகளும், ஷயர் களிலிருந்து திரட்டப்பெற்றிருந்த படையினரும் அவர்களை பின் தொடர்ந்தனர். இருப்பினும் அவர்களால் ஸ்காட்டியரை வெல்ல முடியவில்லை. ஸ்காட்டியர் ஆங்கிலேயரை அலைக்கழித்தனர். பானக்பர்ன் தோல்வி ஆங்கிலேயரின் நினைவில் நின்றதால் அவர்கள் மற்ருெரு தோல்வியை விரும்பவில்லை. அரசியரும் மார்ட்டிமரும் ஸ்காட்டியருடன் உடன்படிக்கை செய்துகொள்ள தீர்மானித்தனர். ஸ்காட்டியருடன் பேச்சுவார்த்தைகள் தொடரப் பட்டன. இதன் விளைவாக கி. பி. 1328ஆம் ஆண்டில் நார்த் தாம்டன் உடன்படிக்கை இங்கிலாந்திற்கும் ஸ்காட்லாந்திற்கு மிடையே முடிவாயிற்று. இதன்படி ஸ்காட்லாந்தின் சுதந்திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இவ்வுடன்படிக்கை இங்கிலாந்தின் கௌரவத்தை பாதித்தது. முதலாம் எட்வர்டு அரசர் காலத்தில் கொண்டு வரப்பட்ட ஸ்காட்லாந்திய சிம்மாசனமும் பொக்கிஷமும் ஸ்காட்டியரிடமே திருப்பிக் கொடுக்கப்பட்டது. ராபர்ட் புரூஸின் இளம் வயது மகன் டேவிட்டிற்கு இங்கிலாந்து அரசர் தன் சகோதரி ஜோன் என்பவளை மணம் முடிக்கும் வாக்கு கொடுத்தார். ஆங்கில பிரபுக்களால் கைப்பற்றப்பட்ட பகுதிகளை திருப்பிக் கொடுக்கவும், தம் படையெடுப்பினுல் ஏற்பட்ட சேதத்திற்கு நட்ட ஈடு ஆக 20,000 பவுன்களை மூன்று தவணைகளில் கொடுத்து விட வும், ஸ்காட்டியர் ஏற்றுக்கொண்டனர். இவ்வுடன்படிக்கையால் முதலாம் எட்வர்டு ஸ்காட்லாந்தில் செய்த பணிகள் யாவும் பயனற்றுப் போயின.

மார்ட்டிமர் பிரபு:- இவ்உடன்படிக்கை மூலம் ஸ்காட்டியரது அபாயம் முற்றும் நீங்கப்பெற்றது. இதனால் மார்டிமர் தம் முரட்டு சுபாவத்தையும், சட்டத்தை மதியாத தன்மையையும் வெளிப் படையாக காட்டத் தொடங்கினர். ஸ்காட்லாந்துடன் செய்து கொண்டது போன்றே பிரான்சுடன் காஸ்கனி விஷயத்திலும் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அதன் விளைவாக, இங்கி லாந்து ஏறத்தாழ மூன்றிலொரு பகுதியை விட்டுக்கொடுக்க வேண்டியநிலை ஏற்பட்டது. மக்கள் இதனால் மிக்க வருத்தம் அடைந்தனர். காட்வின் பிரபு முன்னர் எப்படி தமது தன்னலத்தை பெருக்கிக் கொண்டாரோ அதே போல மார்ட்டி மரும் பெருக்கிக்கொண்டார். விக்மூர், சிர்க் பகுதிகளின் வாரிசுரி மையைப் பெற்று அப்பகுதிகளின் ஆதிக்கத்தைப் பெற்றார். மேலும் தம்மையே தம் வாழ்நாள்வரை எல்லைப்புறத்தின் எர்லாக வும், வேல்ஸின் ஜஸ்டீசியராகவும் கருதினர். டெஸ்பென்ஸர், அருண்டேல் இவர்களுடைய சொத்தைப் பறிமுதல் செய்து தம தாக்கிக் கொண்டார். இங்கிலாந்தின் பெரும் பிரபுக்களின் குடும் பங்களுக்குத் தம்முடைய பெண்களைத் திருமணம் செய்வித்து, அப் பெருங்குடும்பங்களுடன் உறவை ஏற்படுத்தினர். அரசருக்குச் சொந்தமான உரிமை நிலத்தில் பெரும்பகுதியை இஸபெல்லா வுக்கு உரிமைப்படுத்தினர். தம் அணுக்க நண்பர்களுக்கு அர சாங்கத்தில் பெரும் பதவியைக் கொடுத்தார். ஆர்லப்டன் என்ற ஹெரிஃபோர்ட் பிஷப்பைத் தம் நிதி பாதுகாவலராக நியமித் தார். இந்த பிஷப்பு இரண்டாம் எட்வர்டை பதவியினின்று விலக்க லண்டன் மாநகர மக்களைத்தூண்டிவிட்டுக் கிளர்ச்சி செய்தவர். மார்ட்டிமர் தம்மைச் சுற்றி180 படைக்கலம் தரித்த வீரர்களை கூட்டிச்சென்றார். எப்போதும் ஏனைய பிரபுக்களை அச் சுறுத்தவும் தம்மை எதிர்த்தவர்களை அடக்கவும் முற்பட்டார் மார்ட்டிமர். கி. பி. 1323ஆம் ஆண்டில் சாலிஸ்பரியில் நடை பெற்ற பாராளுமன்றத்திற்கு படைவீரர்களுடன் வந்து அவரைக் கண்ட ஏனைய பிரபுக்கள் மார்ட்டிமர் தம்மை கைது செய்து விடு வாரோ என்று அஞ்சி வின்செஸ்டருக்கு ஓடிப்போனார்கள். மேலும் அரசியாருக்கும் அவருக்கும் இருந்த தொடர்பை அறியத் தொடங்கினர். அவர்களின் கள்ளக்காதல் மக்களுக்குத் தெரிந்த போது அவர்கள் சொல்லொணா வேதனைப்பட்டனர்.

இருப்பினும் மேலும் மூன்று ஆண்டுகள் அவர் பதவி வகித் தார். அரசரின் உறவினர்களான கென்ட் பிரபு எட்மண்டும், நார்பக் பிரபு தாமஸும், லங்காஸ்டர் பிரபு ஹென்றியுடன் சேர்ந்து கொண்டனர். இவர்கள் அனைவரும் மார்ட்டிமரின் செல்வாக்கைப் பெரிதும் விரும்பிய அவர்கள் மார்ட்டிமரின் ஆதிக்

கத்தை எதிர்த்தனர். கென்ட் பிரபு இவர்களின் தலைவர் ஆனார். எனவே கென்ட் பிரபுவைத் தொலைக்க மார்ட்டிமர் சதியொன்றில் ஈடுபட்டார். இரண்டாம் எட்வர்டு சாகவில்லையென்றும், அவருக்குப் பின்னர் கென்ட் பிரபுவை அரசராக்க அவர் நினைத்திருந்தார் என்றும் கென்ட் பிரபுவை நம்பும்படி செய்து அவரைக் கடிதம் எழுதும்படி தூண்டிய மார்ட்டிமர் அக்கடிதத்தைக் கைப்பற்றிக் கொண்டு, துரோக குற்றத்திற்காக கென்ட் பிரபுவை சிறையில் அடைத்தார். பின்னர் விசாரணை செய்யப்பட்டு கென்ட் பிரபு சிரச்சேதம் செய்யப்பட்டார். தம்மைக் கொலை செய்ய கென்ட்பிரபு எண்ணியிருந்தார் எனக்கூறி மூன்றும் எட்வர்டையும் ஏமாற்றி, மார்ட்டிமர் கென்ட் பிரபுவின் மரணதண்டனைப் பத்திரத்தில் கையொப்பம் வாங்கினார். கென்ட் பிரபுவின் நிலங்களை மார்ட்டிமர் பறித்துக்கொண்டு நாட்டிலேயே பெரும் பணக்காரர் என்ற நிலைக்கு உயர்ந்தார். கென்ட் பிரபுவை மக்களும் பிரபுக்களும் விரும்பியிருந்தனர், அவருடைய கொலையைக் கண்டு மனம் வெதும்பிய அவர்கள் செய்வதறியாது திகைத்தனர். மார்ட்டிமரின் அடாத செயல்கள் தெளிவாகத் தொடங்கின. இருப்பினும் மார்ட்டிமரின் வீழ்ச்சிக்கு மக்கள் காரணமாகவில்லை; அரசரே காரணமானார். மூன்றுண்டு காலம் தம் தாயாரும் அரசியுமான இசபெல்லாவும், மார்ட்டிமர் பிரபுவும் தம்மை ஆட்டிப் படைத்ததை உணர்ந்த அரசர் இனி தாமே நேரிடையாக ஆட்சி செய்யவிரும்பினார். அவருக்கு அப்போது வயது18; ஹைனுல்டைச் சார்ந்த பிலிப்பா என்பாளை அவர் மணந்திருந்தார். அவர்களுக்கு ஆண் குழந்தையொன்றும் பிறந்து இருந்தது. அக்குழந்தையின் பெயரும் எட்வர்டே. அவரே பின்னர் கருப்பு இளவரசர் (Black Prince) என்று அழைக்கப்பட்டார். அரசர் தம் தாயாரின் சொற்களைக் கேட்காமல் தாமே ஆட்சி செய்யத் தலைப்பட்டார். மார்ட்டிமரின் கைப்பாவையாகத்தாம் ஆக்கப்பட்டு இருப்பதையும், அவர் மெல்ல உணர்ந்து கொண்டார். இத்தகைய சூழ்நிலையைத் தவிர்க்க அரசர் முற்படலானார்.

**மார்ட்டிமரின் வீழ்ச்சி:-** கி. பி. 1330 ஆம் ஆண்டில் அரசர் நாட்டிங்ஹாமில் தங்கியிருந்தார். அரசியாரும் மார்ட்டிமரும் கோட்டையில் தங்கியிருந்தனர். அவர்களுடைய கோட்டையைக் காவலர்கள் நன்கு பாதுகாத்து நின்றனர். சர் வில்லியம் எலாண்டு என்ற கவர்னர் எட்வர்ட்டுக்கு சுரங்கப்பாதையொன்றைக் காட்டினார். அதன் வழியே தம் நண்பர் மாண்டாகூட் பிரபு வில்லியம் என்பாருடன் மார்ட்டிமரும் அரசியாரும் தங்கியிருந்த கோட்டைக்குச் சென்றார் எட்வர்டு. லிங்கன் பிஷப்புடன் உரையாடிக் கொண்டிருந்த மார்ட்டிமர், அரசர் கோட்டைக்குள் வருவதைக்

கண்டு வியப்புற்றார். மார்ட்டிமர் பிரபு கைது செய்யப்பட்டார். உடனே இரு தரப்பினருக்கும் இடையே கைகலப்பும் மோதலும் ஏற்பட்டன. அரசரது ஆட்களின் கை ஓங்கும் முன் இரு நைட் வீரர்கள் கொலை செய்யப்பட்டனர். மார்ட்டிமர் கைது செய்யப் பட்டிருப்பதைக் கேள்வியுற்ற அரசி இஸபெல்லா, 'அன்புமகனே, நல்லவரான மார்ட்டிமருக்கு கருணை காட்டு' என்று கூக்குரலிட் டார். ஆனால் அரசியார் இழுத்து செல்லப்பட்டு மதிப்புடன் வைத்து நடத்தப்பட்டார். 1330 ஆம்ஆண்டு அக்டோபர் 19 ஆம் நாள் மார்ட்டிமர் பிரபு விலங்கிடப்பட்டார்.

ஒரு திங்கள் கழிந்த பின்னர் அரசர் பாராளுமன்றத்தின் இரு சபைகளையும் கூட்டி மார்ட்டிமர் பிரபுவின்மேல் விசாரணை நடத்தினார். இரண்டாம் எட்வர்டைக் கொன்றதையும் சாலிஸ்பரி பாராளுமன்றத்தை அச்சுறுத்தியதையும், பல கோட்டைகளையும், மேனர் பண்ணைகளையும் அரசருடைய அனுமதியின்றி பறித்துக் கொண்டதையும், குற்றங்களாக சுட்டிக் காட்டினார் அரசர். அரச துரோக குற்றத்திற்காக அவர் கழுவேற்றப்பட வேண்டுமென்று பிரபுக்கள் சபையினர் ஒரு மனதாக தீர்ப்பளித்தனர். கி. பி. 1330 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29ம் நாள் டைபர்னில் மார்ட்டிமர் பிரபு தூக்கிலிடப்பட்டார்.

குற்றம் புரிந்த அரசியாரின் முடிவு தீர்மானிக்கப்படாமலே இருந்தது. அவளை மூன்றும் எட்வர்டு ரைசிங் கோட்டையில் தங்கும்படி செய்தார். அங்கிருந்து வெளியே செல்ல அவள் அனு மதிக்கப்படவில்லை. 3000 மார்க்குகள் மானியமாக அவளுக்கு கொடுக்கப்பட்டது. இருப்பினும் அரசியார் கைது செய்யப்பட வில்லை. மேலும் 28 ஆண்டு காலம் உயிரோடு இருந்து கி. பி. 1358 ஆம் ஆண்டில் காலமானார்.

கி. பி. 1327க்கும் கி. பி. 1330க்கும் இடையே நடைபெற்ற மார்ட்டிமரின் முறைகெட்ட ஆட்சி முடிவுற்றது. மார்ட்டிமரால் கொலை செய்யப்பட்ட கென்டின் வாரிசுகள் தங்கள் நிலங்களையும் பதவிகளையும் பெற்றனர். மார்ட்டிமரால் நியமிக்கப்பட்டவர்கள் மன்னிக்கப்பட்டனர்.

இங்கிலாந்தின் வரலாற்றில் புதிய அத்தியாயம் ஒன்று தொடங்கியது. இளம் அரசர் தாமே ஆட்சியை மேற்கொண்டார். கி. பி. 1327 ஆம் ஆண்டு முடிசூட்டப்பட்டாலும் அவர் நேராட் சியும், ஆதிக்க உரிமையும் பெற்றது கி. பி. 1330ல்தான். அதுவும் மார்ட்டிமர் வீழ்ச்சியில் இருந்தேயாகும்.

மூன்றும் எட்வர்டின் குணவியல்புகள்:- அழகும், அடக்கமும் பெருந்தன்மையும் கொண்டு விளங்கிய எட்வர்டு, தம் கவர்ச்சியினுல் மக்களின் மனதைக் கவர்ந்தார். அவர் சிறந்த போர் வீரர். ஆடம்பரத்தையும், விளம்பரத்தையும் விரும்பிய அவர், இசை வல்லுநர்; கலையார்வம் மிக்கவர்; சிறந்த கட்டடங்கள் அமைக்கக் காரணமானவர்; கற்ருேரை போற்றும் பண்பினர். தம்முடைய தந்தையாரின்பல வீனங்களைக் கொண்டு இருக்க வில்லையெனினும், அவர் ஒழுக்கம் கெட்டவர்; சொன்ன சொல்லைப் புறக்கணித்தவர். அவசிய மேற்பட்டபோது அவர் கொடூரமான செயல்களைச் செய்யத் தவறவில்லை. இறுதி காலத்தில் அவர்களைச் சுற்றி ஆண்களும், பெண்களுமாக அவர் அன்புக்குப் பாத்திரமாக நின்றனர். பொருளாதாரத்தைப்பற்றி அவர் யாதொன்றும் அறிந்திருக்காததுதான் அவருடைய மாபெரும் குறையாகும். போரில் ஆர்வமும், வெற்றியில் மோகமும் கொண்டிருந்த அவருக்குப் போரினுல் பெரும் பொருள் நட்டத்தை அறிய நாட்டம் ஏற்படவில்லை. ஆக்கிரமிப்பு நோக்கமும் கொண்டிருந்த அவருக்குப் போரினுல் ஆகும் பெரும் பொருள் நட்டத்தை அறிய நாட்டம் ஏற்படவில்லை, முன் கோபமும், ஆக்கிரமிப்பு நோக்கமும்கொண்டிருந்த அவருக்கு பழி வாங்கும் நோக்கும், நெடு நோக்குடைய திட்டங்களை மேற்கொள்ளும் நாட்டமுமிருக்கவில்லை. சுயநலமும், ஆராயாது துணிவும் பண்பும் கொண்டிருந்தாலும் அவருக்குத் தீங்கு விளைவிக்கும் நோக்கிருக்கவில்லை. பேராசைக்கும், ஊதாரித்தனத்திற்கும் இருப்பிடமாக இருந்த அவரை மக்கள் நேசித்தனர். எனவே பல்வேறு புதிய வரிகளைக் கொடுக்க வேண்டியவராயினர். ஆனுல், பாராளுமன்றத்தின் கோரிக்கைகளை அரசர் நிறைவேற்றி, சாசனங்களை அவர் அங்கிகரித்தபோது அவர்கள் மானியம் வழங்கினர். மேலே கூறிய குணங்களை உடயவராக எட்வர்டு திகழ்ந்தார்.

தனது ஆட்சியின் தொடக்கத்தில் நிலவிய நிலை:- கி.பி.1330ம் ஆண்டில் எட்வர்டின் குணவியல்பு சீர்கெடாமல் இருந்தபோது, மக்கள் அவரது ஆட்சியினைப் புகழ்ந்தனர். அவர் இளம் வயதில் தாமே நேராட்சியினை மேற்கொண்டபோது, நாட்டில் அமைதியும் நல்லாட்சியும் மலரத் தொடங்கின. மார்ட்டிமரின் நிர்வாகத்தின் போது நிலவிய குழப்பங்கள் மறைந்து, போர் ஏற்படும் நிலை நிலவியது. மார்ட்டிமரின் நிர்வாகக் குறைகளை நீக்கிய அவர் நீதியின் காவலராக நின்ருர். ஸ்காட்டியரின் தாக்குதலுக்கு உள்ளான வடஷையர்களில் மீண்டும் அமைதி நிலவியது. வாணிபமும் பெருகத் தொடங்கியது. ஆனுலும் இப்பொழுது இரு முக்கிய பிரச்சனைகள் நாட்டை எதிர் நோக்கின. முதலாவதாக, பிரான்ஸ் நாட்டுடன்

சச்சரவேற்பட்டது. ஆங்கிலேயர் பிரான்ஸ் நாட்டில் அக்கவிட்டெ யின் பகுதியின் ஆட்சியாளராக இருந்தனர். அதற்காக ஆங்கில அரசர்கள் ஃபிரான்ஸ் மன்னருக்கு இறைவணக்கம் செலுத்த வேண்டுமெனக் கோரப்பட்டனர். பிரான்ஸ் நாட்டு அரச பரம்பரை யில் இத்தருணத்தில் மாற்றமொன்று நிகழ்ந்தது. இது நாள் வரை ஆண்ட அரசர்கள் ஆண்வழி வந்தவர்கள். ஆண்வழி வந்த அரச பரம்பரை அற்றுப்போய், வலாயைச் சார்ந்த பிலிப் என்பவர் ஆண்டு வந்தார். அவர் வேறொரு வம்ச வழியைச் சார்ந்தவர். தம் தாயாரின் வழியாக மூன்றும் எட்வர்டு முன்பு ஆண்ட ஆண்வழி அரசர்களுடன் சம்பந்தம் கொண்டவர். எனவே பிலிப்புக்கு இறை வணக்கம் செலுத்த மூன்றும் எட்வர்டு தொடக்கத்தில் மறுக்க எண்ணினர். இருப்பினும் எட்வர்டு அவ்வெண்ணத்தை விட்டு இரு முறை ஃபிரெஞ்சு பகுதிகளுக்காக பிலிப்புக்கு இறை வணக்கம் செய்தார். இருப்பினும் எட்வர்டின் நிபந்தனைகளை ஏற்க பிலிப் மறுத்தார். எட்வர்டின் பகுதிகளின் எல்லைகளை ஆக்கிரமித்தும்; காஸ்கனி பிரபுக்கள் பாரிஸ் நகரத்திற்கு மேல் முறையீடுகளை அனுப்ப வேண்டுமென்று கோரியும் பிலிப், இங்கிலாந்து அரசரைப் புறக்கணித்தார். அத்துடன் இரண்டாம் எட்வர்டின் ஆட்சிகாலத் தில் கைப்பற்றிய ஈஜினுய் கவுன்டியையும் திருப்பித்தர மறுத்தார் பிலிப். தென் ஃபிரான்சிலிருந்து ஆங்கிலேயரை விரட்டும் நோக் கத்தை அவர் கொண்டிருப்பது போல் தென்பட்டது. இருப்பினும் தம் திட்டத்தை நிறைவேற்ற உரிய காலம் வரும் வரை காத் திருக்க முடிவு செய்தார் பிலிப். எட்வர்டினுக்கும் பிலிப்பின் உறவுக் கும் இத்தருணத்தில் எந்த ஒரு பெரு மாற்றமும் ஏற்படவில்லை. ஆனுல் எல்லைகளில் சிறு சிறு சச்சரவுகள் நிலவி வந்தன. இரண் டாவது முக்கிய பிரச்சினை ஸ்காட்லாந்து பற்றியது ஆகும். இவ் வாறு எட்வர்டின் ஆட்சியை தொடக்கத்தில் பிரான்ஸுடன் உறவும். நாட்டில் அமைதியை நிலவ செய்யும் பணியும், ஸ்காட் லாந்தின் விவகாரமும் இருந்தது.

மூன்றும் எட்வர்டும் ஸ்காட்லாந்தும்:- ஸ்காட்லாந்து மக்கள் என்றும் முதலாம் எட்வர்டின் காலத்தில் இருந்தும், அதற்கு முன் னும் சுதந்திர வாழ்க்கையினை விரும்பினர். 'மனிதனுக்குச் சுதந் திரமே எல்லா அமைதிகளையும் தருவது ,சுதந்திரமாக வாழ்பவனே சுகவாழ்வு வாழ்பவன்' என்ற கூற்றுக்கு உதாரணமாக அவர்கள் வாழ விரும்பினர். அதனுல்தான் முதலாம் எட்வர்டினுல் அயர் லாந்தை இங்கிலாந்துடன் இணைந்தது போல இணைக்க முயன்றும் அவர் தோல்வியைக் கண்டார். மார்டிமர் நிர்வாகத்தில் செய்யப் பட்ட மானங்கெட்ட உடன்படிக்கையான நார்த்தாம்டன் உடன் படிக்கையின் நிபந்தனைப்படி ஸ்காட்லாந்திலிருந்த ஆங்கில கட்சி

யினரின் நிலங்களை திருப்பித் தரவேண்டுமென ஏற்பாடாயிருந்தது. இப்போது ஸ்காட்லாந்தில் ராபர்ட்புருஸின் மரணத்திற்குப் பின்னர் பதவியெற்ற அவரது மகன் இரண்டாம் டேவிட் இவ்வுடன் படிக்கையின்படி நடக்க ஆர்வம் காட்டினதுடன், அந்த ஷரத்தின்படி நடக்கவும் மறுத்து விட்டார். அந்நிலங்களை ஸ்காட்டிய பிரபுக்கள் பறித்துக் கொண்டிருந்தமையால், அவற்றைத் திருப்பித் தர அவர்கள் இசையவில்லை' ஏற்கனவே அந்நிலங்களை வைத்திருந்த ஆங்கிலேயரை ஸ்காட்டியர் துரோகிகள் என்று கருதினர். 'நிலமற்ற பிரபுக்கள்' என்று கருதப்பட்ட இந்நிலச் சொந்தக்காரர்கள், மீண்டும் தத்தம் நிலத்தைப் பெற முடியாமல் இங்கிலாந்தில் சுற்றியலைந்தனர். இப்பிரபுக்கள் ஜான் பால்யாலின் மகன் எட்வர்டு பால்யாலுடன் உறவு கொண்டனர். எட்வர்டு பால்யாலும் அவர்களைப் போன்று நாடு இழந்தவர் ஜான் பால்யால் ஸ்காட்லாந்தின் அரசராக இருந்தவர். இவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு சதித்திட்டம் வகுத்தனர். அதன்படி ஸ்காட்லாந்தில் எட்வர்டு பால்யாலை அரசராக்குவதுடன் தத்தம் நிலங்களைத் திரும்பப் பெறவும், அவர்கள் முடிவு செய்தனர். எனவே, ரகசியமாக படைகளைத் தயாரித்துக் கொண்டனர். இவர்களின் நடவடிக்கைகளை அறிந்து கொண்ட இங்கிலாந்து மன்னர் மூன்றும் எட்வர்டு தனது எல்லைகளுக்கப்பால் அவர்களை அனுமதிக்க மறுத்து விட்டார். எல்லைப் படையினருக்கு கட்டளை பிறப்பித்து அவர்களுக்கு எவ்வித உதவியும் தரக்கூடாது என்று தடுத்ததுடன் அவசியம் ஏற்படின் படைபலத்தைக் கொண்டும் அவர்களை எதிர்க்க வேண்டுமென ஆணையிட்டார். படையெடுப்பாளர்கள் கப்பல்களை வாடகைக்கு அமர்த்தி ஹம்பர் ஆற்று வழியாக சிறு படையொன்றுடன் ஸ்காட்லாந்து போய் சேர்ந்தனர். அவர்களை எதிர்த்த ஸ்காட்டிய படைகளை அவர்கள் வென்றனர். நிலமற்ற பிரபுக்கள் எட்வர்டுபால்யாலுடன் தம் படைகளுடன் டப்லின் மியூர் (Dupplin Muir) என்னுமிடத்தில் தங்கினர். ஸ்காட்டியப் படை அவர்களை எதிர்க்க முயன்றபோது பால்யாலின் படையிலிருந்த வில் வீரர்கள் மறைந்திருந்து தாக்கி அப்படையைச் சிதற அடித்தனர். அப்போரில் ஸ்காட்டியர் தோற்றனர். அரச பிரதிநிதியான டோனுஸ்டுமார் என்பாரும் கொல்லப்பட்டார். வெற்றி பெற்ற பால்யால் பெர்த் நகரையும், பின்னர் ஸ்டர்லிங்கையும் கைப்பற்றிக் கொண்டார். அவர் ஸ்காட்டிய அரசராக முடி சூட்டிக்கொண்டார். டேவிட் புருஸ் நாட்டை விட்டு வெளியேறி ஃபிரான்ஸ் நாட்டிற்கு சென்று பிலிப் அரசரிடம் தஞ்சம் புகுந்தார். பாலியால், மூன்றும் எட்வர்டின் உதவியைப் பெற வேண்டி எல்லைப்புற காவல் நிலையமாயிருந்த பெர்விக்கை கொடுத்துவிடவும் தயாராக இருந்தார்.

பால்யால் விரட்டப்படல்:- மூன்றும் எட்வர்டு மன்னர், எட்வர்டு பால்யாலின் நிபந்தனைகளை ஆராயவேண்டும் என்ற நோக்குடன் பாராளுமன்றத்தைக் கூட்டினார். இத்தருணத்தில் ஸ்காட்லாந்திலிருந்து வந்த செய்திகள் திசைதிருப்பின. தம் நாட்டைத் திரும்பப்பெற்ற அதே வேகத்தில், பால்யால் ஸ்காட்லாந்தை மீண்டும் இழந்தார். எட்வர்ட் பால்யால் சிறந்த போர் வீரர்தான் எனினும் நிலமற்ற பிரபுக்கள் தம்முடைய நிலங்களை திரும்பிப்பெறவேண்டி, உள்நாட்டில் நிலைநாட்டப் பெற்றிருந்த அமைதிகுலையக்காரணமாயினர். எனவே நாடுமுழுவதிலும் பெருங்குழப்பமான சூழ்நிலை நிலவியது. இதைப் பயன்படுத்திக் கொண்ட புரூஸின் கட்சியினர் சதிதிட்டம் ஒன்றில் ஈடுபட்டனர். டம்ப்ரீஸ் என்ற நகருக்கு அருகில் அன்னுன் என்னுமிடத்தில் பால்யாலும் அவரைக் காத்துநின்ற சிறு காவல்படையினரும் மர்ரேபிரபு ஜான் என்பவரால் நள்ளிரவில் தாக்கப்பட்டு பால்யாலைத்தவிர மற்ற அனைவரும் கொல்லப்பட்டனர். கார்லைல் கோட்டை வாயில்வரை பாலியால் விரட்டப்பட்டார். இரண்டாம் டேவிட் புரூஸ் ஊரிலில்லாததால் அவருடைய பிரதிநிதியாக ஆர்சிபால்ட் டக்லஸ் பதவியில் அமர்த்தப்பட்டார். அவருடைய அதிகாரத்தை எல்லோரும் அங்கீகரித்தனர். மீண்டும் இங்கிலாந்தின் எல்லைப்புறத்தை ஸ்காட்டியர் தாக்கினர்.

பால்யால் ஸ்காட்லாந்தின் அரசராக்கப்படல்:- ஸ்காட்லாந்தின் பதவிக்கு இருவர் போட்டியிட்டனர். இரண்டாம் டேவிட்டும், எட்வர்டு பால்யாலுமே அவ்விருவர். மூன்றும் எட்வர்டு இவர்களில் யாரை ஸ்காட்லாந்து அரசராகத் தேர்ந்தெடுப்பது என்பதைப்பற்றி சிந்தித்தார். இளமைத்துடிப்பும், பேராசையும் கொண்ட அவர் கி. பி. 1327ஆம் ஆண்டு தமக்கேற்பட்ட அவமானத்தைத் துடைக்க முயன்ருர். பால்யாலே ஸ்காட்லாந்தின் அரசர் என அங்கீகரிக்க முடிவு செய்தார் எட்வர்டு. படைபலத்தைக் கொண்டு பால்யாலை அரசராக்க முடிவு செய்தார் எட்வர்டு. ஸ்காட்டியர் இங்கிலாந்தின் மீது அக்காலத்தில் படையெடுத்ததைக் காரணம்காட்டி எட்வர்டு ஸ்காட்லாந்தின் மீது படையெடுக்க முயன்ருர்.

பெர்விக் முற்றுகை:- கி. பி. 1333ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் பெரும் படையொன்றைத்திரட்டி வடஎல்லை நோக்கிப் புறப்பட்டார் மூன்றும் எட்வர்டு. பால்யாலும் நிலமற்ற பிரபுக்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டனர். பெர்விக் பத்துவார முற்றுகைக்குப் பின்னர் உணவுப்பற்றுக்குறையின் விளைவாக சரணடைவது என்றுமுடிவு செய்து அதற்குப்பிணையாக ஆட்களை

யும் நிறுத்தியது. இது நிலமார்க்கதில் நிகழ்ந்தது. சரணடைய தீர்மானித்த நாளுக்கு முன்னர் சர் வில்லியம் இத் என்பாரின் தலைமையில் சிறுபடையொன்று முற்றுகையாளரை ஏமாற்றி, ஊருக்குள் நுழைவதில் வெற்றி கண்டது. எனினும் அவர்களால் ஆங்கிலப்படையை விரட்டியடிக்க முடியவில்லை. இருப்பினும் ஸ்காட்டிய பிரபு பிரதிநிதி பெரும் படையுடன் இருப்பதை அவர்கள் அறிவித்தனர். குறிப்பிட்ட காலம் முடிந்தவுடன். கோட்டைக் கதவுகள் திறக்கப்படாததை அறிந்த ஆங்கில அரசர் எட்வர்டு தம்மிடம் அனுப்பப்பட்டிருந்த பிணையாளர்களைக் கோட்டைக் கதவின் முன் தூக்கிலிட்டுக் கொன்றுவிட்டார்.

பத்துநாட்களுக்குப் பிறகு டக்லஸ் 30,000 பேர் கொண்ட படையுடன் வந்து சேர்ந்தார். போர் செய்வதா அல்லது முற்றுகையை நீடிப்பதா என்று ஆங்கிலேயர் முடிவு செய்ய முடியாது தத்தளித்தனர். தம் படையில ஒருபகுதியைப் பெர்விக் நகரத்தைச்சுற்றி வளைத்துக் கொள்ள ஆணையிட்டு விட்டு, எஞ்சிய படையுடன் பெர்விக் நகரத்திற்கு மூன்றுகல் வடக்கில் ஹலிடான்ஹில் என்னுமிடத்தில் தங்கினர் அரசர். போர் மூண்டது. அரசர் நடுவிலும், அரசரின் இருமருங்கிலும் அவருடைய சகோதரரும் பால்யாலும் அணிவகுத்து நின்றனர். இம்முறைதான் டப்லின்மியூரில் நிலமற்ற பிரபுக்கள் வெற்றி பெற்றனர். இந்த தடவையும் ஆங்கிலப்படையே வெற்றி பெற்றது. அரசப்பிரதிநிதி கொல்லப்பட்டார். அவருடன் பல்வேறு பிரபுக்களும், பதினாயிரம் படைவீரர்களும் கொல்லப்பட்டனர். ஹலிடான்ஹில் போர் கி. பி. 1333ஆம் ஆண்டு ஜூலை 19-ம் நாள் நடைபெற்றது. அடுத்த நாள் பெர்விக் நகரம் சரணடைந்தது. பால்யால் எட்வர்டு ஸ்காட்லாந்தின் அரசரானார். எட்வர்டு ஸ்காட்லாந்து விவகாரத்தில் ஈடுபட்டு இருந்த போது அவரது கவனத்தை ஃபிரான்சு தேசத்துடன் மூண்ட சச்சரவு ஈர்த்தது.

மூன்றும் எட்வர்டும் ஃபிரான்சும்:- ஸ்காட்லாந்தில் பால்யாலை அரசராக்கிய உடனேயே இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்கும் இடையே சச்சரவு மூண்டது. ஃபிரான்ஸ் மன்னர் பிலிப் அக்குவிடெயினிலிருந்த ஆங்கிலப்பிரதேசங்களின் எல்லையில் இடையருது தொல்லைகள் கொடுத்து வந்தார். அத்துடன் நில்லாமல் ஸ்காட்லாந்து விடுதலைப் படையினருக்குத் தொடக்கத்தில் இரகசியமாகவும் பின்னர் வெளிப்படையாகவும் உதவியளித்து வந்தார். ஆயுதந்தரித்த பிரெஞ்சுப்படை வீரர்கள் வடகடலைக் கடந்து பால்யாலுக்கெதிராகப் போர் புரிய அனுப்பப்பட்டனர்.

மேலும் பிரான்ஸ் நாட்டில் கப்பல் படையுரிமை வைத்து இருந்தவர்கள் இங்கிலாந்தின் கீழ்க்கரைப் பகுதிகளுக்கு சென்று, வணிக கப்பல்களை கைப்பற்றிக்கொண்டு காலப் போக்கில் கடல் வாணிபமே செய்ய முடியாதவாறு இங்கிலாந்திற்குத் தொல்லைகள் கொடுத்தனர். ஸ்காட்டியரான டேவிட்புரூஸ் ஃபிரெஞ்சிய அரண்மனையில் வாழ்ந்து வந்தார். அவர்தம் படை வீரர்களை ஸ்காட்லாந்துக்கு அனுப்பிப் பால்யாலுக்குத் தொல்லை கொடுத்து வந்தார். இறுதியாக ஃபிரெஞ்சியர் கலேயிலிருந்தும், நார்மண்டித் துறைமுகங்களிலிருந்தும் இங்கிலாந்து மீது படையெடுக்க பெரு முயற்சியில்இறங்கியுள்ள வதந்தியை மன்னர் அறிந்தார். இவ் வதந்தியை உறுதி செய்யும்வகையாக ஜெர்சி, குவர்ன்சி, வைட் தீவு ஆகியஇடங்களை பிரெஞ்சு கடற் கொள்ளைகாரர்கள் தாக்குவதாக செய்திகள் வந்தன. ஸ்காட்லாந்தில் கவனம் செலுத்தி இருந்த எட்வர்டு இப்போது காலம் தாழ்த்தினால் இங்கிலாந்தின் மீது பிரெஞ்சுதாக்குதல் தொடங்கும் என்பதை உணர்ந்தார்.

எட்வர்டு ஃபிரான்சுடன் போர் ஏற்படும் எனக்கொண்டு அதனைத் தடுக்க பல பணிகளில் ஈடுபட்டார். பவேரியாவின் பேரரசர்லூயி என்பாரிடம் தூதர்களை எட்வர்டு அனுப்பினார். நெதர்லாந்து அரசருக்கும் அவ்வண்ணமே தூதர்கள் அனுப்பப் பெற்றனர். பிலிப் அரசருக்கு எதிராக அவர்களுடன் உடன்படிக்கைகளைசெய்து கொண்டார். பிராபண்ட் (Brabant)கில்டர்ஸ், (Guilders) ஆகிய டியூக்குகளுடனும் ஹாலண்டு, ஹைனால்டு ஆகிய கவுண்டுக்கள் உடனும் பெரும்பொருள் கொடுப்பதாக வாக்களித்து அவர்களையும் தம்முடன் சேர்த்துக்கொண்டார். பிளாண்டர்ஸ் அர்சர் லூயி கவுண்ட் என்பார் ஃபிரெஞ்சு அரசரின் அடிமையும் ஆதரவாளரும் ஆவார். ஆனால் லூயி கவுண்டின் ஆட்சியை பிளாண்டர்ஸ் மக்கள் வெறுத்து, அதிருப்தியுற்றனர். இங்கிலாந்துடன் போர் ஏற்படுவதை பிளமியர் விரும்பவில்லை. ஏனெனில் பிளமியர் இங்கிலாந்துடன் பெரும் வணிகத்தொடர்பைக் கொண்டு இருந்தனர். குறிப்பாக இங்கிலாந்திலிருந்து விலைக்கு வாங்கிய உயர்தர ரோமத்தை கம்பளியாடைகளாக நெய்து அவற்றை வடஐரோப்பாவில் விற்று பெருலாபம் அடைந்து வந்தனர். கி. பி. 1336ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுக்காரர்களின் தூண்டுதலால் லூயி கவுண்ட் தம் கைக்கு சிக்கிய ஆங்கில வணிகர்களைக்கைப்பற்றி கைது செய்தபொழுது பிளமிய மக்கள் அவருக்கு எதிராக எழுந்தனர். போர் வருவதற்கான அறிகுறிகள் தென்பட்டபோது அவர்கள் ஆங்கில அரசருடன் கடிதத்தொடர்புகொண்டு, தம் அரசருக்கு எதிராக

எட்வர்டுக்கு உதவுவதாக வாக்களித்தனர். பிளமிய மக்கள் ஜோகப்வான் ஆர்டிவெல்ட் என்பாரின் தலைமையில் கவுண்ட் லூயியை எதிர்த்தனர்.

மேலும் எட்வர்டு தொடர்ந்து தமது போர் நிறுத்தப் பணிகளுக்காக ஆர்டாயின் கவுன்டானு ராபர்ட் என்பவரை தம்மிடத்தில் தங்குமாறு புகலிடம் தந்தார்.ராபர்ட் லூயியினுல் நாடுகடத்தப்பட்டவர். ஆங்கிலக் கடற்கரையை கொள்ளையடித்த கடல் கொள்ளைக்காரர்களை விரட்டியடிக்க கப்பற்படையொன்றையும் எட்வர்டு சேகரித்தார்.

கி. பி. 1337ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் போர் ஏற்படுவது உறுதியாயிற்று. அப்போது எட்வர்டு பிரான்ஸின் முடிக்கு தாமே சரியான வாரிசு என்றும், பிலிப் பிரான்ஸை அக்கிரமமாக ஆக்கிரமித்துக் கொண்டவர் என்றும் கூறி, பிரான்ஸ் அரசுக்கு உரிமை கொண்டாடினுர். பிளமியர் இத்தகைய உரிமையைக் கொண்டாடுமாறு தூண்டினர். பிரான்ஸ் அரச பதவிக்கு எட்வர்டின் வாரிசுரிமை நியாயமானதாகப் படவில்லை எட்வர்டின் தாயார் இஸபெல்லா அரசி ஃபிரெஞ்சு அரசர் நான்காம் சார்லஸின் சகோதிரியாவர். அவரே பிரான்சு நாட்டை ஆண்ட மூத்த பரம்பரையின் இறுதி அரசர். எனவே அவருக்குப் பின்னர் தாம் தான் கி. பி. 1328ஆம் ஆண்டிலேயே பதவியைப் பெற்றிருக்க வேண்டுமென்றும், பிலிப்பிற்குத் தகுதியில்லை என்றும் அவர் விவாதித்தார்.

அப்போது அரசராயிருந்த ஆரும் பிலிப் நான்காம் சார்லஸின் சிற்றப்பன் பிள்ளையேயன்றி, நேர் வாரிசு அல்லவென்றும், தாமே நேர் வாரிசு என்றும் அறிவித்தார். ஆனுல் பிரெஞ்சு நாட்டு வரலாற்றில் பெண் வழி வந்த ஒருவரும் இதுவரை பிரான்சின் அரசராக வாரிசுரிமை பெற்றதில்லை. வாரிசுரிமை பெற இறந்த அரசரின் உறவினரின் ஆண் வாரிசுக்கே உரிமையுண்டென பிரபுக்கள் முடிவு கூறி இருந்தனர். ஆண் சந்ததியற்றவரின் சொத்து அப்பரம்பரையைச் சார்ந்த வேறு ஆண்களைச் சார்வது தான் முறை என்பதற்குப் பண்டைய சட்டத் தொகுப்பிலிருந்தும் அவர்கள் ஆதாரத்தைக் காட்டினர். இத்தகைய வழக்கு முன் பிரான்ஸ் நாட்டில் எழுந்ததில்லை. பிரான்ஸ் நாட் அரசராக வரவேண்டியவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை அந்நாட்டு மக்களுக்கும் இருந்தது. மேலும் எட்வர்டு கி. பி. 1329 ஆம் ஆண்டில் ஃபிரான்சு மன்னர் பிலிப்புக்கு இறைவணக்கம் செலுத்தியிருந்ததன் மூலம் தமக்கு


பிரெஞ்சு வாரிசுரிகை
மூன்றாம் பிலிப்
(1270-1285)
நான்காம் பிலிப்
(1285-1314)
சார்லஸ்
வலாய்கவுன்ட்
ஐந்தாம் பிலிப்
(1314-16)
பத்தாம் லூயி
(1316-22)
நான்காம் சார்லஸ்
(1322-28)
இஸபெல்லா-இரண்டாம் எட்வர்டு
மூன்றாம் எட்வர்டு
(இங்கிலாந்து அரசர்)
ஆறாம் பிலிம்
(1328-50)
அரசராயிருந்தவர்
ஜான்
(1350-64)
ஐந்தாம் சார்லஸ்
(1364-1380)

ஃபிரான்ஸின் அரசில் உரிமையில்லை என்பதை சூசகமாக ஏற்றுக்கொண்டிருந்தார். எட்டாண்டுகளுக்குப் பின்னர் எட்வர்டு இவ்வுரிமையை சுட்டிக் காட்டியதில் அர்த்தமொன்றுமில்லை; அப்படியே அவருக்கு பெண்வழி உரிமை இருப்பதாகக்கொண்டாலும், எட்வர்டின் உரிமை செல்லுபடியாகாது. ஏனெனில் எட்வர்டின் தாயாரின் சகோதரர்களுக்கும் பெண்பிள்ளைகள் இருந்தனர். எனவே, அவர்களின் உரிமை எட்வர்டைவிடச் சிறப்புரிமையானதாகக் கருதப்பட்டது. எட்வர்டு கூறிய வாரிசின்படியே ஆராய்ந்து பார்த்தாலும் கூட பிரான்ஸ் நாட்டின் வாரிசுக்கு நான்காம் சார்லஸின் சகோதரர் ஐந்தாம் பிலிப்பின் மகள் ஜோன்னுவுக்கு எட்வர்டைவிட அதிகமாக இருந்தது ஜோன்னு நவார் அரசியாக இருந்தாள். அவருடைய மகன் நவார் இளவரசர் சார்லஸையே வாரிசுரிமை சாரவேண்டும்.

## (ஆ) நூற்றுண்டுப் போர்

மூன்றும் எட்வர்டு ஃபிரான்ஸ் நாட்டின் வாரிசுரிமையை இப்பொழுது கொண்டாடியதன் பயனுக இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையே நீண்டதொரு போர் மூண்டது. இப்போரையே 'நூற்றுண்டுப்போர்' என்பர். இவ்வாறு இதனைக் கூறுவது சரியல்ல. ஏனெனில் போர் தொடர்ந்து 1453ஆம் ஆண்டு வரை நடைபெறவில்லை. இது விட்டுவிட்டு நூறு ஆண்டுகளுக்கு நடைபெற்றது. இப்போர்களினுல் ஆங்கில அரசருக்கு சொந்தமாயிருந்த பிரெஞ்சு பகுதியின் கடைசி துண்டும் ஆங்கில அரசரின் கையைவிட்டுப் போகும்வரைஇங்கிலாந்தின் அரசரே பிரான்சின் அரசர் என்ற போலி கௌரவத்தை ஆங்கிலேயர் விடவில்லை. அவர்கள் இப்பட்டத்தைமூன்றும் ஜார்ஜ் மன்னரின் ஆட்சிகாலம் வரையில் தம்பெயருடன் அடைமொழியாகப் பயன்படுத்திக் கொண்டனர்.

கி. பி. 1337 முதல் கி. பி. 1453 வரை விட்டு விட்டு பிரான்சுக்கும் இங்கிலாந்திற்கும் நடந்த போர்களைத்தான் நூற்றுண்டுப் போர்கள் என்பர். பிலிப்பின் ஆக்கிரமிப்பு செயல்களை சகியாத மூன்றும் எட்வர்டு ஃபிரான்சுடன் போருக்குச் செல்ல வேண்டியவரானுர். பிரான்சின் அரசுரிமையைக் கொண்டாடிய போது போருக்கு முக்கிய காரணம் ஒன்றும் ஏற்பட்டது. இரண்டாம் எட்வர்டின் ஆட்சிக் கால அவல நிலையிலிருந்து இங்கிலாந்து தப்பி வெகுவாக முன்னேறிக் கொண்டிருந்தது. ஸ்காட்டிய போர் இங்கிலாந்தின் பொருள் வளத்தை அவ்வளவாக பாதிக்கவில்லை. ஆனுல் பிரான்சுடன் தொடங்கிய இப்போர் சொல்லொணுப் பொருட் சேதத்தையும், ஆட்சேதத்தையும் விளைவித்தது. இப்போர் கி. பி. 1337 ஆம்

ஆண்டு தொடங்கியது. இப்போரில் ஈடுபட்ட மூன்றும் எட்வர்டின் குணுதிசயம் தெளிவாகப் புலப்படலாயிற்று. அரசரின் அசட்டு துணிச்சலும் ஊதாரித்தனமும் நாட்டை வெகுவாக பாதித்தன. பானக்பர்ன் போர் தோல்வியை ஹலிடான் ஹில் போரில் வஞ்சந் தீர்த்துக் கொண்டவர் என்று போற்றப்பட்ட, கிறிஸ்துவ உலகின் தலைசிறந்த வீரர் என்றும் கருதப் பெற்ற மூன்றும் எட்வர்டை வீணர், முரடர் என்று மக்கள் தூற்றும் காலம் இப்போரிலிருந்து தொடங்கியது.

**நூற்றுண்டுப்போர் நடை பெற்றதற்குரிய சரியான காரணங்கள்**

1. ஃபிரெஞ்சு மன்னர் மூன்றும் எட்வர்டுக்கு எதிராக ஸ்காட்டியருக்கு உதவி செய்தது.

2. மூன்றும் எட்வர்டு பிளமியர்களின் எழுச்சிக்கு ஆதரவு அளித்தார். இவர்கள் தங்கள் கவுண்டை எதிர்த்தனர். இந்த கவுண்டுக்கள் பிரான்ஸ் மன்னரின் ஆதிக்கத்தின் கீழ் உள்ளனவை.

3. கிரயன் காக (Cruienne) அரசர் ஃபிரெஞ்சு மன்னருக்கு வணக்கம் செலுத்துவது எப்பொழுதும் தகராரிலேயே இருந்தது.

4. மூன்றும் எட்வர்டு போரின் மீது மோகம் கொண்டிருந்தது.

5. போர் தொடங்கியவுடன் பிரெஞ்சு அரசுரிமைக்குத்தாம் தாம் வாரிசுஎன்று உரிமை கொண்டாடியது. இவையே போரினை நடைபெறச் செய்த காரணங்கள் ஆகும்.

## (இ) நூற்றுண்டுப் போரின் முதற் கட்டம்

**பிளாண்டர்ஸில் போர்:** இதுநாள் வரை கடற்கொள்ளை, அதிகாரப்பூர்வமற்றபடையெடுப்புக்கள்ஆகியவற்றில்ஈடுபட்டிருந்த ஆங்கிலேயரும் பிரெஞ்சியரும் கி. பி. 1337ஆம் ஆண்டில் நேரிடையான போரில் இறங்கினர். நெதர்லாந்திலிருந்து தம் நண்பர்களை போரில் ஈடுபடுத்த வேண்டுமாறு எட்வர்டு லங்காஸ்டர் பிரபு ஹென்றியின் மகன் டெர்பி பிரபுவை பிளாண்டர்ஸுக்கு அனுப்பினுர். கேட்லாண்ட் (Gadland)தீவு வந்து சேர்ந்த அவரை எதிர்க்க பிளெமியக் கவுன்டின் படைகள் காத்து நின்றன. இருப்பினும் பிளெமிய மக்கள் அவரை வரவேற்றனர். கவுன்டின் படை வீரர்களை டெர்பி பிரபு எளிதாகத் தோற்கடித்தார். ஆங்கில வில்லாளிகளை அவர்களால் எதிர்க்க முடியவில்லை. அவர்கள் எல்லா திசைகளிலும் சிதறியோடினர். கவுன்டின் சகோதரரான கைய் (Guy) என்பாரை டார்பி கைது செய்து கைப்பற்றினுர் அக்டோபர்(1337)

பெரும் படையை திரட்டுவதற்கான பொருள் கிட்டாமையால் எட்வர்டால் விரைவாக பிளமியப் போரைத் தொடர்ந்து, பிரான்ஸைத் தாக்க முடியவில்லை. பாராளுமன்றம் அரசருக்கு புதிய வரியொன்றை விதிக்க அனுமதி வழங்கியது. அதன் மூலம் அவருக்குத் தேவையான பொருளைப் பெற வழி ஏற்பட்டது. உரோமத்தை விற்கும் வணிகர்களிடம் ஒரு கோணி மூன்று பவுன் வீதம் 20,000 கோணி ரோமத்தை வாங்கி, அதை வெளி நாட்டில் லாபத்திற்கு விற்று அதன் மூலம் கிடைக்கும் வருவாயைப் போருக்குப் பயன்படுத்த அனுமதி வழங்கியது. உரோம வாணிபத்தில் ஈடுபட்டிருந்த பிறர் ஆங்கிலேயராயின் ஒரு கோணிக்கு 40 ஷில்லிங்கும், அந்நியராயின் அறுபது ஷில்லிங்கும் வரி செலுத்த வேண்டியவரானர். அத்துடன் பாரன் பிரபுக்களும், நைட்டுகளும் தம் சொத்தில் பதினைந்தில் ஒன்றையும் நகரங்களும் திருச்சபையினரும் பத்திலொன்றையும் வரியாக கொடுக்கச் சம்மதித்தனர். தாராள மனப்பான்மையோ வழங்கப் பெற்ற இப்பெரும் வரிகளின் மூலம் வந்த வருவாய் ஊதாரித்தனமாகச் செலவுசெய்த அரசருக்குப் போதுமானதாகஇருக்கவில்லை. கி. பி. 1338ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ஃபிரான்சுடன் போரில் இறங்க எட்வர்டு கப்பலில் பயணமானர். அவருடைய படையில் 1600 ஆயுதந்தரித்த படைவீரர்களும் 10,000 வில் வீரர்களும் இருந்தனர். அவர்களுக்காக எட்வர்டு மிகக்குறைந்த பொருளையே செலவிட்டார். நெதர்லாந்து நாட்டு இளவரசர்களுக்கு அவர் பொருளுதவி செய்ய வேண்டியவரானர். அவர்கள் ஆங்கிலேயர் பொருளைப் பெறுவதில் கண்ணும் கருத்துமாய் நின்றனரேயன்றி, தம் படைகளைப்போரில் ஈடுபடுத்தத் தயங்கினர். பவேரியா சென்று அங்கு மாபெரும் மாநாடு ஒன்றைப் பெரும் பொருட்செலவில் நடாத்தி அதன் விளைவாக அரசர்பட்டம் ஒன்றை மட்டும் பெற்றார். இப்பட்டம் அரசருக்கு பொருள்பெற உதவவில்லை. மிகுந்த வற்புறுத்தலின் பேரிலேயே பிரா்பெண்டியூக்கும் அவருடைய நண்பர்களும் எட்வர்டின் துணைவர்களாயினர். அவர்களை போருக்கு புறப்படச்செய்யவே எட்வர்டுக்கு ஓராண்டு காலம் வறிதே கழிந்தது. இதனிடையில் அரசரும் அவருடைய அவையினரும் ஆண்ட்வெர்ப்பில் தங்கி பெரும் பொருளைச் செலவிட்டு மகிழ்ந்தனர். அரசர் வறிதே நேரத்தைக் கழித்துக்கொண்டிருந்த இந்த வேளையில் பிரெஞ்சு மன்னர் பிலிப் இங்கிலாந்தின் தென்கடற்கரையைத் தாக்கி நார்மண்டியிலிருந்தும், பிக்கார்டிலிருந்தும் புறப்பட்டனர். கப்பற்படையில் ஜினேவாவைச் சேர்ந்த கப்பற் படையொன்றையும் கூலிக்கு அமர்த்திய பிலிப், இங்கிலாந்தின் தென் கடற்கரையைச் சூறையிட்டார். அவர்கள் சவுத்தாம்ப்டனில் இறங்கினர். பிலிப் ஞாயிற்றுக்கிழமை பார்த்து அங்கு

இறங்கினூர். அப்போது மக்கள் தொழுகையில் ஈடுபட்டிருந்தனர். அந்நகரம் சூறையாடப்பெற்று தீக்கிரையாயிற்று. அங்கிருந்து பிரெஞ்சியர் போர்ட்ஸ்மத் சென்று அதையும் சூறையாடி சுற்றியிருந்த கிராமங்களையும் கொள்ளையடித்தனர். பின்னர் பிரெஞ்சியர் கொள்ளையடித்த பொருள்களுடன் பிரான்ஸ் நாடு திரும்பினர். இப்படையெடுப்பில் தான் பிரெஞ்சியர் முதன்முதலாகத் துப்பாக்கியைப் பயன்படுத்தினர். அவர்கள் வெடிமருந்தின் பயனை அறிந்திருந்தனர். ஆங்கிலேயர் இதை இதற்கு முன்னர் அறிந்திலர். போர்முறையில் புதியதொரு கருவியைப் பயன்படுத்திப் புதியதொரு படலத்தைத் தொடங்கிய பெருமை பிரெஞ்சியரையே சாரும். இது நடைபெற்றது கி. பி. 1338 ஆம் ஆண்டிலாகும் ஆண்ட்வெர்பில் இருந்த அரசர் இச்செய்தியைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தார்.

எட்வர்டு பிரான்சின் மீது படையெடுத்தல்:- கி. பி. 1338 ஆம் ஆண்டில் கோடை காலத்தில் தம் நண்பர்களின் உதவியைப் பெற்ற எட்வர்டு சற்றேறக் குறைய 1,00,000 பேர் கொண்ட படையுடன் ஃபிரான்சின் மீது படையெடுத்தார். இப்பெரும் படையால் ஒன்றையும் சாதிக்க முடியவில்லை. கம்ரேயை அவர்கள் முற்றுகையிட்டனர். இருப்பினும் அதனைக் கைப்பற்ற முடியவில்லை. வழியெல்லாம் சூறையாடிக் கொண்டு வந்த ஆங்கிலேயரை பிலிப் மன்னர் அதே அளவு படையுடன் எதிர்க்க வந்தார். தம்மை எளிதில் தாக்க முடியாதபடி தம் படையை காடுகளிலும் புதர்களிலும் சதுப்பு நிலங்களிலும் பிலிம் மிகுந்த எச்சரிக்கையுடன் நிறுத்தி வைத்திருந்தார். எட்வர்டு பல தடவைகள் தம் படைகளை ஏவி பிரஞ்சியரைத் தாக்க முற்பட்டதாலும் பயன் ஏற்படவில்லை. எட்வர்டின் படைக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் தீர்ந்து போகவே அவருடைய அந்நிய நண்பர்கள் தத்தம் ஊர்களுக்குத் திருட்டுத் தனமாகத் தப்பியோடினர். எட்வர்டு பிராபண்டுக்குத் திரும்ப வேண்டியவரானூர். அத்துணை பெரிய படையைக் கொண்டிருந்த அவரால் ஒன்றும் சாதிக்க முடியவில்லை.

இதனிடையில் பாராளுமன்றம் கொடுத்த மானியத்தொகை அனைத்தும் செலவழிக்கப்பட்டு விட்டதால், அரசர் வறுமையில் வாடவேண்டியவரானூர். அதிகப் பொருள் வேண்டுமெனக் கேட்டு அவர் இங்கிலாந்துக்குக் கடிதம் எழுதினூர். அவர் 30,000 பவுன் கடன் வாங்கியிருந்தார். ஆனால், அரசர் மூன்று இலட்சம் பவுன்களைச் செலவழித்திருந்தார். பதின்காம் நூற்றாண்டில் இவ்வளவு பெரிய தொகையைச்செலவு செய்ய முடிந்ததைக் குறித்து வரலாற்று ஆசிரியர்கள் ஆச்சரியமடைகிறார்கள். தம்முடைய அரச

முடியைக்கூட ஆர்ச்பிஷப்டிரியர் (Archbishop Trier) என்பாரிடம் 60,000 ப்ளாரின் தொகைக்கு அடகு வைத்திருந்தார். கி. பி. 1340ஆம் ஆண்டில் அரசரே இங்கிலாந்து வந்தார் பொருளை பெற்றுச்செல்லும் நோக்கத்துடன். பாராளுமன்றம் பெரும்பொருளை மானியமாக வழங்கியது. ஆட்டிறைச்சி, உரோமம், கோதுமை, ஆகியவற்றின் மீதுஒன்பதிலொரு பங்கை வரியாகக் கொடுக்கப் பாராளுமன்றும் முடிவுசெய்தது. இது ஈராண்டுகளுக்கு மட்டுமே செல்லுபடியாகும் என்றும் கூறியது. ஆனல், அவர்களின் கோரிக்கைகளுக்குப் பரிகாரம் காணுவதாக அரசர் வாக்குறுதி அளித்ததன் பேரிலேயே இம்மானியம் வழங்கப்பட்டது. அரசருக்குச் சொந்தமான நிலங்களில் அமைந்திருந்த நகரங்கள், மேனர் பண்ணைகள் ஆகியவற்றின் மீது விதிக்கப்பட்ட டாலேஜ் (Tallage) வரியை வசூலிப்பதில்லை என்று வாக்குறுதி தருமாறு அவர் வற்புறுத்தப்பட்டார். டாலேஜ்வரி நியாயமற்றதாக.கருதப் பட்டது.

மீண்டும் பொருளைப் பெற்றுக்கொண்டஎட்வர்டு பிளாண்டர்ஸ் நோக்கிப் புறப்படத் தீர்மானித்தார். இங்கிலாந்தின் தென் கடற்கரைப் பகுதியைச் சூறையாடிய ஃபிரெஞ்சியக் கடற்படை மீண்டும் கடலில் தென்படுவதாகவும், அரசரின் வழியை மறிக்கப் போவதாகவும் கூறப்பட்ட செய்தியை அரசர் ஏற்கனவே கேட்டிருந்தார். இச்செய்தி நூற்றுக்கு நூறு உண்மையாகி விட்டது குறுகிய கடல்களைத் தம் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவருவது அரசருக்கு அவசியமென்று தோன்றியது. இங்கிலாந்திலிருந்த எல்லா துறைமுகங்களையும் தத்தம் பாதுகாப்புக்கேற்ப கப்பற்படையை ஆயத்தப்படுத்திக் கொண்டு அவற்றை சப்போக்ஷயரிலிருந்து ஆர்வெல் துறைமுகத்திற்கு அனுப்பவேண்டுமென்றும் அரசர் கட்டளையிட்டார். அங்கிருந்துதான் அரசர் புறப்படுவதாக இருந்தார். கி. பி. 1340ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22ஆம் நாள் சிறியதும் பெரியதுமாக இருநூறு கப்பல்களுடன் பிளாண்டர்ஸ் நோக்கி எட்வர்டு புறப்பட்டார். ஃபிரெஞ்சிய கப்பல்கள் கடல்களில் தென்படவில்லையாயினும் பிளமியக் கடற்கரையை நெருங்கும் சமயத்தில் ஸ்லூயிஸ் துறைமுகத்தில் பெருங்கப்பற்படை நிற்பதைக் கண்டார் எட்வர்டு. அரசருக்கு இருந்த கப்பல்களில் தொகையளவே பிலிப்பும் வைத்திருந்தார். அவரிடம் 190 கப்பல்கள் இருந்ததாக கூறப்பட்டது. அவற்றுள் 19கப்பல்கள் மிகப் பெரியவை. ஜினேவா நகரத்தைச் சார்ந்தது என்று சொல்லப் பட்டது. அவை உண்மையிலேயே போர்க்கப்பல்கள். ஆங்கிலேய கப்பல்களும் ஃபிரஞ்சியரின் ஏனைய கப்பல்களும் ஆயுதந்தரித்த வணிகக் கப்பல்களே.

**ஸ்லூயிஸ் போர்:- 1340:-** ஃபிரஞ்சியர் தம் கப்பல்களை மூன்றுவரிசையில் அருகருகே கடலில் நிறுத்தி அவற்றின் குறுக்கே தடுப்புச் சுவர்களைப் போன்று தடைகளையும் வைத்திருந்தனர். அவற்றின் வழியாக ஆங்கிலப்படை நுழையாமல் தடுக்கவே அத்தகைய ஏற்பாடு. ஆனால் எட்வர்டு ஒரு தந்திரம் செய்தார். தாம் தப்பியோடுவதாகப் பாசாங்கு செய்து ஃபிரஞ்சியர் தம்மைத் தொடரும்படித் தூண்டினார். பின்னர் திடீரென தம் கப்பல்களை திருப்பி எதிரிகளின் கப்பல்களை மோதினார். இதை பிராஞ்சியர் எதிர்பார்க்கவில்லை. குழப்பமான சூழ்நிலை நிலவியது ஆங்கில வில்லாளிகள் குறுக்கு வில் ஏந்திய பிரெஞ்சிய வீரர்களை வீழ்த்தினர். பின்னர் ஆங்கில நைட்வீரர்கள் ஒவ்வொரு கப்பலாக ஏறி ஃபிரஞ்சியரின் கப்பல்களை சூறையாடினர். எட்வர்டு போரின் முன்னணியில் நின்று வீரமாகப் போரிட்டார். அவருடைய தீரத்தை போர்வீரர்கள் போற்றிப் புகழ்ந்தனர். பகல் நகரத்திற்குள் ஃபிரெஞ்சிய கப்பற்படை முழுவதும் நாசமாக்கப் பட்டது. மூன்றிலிரண்டுபங்கு கப்பல்கள் கைப்பற்றப்பட்டன. ஏறக்குறைய 20,000 பேர் கடலில்மூழ்கியோ அன்றி கொல்லப் பட்டோ இறந்தனர், இப்போரில் பெற்ற வெற்றி இங்கிலாந்தின் கடலாதிக்கத்தைத் தெளிவாக நிரூபித்து விட்டது. கி. பி. 1340 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 24ஆம் நாள் முடிவுற்ற இப்போர் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும். ஸ்லூயிஸ் போரில் ஏற்பட்ட மாபெரும் வெற்றி சிறப்புமிக்கதாயினும் போரில் பெரும் திருப்பம் ஏற்பட்டது. ஃபிரெஞ்சியர் இங்கிலாந்தின் மீது படையெடுக்கும் வாய்ப்பை இப்போர் தடுத்து விட்டது. அதே போல் நெதர்லாந்து அரசர்களின் உதவியுடன் வடபிரான்ஸ் நாட்டைக் கைப்பற்றிய எட்வர்டு மன்னரின் திட்டமும் நிறைவேறவில்லை. பிளாண்டர்ஸ் திரும்பிய எட்வர்டு தம் படைகளைத்திரட்டி, டூர்னே (Tournay) என்ற ஃபிரெஞ்சிய நகரை முற்றுகையிட்டார்.இருப்பினும் அவரால் டூர்னேயைக் கைப்பற்ற முடியவில்லை. இரண்டுமாத முற்றுகைக்குப் பின் தம் பொருள் அனைத்தும் தீர்ந்துபோனதை உணர்ந்தார். அதன் விளைவாக அவருடைய நண்பர்களும் அவரை விட்டு விலகினர். இதனிடையில் பிரெஞ்சிய அரசர் பிலிப் பெரும்படையுடன் எட்வர்டின் செய்கைகளை கவனித்து வந்தார். மழை காலம் தொடங்கி விட்டதால் இருவரும் போர் செய்ய விருப்பம் கொள்ளவில்லை. இதனிடையில் அக்குவிடெயின் எல்லைப் புறத்தில் பிரெஞ்சியர் ஒவ்வொரு கோட்டையாகப்பிடித்து வரும் செய்தியும்,ஸ்காட்டியர் மீண்டுமொருமுறை எட்வர்டு பால்யாலை நாட்டை விட்டு துரத்திய செய்தியும் மூன்றும் எட்வர்டு மன்னர் அறிந்தார். ஸ்காட்டியர்கள் இங்கிலாந்தின் எல்லைகளைத் தாக்குவது அறிந்து செய்வதறியாது திகைத்தார் எட்வர்டு. போர் நிறுத்த உடன்படிக்

கையை செய்துக் கொள்ள விரும்பினர் எட்வர்டு. டூர்னே எந்த நேரத்திலும் சரணடையும் உணவு பற்றுக்குறையால் என அறிந்த பிலிப்பும் மகிழ்ச்சியுடன் போர் நிறுத்த உடன்படிக்கைக்கு ஒப்புக் கொண்டார். இப்போர் நிறுத்தம் ஸ்காட்லாந்திலும், அக்குவிடெயினிலும் ஒன்பது மாத காலம் நீடிக்க வேண்டும் என்ற முடிவுடன் செப்டம்பர் 1340ஆம் ஆண்டு கையொப்பமாயிற்று. தம் படைகளை உடனே கலைத்துவிட்டு சினம் மிகுந்தவராய் இங்கிலாந்து திரும்பினர் எட்வர்டு. தம்முடைய முற்றுகை தோல்வியுற்றதற்கு அவர் எல்லோரையும் குறை கூறினர். தாமே அத்தோல்விக்கு காரணம் என்பதை எட்வர்டு உணரவில்லை என்பதை இங்கு குறிப்பிடுவது அவசியம்.

ஸ்டார்போர்ட்டன் எட்வர்டின் சச்சரவு : இவ்வுடன்படிக்கைக்குப் பின் இலண்டன் திரும்பிய எட்வர்டு சினம் மிகுந்தவராக காணப்பட்டார். தமது சினத்தைத் தணித்துக் கொள்ள தம் அமைச்சர்கள் அனைவரையும் பதவியிலிருந்து நீக்கியோ அல்லது சிறை செய்தோ தண்டித்தார். பாராளுமன்றம் கொடுத்த மானியத்தை வீணடிக்க அவர்களே காரணமென்று நியாயமற்ற முறையில் குற்றம் சாட்டினர். சான்ஸ்சலராகவும் வின்செஸ்டர் பிஷப்பாகவும் பணியாற்றிய ராபர்ட் ஸ்டார்ட் போர்டின் பதவியை பறித்துக் கொண்டதுடன், லிச்பீல்டு பிஷப்பும் தம்முடைய பொருளாளருமான நார்த்பரோவைச் சிறையில் அடைத்தார். அத்துடன் தலைமை நீதிபதி ஸ்டோனர் (Stonor) என்பாரையும் வேறு சில நீதிபதிகளையும் இலண்டன் மேயரையும் சான்ஸ்லரானின் தலைமை குமாஸ்தாவையும் வேறு சிலரையும் சிறையில் அடைத்தார். ஆர்ச்பிஷப் ஸ்டார் போர்டினு சான்ஸ்லார் ஸ்டார் போர்டின் சகோதரர் ஆகையினால் அவர் கடந்த சில ஆண்டுகள் பிரதம மந்திரி போன்று பணியாற்றியவர். எனவே தம் தோல்விக்கு ஆர்ச் பிஷப் ஸ்டார்ட்போர்டே மூல காரணம் என அரசர் அவர்மீது குற்றம் சாட்டினர். அவரை விசாரணைக்கு கொண்டுவர அரசர் முயன்ருர். ஆனல் ஸ்டார்ட் போர்டு பிரபுக்கள் சபையினுல் மட்டும் விசாரிக்கும் உரிமையை ஸ்டார்போர்டு கோரினர். ஸ்டார்ட் போர்டுக்கு போதுமான ஆதரவு இருந்தது. பிரபுக்கள் சபையின் குழுவொன்று ஸ்டார்போர்டின் வாதத்தை ஏற்றுக் கொண்டமையால் எட்வர்டு பணிய வேண்டியவரானர். அத்துடன் பாராளுமன்றத்தின் ஆணையினுலன்றிப் பிரபுக்கள் கைது செய்யப்படுவதையோ, விசாரிக்கப்படுவதையோ அல்லது நாடு கடத்தப்படுவதையோ அவர்கள் விரும்பவில்லை. இவ்வுரிமையை வலியுறுத்தி நிலைநாட்டினர். அரசர் தம் கோபத்தைத் தணித்துக் கொண்டார். தவறு செய்தது தாமே என அறிந்து ஸ்டார்ட் போர்டையும்

அங்கீகரிக்க வேண்டியவரானூர். மூன்று முக்கிய அரசியலமைப்பு தனியுரிமைகளை (Constitutional Privileges) வழங்க அரசர் ஒப்புக் கொண்ட போது, பாராளுமன்றம் மானியம் கொடுக்க இசைந்தது. முதலாவது பிரபுக்களின் உரிமையை அரசர் அங்கீகரிக்க வேண்டும். இரண்டாவது அரசரின் அமைச்சர்கள் பாராளுமன்றத் திலிருந்தே நியமிக்கப்பட வேண்டியதுடன் அவர்கள் நாட்டில் நிலவி வரும் சட்டங்கள் அனைத்துக்கும் கீழ்ப்படிய வேண்டும். மூன்றுவது அரசரின் பணிகளுக்காக மானியமாக வழங்கப்பட்ட தொகைக்கான கணக்குகளைத் தணிக்கை செய்ய ஆணையர்களை பாராளுமன்றம் நியமிக்க வேண்டும். இம்மூன்று கோரிக்கைகளை யும் அரசர் ஏற்கவேண்டியவரானூர். மேற்கூறிய கோரிக்கைகளை அரசர் ஏற்றுக் கொண்டமையால் பிரபுக்கள் சபையும் காமன்ஸ் சபையும் இரண்டு மிக முக்கிய உரிமைகளை பெற்றது. முதலாவது அரசரின் கண்மூடித்தனமான போக்கை தடுக்கவும், இரண் டாவது அமைச்சர்களை நியமிக்கும்போதும் நாட்டு வருமானத்தை செலவிட்டால் செலவிட்ட கணக்கை தணிக்கை செய்யும்போதும் இச்சபைகளுக்கும் பங்குண்டு என்பதை ஏற்றுக் கொண்டதாகும். (மே, 1341)

பாராளுமன்றத்திற்கு எட்வர்டின் துரோகம்:– ஆனுல், எட்வர்டு தாம் சொன்ன சொல்லை மீறினூர். தொடக்கத்தில் தனியார் சிலரிடத்தில் மேற்கூறிய பாராளுமன்ற கட்டுப்பாட்டிற்கு எதிர்ப்பு தெரிவித்த அரசர், சிலமாதங்கள் கழிந்ததும் வெளிப்படையாகவே அதை எதிர்த்தார். பாராளுமன்றக் கட்டுப்பாட்டைத் தாம் தற்காலிகமாகவே ஏற்றுக் கொண்டார் என்றும், அரச அதிகாரத் தையும் தனிச் சிறப்புரிமைகளையும் கட்டுப்படுத்தும் எந்தவொரு சட்டமும் செல்லுபடியாகாதெனவும் கி. பி. 1341 ஆம் ஆண்டு அக்டோபரில் அரசர் அறிவித்தார். இதனை அறிவித்தபின் அவருக்கு பாராளுமன்றத்தை கூட்டும் துணிச்சல் ஏற்படவில்லை. இதனிடையில் பொருள் தட்டுப்பாட்டால் பிரெஞ்சு போரும் ஊசலாடிக் கொண்டிருந்தது. எட்வர்டுக்கு உதவி செய்வதாக இருந்த பேரரசர் லூவிஸும், ஏனைய பிறநண்பர்களும் உதவி செய்ய மறுத்தனர். ஸ்காட்டிய எல்லைப்புறத்தில் போர் நிலை மோசமானது. கி. பி. 1341 ஆம் ஆண்டு ஸ்காட்டிய சுதந்திர வீரர் கள் ஸ்டர்லிங்கையும், எடின்பரோவையும் கைப்பற்றிக் கொண்ட னர். பால்யால் அரியணை இழந்து இங்கிலாந்திலேயே நிலையாக தங்க வேண்டியவரானூர்.

பிரிட்டானியில் உள்நாட்டுப் போர்:– பிரான்சுடனும், ஸ்காட் லாந்துடனும் சமாதான உடன்படிக்கை செய்து கொள்வதே சரி

யான செயலாக இருந்திருக்கும். ஆனால் எட்வர்டு மன்னர் ஃபிரெஞ்சு மன்னருக்கு இடையூறு விளைவிக்கும். மற்றொரு பணியில் இறங்கினர். இத்தருணத்தில் பிரிட்டானியில் வாரிசுரிமைப் போர் மும்முரமாக நடை பெற்றுக் கொண்டிருந்தது. பிரிட்டானி பிரான்சு நாட்டின் பகுதியாகும். பிரான்சு மீது எவ்வாறு உரிமை எட்வர்டுகொண்டாடினரோ அதேபோல் உரிமை கொண்டாடினர். பிரிட்டானியின் டியூக்கான மூன்றும் ஜான் கி. பி. 1341 ஆம் ஆண்டில் காலமானர். பிரிட்டானியின் உரிமையைக் கோரி இருவர் போட்டியிட்டனர். மூன்றும் ஜானின் மூத்த சகோதரியின் மகளும் பிளாயின் சீமாட்டியுமான ஜீன் (Jeane) போட்டியிட்டவர்களுள் ஒருத்தி இறந்த டியூக்கின் இளைய சகோதரர் மான்ட்ப் போர்டு ஜான் என்பவர் மற்றொருவர்- ஃபிரெஞ்சு மன்னர் பிலிப், பிளாய் சீமாட்டியின் உரிமையை ஆதரித்தார். மான்ட் போர்ட் ஜானின் உரிமையை எட்வர்டு ஆதரித்தார்.

பிரிட்டானியில் உள்நாட்டுப் போரின் தொடக்கத்தில் பிளாய் சீமாட்டியின் கட்சியினரின் கை ஓங்கியிருந்தது. ஃபிரெஞ்சு படைகளின் உதவியால் அவர்கள் பிரிட்டானியின் தலைநகரான நாண்டெஸ் (Nantes) என்ற நகரத்தைக் கைப்பற்றிக் கொண்டனர். மான்ட்போர்ட் ஜான் கைது செய்யப்பட்டார். அவர் நாண்டெஸ் நகருக்குள்ளேயே அகப்பட்டுக் கொண்டார். எனினும் கைது செய்யப் பெற்ற மான்ட்ப்போர்ட் ஜானின் மனைவியான ஜீன்-டி-நெவர்ஸ்(Jeanne de Nevers)என்பாள் தம் கணவனின் உரிமையை நிலைநாட்ட வீரமாகப் போரிட்டார். ஹென்னிபாண்ட் (Hennebont) என்ற கோட்டை விழாமல் வீரத்துடன் அதனை காத்து வந்தாள். இதனிடையில் அவருக்கு ஆதரவு தர சர்வால்ட்டர் மேனி (Sir Walter Manny) என்பாரின் தலைமையில் ஆங்கிலப் படையொன்று வந்து சேர்ந்தது. சிறிது நாட்களில் எட்வர்டே பெரும் படையுடன் பிரிட்டானி வந்து வட பிரிட்டானியை ஃபிரெஞ்சியரிடமிருந்தும், பிளாய்சீமாட்டியரிடமிருந்தும் விடுவித்தார். இருப்பினும் அவரால் நாண்டெஸ் நகரத்தையும், ரென்ஸ் (Rennes) நகரத்தையும் விடுவிக்க முடியவில்லை. பிரிட்டானியின் கிழக்குப் பகுதி இன்னும் பகைவர் கைவசமே இருந்தது.

**மூன்றுண்டு போர் நிறுத்தம்:-** மேற்கூறப்பட்ட போரில் இருதரப்பினரும் வெற்றி பெறவில்லை. எனவே போர் நிறுத்த உடன்படிக்கைக்கு இருதரப்பினரும் ஆர்வம் காட்டிச் செய்து கொண்டனர். பிலிப்புக்கும் எட்வர்டுக்குமிடையிருந்த பகைமையின் காரணமாகவே இருவரிடையேயும் நிலையான அமைதி ஏற்பட முடியாமற் போயிற்று. தாம் செய்து கொண்ட போர் நிறுத்த உடன்படிக்கைக்கு எதிராகப் பிலிப் மான்ட்ப்போர்ட் ஜானைக் கி.பி. 1395ஆம்

ஆண்டு வரை சிறையில் அடைத்திருந்தார். அவ்வாண்டு அவர் தப்பியோடி ஹென்னி பாண்ட் போய் சேர்ந்தார். இப்போர் நிறுத்த உடன்படிக்கை மூன்றுண்டுகள் நீடித்தது. இருப்பினும் பிரிட்டானியின் எல்லையிலும், அக்குவிடெயின் எல்லையிலும் இவ் வுடன்படிக்கைக்கு எதிராக போர் தொடர்ந்து நடந்து கொண்டே யிருந்தது என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

## (இ) போப்பாண்டவருடன் சச்சரவுகள்

கி.பி. 1343ஆம்ஆண்டில் எட்வர்டுமீண்டும் பாராளுமன்றத்தைக் கூட்டினூர். அப்பாராளுமன்றம் போர் நிறுத்த உடன்படிக்கையை உறுதிசெய்து ஏற்றுக்கொண்டது. சாதகமான சூழ்நிலையாக இருந் தால்பிரான்சுடன் அமைதி உடன்படிக்கை செய்து கொள்ளலாம் என்றும், இல்லையேல் நேரிடையான போரில் இறங்குவதே நலம் என்றும் பாராளுமன்றம் அறிவித்தது. இதனிடையில் பாராளு மன்றத்திற்கும் போப்பாண்டவருக்குமிடையே சச்சரவு மூண்டது. இச்சச்சரவில் பாராளுமன்றம் அரசருக்கு முழுஆதரவு கொடுத்தது. கி. பி. 1310 ஆம் ஆண்டிலிருந்து போப்பாண்டவர்கள் ஃபிரான்ஸ் நாட்டில் அவிக்னுன் என்ற நகரில் குடியேறி வாழ்ந்து வந்த னர். ஐந்தாம் கிளமெண்ட் என்ற போப்பாண்டவரின் காலத்தில் போப்பாண்டவர்கள் பிரான்ஸ் நாட்டில் தஞ்சம் புகுந்தனர். இதனுல் போப்பாண்டவர் பிரான்சின் கைப்பாவையாக இருந் தார். இங்கிலாந்து நாட்டில் இருந்த திருச்சபைப் பதவிகளில் புரோவிசர்ஸ் என்னும் பிரதிநிதிகளை நியமிப்பது குறித்தே போப் பாண்டவருக்கும் எட்வர்டுக்கும் கருத்து வேறுபாடு தோன்றியது. இப்பதவியில் நியமிக்கப்பட்ட அந்நியர்கள் தங்களது சமயப் பணியினைபுரியாமலேயே. இங்கிலாந்து வராமலே பெரும்பொருளைச் சேர்த்து வந்தனர். ஆகையால் ஐந்தாம் போப்பும் அவ்வாறே நியமித்ததனுல் அரசர் வெற்றிவீரர் வில்லியம் இயற்றிய ஆணை யினை காட்டி கி. பி. 1352ஆம் ஆண்டு புரோவிசர்ஸ் சட்டம் இயற்றி ஆணையினை உறுதிபடுத்தினூர். இதன்படி போப் பாண்டவர்களது ஆணையினுல் நியமிக்கப்பட்டவர்கள் கைது செய்யப்படலாம் என்ற அதிகாரத்தை இச்சட்டம் அளித்தது.

**எட்வர்டு நார்மண்டியின் மீது படையெடுத்தல்:-** கி. பி. 1345 ஆம் ஆண்டின் இறுதியில் ஃபிரான்சுடன் நிலையான சமாதான உடன்படிக்கையைச் செய்து கொள்ள முடியாது என்பது தெளி வாகப் புலனுயிற்று. மீண்டும் படையெடுப்பை தொடர்வது என்ற முடிவுக்கு வந்தார் எட்வர்டு. இம்முறை நெதர்லாந்திலிருந்து புறப்படுவதற்கு மாருக அவர் வேறொரு திசையிலிருந்து புறப்பட தீர்மானித்தார். பிளமிய நகரங்கள் எட்வர்டு அரசருக்கு துணை

யிருந்தும் அதனைச் சார்ந்தவர்கள் பிரான்சுடன் உடன்படிக்கை செய்துகொண்டனர். எட்வர்டு பிரிட்டானியில் இறங்குவதைத் தவிர்த்து விட்டு, நார்மண்டியிலிருந்து மத்திய பிரான்ஸை தாக்கு வதென தீர்மானித்தார். நார்மண்டியிலிறங்கிப் பாரிஸ் நகரத்தை தாக்குவதுஎன்பது அரசரின் முடிவானது. டார்பி பிரபு லங்காஸ்டர் ஹென்றியைச் சிறுபடையுடன் அக்குவிடெயினைக் காக்க அனுப்பி விட்டு அரசர்தாமே பெரும்படையுடன் பாரிசைத்தாக்க புறப் பட்டார். டார்பி பிரபு பெரும் வெற்றிகளைப் பெற முடிந்தது. பிரான்சு மன்னரின் மகன் ஜானின் பெரும்படையுடன் டார்பி போராடி வந்தார். சேன் ஆற்றின் இருமருங்கிலும் இருந்த இடங்களைத் தாக்குவதில் எட்வர்டு ஈடுபட்டார்.

**பாரிஸ் நகர் நோக்கி ஆங்கிலப் படைகள்:-** கி. பி. 1346ஆம் ஆண்டு ஜூலை மாதம் 11ஆம் நாள் அரசர் லா ஹோக் முனையில் வந்து இறங்கினர். அரசருடைய படையில் ஆயுதந்தரித்த 4000 போர் வீரர்களும், 12,000 வில்லாளிகளும், 6000 வேல்ஸிய படையினரும், அயர்லாந்திலிருந்து வந்த சிறு படையினரும் இருந்தனர். நார்மண்டியில் அவர் இறங்கியதை யாரும் எதிர்பார்க்கவில்லை. தம் நோக்கத்தை வெளியிடாது மறைத்த எட்வர்டு தம்முடன் வந்தவை டார்பி பிரபுவுக்கு உதவ வந்தவையே என நம்ப வைத்தார். இப்பகுதியில் வந்த ஆங்கி லேயரை பிரெஞ்சியரால் வெல்ல முடியவில்லை. எனவே பல நாட்கள் ஆங்கிலப்படை எதிர்ப்பவரின்றி முன்னேறியது. பார்ப்புளுர், வாலோரன்ஸ், காரன்டன், செயின்ட்லோ ஆகிய நகரங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வீழ்ச்சியடைந்ததுடன், நாட்டுப் புறங்களும் சூறையாடப்பட்டன. ஆங்கிலப் படை நார்மானிய படையைக் கெய்ன் (Caen) என்ற இடத்தில் எதிர்த்துத் தோற் கடித்தது. நார்மானிய படைத்தலைவர்கள் கைதுசெய்யப்பட்டனர். செல்வ வளம் மிகுந்த அந்நகரம் சூறையாடப்பட்டது. ஆங்கிலப் படை ரூவனை நோக்கி முன்னேறியது. இருப்பினும் சேன் ஆற்றினைக் கடக்க முடியாதபடி பிரெஞ்சியர் ஆற்றுப் பாலங்களை உடைத்து விட்டனர். எனவே ரூவனைக் கைப்பற்றுவது பிரச் சனையாக இருந்தது. இத்தருணத்தில் எட்வர்டு கொள்ளையடித்த பொருள்களை இங்கிலாந்துக்கு கொண்டு செல்ல அனுமதித்தார். எட்வர்டு படையுடன் பாரிஸ் நகரம் தாக்க முன்னேறினர். ஆற்றைக் கடப்பதற்கு பதிலாக அதன் தென்திசையிலிருந்த பாரிஸைத் தாக்க எட்வர்டு புறப்பட்டார். பயங்கர விளைவுகளை எதிர் நோக்கியிருந்தது இம் முயற்சி. இதனிடையில் பிரெஞ்சியரும் பெரும் படை திரட்ட முயன்றிருந்தனர். நார்மண்டியிலும் எட்வர்டு தம் நிலையை உறுதி செய்து கொள்ளவில்லை. எனவே

அபாயம் சூழ்ந்த நிலையிலேயே முன்னேறினர். ஆபத்து வந்தால் தமது படைகளை காப்பாற்றிக் கொள்ள தகுந்த பிரதேசமும் அப்போது கைவசம் இருக்கவில்லை. மேலும் திடீர் தாக்குதலில் பாரிஸ் நகரத்தை கைப்பற்றுவதும் சாத்தியமன்று. ஏனெனில் அது பலத்த காவலால் காக்கப்பட்டது. இம் முன்னேற்றத்தினுல் ஃபிரெஞ்சு அரசரை அவருடைய தலைநகரிலேயே சந்திக்க வழி பிறந்தது, சிங்கத்தை அதன் குகையிலேயே அடக்க முயல்பவன் போல் பிலிப்பை அவருடைய தலைநகரிலேயே தோற்கடிக்க எட்வர்டு முயன்றார். எட்வர்டுக்கோ பெரும் எதிர்ப்பொன்றும் இருக்கவில்லை. ஆனால் படையெடுப்பாளர்கள் பாரிஸ் நகரத்தின் தென் திசைக் கதவுகளை நெருங்கியபோது பிலிப் 60,000 பேர் கொண்ட படையுடன் ஆயுத்தமாக இருப்பதாக வந்த செய்தியை எட்வர்டு அறிந்தார். அத்துடன் அக்குவிடெயின் பகுதியிலிருந்த பிலிப் அரசரின் மகன் ஜானின் படைகளும் பாரிஸ் நகரத்தை காக்க வந்த செய்தியும் தெரிய வந்தது. எட்வர்டின் ஆமைவேக முன்னேற்றம் பிலிப்புக்கு படைகளைத் திரட்ட வாய்ப்பளித்தது. மேலும் படையுடன் முன்னேறுவது கடினம் என்பதை அறிந்த எட்வர்டு தம் படைகளை போர்டோவுக்கோ அன்றி பிளாண்டர்சுக்கோ செலுத்த வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. பிளாண்டர்சுக்குச் செல்வதும் அவ்வளவு எளிதாகப் புலப்படவில்லை. ஏனெனில் ஆங்கிலப்படை சேன் ஆற்றைக் கடந்தாக வேண்டும். அதன் பாலங்கள் அனைத்தும் உடைபட்டு விட்டன. எனவே சேனைகளைக் கடக்க வைப்பது கடினம். இருப்பினும் அவர் பிளாண்டர்ஸ் பக்கம் போவதையே தேர்ந்தெடுத்தார். பாய்ஸி (Poissy) என்ற பாலத்தைக் கடக்கலாம் என்ற நோக்குடன் பாரிஸிலிருந்து 10 கல் கிழக்கேயிருந்த அந்த இடத்திற்கு அவசர அவசரமாகத் தம் படைகளைச் செலுத்த எட்வர்டு தீர்மானித்தார். பாய்ஸி பாலத்தைக் காத்து நின்ற ஃபிரெஞ்சியக் காவலர்களை தம் வில்லாளிகளைக் கொண்டு விரட்டுவது என்றும் அவர் முடிவு செய்தார். பழுதடைந்திருந்த பாலங்கள் பழுது பார்க்கப்பட்டன. ஃபிரான்ஸ் மன்னர் பிலிப் வருவதற்குள், ஆங்கிலப் படை சேன் ஆற்றைக் கடப்பதில் வெற்றி கண்டது.

ஆற்றைக் கடந்த எட்வர்டின் படைவேகமாக வடபால் முன்னேறியது. ஃபிரஞ்சியபடை ஆங்கிலப்படையைப் பின்னிருந்து துரத்தி வந்தது. ஆங்கிலப்படை சோம் ஆற்றங்கரையை நெருங்கும்வரை இருபடைகளுக்குமிடையே இடைவெளி இருந்து வந்தது. பாலங்கள் உடைபட்டு விட்டதால் அப்பாலங்களை காத்துவந்த படைவீரர்கள் போருக்கு ஆயத்தமாயினர். ஆற்றை கடக்க மூன்றுமுறை முயற்சி செய்தார்; மும்முறையும் தோல்வி

யடைந்தார். சோமைக் காத்து நின்ற காவல்படைகளுக்கு இடையே மாட்டிக்கொண்டார். அதிருஷ்டவசமாக குடியானவன் ஒருவன் ஆற்றைக்கடக்க வழிகாட்டினான். எட்வர்டு தம் படையினரை நீரில் இறங்கி ஆற்றைக் கடக்க ஆணையிட்டார். ஆங்கில வில்லாளிகள் எதிர் கரையிலிருந்தே காவல் படைகளை விரட்டியடித்தனர்.

சோம் ஆற்றைக்கடந்த எட்வர்டின் படைகளுக்கு ஒரு நாள் ஓய்வு கிட்டியது. பிளாண்டர்ஸ் நோக்கிச்செல்லும் வழியில் அவர்கள் இருந்தனர். அரசர் தம்படைகளை கிரேசி (Crecy) என்ற கிராமம் வரை நடத்திச் சென்றார். அங்கு படைகளை நிறுத்தி போருக்கு ஆயத்தமானார் எட்வர்டு. கடவுள்தான் அவரைக் காப்பாற்ற வேண்டும் என்ற நிலையில் தவித்தார் எட்வர்டு. எனினும் போர்செய்ய வசதியான இடத்தை தேர்ந்தெடுத்தார். தோல்வியடைய நேரிட்டால் பிளாண்டர்ஸுக்குத் திரும்புவதற்கும் வழியிருந்தது.

கிரேசி கிராமத்தின் கிழக்கிலிருந்த மலைப்பாங்கான பகுதிக்கு ஃபிரஞ்சுப்படைகள் வந்து சேர்ந்தன. மயே (Maye) என்ற ஓடையின் பக்கத்திலிருந்த அடர்ந்த காடுகளுக்கிடையே பிரஞ்சுப் படையின் ஒருபகுதி தங்கியது. மற்றொரு பிரிவினர் வாடி கோர்ட் என்ற பகுதியிலிருந்த பழத்தோட்டங்களில் தங்கியிருந்தனர். அப்படைகளுக்கு எதிரே ஒரு பள்ளத்தாக்கு இருந்தது. பள்ளத்தாக்கின் மேட்டில் பிரெஞ்சியபடையிருந்தது. ஆங்கிலப் படை மூன்று அணிகளாக நிறுத்தப்பட்டிருந்தது. முன்னணியில் இருபடை பிரிவுகளும் இடபுறம் ஒன்றும் வலப்புறம் ஒன்றுமாக நிறுத்தப்பட்டுயிருந்தன. மூன்றுவதுபிரிவினர் ஆபத்துக் குதவும் உதவிப் படையாகக் அப்படைகளுக்குப் பின்னால் தங்கினர். வலப்புற அணியின் தலைவராக எட்வர்டின் மூத்தமகன் வேல்ஸ் இளவரசரான எட்வர்டு இருந்தார். அவர் பதினாறுவயது நிரம்பப் பெற்று இருந்தார். முதன் முறையாக போரை பார்க்க வந்தவர் ஆவார். அவருக்கு உதவிசெய்ய வார்விக், ஆக்ஸ்ஃபோர்டு பிரபுக்கள் நியமிக்கப்பட்டனர். இடபுற அணிக்கு நார்த்தாம்படன் அருண்டேல் பிரபுக்கள் தலைமை தாங்கினர். அரசர் பின்னால் மலையுச்சியில் நின்றிருந்தார். ஒவ்வொரு அணியிலும் படைகலம் தரித்த வீரர்க்குப் பின்னணியில் குதிரைப்படையினர் நின்றனர். வில்லாளிகள் இருமருங்கிலும் நிறுத்தப்பட்டனர்.

ஆங்கிலப் படைகள் பிளாண்டர்ஸ் நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள் என்ற எண்ணத்தில் இருந்தார் பிலிப் மன்னர். ஆனால்

கிரேசி குன்றுகளுக்கிடையே ஆங்கிலேயர் அணிவகுத்து நிற்பதை கண்ட பிலிப் வியப்பில் ஆழ்ந்தார். நீண்ட தூரம் பயணம் செய்து வந்ததால் களைப்படைந்திருந்த ஃபிரெஞ்சியப் படையினரில் ஒரு பகுதியினர் ஆங்கிலேயரை சந்தித்தபோது எஞ்சியவர் போர்க் களத்திற்கு வெகு தொலைவில் வந்து கொண்டிருந்தனர். அடுத்த நாள் வரை போராடுவதில்லை என்ற நல்ல முடிவுக்கு வந்திருந்தா ரெனினும் முன்னணிப் படையிலிருந்த பிரபுக்கள் அன்றே போரை தொடங்க வேண்டுமென்று வற்புறுத்தினர். எனவே போர் மூண் டது. பிலிப்பின் படையின் முன்னணியிலிருந்த 6000 குறுவில் லேந்திய போர் வீரர்கள் ஆங்கில வில்லாளிகளை விரட்ட முயன்ற னர். ஃபிரெஞ்சிய வில் படையினர் ஜெனோவாவிலிருந்து வந்த கூலிப்பட்டாளமாவர். அவர்களுக்குப் பின்னால் ஆலன்கன், பிளாண்டர்ஸ் கவுண்டுகளின் தலைமையில் படைக்கலம் தரித்த போர் வீரர்கள் அணிவகுத்து நின்றனர். மெதுவாக வந்து சேர்ந்து கொண்டிருந்த எஞ்சிய படையினர் அடுத்தடுத்து அணி வகுத்து நின்றனர்.

**கிரேசி போர் 1346:-** ஜெனோவிய குறுவில்லாளிகள் ஆங்கிலப் படை நின்றிருந்த மலைச்சரிவில் இறங்கிச்சரமாரியாக அம்பெய்யத் தொடங்கினர். இதைக் கண்ட ஆங்கில வில்லாளிகள் பனிமழை பொழிவது போன்று அம்பு மழை பொழிந்தனர். அவர்களின் குறி தப்பவில்லை. எதிரியின் வில்லாளிகளைவிட ஆங்கில வில்லாளிகள் ஐந்து அல்லது ஆறு மடங்கு வேகத்துடன் அம்பெய்தினர். சில நிமிடங்களில் ஜெனோவிய வில்லாளிகள் சிதறடிக்கப்பட்ட னர். எஞ்சியிருந்தோர் அணி வகுப்பை நோக்கி ஓடினர். ஓடிவந்த வில்லாளிகளை கோழைகள் என நிந்தித்த ஆலன்கன் தம் படை கல வீரர்களை போருக்கு ஏவினர். அவர் ஆங்கில வில்லாளி களின் திறமையை கண்டதில்லை. தம் படைகளைப் போர்புரிய பணித்தபோது குதிரைப் படைகள் காலாட்படைகளை மிதித்துத் தள்ளி முன்னேறினர். இச்செயல் கொடுமையிலும் கொடுமை நிறைந்தது ஆகும். ஆங்கிலவில்லாளிகளின் அம்புகளால் அவர்கள் வீழ்த்தப் பட்டனர். ஒரு சில பிரெஞ்சிய வீரர்களே ஆங்கில படை களுக்கு அருகில் வந்தனர். இவர்கள் வேல்ஸ் இளவரசரையும் நார்த்தாம்டன் பிரபுவையும் தாக்க முற்பட்டபோது அவர்களை ஆங்கிலப்படை அழித்து விட்டது. ஆலன்கன் கவுண்டும் பிளாண் டர்ஸ் லூவிஸும் கொல்லப்பட்டனர். இதனைக் கண்ணுற்ற பிலிப் சினம் கொண்டு தமது படைகளையும் ஏவினர். ஃபிரெஞ்சிய படை கள் அணி அணியாக வந்து தாக்கி செத்து மடிந்தனர். ஏனெனி னும் அந்தி மயங்கும் வரை பிரெஞ்சியர் போர்புரிந்தனர். அவர்கள் வேல்ஸ் இளவரசரை நெருங்கி தாக்கினர். இளவரசர் உதவி

கேட்டும் அரசர் கொடுக்கவில்லை. உதவியில்லாமலேயே இளவரசர் பிரெஞ்சியரை தோற்கடித்தார்.

கதிரொளி வீழ்ந்து, இரவு வேளை படரத் தொடங்கியபோது பிரெஞ்சியப் படையில் பெருத்த இழப்பமேற்பட்டு, எஞ்சிய அனை வரும் போர்க்களத்தை விட்டு ஓடி மறைந்தனர். இரவு வேளையில் பிரெஞ்சியரை துரத்த வேண்டாம் என எட்வர்டு விட்டு விட்டார் காலையில் அவர்கள் அடைந்த வெற்றி மகத்தானது என்று தெரிந் தது. பதினையிரம் பிரெஞ்சுப் படைகள் மடிந்து கிடந்தன. அதில்




படம்-8
கிரேசி போர்

1552 பேர் கவுன்டுகளும் பாரன்பிரபுக்களும் பொஹிமியாவின் அரசர் ஜான், மாண்டவர்களில் ஒருவர். அவர் பிரான்ஸ் மன்ன ரின் நண்பர். இளவரசின் கொடிகம்பத்திற்கு அருகில் பலர்மாண்டு கிடந்தனர். ஏறத்தாழ வட பிரான்ஸின் பிரபுக்களில் பாதிப் பேர் கிரேசி போரில் உயிரிழந்தனர்.

ஆங்கில வில்லாளிகள் இப்போரில் பிரெஞ்சுப் படையை விரட்டியடித்துப் பெருமை பெற்றுர்கள். எட்வர்டு தம்மிஷ்டப் படியான நடவடிக்கைகளை எதிர்ப்பார் யாருமின்றி, மேற்கொள்ள

லானர். கலே என்ற நகரை முற்றுகையிட்டு கைப்பற்ற எட்வர்டு தீர்மானித்தார். இது ஒரு துறைமுக நகரம். இங்கிலாந்தின் டோவருக்கு எதிராக உள்ள நகரம். இந்நகரத்தைக் கைப் பற்றினல் ஃபிரான்ஸில் நுழைய நேர்வழி கிடைத்த மாதிரியாகும். மேலும் அந்நகரத்தைச் சார்ந்த கப்பல் வணிகர்களும், கடற் கொள்ளைக்காரர்களும் இங்கிலாந்தில் கென்ட், சஸ்ஸெக்ஸ் பகுதி களை சூறையாடியிருந்தனர். எட்வர்டு இதற்காக அந்நகரத்தைப் பழிவாங்க எண்ணினர்.

**நெவில்கிராஸ் போர்:-** கலேயை முற்றுகையிடுவதற்கு முன் மகிழ்ச்சியான செய்தி எட்வர்டை அடைந்தது. எட்வர்டு பிரான்சு மீது படையெடுத்துச் சென்றதால் இங்கிலாந்தைத் தாக்கி வெற்றி பெறலாம் என எண்ணி ஸ்காட்லாந்து அரசர் டேவிட் படை யெடுத்து டர்ஹாம் வரை வர முடிந்தது. ஆனல் பால்யாலும் காவல் படையினரும் நெவில் கிராஸ் என்னுமிடத்தில் அவர்களை தாக்கி வெற்றி பெற்று ஸ்காட்டிய பிரபுக்களையும் டேவிட்டையும் கைது செய்தனர். இங்கும் வில்லாளிகளே வெற்றிக்கு காரண மாயினர்.

**கலேயைக் கைப்பற்றல்:-** கிரேசி போருக்குப் பின்னர் எல்லாத் திக்கிலும் ஆங்கிலேயர் வெற்றி வாகை சூடினர். டார்பி பிரபு பிரெஞ்சியரை அக்கிவிடெயினிலிருந்து விரட்டியடித்தார். சர் தாமஸ் மக்வொர்க் என்பார் பிரிட்டானியில் பிளாய் சார்லஸ் என்பாரை ரோச் டேரியன் என்னுமிடத்தில் முறியடித்தார். வடக்கிலேகலே நகரம் முற்றுகையிடப்பட்டது. பிலிப் கலே முற்று கையைமுறியடிக்க விழைந்தாரெனினும் கிரேசில் அவர் அடைந்த தோல்வியால் அஞ்சினர். கலே 1347ல் ஆங்கிலேயர் வசம் ஆனது. இதன் வீழ்ச்சிக்கு சிறிது காலத்திற்குப் பின் மற்றொரு போர் நிறுத்த உடன்படிக்கை செய்யப்பட்டு, அவரவர் கையிலிருந்த பிர தேசங்களை அவரவரே வைத்துக் கொள்ள இவ்வுடன்படிக்கை வழிசெய்தது.

## (ஈ) கடுங்கொள்ளை நோய்

கி. பி. 1348ல் இங்கிலாந்திலும் ஃபிரான்சிலும் பரவிய கொடிய தொற்று நோய் பல்லாயிரவரைக் கொன்று குவித்தது. இந்நோய் இந்தியாவிலிருந்தும், யூப்ரெடிஸ் பள்ளத்தாக்கிலிருந்தும் கான்ஸ் டான்டி நோபிலை அடைந்தது. கி. பி. 1348 ல் இத்தாலியிலும் மேற்கு ஐரோப்பாவிலும் பரவிய கொடிய நோய். அவ் வாண்டில் கோடை காலத்தில் பிரான்சிலும் இங்கிலாந்திலும் பரவியது. இதையே கடுங்கொள்ளை நோய் என்கிறோம்.

இந்நோய் விஷக்காய்ச்சல் போன்று தொடங்கி உடலின் மேல் கொப்புளங்களை உண்டாக்கிய அது தொற்று நோயாக மாறியது. இந்நோய் எல்லா நகரங்களையும் கிராமங்களையும் வாட்டியது. இத்தாலியில் பிளாரன்ஸ் நகரில் மட்டும் ஒரு லட்சம் பேர் மாண்டனர்; 60,000 பேர் மாஸ்கோவில் மாண்டனர். ஏறத்தாழ ஓராண்டு காலம் இந்நோய் இங்கிலாந்தை வாட்டியது. குளிர் காலத்திலும் இந்நோய் விரைவாகப் பரவியது. காஸ்சைச் சார்ந்த டான் பெட்ரோ என்பவருக்கு நிச்சயம் செய்யப்பட்ட ஜோனு இந்நோய்க்கு இரையானாள். மேலும் பல பிரபுக்களும், குருமார்களும், ஏழை மக்களும் மாண்டனர். பிரிஸ்டலின் சந்தைக்கடை நடப்பாரின்றி புல்முளைத்துப் போயிற்று. இலண்டன் மாநகர் 50,000 பேர்களைப் புதைக்க புதிய கல்லறையொன்றை பதின்மூன்று ஏக்கர் நிலப்பரப்பில் உருவாக்கியது. கால்நடைகளை விரட்ட ஆள் இன்றி அவை வயல்களில் திரிந்தன. இங்கிலாந்தின் மக்கள் தொகையில் பாதிபேர் இந்நோயினால் மாண்டனர். இக்கடுங் கொள்ளை நோய் ஏறத்தாழ 13 மாதங்கள் இங்கிலாந்தை வாட்டியது.

**நோயினால் ஏற்பட்ட விளைவுகள்:-** இந்நோயினால் ஏற்பட்ட சமூக, அரசியல் விளைவுகள் முக்கியமானவை. நிலச்சொந்தக்காரர்களுக்கும், தொழிலாளர்களுக்குமிடையே இந்நோய் சுயநலத்திற்கும், ஒழுக்க வீழ்ச்சிக்கும் வழி செய்தது. வேளாண்மையில் ஈடுபட்டிருந்த பல்லாயிரவர் மடிந்ததால் நிலத்தை உழுது பயிரிட ஆட்களின்றி மேனர்ப் பண்ணைக்குச் சொந்தக்காரர்களான பிரபுக்கள் சொல்லொணாத் துயருற்றனர். உயிரோடிருந்த எஞ்சியவர்கள் உழுது பயிரிடப் பெரும் தொகையைக் குத்தகையாகக் கேட்டனர். படைமானிய முறையில் பிரபுக்களுக்கு இலவசமாக பணிபுரியும் தன்மையிலிருந்து விடுபட்டனர். எனவே பிரபுக்கள் கூலிக்கு வேலையாட்களை அமர்த்தும் முறை பிறக்கலாயிற்று. நிலத்தில் உழுதவர்கள் அடிமைகளாகக் கருதப்படுவதற்கு மாறாக, குத்தகை கொடுக்கும் மானியதாரராக மாறினர். பழைய முறையை வற்புறுத்த முற்பட்ட பிரபுக்களுக்கெதிராகச் சச்சரவுகள் மூண்டன. வில்லன்களில் பலர் நாட்டை விட்டே வெளியேறி மறைந்தனர். பிரபுக்களுக்கு எதிராக ரகசிய சங்கங்களை ஏற்படுத்திக் கொண்டு பிரபுக்களின் உரிமையை எதிர்த்தனர். பாராளுமன்றம் பல சட்டங்களை நிறைவேற்றித் தொழிலாளர்களுக்கான கூலியை நிர்ணயித்தது. அளவுமீறி கூலி கேட்கும் தொழிலாளர்கள் தண்டனைக்காளாவர் என்று அச்சட்டங்கள் கி. பி. 1352ல் நிறைவேற்றப்பட்ட தொழிலாளர்கள் சட்டங்களை வேளாண்மையில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்கள் எதிர்த்து

வெகுண்டெழுந்தனர். இவ்வெதிர்ப்புணர்ச்சி என்னும் எரிமலை வெடிக்க முப்பதாண்டுகாலம் பொறுத்திருக்க வேண்டியதாயிற்று.

கடுங்கொள்ளை நோயினால் இங்கிலாந்தும், பிரான்ஸும் ஒரே மாதிரி பாதிக்கப்பட்டமையால், அந் நாடுகளுக்குகிடையே மூண்டிருந்தபோர் ஏழாண்டுகள் நிறுத்திவைக்கப்பட்டு இருந்தன. கி. பி. 1348ஆம் ஆண்டு முடிவு செய்யப்பட்ட போர் நிறுத்த உடன்படிக்கையால் போர் நிறுத்தப்பட்டிருந்தும் சிறுசிறு பூசல் களைத் தவிர்க்க முடியவில்லை. கி. பி. 1349 ஆம் ஆண்டில் இவ் வுடன்படிக்கையை மீறி பிலிப் அரசர் கலேயைக் கைப்பற்றத் தந்திரம் ஒன்றைச்செய்தார். இரவு நேரத்தில் கலே நகரத்திற்குள் பிரெஞ்சியத் துருப்புக்களை நுழைய விட அனுமதிக்கும்படி, அந் நகரத்தை காவல் புரிந்த அல்மெரிகோடாபேவியா என்ற கூலிப் பட்டாளத் தலைவனிடம் கேட்டார் பிலிப். அவர் அவனுக்கு 20,000 பவுன்களை வெகுமதியாக அளிப்பதாகவும் வாக்குறுதி செய்தார். ஆனால் அவனோ பிலிப்பின் தந்திரத்தையும் சூதினை யும் எட்வர்டு மன்னருக்கு அறிவித்து விட்டான். இதையறிந்த அரசர் எட்வர்டு டோவரிலிருந்து 300 பேர் கொண்ட படையுடன் புறப்பட்டு அந் நகரத்தின் நிர்வாகத்தை தாமே மேற்கொண்டார். ஃபிரெஞ்சியப் படையினரில் ஒரு பகுதி கலே நகரத்திற்குள் நுழைய அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் அனைவரையும் ஆங்கி லேயர் சிறை பிடித்தோ அல்லது கொன்றோ விட்டனர். இது கி. பி. 1349ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் நாளில் நடந்தது.

இச் சம்பவம் நிகழ்ந்த சில மாதங்களுக்குப் பிறகு பிலிப் அரசர் காலம் ஆனார் (ஆகஸ்டு 1360). அவருடைய மகன் ஜான் ஃபிரான்ஸின் அரசரானார். எனினும் இங்கிலாந்தோடு இருந்த உறவில் மாற்றம் ஒன்றும் ஏற்படவில்லை. ஜான் தம் தந்தையாரின் கொள்கையைப் பின்பற்றி வந்தார். அவர் பதவியேற்ற ஒரு வார காலத்திற்குள் ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சியரும் ஆங்கிலக் கால்வாயில் சண்டையிட்டுக் கொண்டனர். பிஸ்கே குடாவிலி ருந்து சென்ற கப்பல்கள் ஆங்கில வாணிகத்தைக் சீர்குலைக்கப் பல ஏற்பாடுகள் செய்தன. காஸ்டைஸ் இளவசரைத் தூண்டிப் பெரும் கப்பற்படையுடன் வாணிகம் செய்ய ஆங்கில கால்வாய் வரை அவரை வரச் செய்து, பிளமிய நகரில் பொருளை இறக்கி விட்டு அக் கப்பல்கள் கிளம்பின. இப்படிச் செய்யும்படித் தூண்டி யவர் பிரெஞ்சு அரசரே யாவார். இதை அறிந்த எட்வர்டு இக் கப்பற்படையைத் தாக்க எண்ணி, அவசர அவசரமாக கப்பற் படையொன்றைத் திரட்டினார். அரசர் சான்ட்விச்சிலிருந்து ஒரு சில கப்பல்களுடன் புறப்பட்டார். ஆங்கிலக் கப்பற்படை எதிரிப் படையை விட எண்ணிக்கையில் சிறியது. அது வெற்றி பெறுது

என நம்பினர். அரசருக்கு துணைபுரிய வேல்ஸ் இளவரசரும் தம் படையுடன் வந்து சேர்ந்தார். தொடக்கத்தில் பகைவர்களால் ஆங்கிலக் கப்பல்களிலிருந்த மாலுமிகள் ஸ்பானியக் கப்பல்களில் தாவிக் குதித்து அவர்களுடன் கடும்போர் புரிந்தனர். ஸ்பானியர் அஞ்சி ஓடினர். ஆங்கிலேயர்கள் அவர்களுக்கு சொந்தமான 20 கப்பல்களை கைப்பற்றினர். இப் போர் 1350ஆம் ஆண்டு ஆகஸ்டு 29ஆம் நாள் வின் செல்சி கடற்கரையை அடுத்த கடலில் நடைபெற்றது.

பாராளுமன்ற சட்டங்கள்:- மீண்டும் பிரான்சுடன் போர் தொடங்குவதற்கு இடைப்பட்ட காலத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் ஆங்கில அரசியலமைப்பு வரலாற்றில் முக்கியமானவை; இவ் விடைப் பட்ட காலத்தில்தான் தொழிலாளர்கள் சட்டம் வெளியா யிற்று. போப்பாண்டவருடன் நடந்த நீண்ட சச்சரவுக்குப் பின்னர் உருவாக்கப்பட்டதுதான் புரோவிஸர்ஸ் சட்டமாகும். இச் சட்டப்படி திருச்சபை விவகாரத்திலும் அரசரின் அதிகாரம் தலை சிறந்ததெனக் கருதப்பட்டது. கி. பி 1350க்கும் 1355க்கும் இடை யில் பல முக்கியமான சட்டங்களை பாராளுமன்றம் வெளியிட்டது. அவற்றுள் ஒன்று மூலப்பொருள். பற்றிய சட்டமாகும். (Statute-of the Staple) அதன்படி, ஆங்கில ஏற்றுமதி பொருள்களான, உரோமம், தோல், கம்பளம், தகரம், ஈயம் ஆகியவற்றை குறிப் பிட்ட சிலநகரங்களுக்கு மட்டும் ஏற்றுமதி செய்யவேண்டுமென குறிப்பிட்டது. இங்கிலாந்தில் பத்து நகரங்கள், அயர்லாந்தில் நான்கு, கலே, பர்ஜஸ்என்ற ஐரோப்பிய நகரங்கள் இரண்டு. ஆகியவை அங்ஙனம் குறிப்பிடத்தக்கவை. மூலப்பொருள்களை உற்பத்தி செய்த இந்நகரங்களிலிருந்து உரோமவரியை வசூலிக்க வசதி செய்யும் பொருட்டே இந்நகரங்கள் குறிப்பிடப்பட்டன. நகரங்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதால் அதிகாரிகள் கவனமாக வசூலிக்க முடியும் என்ற நோக்கில்தான் இயற்றப் பட்டது. இச்சட்டத்தினால் இத்தகைய மூலப்பொருள்களின் வாணி பத்தில் ஈடுபட்டிருந்த சிறுநகரங்கள் சிறப்பிழந்து அது பெரு நகரங்களின் சிறப்புரிமையாயிற்று. இதனால் மூலப் பொருள்களின் வாணிபத்தில் ஈடுபட்டிருந்த சிறு நகரங்கள் சிறப்பிழந்து அது பெருநகரங்களின் சிறப்புரிமையாயிற்று. இதனால் மூலப்பொருள் களின் வாணிபத்தில் ஈடுபட்டிருந்த வாணிகர்கள் முற்றுரிமை பெற்றவர்களாக, வாணிபம் ஒருசிலரது கைக்குள் முடங்கித் தத்தளித்தது.

பாராளுமன்றம் நிறைவேற்றிய மற்றொரு சட்டம் துரோக குற்றச் சட்டமாகும். இச்சட்டம், பழைய துரோகக் குற்ற

சட்டத்தைத் தெளிவாக விளக்கிக் கூறியதோடு, நிலப்பறியில் ஈடு பட்ட அரசருக்குச் சாதகமான தீர்ப்பளிக்கவும் வாய்ப்பளித்தது.

**பிரான்சுடன் மீண்டும் போர்:-** கி. பி. 1348 ஆம் ஆண்டில் ஃபிரான்சுடன் செய்து கொண்ட போர் நிறுத்த ஒப்பந்தம் கி. பி. 1355 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியோடு முடிவுற்றது. கோடை காலத்தில் இதே ஆண்டில் ஆங்கிலேயர் படையெடுத்தனர். தம் முடைய பழைய நண்பர்களான பிரிட்டானியின் மான்ட்ஃபோர்ட் ஜானும், நவாரின் அரசரான கெட்டவர் சார்லஸ் (Charles the bad King of Navaser) என்பாரும் நார்மண்டியில் அரசருக்கு உதவுவர் என்று எண்ணி இப்போரில் நார்மண்டியைக் கைப்பற்ற லாம் என்று மனப்பால் குடித்திருந்த எட்வர்டின் ஆசையில் மண் வீழ்ந்தது. அவருக்கு உதவ வந்த கப்பல்கள் புயலால் சேதமுற்று அழிந்ததால் அவர் ஃபிரான்ஸ் அரசர் ஜானுடன் சமாதான உடன் படிக்கை செய்து கொண்டார். மற்றொரு ஆங்கிலப்படை வேல்ஸ் இளவரசரின் தலைமையில் போர்டோவுக்கு அனுப்பப்பட்டது. வேல்ஸ் இளவரசருக்கு அப்பொழுது இருபத்தாறு வயதாயிருந்தது வேல்ஸ் இளவரசர் வேறு யாருடைய துணையுமின்றியே சுதந்திர மாக அப்படையை நடத்திச் சென்றார். போர்டோ சென்றடைந்த வுடன் இப்படைக்கு உதவி செய்ய காஸ்கானியப் படைகளும் சேர்ந்து கொண்டன. இருபடைகளும் லாங்குடாக் (Longuedoc) என்ற இடத்தைத் தாக்கி அழித்தன. பிறகு டூலூன் என்னு மிடத்தை நோக்கி வேல்ஸ் இளவரசரான கறுப்பு இளவரசரின் படைகள் முன்னேறின. ஏறக்குறைய இப்படை மத்திய தரைக் கடல் வரை சென்றது. இதற்கு முன்னரும் பின்னரும் ஆங்கிலப் படை இவ்வளவு தூரம் சென்றதில்லை. இப்படையெடுப்பு கொள்ளை யடித்து நாசம் விளைவித்ததேயின்றி வேறு எந்த நற்பலனும் தர வில்லை. அரசர் தம் படைகளுடன் கலே நகருக்குப் புறப்பட்டுச் சென்றார். பிக்கார்டியை அவர் சூறையாடிக் கொண்டிருந்தபோது பெர்விக்கும், நார்த்தம்பர்லாந்தும் ஸ்காட்டியரால் கைப்பற்றப் பட்டன என்பதை கேள்வியுற்றார். சினங்கொண்ட அரசர் பிரான் சின் மீது படையெடுப்பைக் கைவிட்டு இங்கிலாந்து சேர்ந்து ஸ்காட்டியரைத் தாக்க வடதிசை நோக்கிச் சென்றார். குளிர்கால மாயிருப்பினும் கவலைப்படாமல் எடின்பரோ வரை சென்று தாக்கி அழித்தார். சொல்லொணாத் கொடுமைகளைப் புரிந்த ஆங்கிலப் படையெடுப்பை ஸ்காட்டியர் நீண்ட நாட்கள் நினைவில் வைத் திருந்தனர். அவருக்கு எதிராக ஸ்காட்டியர் முன் வர அஞ்சினர். இருப்பினும் ஸ்காட்டியர் ஆயுத தளவாடங்கள் அவருக்கு கிடைக் காதபடி செய்தனர். பெர்விக் நகரத்திற்கு ஆங்கிலப் படை திரும்பு வதற்குள் படாதபாடு படவேண்டியராயினர்.

கி. பி. 1356ஆம் ஆண்டு கறுப்பு இளவரசர் மீண்டும் பிரான்ஸை தாக்க தீர்மானித்தார். 3500 படைக்கலம் தரித்த போர் வீரர்களும், 4000 அல்லது 5000 பேர் கொண்ட காலாட் படையும் கொண்ட ஆங்கிலப் படையில் பாதிக்கு மேற்பட்டவர்கள் ஆங்கிலேயர். எஞ்சியவர் அக்குவிடெயினிலிருந்து வந்தவர்கள். இம் முறை அவர் மத்திய பிரான்ஸைத் தாக்கினர். லூவார் ஆறுவரை படையெடுத்த அவருடைய படைகள் வழியெல்லாம் சூறையாடி கொள்ளையடித்து வந்தனர். கறுப்பு இளவரசர் தம் தம்பி காண்ட் இளவரசர் ஜானுக்கு உதவி செய்யவே இப் படையெடுப்பை நடத்திச் சென்றார். காண்ட் இளவரசர் ஜான் சிறு படையொன்றுடன் பிரிட்டானியில் வந்து இறங்கியிருந்தார். இப் படைக்கு எதிர்பார்த்த உதவி கிட்டாமையால் இப் படையெடுப்பு சரியானபடி நடத்தப்படவில்லை.

**பாயிட்டர்ஸ் நோக்கி ஆங்கிலப்படை :** டூர்ஸ் வரை படையெடுத்து வந்த எட்வர்டின் படைகளைத் தடுத்து எதிர்க்க யாரும் துணியவில்லை. பின்னர், பிரான்ஸ் அரசர் ஜான் பெரும்படையுடன் தமக்கு எதிராகப் புறப்பட்டு வரும் செய்தி அறிந்தார். இளவரசர் எட்வர்டு பிரெஞ்சிய படை பிளாக்கருகில் ஆற்றைக் கடந்து படையெடுப்பாளர்களையும் அவர் தம் தளமான போர்டோவையும் குறுக்கிட்டுத் தடுக்க எண்ணியது. கறுப்பு இளவரசரின் படை பிரெஞ்சியப் படையில் ஐந்திலொரு பங்கு தான் இருந்தது. அப் படையினிடம் கொள்ளையடிந்த பொருள்கள் ஏராளமாக இருந்தன. எனவே, அவர் போர் புரிவதை விடுத்து ஊர் திரும்ப எண்ணினர். இருப்பினும் இரு படைகளும் பாயிட்டர்ஸ் என்ற ஊருக்கு அருகில் சந்திக்க நேர்ந்தது. ஃபிரெஞ்சிய படையால் தாம் கொள்ளையடித்துக் கொண்டு வரும் பொருள்கள் மீண்டும் கொள்ளை போவதை தடுக்க எண்ணிய இளவரசர் எட்வர்டு, பாயிட்டர்ஸ் என்ற ஊருக்கு அருகிலிருந்த மலைப்பக்கத்தில் தம் படைகளை நிறுத்தினர். அவருக்கு பாதுகாப்பாக மலைப்பாங்கான பிரதேசமும், ஆற்றுப்படுக்கையும் காடுகளும் அமைந்துநின்றன. பிரெஞ்சியர் உடனே ஆங்கிலேயரைத் தாக்குவர் என நம்பினர். ஆனல் பிரெஞ்சியர் ஒரு நாளை வீணுகக் கழித்தனர்: பிறகு அவர்கள் சரணடையகோரி ஆங்கில படையிடம் கேட்டனர். அதனை இளவரசர் நிராகரித்தார். அடுத்த நாள் இளவரசர் போரிடாமல் தப்புவிக்க எண்ணியபோது ஃபிரெஞ்சியர் அணி வகுத்து ஆயத்தமாக நின்றனர். உடனே ஆங்கிலேயரும் போருக்கு ஆயத்தமாக வேண்டியவராயினர். மீண்டும் போர் மூண்டது.

கிரேசி போரில் பிரெஞ்சியர் ஆங்கில வில்லாளிகளுக்கு இரையான கதையை நினைவிற்கொண்டு அரசர் காலாட்படைகளுடன் அணிவகுத்து நின்றார். 4,000 அல்லது 6000 வீரர்களே ஜானிடம் இருந்தனர். ஜானும் ஆர்லியன்ஸ் டியூக்கான டாஃபின் என்பாரும் தலைமை தாங்கினர். முன்னணி வீரர்களுக்கு கிளர்மாண்ட், டி ஆர்ரிஹெமி என்ற தளபதிகள் தலைமை தாங்கினர்.

கறுப்பு இளவரசரின் படையில் ஏறத்தாழ 6000பேர் இருந்தனர். கிரேசி போரில் அணிவகுத்ததைப்போன்றே இப்பொழுதும் அணிவகுத்து நின்றது ஆங்கிலப்படை. வட பிரிவை நார்பக் சாலிஸ்பரி பிரபுக்களும், வலப்புறப் பிரிவை வார்விக் ஆக்ஸ்போர்டு பிரபுக்களும் தலைமைதாங்கி நடத்திச் சென்றனர். புதர்வெளிகளில் வில்லாளிகளும் அவர்களை அடுத்துப் படைக்கலம் தரித்த வீரர்களும் உதவ நிறுத்தப்பட்டனர். உதவிப் படையுடன் கறுப்பு இளவரசரும் காஸ்கனியைச் சார்ந்த படைகளுடன் நின்றிருந்தார்.

பாயிட்டர்ஸ் போர்: 4 பிரெஞ்சிய தளபதிகள் அப் படைகளை ஏவிப் போரிட்டபோது அவர்கள் அனைவரையும் ஆங்கில வில்லாளிகள் சுட்டு வீழ்த்தினர். டாஃபின் என்பாரின் படை ஆங்கிலப் படையைச் சுற்றி வளைப்பதில் வெற்றி கண்டது. ஆங்கிலப் படையினர் தோற்று விழும் முன் இளவரசர் உதவிப்படையிலிருந்து படைகளை ஏவினார். இத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பிரெஞ்சுப் படை திக்கு முக்காடிப் பெரும் குழப்பத்தில் ஆழ்ந்து பின்னேறத் தொடங்கியது. ஆனால் அரசர் ஜான் எஞ்சிய படைகளுடன் ஆங்கிலேயரைத் தாக்கினார். ஆங்கிலேயர் இதுவரை சண்டை செய்து களைத்திருந்தனர். தொலைவிலிருந்து கவனித்த கறுப்பு இளவரசர் ஆங்கிலப் படையைக் காக்க நடவடிக்கை எடுத்தார். கறுப்பு இளவரசர் தம்முடன் இருந்த உதவிப்படைகளைப் போரில் ஈடுபடுமாறு ஏவினார். படையில் ஒரு சிறு பிரிவைச் சுற்றி வளைத்து எதிரியைப் பின்னால் இருந்து தாக்கவும் ஏற்பாடு செய்தார்.

இளவரசரின் படைகள் மாபெரும் வெற்றி பெறும் நிலையில் இருந்தன. ஃபிரெஞ்சியப் படைகளுடன் போரிட்ட ஆங்கில வில்லாளிகள் கணைகள் இல்லாமையால் தம் கைகளால் போரிடத் தொடங்கினர். இத்தருணத்தில் பின்னாலிருந்து தாக்க அனுப்பப்பட்ட படை திடீர் தாக்குதலை மேற்கொண்டது. இதைக் கண்ட பிரெஞ்சியர் தம் படைகளை ஆங்கிலேயர் சுற்றி வளைத்துக் கொண்டனர் எனக்கருதிப் பெரும் குழப்பத்தில் அங்கும் இங்கும் சிதறி

யோடினர். பிரெஞ்சு அரசர் மட்டும் போராடி நின்றார். அவர் கைது செய்யப்பட்டார். அரசருடைய இளைய மகன் பிலிப்பும் அவ்வாறே கைதானார். கிரேசியைப்போல பாயிட்டர்ஸில் நிறைய பேர் உயிர் இழக்கவில்லை. இப்போரில் 14 கவுண்டுகளும் 1900 நைட்டுகளும் சிறைபிடிக்கப்பட்டனர். போர்க் கைதிகளின் எண்ணிக்கை பெரும் அளவில் இருந்தமையால் மீட்சிப் பணம் கொடுப்பதாக வாக்களித்தவர்களையெல்லாம் விடுதலை செய்தனர். பாயிட்டர்ஸ் போர் கி. பி. 1356ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19ஆம் நாள் முடிந்தது.

படம்—9
பாயிட்ரஸ் போர்

அரசர் ஜான் இப் போரில் கைதானதால் ஃபிரான்சு நாட்டில் குழப்பமேற்பட்டது. ஜான் அரசர் கைதியாக இலண்டன் மாநகருக்குக் கொண்டு வரப்பட்டார். தலைவரின்றி ஃபிரான்சில் உள்நாட்டுக்குழப்பம் மூண்டது. அரசப்பிரதிநிதியாக இருந்த டாபினால் அரச அதிகாரத்தைச் சரிவர நிர்வகிக்க முடியவில்லை. பாரிஸ் மாநகர மக்கள் புரட்சி செய்து கிளர்ந்தெழுந்தபோது டாபின் பெரும்பாலும் இறந்தவர்போல் காணப்பட்டார். பாரிஸ் மாநகரப் பொதுமக்கள் நார்மண்டி, ஷாம்பெயின் தளபதிகளை டாபினின்

முன்னிலையிலேயே கொன்றுவிட்டனர். ஜான் அரசரின் படையில் வேலைக்கமர்த்தப்பட்ட கூலிப்பட்டாளத்தினருக்குச் சம்பளம் கொடுக்க வசதியில்லாமல் போகவே அவர்களும் கொள்ளைக் கூட்டத்தினராகி, நாட்டுப்புறப்பகுதிகள் அனைத்தையும் கொள்ளையடித்தனர். குடியானவர்களும் கலகத்தில் இறங்கினர். அவர்கள் பல்வேறு கோட்டைகளில் வாழ்ந்த பிரபுக்களின் குடும்பத்தினரைக் கொன்று குவித்தனர். நீண்ட போராட்டத்திற்குப் பின்னர்தான் பிரபுக்கள் இக் குடியானவர் கலகத்தை அடக்கினர். இக் குடியானவர் கலகத்தை ஜாக்குரி (Jacqueri) என்பர். நாட்டில் இத்தகைய குழப்பமான சூழ்நிலையிருந்தமையால், ஆங்கிலேயரைத் தட்டிக்கேட்க ஆள் இல்லை. அவர்கள் பல நகரங்களையும் கோட்டைகளையும் தம் வசமாக்கிக் கொண்டனர். சுருங்கக் கூறின், பிரெஞ்சியர் கி. பி. 1356-லிருந்து 1358ஆம் ஆண்டுவரை இப்படிப்பட்ட கொடுமையான காலத்தைத் தம் வரலாற்றிலே கண்டிருக்க மாட்டார்கள்.

**பிரெடிக்னி உடன்படிக்கை 1360:-** இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்குமிடையே போப்பாண்டவர் அமைதியை நிலைநாட்ட அரும் பாடுபட்டார். ஆனால், அவரால் போரை நிறுத்த முடியவில்லை. பிரெஞ்சு மக்கள் தாம் அடைந்த தோல்விகளுக்கு ஆங்கிலேயரைப் பழிவாங்கத் துடித்து நின்றமையால், போப்பாண்டவரின் பேச்சைக்கேட்க மறுத்ததோடு அவர்கள்போர் முரசை விரும்பினர். 1359ஆம் ஆண்டில் எட்வர்டு கலேயிலிருந்து ரிம்ஸ் என்ற இடத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். எட்வர்டின் வருகையை அறிந்த நகரங்கள் தத்தம் கோட்டைக் கதவுகளை மூடிக் கொண்டதுடன் உணவுப்பொருள்களைப் பாதுகாப்பான இடங்களில்பத்திரப்படுத்திக் கொண்டன. எனவே, எட்வர்டு சுற்றி வளைத்துக்கொண்டு ரிம்ஸ், பர்கண்டியின் வழியாக ஈஸ்டர் என்ற இடத்தைக் கி.பி. 1360ஆம் ஆண்டில் அடைந்தார். இந்த இடம் பாரிஸ் நகரத்திற்கு அருகாமையில் அமைந்துள்ளது. ஃபிரான்ஸுடன் உடன்படிக்கை செய்து கொள்ள எட்வர்டு தீர்மானித்தார். கி. பி. 1360ஆம் ஆண்டு மே மாதத்தில் சார்ட்ரிஸ் என்ற இடத்தருகில் பிரெடிக்னி என்ற இடத்தில் இவ்வுடன்படிக்கை முடிவுற்றது. அதன்படி எட்வர்டும் அவருடைய சந்ததியினரும் ஃபிரான்ஸிலிருந்து கலே, கினி, பான்தியூ, தெற்கில் பாய்ட்டோ, செயின்டோவ், பெரிகோர்டு, லிமோசின், குவெர்ஸி, ரூவார்கி, பிகோர் ஆகியவற்றைப் பெற்றதுடன் காஸ்கனியையும் பெற்றனர். அத்துடன் அவர்கள் பிரஞ்சு அரசருக்கு இறைவணக்கம் செலுத்த வேண்டியதில்லை என்றும் முடிவாயிற்று. பிரான்ஸில் எட்வர்டின் எல்லை வடமேற்கில் ஏறத்தாழ நாண்டெஸ் வரையிலும், தெற்கில் ஏறத்

தாழ டூலூஸ் வரையிலும் பரவியிருந்தது. சிறைப்படுத்தப்பட்ட ஜான் அரசரை விடுவிக்க மீட்சிப் பணமாக 5,00,000 பவுன் களையும் பிரான்ஸ் கொடுக்க ஒப்புக்கொண்டது. ஸ்காட்லாந்துடன்




படம்—10
மூன்றும் எட்வர்டின் காலத்து பிரான்ஸ் கி.பி. 1360

பிரான்ஸ் செய்துகொண்டிருந்த உடன்படிக்கையை ரத்து செய்து விடவும், இவ்வுடன்படிக்கை கோரியது. மேலும் பிரிட்டானியின் வாரிசுரிமையையும் பிரான்சின் வாரிசுரிமையில் இங்கிலாந்து போட்டியிடுவதையும் விட்டுக்கொடுக்க எட்வர்டு சம்மதித்தார்.

மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் சற்றேக்குறைய பிரான்சின் அரைப்பகுதி ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது.

இவ்வுடன்படிக்கையை பிரஞ்சுக்காரர்கள் ஏற்றுக் கொண்டது புத்திசாலித்தனமாகும். நாட்டில் காணப்பட்ட குழப்பமான சூழ் நிலையில் அமைதியைக் காப்பது அவசியமாயிற்று. இங்கிலாந்துக்கு இவ்வுடன்படிக்கை ஒரு விதத்தில் துன்பத்தைக் கொடுத்தது. தென் பிரான்சில் கிடைத்த பரந்த நிலப்பரப்பு ஆங்கிலேயருக்கு பலத்தைவிட பலவீனத்தையே அளிக்கக் காரணமாக அமைந்தது பிரெஞ்சு மக்கள் இங்கிலாந்தின் ஆட்சியை வேண்டாவெறுப்புடன் ஏற்றுக் கொள்ள வேண்டியவர் ஆயினர். அவர்கள் இங்கி லாந்தின் ஆதிக்கத்தை முழுவதும் அகற்றிவிட வாய்ப்பை எதிர் பார்த்திருந்தனர். எனவே, இவ்வுடன்படிக்கை வெளித் தோற்றத் தில் இங்கிலாந்திற்குப் பெரும் லாபம் கிடைத்தாற்போல் காட்சிய ளித்தாலும், வருங்காலத்தில் இடர்பாடுகளுக்கு இவ்வுடன்படிக்கை விதைவிதைத்தது என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும். இருப்பினும் 1336ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்று வந்தபோரை இவ்வுடன்படிக்கை நிறுத்தி வைப்பதில் வெற்றிகண்டது உண்மைதான்.

ஸ்காட்லாந்திலும் போர் நிறுத்தம் ஏற்பட்டது. எட்வர்டு பால்யாலுக்குச் சந்ததியின்மையால் தம்முடைய ஸ்காட்டிய அர சுரிமை அனைத்தையும் கி. பி. 1356ஆம் ஆண்டில் இங்கிலாந்து அரசருக்கு நன்கொடையாகக் கொடுத்துவிட்டார். கி. பி. 1357ஆம் ஆண்டில் மூன்றும் எட்வர்டு தம்மிடம் சிறைப்பட்டிருந்த இரண் டாம் டேவிட்டையே ஸ்காட்லாந்தின் அரசராக அங்கீகரித்தார். மீட்சித் தொகையாக 67,000 பவுன் கொடுக்க ஒப்புக் கொண்டதன் பேரில் இரண்டாம் டேவிட் விடுதலை செய்யப்பட்டார். அத் தொகையை அவர் பத்தாண்டுகளில் கட்டிவிட வேண்டும் என்றும் கோரப்பட்டது. பெர்விக் நகரம் ஆங்கிலேயர் வசமே யிருந்து வந்தது. இங்கிலாந்து ஸ்காட்லாந்துடன் செய்துகொண்ட உடன் படிக்கையே பிரெடிக்னி உடன்படிக்கையைவிட அரசியல் தந்திரம் மிக்கதாகும். ஸ்காட்லாந்து நீண்ட காலப் போருக்குப் பின்னர் அமைதியை விரும்பியது. அடுத்த முப்பதாண்டுகளுக்கு ஸ்காட்லாந்துக்கும் இங்கிலாந்துக்கும் இடையே போர் நிகழ வில்லை. எல்லைப்புறங்களில் சில்லறைக் கலவரங்கள் ஏற்பட்டாலும் போர்அபாயம் ஏற்படவில்லை. ஸ்காட்லாந்தில் ஏற்பட்ட அமைதி எட்வர்டை மீண்டும் பிரான்சில் தொடங்கிய போரை முழு மனதுடன் கவனிக்க வழிவகை செய்தது,

**அரச குடும்ப உறவுகளும் அதன் விளைவும்:** 1360ஆம் ஆண்டில் முடிவுற்ற பிரெடிக்னி உடன்படிக்கையின்போது மூன்றும் எட்வர்டின் பெருமை உச்சக்கட்டத்தை அடைந்திருந்தது. அப்போது நாற்பத்தெட்டு ஆண்டுகளே நிரம்பியிருந்த எட்வர்டு, ஓயாத போர்களினால் களைத்துப்போய் நரைத்துக் காணப்பட்டார். அவருடைய குடும்பம் பெருகி வளர்ந்திருந்தது. அவருக்குப் பதினொன்று குழந்தைகள் பிறந்திருந்தாலும், அப்போது ஐந்து ஆண் மக்களும், மூன்று பெண்களுமே உயிரோடிருந்தனர். இங்கிலாந்தின் பெரிய பிரபுக்களின் குடும்பங்களோடு தம் மக்களுக்குத் திருமண உறவை ஏற்படுத்தி இங்கிலாந்தின் அரசுரிமையைத் திடமாக நிலைநாட்ட வேண்டுமென்பது எட்வர்டின் ஆசையாகும். மூன்றும் எட்வர்டின் மூத்த மகன் வேல்ஸ் இளவரசர் எட்வர்டை கறுப்பு இளவரசர் என்று அழைப்பர். அவருக்கு அப்போது 30 ஆண்டுகள் நிரம்பியிருந்தும்கூட அவருக்குத் திருமணம் நடைபெறவில்லை. எட்மண்ட் பிரபுவின் மகள் ஜோனுவை மனைவியாக்கிக் கொள்ள அவர் தம் 30ஆம் வயதில் தீர்மானித்தார். ஜோனுவுக்கும் ஏறத்தாழ அதே வயதிருக்கும். அவள் ஏற்கெனவே விதவையானவள். சர் ஜான் ஹாலந்து என்பாரை மணமுடித்து இரு குழந்தைகளுக்குத் தாயான அவளைக் கறுப்பு இளவரசர் திருமணம் செய்து கொண்டார். அழகுமிக்க கென்ட் இளவரசி எனப்பெயர் பெற்ற அவளைக் கறுப்பு இளவரசர் விரும்பியே மணந்துகொண்டார். மற்றப்பிள்ளைகள் தம் தந்தையாரின்சொற்படி அவர் யாரை மணந்து கொள்ளச் சொன்னாரோ அவர்களையே மணந்து கொண்டனர். அவர்களில் பலர் இளம் வயதிலேயே திருமணம் செய்துகொள்ள வேண்டியவர்களாயினர். உயிரோடு வாழ்ந்தவர்களில் இரண்டாவது மகன் லயனல் என்பவராவர். அவர் அயர்லாந்தின் வாரிசுரிமைக்காரியான எலிசபெத்-டி-பர்க் என்பாளை மணந்திருந்தார். அவள் அலஸ்டர் கவுன்டியையும் பெற்றிருந்தாள். இளம் பிராயத்திலேயே அவள் காலமுற்றபோது, லயனல், மிலான் பிரபுவின் மகள் யோலாண்டி வைகான்டி (Yolande Visconti) என்பாளை இரண்டாம்தாரமாக மணம் புரிந்து கொண்டார். காண்ட் பிரபு ஜான் அரசரின் மூன்றுவது மகன். அவர் லங்காஸ்டர் பிளான்சி என்பாளை மணந்து பெருத்த செல்வந்தராகத் திகழ்ந்தார். பிளான்சி சீமாட்டி லங்காஸ்டர், டார்பி, லிங்கன், லெஸ்டர் ஆகிய பகுதிகளின் சீமாட்டியானவள். அவளை மணந்து கொண்டமையால் காண்ட் ஜான் இங்கிலாந்தின் பெரும் பாரம்பரியத்தின் வாரிசானார். நான்காவது பிள்ளை எட்மண்டு ஸ்பானிய இளவரசி ஒருத்தியை முதல் மனைவியாகவும் தம் மூத்த சகோதரரின் மாற்றாள் மகளான ஜோனுள் ஹாலந்தை இரண்டாவது மனைவியாகவும் கொண்டிருந்தார், எட்மண்ட் லாங்கிலியின்

டியூக் ஆவார். கடைசி பிள்ளையான தாமஸ், ஹெரிபோர்டின் வாரிசுதாரியான எலியனுர் போஹன் என்பாளை மணந்திருந்தார். எட்வர்டு தம் மக்களுக்கு வெவ்வேறு காலங்களில் டியூக் பட்டத்தை வழங்கியிருந்தார். வேல்ஸ் இளவரசர் கார்ன்வாலின் டியூக்காகவும், லயனுல் கிளாரன்ஸின் டியூக்காகவும், ஜான் லங்காஸ்டரின் டியூக்காகவும், எட்மண்டு யார்க்கின் டியூக்காகவும், தாமஸ் கிளஸ்டரின் டியூக்காகவும் ஆக்கப்பட்டிருந்தனர்.

திருமண வயதை எட்டியிருந்த எட்வர்டின் மூத்தமகள் மேரி ஐந்தாம் ஜான் மான்ட்ஃபோர்டை மணந்திருந்தாள். ஜான் பிரிட்டானியின் வாரிசுரிமைக்குப் போட்டியிட்டவர். இரண்டாம் மகள் மார்கரெட் பெம்ப்ரோக் பிரபு ஜான் ஹேஸ்டிங்ஸ் என்பாரை மணந்து கொண்டிருந்தாள். மூன்றும் மகள் இஸபெல்லா பிரெஞ்சு பிரபுக்களில் ஒருவரான இங்கெல்ரம் டி கௌசி (Ingelram de Concy) என்பாரை மணந்திருந்தாள். இங்கெல்ரம்-டி-கௌசி எட்வர்டின் கூலிப்படைத் தளபதிகளில் ஒருவர். அவர் பெட்போர்டு பிரபுவாக நியமிக்கப்பட்டார்.

எட்வர்டின் ஆயுட்காலத்தில் தம் மக்களின் கைகளில் பெரும் நிலப்பரப்புகளை ஒப்படைத்து அரசரின் சக்தியை எடுத்துக் காட்டினுலும், வருங்காலத்தில் இவ்வுறவுகள் கொடுத்த தொந்தரவை அரசர் அப்போது அறிந்திருக்கவில்லை. வருங்காலத்தில் எட்வர்டின் வாரிசாக வந்தவர், தம் தம்பியரோடும், மாமன்மார்களோடும் அரசுரிமை போட்டியிட்டபோது பல தொல்லைகள் ஏற்பட்டன. ரோஜாச் சின்னப்போர்கள் இப்படி ஏற்பட்டவை தான். லங்காஸ்டர் குடும்பத்தாரின் அளவுகடந்த அதிகாரமே இரண்டாம் ரிச்சர்டின் அழிவுக்குக் காரணமாயிற்று. பின்னர் லங்காஸ்டரின் குடும்பம் அழிவுற்றதற்கும் இத்தகைய அதிகாரமே மூலகாரணமாயிற்று. எட்வர்டு முன்கூட்டியே இத்தகைய துன்பங்களை அறியாதது துர்பாக்கியம்தான். எட்வர்டின் மக்கள் தம் தந்தைக்குக் கட்டுப்பட்டுக் கீழ்ப்படிந்து நடந்தபோதிலும், எட்வர்டின் வாரிசாக வந்தவர் பட்டத்திற்கு வந்தபோது எட்வர்டின் பேரப்பிள்ளைகள் அவரை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை.

**ஆங்கிலேயரின் படைத்திறன்** :- மேற் கூறிய ஆபத்துகள் பின்னர் வர இருப்பினும், கி.பி. 1360ஆம் ஆண்டில் எட்வர்டு ஐரோப்பாவிலேயே வெற்றி பொருந்திய மாமன்னராகத் திகழ்ந்தார் என்பதை மறுக்க முடியாது. அவர் ஒரு மாபெரும் வெற்றி வீரர். அவருடைய ஆட்சிக்கு முன் ஆங்கிலேயரின் படைத் திறன் போற்றுதற்குரியதாய் இருக்கவில்லை. ஆனுல், அவர் காலத்தில் ஆங்கிலப் படைத் திறன்

கிறிஸ்தவ உலகத்தின் முன்னோடியாகத் திகழ்ந்தது. அவருடைய போர்களில் பயிற்சிபெற்ற வீரர்கள் அக் காலத்தின் மாபெரும் நைட்டுகளாகக் கருதப்பட்டனர். காலாட்படையே அக் காலத்தில் சிறந்ததாகக் கருதப்பட்டது. ஆங்கிலேயரின் காலாட் படையே சிறந்ததென ஐரோப்பாவிலேயே புகழப்பட்டது. போர் முறையிலும் புதியதொரு மாற்றம் ஏற்பட்டது. குதிரைப்படை வீரர்களும் விற்படையினரும் பகைவரைக் கொன்று குவிப்பதில் பெரும்பங்கைப் பெற்றிருந்தனர். ஸ்காட்லாந்தில் பின்பற்றப்பட்ட இப்போர்முறை, கிரேசியிலும், பாயிட்டர்ஸிலும் ஆங்கிலேயருக்கு மாபெரும் வெற்றிகளை வழங்கியிருந்தது. 4 பிரெஞ்சியர், ஜெர் மானியர், இத்தாலியர் ஆகியோரும் ஆங்கில முறையைப் பின் பற்றினர். போரின்போது தம் உயரிய பதவியைப் பிரபுக்கள் இழந்தது, பதினான்காம் நூற்றாண்டின் போர்முறையில் ஏற்பட்ட மற்றொரு பெருமாற்றம் ஆகும். துப்பாக்கிகள் இக்காலத்தில் போரில் பயன்படுத்தப்படலாயின. துப்பாக்கிப் படை இக்காலத் தில் சிறிதாக இருப்பினும், படைமானிய முறையை ஒழித்துக் கட்ட இதுபேருதவி செய்தது. துப்பாக்கியின் உதவியால் தகர்க்க முடியாத கோட்டைகளைத் தகர்க்கும் திறமை ஏற்பட்டதால், பிரபுக்களின் கோட்டைகள் சிறைப்பிடிக்கத் தொடங்கின. இதனால் அரசரிடம் அதிகாரம் பெருக வாய்ப்பேற்பட்டது. துப்பாக்கிப் படையினரை வைத்திருக்கும் உரிமையை அரசர் பெற்றமையால் கட்டுக்கடங்காப் பிரபுக்களை அடக்குவதும் இதனால் எளிதாயிற்று. துப்பாக்கிப் படையினரால் படைமானிய முறை அழியத் தொடங்கியதை மூன்றும் எட்வர்டின் ஆட்சியின் பிற்பகுதியில் காண்கிறோம். இருப்பினும், துப்பாக்கிப் படை பதினைந்தாம் நூற்றாண்டுகளுக்கு முன் பெருவளர்ச்சி அடையவில்லை என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும்.

**வாணிபப் பெருக்கம் :** மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத் தில் இங்கிலாந்தின் படைத்திறன் பெருகி வளர்ந்ததைப் போன்றே ஆங்கில வாணிகமும் பெருகி வளர்ந்தது. ஆனால், வாணிபப் பெருக்கத்திற்கு அரசருடைய முயற்சி காரணமாய் அமைந்திருக்கவில்லை. வேறு காரணங்களிருந்தன. பிளாண் டர்சுடன் அவர் வாணிகத் தொடர்பை அரசியல் காரணங்களுக் காகவே நிலை நாட்டினார். ஏற்றுமதி, இறக்குமதி வாணிகத்தால் பெரும் பொருளை வரியாகப் பெற வசதி ஏற்படும் என்ற நோக்கத் துடன்தான் பிளமியர்களுடன் இத் தொடர்பை எட்வர்டு ஏற்படுத் தினார். நெதர்லாந்துடனும், ஜெர்மானியருடனும் ஏற்பட்ட இவ் வாணிபத் தொடர்பு தேசிய வாணிபத்தை நிலைநாட்டிப் பெரும் விளைவினை உண்டாக்கியது. வாணிபப் பெருக்கத்தின் பயனாக

எட்வர்டு தங்க நாணயச் செலாவணியைத் தம் நாட்டில் முதன் முதலாகப் புகுத்தினர். அவருடைய ஆட்சிக்கு முன்னர் வெள்ளி நாணயமான பென்னியே வாணிபத்தில் பயன்படுத்தப்பட்டது. பின்னர் ரோஸ்-நோபிள் என்று கூறப்படும் தங்க நாணயத்தை எட்வர்டு செலாவணியில் கொணர்ந்தார். இந்த நாணயம் மற்ற வர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதைப் பார்த்த ஐரோப்பிய நாடுகளும் தங்க நாணயத்தை அச்சடித்துக் கொண்டன.

தங்க நாணயச் செலாவணியோடு நெருங்கிய தொடர்பு கொண்டது ஆங்கில வணிகர்கள் பிற நாடுகளுக்குச் செல்லத் தொடங்கியதே ஆகும். பிற நாடுகளுடன் ஏற்பட்ட வாணிகத் தொடர்பும் மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில்தான் முதன் முதலாகத் தொடங்கியது. இறக்குமதிப் பொருள்களை அந்நிய ருடைய கப்பல்களில் வரவழைத்துக்கொள்வதால் அவ்வணிகர்கள் திருப்தியடையவில்லை. பதினான்காம் நூற்றாண்டில் இங்கி லாந்தின் கடல் வாணிபத்தின் பெரும் பங்கினை இத்தாலிக் கப்பல் களே சுமந்து வந்தன; அல்லது ஜெர்மனியைச் சார்ந்த ஹான்ஸி யாடிக் குழுவினரின் கப்பல்களில் அவை வந்து சேர்ந்தன. வாணி கத்தில் இப்படி வந்த இடை மனிதர்களை (Middle men) விடுத்து, தாமே நேரிடையாக அத்தகைய வாணிபத்தில் இறங்க வேண்டு மென எட்வர்டு தம் மக்களைத் தூண்டினார். இடை மனிதர்களாக வந்தவர்கள் சாமான்களை ஏற்றவும் இறக்கவும் பெரும் தொகை யைக் கூலியாகக் கேட்டனர். திறமைசாலிகளான அந்நிய வாணிகர்களுடன் போட்டிபோடவே இங்கிலாந்து வாணிகர்கள் மூலப் பொருள் வர்த்தகக் குழு என்னும் ஸ்டேபில் கம்பெனியை நிறுவினர். பதினான்காம் நூற்றாண்டின் இறுதிக்குள் ஆங்கில கடல் வாணிகம் லிஸ்பன், ஹாம்பர்க் ஆகிய நகரங்கள் வரை பரவியிருந்தது. இருப்பினும், ஆங்கில வாணிகம் மத்திய தரைக் கடலிலும் பால்டிக் கடலிலும் நுழையவில்லை. பால்டிக் கடல் வாணிகம் ஹான்ஸியாடிக் குழுவின் கையில் இருந்தது.

வாணிபத்தைப் போன்றே செய்தொழில்களும் பல்கிப் பெருகின. பிளமிய நெசவுத் தொழிலாளர்களை நார்விச்சில் குடியேற வைத்ததால், கம்பள நெசவுத் தொழில் இங்கிலாந்தில் சிறப்பாக வளரலாயிற்று. முன்னர் உரோமத்தை நெதர்லாந் துக்கு அனுப்பிக் கம்பள ஆடைகளை நெய்தனர். 1337ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஒரு பழக்கத்தின்படி அரண்மனையில் ஆங்கில துணி மணிகளையே கட்டவேண்டுமேயன்றி அந்நியத் துணிகளைக் கட்டக்கூடாது என்று தடுக்கப்பட்டிருந்தது. நெசவுத் தொழிலைப் போன்று உலோகப் பொருள்களின் செய்முறையும் திருத்தி அமைக்கப்பட்டது. வீடுகளில் கண்ணாடிகள் பெருமளவில் பயன் படுத்தப்பட்டது.

கடுங்கொள்ளை நோயினால் வாணிபமும், விலை வாசியும் மாற்றமடைந்தன. குடியானவர்களின் கூலி உயர்ந்தவுடன் செய் பொருள்களின் விற்கும் விலையின் மதிப்பும் வெகுவாக உயர்ந்தது. உணவுப்பொருள்களின் விலை உயராமல் அப்படியேயிருந்தது. கால் நடைகளின் விலை சிறிது உயர்ந்தது. ஆனால், செயல் திறம் மிக்க கைத்தொழில் வினைஞர்களால் உருவாக்கப் பெற்ற பொருள்கள் 40-லிருந்து 60சதவீதம் வரை அதிகமாய் விலைபோயின. உணவுப் பொருள்களின் விலை உயராமல் இருந்தபடியாலும் தொழிலாளர் களின் கூலி உயர்ந்திருந்தமையாலும், அவர்கள் விலையுயர்ந்ததும் தரமானதுமான உணவுப் பொருள்களை வாங்கி உண்டு மகிழ்ந்தார்கள். அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர லாயிற்று. வணிகர்களும் பெரும் லாபம் பெற்றார்கள். அதற்கு மாறாக நிலச்சொந்தக்காரர்களான முதலாளிகள் கடுங்கொள்ளை நோய்க்குப் பின்னர் சொல்லொணாத் துயருற்றனர். அவர்கள் பயிரிடுவதற்கு அதிகப் பொருளைச் செலவு செய்ய வேண்டியவரா யினர். தொழிலாளருக்கு அதிகக் கூலி கொடுக்க வேண்டி ஏற்பட்ட தால் பயிரிடும் செலவுகள் அதிகமாயின. ஆனால், உணவுப் பொருள்களின் விலையில் மாற்றமின்மையால் குறைந்த விலைக்கு அவற்றை விற்று நஷ்டமடைந்தனர். இதனால் ஒரு சிலர் வேளாண்மையையே கைவிட்டனர்; அவர்கள் தம் நிலங்களை மேய்ச்சற்றரைகளாக்கிக் கொண்டனர். சிலர் மற்றவர்களுக்கு நிலங்களைக் குத்தகைவிட வேண்டியவராயினர். உரோமம் நல்ல விலைக்கு விற்றமையால் பலர் நிலத்தை மேய்ச்சல் நிலங்களாக்கி ஆடுகளை வளர்த்தனர். அதனால் உணவுப் பொருள்களின் விளைச்சல் குறையலாயிற்று. எனினும், இம் மாற்றங்கள் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் அப்போதுதான் ஏற்படத் தொடங்கின.

கடுங்கொள்ளை நோயினால் எண்ணற்றவர் இறந்துபோயினர். மக்கள்தொகையைச் சீர் செய்யவும் பல ஆண்டுகள் தேவைப் பட்டன.

**புரேனைர் சட்டம்:** பிரெடிக்னி உடன்படிக்கைக்கும் பிரான்சுடன் மீண்டும் போர் தொடங்குவதற்கும் இடைப்பட்ட ஒன்பதாண்டு காலத்தில், இங்கிலாந்தில் அமைதியும் செல்வச் செழிப்பும் நிலவின. போப்பாண்டவருக்கும் அரசருக்கும் இடையே பூசல் மூண்டது இக் காலத்தில்தான். புரோவியர்ஸ் சட்டம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. ஆங்கில பிஷப்புகளின் செல் வாக்கிற்குட்பட்ட பிரதேசங்களுக்கு அவர்களின் பதவி காலியாகும் போது போப்பாண்டவர் பிஷப்புகளை நியமிக்கக் கூடாது என்று இச் சட்டம் வற்புறுத்தியது. அதன் பயனாகப் போப்பாண்டவர்கள்

இங்கிலாந்து திருச்சபைக்கு அந்நியர்களை நியமிப்பது நிறுத்தப் பட்டது. கி.பி. 1353லும், 1365லும் புரமுனீர் சட்டம் இயற்றப் பட்டது. இச் சட்டப்படி, ஆங்கிலேயர்கள் இங்கிலாந்திற்கு வெளியேயுள்ள எந்தச் சட்ட மன்றத்திற்கும் வழக்குகளை எடுத்துச் செல்லலாகாது என்பது விதிக்கப்பட்டது.

கி. பி. 1362ஆம் ஆண்டில் மற்றொரு பழக்கம் இங்கிலாந்தில் தொடங்கியது. அவ்வாண்டிலிருந்து நீதிமன்றங்களில் ஆங்கில மொழியே பயன்படுத்தப்பட்டது. இதுவரை அம் மன்றங்களில் நார்மானிய பிரெஞ்சு மொழி பயன்படுத்தப்பட்டிருந்தது.

**பிரான்ஸ் மன்னர் ஜான் காலமாதல்:** பிரெடினி உடன் படிக்கை வெறும் போர் நிறுத்த உடன்படிக்கையாய் இருந்ததே யன்றி, அதனால் நிலையான அமைதி நிலைநாட்ட முடியவில்லை. அவ்வுடன்படிக்கையின் நிபந்தனைகளை முழுவதுமாகக் கடைப் பிடிக்க இயலவில்லை. ஜான் தமது மீட்சித் தொகையைக் கட்ட முடியாமல் தவித்தார். அதனால் அவர் மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார். சவாய் மாளிகையில் காவலில் வைக்கப் பட்டிருந்த பிரான்ஸ் அரசர் ஜான் கி. பி. 1364 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8ஆம் நாள் காலமானார். அவருடைய மரணத் திற்குப் பிறகு அவர் மகன் ஐந்தாம் சார்லஸ் பிரான்ஸின் அரச ரானார். அவர் சூதும்வாதும் மிக்கவர். பிரெடிக்னி உடன் படிக்கையைக் கடைபிடிக்க விரும்பாதவர். இருப்பினும், உள் நாட்டில் அமைதியை நிலைநாட்ட முயன்ற அவரால், இங்கிலாந் துடன் போர்புரிய முடியவில்லை. அவருக்கு எதிராக அரசுரிமைக்கு நவாரைச் சார்ந்த கெட்டவர் சார்லஸ் என்பவர் போட்டியிட்டு, கோசெரல் என்ற இடத்தில் படுதோல்வியடைந்து, ஐந்தாம் சார்லஸுடன் உடன்படிக்கை செய்துகொண்டார்.

பிரிட்டானி வாரிசுரிமைப் போரும் கி. பி. 1341ஆம் ஆண்டிலி ருந்து நடைபெற்று, கி. பி. 1364-ல் முடிவுற்றது. மான்ட்ஃபோர்டு ஜான் இங்கிலாந்தின் நண்பராக இருந்தார். இறுதியில் மான்ட்ஃபோர்ட் ஜான் தம் பகைவரான பிளாய் சார்லஸைக் கொன்றுவிட்டு பிரிட்டானி முழுவதற்கும் அதிபரானார். ஆங்கி லேயர் அவருக்குப் பெரும் உதவி புரிந்தனர்.

ஆனால், ஸ்பானியப் போர் ஒன்றில் ஆங்கிலேயருக்கு எதிர் பார்த்தபலன் கிட்டவில்லை. இதற்குக் கறுப்பு இளவரசர் எட்வர்டே காரணகர்த்தர். அவர் அக்குவிடெயினில் சுதந்திர அரசர்போல ஆண்டு வந்தார். கி. பி. 1362ஆம் ஆண்டில் எட்வர்டு தம்

மகனுக்கு அக்குவிடெயினை ஆளும் பதவியை அளித்திருந்தார். போர்டேவிலிருந்த அவருடைய அரண்மனையில் காஸ்டைலின் அரசரான பெட்ரோ என்னும் ஸ்பானிய இளவரசர் ஒருவர் புகலிடம் பெற்றுத் தங்கி வந்தார். 'கொடுங்கோலன் பெட்ரோ' என்று மக்கள் அவருக்கு அடைமொழி கொடுத்திருந்தனர். இக் கொடுங்கோலனை அவருடைய தம்பி ஹென்றி என்பார் பிரெஞ்சியரின் உதவி கொண்டுப் பதவியிலிருந்து விரட்டினர். பெட்ரோ கறுப்பு இளவரசரைத் தூண்டித் தமக்கு உதவி செய்து, தம்மை மீண்டும் காஸ்டைலின் அரசராக்கிவிட்டால் போருக்கு செலவனைத்தையும் கொடுத்துவிடுவதாக வாக்களித்தார். மேலும் தம்முடைய இரு பெண் குழந்தைகளையும் பிணையப் பொருள்களாக ஒப்படைக்கவும் அவர் சித்தமானர். சிறிது தயக்கத்துடன் கறுப்பு இளவரசர் பெட்ரோவுக்கு உதவி செய்வதென்று முடிவு செய்தார். போர் புரிவதில் பேரார்வம் கொண்டிருந்த இளவரசருக்கு இஃது ஓர் அரும் வாய்ப்பாகத் தென்பட்டது.

பெட்ரோவின் உதவிக்குச் சென்ற எட்வர்டு இளவரசர் ஸ்பானியப் போருக்குத் தயாரானர். காண்ட்ஜான் ஒரு சிறு படையுடன் இங்கிலாந்திலிருந்து வந்து சேர்ந்தார். ஆனல் படையின் பெரும் பகுதி காஸ்கானிய வீரர்களைக் கொண்டிருந்தது. போர் புரிவதில் வல்லவர்களையே கொண்டு அப் படை திகழ்ந்தது.

எட்வர்டு பிரனீஸ் மலைத்தொடரைக் கடந்து ஸ்பெயினுக்குள் நுழைந்தார். காஸ்டைல் போய்ச் சேர்ந்தபோது அவரை எதிர்க்கப் பெட்ரோவின் தம்பியான ஹென்றி பெரும் படையொன்றுடன் ஆயத்தமாக நின்றர். பிரெஞ்சியர் ஹென்றிக்கு உதவினர். ஆனல், இளவரசர் எட்வர்டு சாமர்த்தியமாக அவர்களுடைய படையை ஏமாற்றிவிட்டுப் பழைய காஸ்டைலுக்குள் புகுந்தார். ஸ்பானியப் படை எட்வர்டைத் தாக்க ஓடிவந்தது. இருபடைகளும் நவரெட் (Navarette) என்னுமிடத்தில் மோதின. இப் போரிலும் இளவரசர் எட்வர்டே வெற்றி பெற்றர். ஹென்றியின் படை எண்ணிக்கையில் பெரியதாக இருப்பினும் எட்வர்டின் படைகளுக்கு முன்னே சிதறி ஓடியது. ஹென்றியும் பிரான்ஸ் நாட்டிற்குத் தப்பியோடினர்.

பெட்ரோ காஸ்டைலின் அதிபரானர். இருப்பினும், தாம் கொடுத்த வாக்குறுதிப்படி அவரால் பெரும் பொருளை எட்வர்டு இளவரசருக்குக் கொடுக்க இயலவில்லை. ஆங்கிலப்படை காஸ்டைலின் தலைநகரான பெர்கோஸ் என்ற நகரில் அவதியுற்றது. படைவீரர்களை நோய் பற்றிக் கொண்டது. எட்வர்டும் காய்ச்சலுற்றுப் படுத்த படுக்கையானர். இதனிடையில் பெட்ரோ

எட்வர்டை ஏமாற்றும் கடிதங்களை அனுப்பினர். இறுதியாக வெறுப்புற்ற எட்வர்டு தம் படைகளுடன் அக்குவிடெயின் திரும்பினர். நன்றி கெட்ட பெட்ரோவை அவருடைய தம்பி திரும்பி வந்து போரில் கொன்றார். இப்படியாக முடிவுற்ற காஸ்டைல் போர் இங்கிலாந்துக்குப் பலனளிக்கவில்லை. இங்கிலாந்தின் பகைவன் காஸ்டைலின் அரசராகப் பதவியேற்றதுதான் நவரெட் போரின் பலனாயிற்று. அக்குவிடெயினிலும் பல இடர்ப்பாடுகள் ஏற்படலாயின.

பெட்ரோவுக்கு உதவி செய்யும் நோக்கோடு அக்குவிடெயினில் பெரிய தொகையைக் கடனாக வாங்கியிருந்தார் இளவரசர் எட்வர்டு. இளவரசர் தாம் வாங்கிய கடனை அடைக்க அரும்பாடுபட்டார். அதற்காக அக்குவிடெயின் மக்கள் மீது வரியொன்றை விதிக்க வேண்டியவரானார். இவ் வரிக்கு மக்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். அக்குவிடெயினைத் தவிர பிறபகுதி மக்களும் இளவரசர் எட்வர்டுக்கு எதிராக, எதையும் செய்யத் துணிந்தார்கள். அக்குவிடெயின் மக்கள் வரியைக் கொடுக்க மறுத்தனர். எட்வர்டு வரியைக் கொடுத்தே ஆக வேண்டுமென்று வற்புறுத்தினர். இதைத் தவிர்க்க அக்குவிடெயினைச் சார்ந்த பிரபுக்களில் சிலர் பாரிஸ் மாநகர் சென்று பிரான்ஸ் அரசரிடம் முறையிடப் போவதாகக் கூறினர். இது பிரெக்டினி உடன் படிக்கைக்கு முரணானதாக இருந்தது. அதன்படி அக்குவிடெயின் பிரெஞ்சு அரசரின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டிருந்தது. எனவே, காஸ்கானியப் பிரபுக்கள் பிரெஞ்சு அரசர் ஐந்தாம் சார்லஸிடம் முறையிட்டது முறைகேடான செயலாகும். பிரெஞ்சு அரசர் இங்கிலாந்துடன் போருக்குப் போவதா அல்லது தவிர்ப்பதா என்று சிந்தித்து வந்தார்.

பிரான்சுடன் போர் : ஐந்தாம் சார்லஸ் இங்கிலாந்துடன் போர்புரியத் தீர்மானித்தார். கடந்த ஐந்தாண்டு காலத்தில் பிரான்ஸில் அமைதி நிலவியது. அத்துடன், இளவரசர் எட்வர்டுக்கு எதிராகக் கலகம் செய்ய அக்குவிடெயின் மக்களில் பாதிப் பேர் ஆயத்தமாக இருப்பதையும் அவர்கள் தம்முடன் சேருவார்கள் என்பதையும் ஃபிரான்ஸ் மன்னர் உணர்ந்துகொண்டார். அதன்படி கறுப்பு இளவரசர் எட்வர்டுக்கு ஆணை பிறப்பித்து, அவரை பாரிஸ் நகருக்கு வர வேண்டியும் தென் பகுதியில் வாழும் பிரபுக்களுக்கு இளவரசர் எட்வர்டு இழைத்த கொடுமைகளுக்குப் பதில் கூறவேண்டுமென்றும் கட்டளையிட்டார். ஐந்தாம் சார்லஸின் இக் கட்டளை சட்டவிரோதமானது. எனவே கறுப்பு இளவரசர் இதனைப் புறக்கணித்தார். இதன் விளைவாக, இங்கிலாந்திற்கும்

பிரான்சிற்கும் மீண்டும் போர் மூண்டது. போருக்கு ஆயத்தமாயிருப்பதை அறிவிக்க வழக்கமான செய்தி அனுப்புவதற்கு மாருக, கறுப்பு இளவரசர் தம் சமையல்காரர் ஒருவர் மூலம் இச் செய்தியினைத் தெரிவித்து ஃபிரான்ஸ் அரசரை அவமதித்தார். கி. பி. 1369ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 29ஆம் நாள் ஃபிரான்ஸ் மன்னரை அவமதித்த இச் சம்பவம் நிகழ்ந்தது. இவ்வாறு செய்தது பெரும் குற்றம் ஆகும்.

ஃபிரான்சுடன் போர் தொடங்கிய காலத்தில் இங்கிலாந்து சொல்லொணுத் துயர்களை அடைந்தது. பிரான்ஸ் அரசர் ஐந்தாம் சார்லஸின் திட்டங்கள் நிறைவேறுவதற்கு முன் பிரெஞ்சியர் பாந்திபூரை கைப்பற்றிய செய்தி வந்துள்ளது. அபிவில்லியும் மற்ற நகரங்களும் கோட்டைகளும் சரணடைந்தன. அக்குவிடெயினிலும் நிலைமை படுமோசமாக இருந்தது. பாயிட்டோ, பெரிகோர்டு, ரூவார்க் போன்ற பகுதிகளின் பாரன் பிரபுக்கள் இங்கிலாந்துக்குக் காட்டி இருந்த விசுவாசத்தை மாற்றிக் கொண்டு ஃபிரெஞ்சுக்கு சார்பாகப் போருக்கு எழுந்தனர்.

**அரசின் உடல் பலவீனம்:** இப்போது மூண்ட போரில் ஆங்கிலேயருக்கு சாதகமான சூழ்நிலை நிலவியது. இதற்கு முன்னர் நடந்த போர்களில் இங்கிலாந்தின் தனிப்பெரும் தலைவராக மூன்றும் எட்வர்டு விளங்கினுர். ஆனல், இப்போது எட்வர்டு போரில் பங்கு கொள்ளவில்லை. அவருக்கு வயது ஐம்பத்தெட்டு தான் ஆகியிருந்தது. எனினும், அவர் உள்ளத்தாலும் உடலாலும் நைந்து காணப்பட்டார். நாட்டு நலன்களை அவருடைய மூத்த மகன் கறுப்பு இளவரசர்தான் முன்னின்று வழிகாட்டி இருக்க வேண்டும். ஆனல், ஸ்பானியப் படையெடுப்பின்போது அவருக்கு இருந்த காய்ச்சல் இன்னும் விடுபடவில்லை. சிறிது தேறி இருந்த அவர் உடலை அலட்டிக் கொண்டபோது நோய் மீண்டும் தொடர்ந்தது. அதனல் அவர் படுத்த படுக்கையானுர். வாழ்நாள்முழுவதும் அவர் ஆளத் தகுதியற்றவர் ஆனுர். ஃபிரான்சுடன் தொடங்கிய போரில் முதல் ஈராண்டுகள் முன்னணியில் இருப்பினும் அவரால் ஆங்கிலப்படைகளைச் சரிவர நடத்த முடியவில்லை. கி.பி. 1370ஆம் ஆண்டில் கறுப்பு இளவரசர் போர்க்கள வாழ்விலிருந்து நிலையாக விலக வேண்டியவரானுர். அதனல் படைகளை நடத்தும் பெரும் பொறுப்பு அடுத்த தம்பியான காண்ட் இளவரசர் ஜானின் வசம் ஒப்படைக்கப்பட்டது. ஜானுக்குப் பதவியை பிடிக்கும் ஆசை இருந்தும் அவர் திறமையற்றதால் அவருக்குப் பகைவர்கள் பலர் இருந்தனர். மேலும் மூன்றும் எட்வர்டைப் போன்றோ அல்லது கறுப்பு இளவரசரைப் போன்றோ படைநடத்தும் திறமை பெற்றிருக்கவில்லை.

கருப்பு இளவரசர் தம்முடைய அரண்மனையைப் போர்டேயில் வைத்திருக்கும் வரை ஆங்கிலேயர் தொடர்ந்து அக்குவிடெயினைக் காப்பாற்றுவதில் சிறிது வெற்றி கண்டார்கள் எனக் கூறலாம். இளவரசரின் வலக்கையான திறமை மிக்க சர் ஜான் சாந்தோஸ் கி.பி.1369ஆம் ஆண்டில் பாய்ட்டோவில் நேர்ந்த சிறுகலவரத்தில் கொல்லப்பட்டார். அவர் இறந்த பின்னர் அக்குவிடெயின் நில வரம் ஆங்கிலேயருக்கு எதிராகப் போகத்தொடங்கியது. கி. பி. 1370-ல் ஃபிரெஞ்சு அக்குவிடெயினின் வழியில் உயர் ஆபத்து நிலையிலும் நாடு திரும்பிய இளவரசர் நோயுற்றவராகவே மேலும் ஐந்தாண்டுகள் பெர்க் ஹாம்ஸ்டேட் கோட்டைக்குள் தங்கியிருக்க வேண்டியவரானுர். அவரால் போரிலும் உள்நாட்டு நிர்வாகத்திலும் பங்குகொள்ள முடியவில்லை. கறுப்பு இளவரசர் தாய் நாடு விஜயத்தால் ஃபிரான்சில் ஆங்கிலேயர் நிலை மேலும் மோசமாகியது. அக்குவிடெயினைத் தாக்கும் ஃபிரஞ்சியரைத் தடுத்து நிறுத்த முடியாமல் ஆங்கிலேயர் திகைத்தனர். கலேயிலிருந்து அனுப்பிய படைகளாலும் ஃபிரஞ்சியரை விரட்ட முடியவில்லை. ஆங்கில அரசர் கட்டளைக்கு இணங்க மறுத்த ஃபிரெஞ்சுப் பிரபுக்கள் ஆங்கிலேயருக்கு உதவ மறுத்தனர். இதனைத் தவிர்க்கக் காண்ட் இளவரசர் ஜானும், சர் ராபர்ட் நோலஸ் என்பாரும் முயற்சி செய்தும் பயன் ஏற்படவில்லை.

**லா ராச்சேலில் தோல்வி :** கி.பி. 1372 ஆம் ஆண்டில் அக்குவிடெயினைக் காப்பாற்றப் பெரும் படையொன்றை ஆங்கிலேயர் அனுப்பினர். பாராளுமன்றம் அரசருக்கு 50,000 பவுன்களை மானியமாக வழங்கியது. எனவே, பெரும் தரைப்படை, கப்பற் படையொன்றும் திரட்டப்பட்டன. வெகுதூரம் படையெடுத்துச்சென்று, ஈஜிஞேவிலிருந்த அய்குவான் நகரை கைப்பற்றிக்கொண்டனர். பின்னர் லிமோஜஸ் நகரையும் பிடித்துக் கொண்டனர். லிமோஜஸ் நகர மக்கள் நயவஞ்சகமாகத் தம் கோட்டைக் கதவுகளை படையெடுப்பாளர்களுக்குத் திறந்துவிட்டனர். லிமோஜஸ் நகரைக் கைப்பற்றக் கறுப்பு இளவரசர் தொடுத்த போர் அவருடைய கடைசிப் போர் ஆகும். அப் போரில் உடல் பலவீனத்தால் குதிரையில் உட்கார முடியவில்லை. அதனுல் சிவிகையில் உட்கார வைத்தனர். கடுமையான போருக்குப்பின்னர் லிமோஜஸ் நகரைக் கைப்பற்றினர். கோட்டைச் சுவரை வெடி மருந்து வைத்துத் தகர்த்துக் கண்ணில் எதிர்ப்படும் ஒவ்வொருவரையும் வெட்டி வீழ்த்துமாறு கட்டளையிட்டார். அந்நகர மக்கள் செய்த கலவரத்தால் சினமுற்றனர். சினமுற்ற மன்னர் அம் மக்களுக்குச் சரியாகப் பாடம் கற்பிக்க எண்ணினுர். இதன் விளைவாக இளவரசர் பெயருக்குக் களங்கம் ஏற்பட்டது. அதுவும் அவருடைய

இறுதிக் காலத்தில் இப் படுகொலை நிகழ்ந்தது வருத்தப்பட வேண்டியதொன்றாகும். நோயின் வேகத்தால் கறுப்பு இளவரசர் நாட்டு திரும்ப எண்ணினார். மூன்று மாதத்திற்குப் பின் கடல் வழியாக இங்கிலாந்தை வந்தடைந்தார். அவருடைய மருமகன் பெம்ப்ரோக் பிரபு ஜான் அப்படைகளை நடத்திச் சென்றார். அவர் பிஸ்கே விரிகுடாவரை ஆபத்தின்றி முன்னேறிய போதிலும் அவருடைய இலக்கான லா ராச்சேலை அடைய முடியாதபடி சங்கடம் ஏற்பட்டது. அங்கும் பெரும் ஸ்பானியப் படையொன்று ஆங்கிலேயரை எதிர்க்க ஆயத்தமாக இருந்தது. ஸ்பானியப் படை பிரெஞ்சியரது உதவிக்கு வரக் காரணம் இருந்தது. பெட்ரோவின் பெண் பிள்ளைகள் இருவரும் ஆங்கிலேயர் வசம் அடைக்கலப் பொருளாகப் போர்டேயில் இருந்தனர். அவ்விருவரையும் காண்ட் இளவரசர் ஜானும் அவருடைய அடுத்த தம்பி லாங்கிலி இளவரசர் எட்மண்டும் திருமணம் செய்துகொண்டு இருந்தனர். இத் திருமணத்தின் விளைவாக ஜான் தம்மைக் காஸ்டைலின் நியாயமான அரசரென அறிவித்திருந்தார். இதைக் கண்ட ஹென்றி (பெட்ரோவின் சகோதரர்; அப்போது காஸ்டைலின் அரசராக இருந்தவர்) வெகுண்டெழுந்தார். எனவே, ஸ்பானியர் ஆங்கிலேயரைத் தோற்கடிக்கும் நோக்குடன் பிரெஞ்சுக்கு உதவி செய்யக் கப்பற்படையொன்றை அனுப்பினர். ஸ்பானியப்படைக்கும் ஆங்கிலக் கப்பற்படைக்கும் 'லாராச்சேல் என்ற இடத்தில் கடற்போர் ஒன்று கி.பி. 1372ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22ஆம் நாள் மூண்டது. ஆங்கிலப்படை படுதோல்வியுற்றதும் பிஸ்கேயர்களால் ஆங்கிலக் கப்பல்கள் நாசப்படுத்தப்பட்டதோடு பெம்ப்ரோக் பிரபு மற்றும் நைட்டுகளும் சிறைப் படுத்தப்பட்டனர்.

அக்குவிடெயினைக் காப்பாற்றுவது இப்போது கடினமாகி விட்டது. அதற்கு உதவிய படைகள் தோற்றன. அக்குவிடெயினைக் காக்கும் பொறுப்பு காப்டல்-டி-புச் என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் காஸ்கானிய பிரபுக்களில் ஒருவர்; பாயிட்டர்ஸ் போரில் ஆங்கிலேயருக்குப் பெரும் உதவி செய்தவர். அவர் தீவிரமாகப் போரிட்டும் பிரெஞ்சுப் படைகளைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. எண்ணிக்கையில் குறைந்த படைகளால் அதிருப்தியுற்றிருந்த அக்குவிடெயின் மக்கள் ஆங்கிலேயருக்கு உதவ முன் வரவில்லை. அதனால் பாயிட்டர்ஸ், நியோர்ட், லாராச்சேல் போன்ற ஊர்கள் பகைவர் கைவசமாயின. அந்நகர மக்கள் செய்த துரோகத்தால் மேலும் பாயிட்டோ, செயின்டாங், அல்கோமாயில் ஆகிய பகுதிகளும் பிரெஞ்சியர் வசமாயின. ஸொபிசே என்ற இடத்தில் நடந்த போரில் காப்டல்-டி-புச்சும் கைது செய்யப்பட்டார். அவருடைய தோல்விக்குப் பின்னர்

அக்குவிடெயினைக் காப்பாற்றும் கடைசி நம்பிக்கையும் அழிந்து நொறுங்கியது. இத் தருணத்தில் பிரிட்டானியிலும் ஆங்கிலேயருக்கு எதிர்ப்பு மூண்டது. பிரிட்டானியின் அரசரான ஐந்தாம் ஜான் மூன்றும் எட்வர்டு மன்னரின் நெருங்கிய நண்பர். பிரெஞ்சியப்படை பிரிட்டானியின் பெரும் பகுதியையும் கைப்பற்றியது. ஜானின் படைத் தளபதியாக இருந்த பெர்ட்ராண்டு-டி-குங்க்லின் பிரெஞ்சியருடன் சேர்ந்துகொண்டு பெரும் பதவியைப் பெற்றிருந்தார் (1372-73).

**காண்ட் இளவரசர் ஜானின் படையெடுப்பு:** கி. பி. 1373 ஆம் ஆண்டு பிரான்ஸுக்கெதிராக இங்கிலாந்து தன் இறுதிப்போரைத் தொடங்கியது. இப்போரில் வெற்றி பெற விரும்பிய ஆங்கிலேயர் காண்ட் இளவரசர் ஜானை தளபதியாக நியமித்தனர். 3000 படைக்கலம் தரித்த போர் வீரர்களும், 6000 வில்லாளிகளும் அவருடைய படையில் இருந்தனர். அவருடன் பெரும் எண்ணிக்கையில் நெதர்லாந்திலிருந்தும், ஜெர்மனியிலிருந்தும் திரட்டப் பெற்ற கூலிப் பட்டாளத்தினரும் சேர்ந்து கொண்டனர். அவருடைய படையில் 300 ஸ்காட்டியரும் இருந்தனர். எனவே ஜானின் படை எண்ணிக்கையில் பெரியதாக இருந்தும் இப்படையை நடத்திச் செல்ல சிறந்த படைத்தலைவர் இல்லாதது பெரும் குறையாக இருந்தது. தகுதியற்ற ஜான் படையை தவருன வழியில் நடத்திச் சென்ருர். அப்போது பிரான்ஸ் நாட்டின் அரசராயிருந்த ஐந்தாம் சார்லஸ் திறமைசாலி, அரசியல் தந்திரம் மிக்கவர். போர் தொடங்கிய போது ஆங்கிலப்படைகள் பண்ணைகளையும் குடிசைகளையும். தீக்கிரையாக்கினர். எனினும் ஐந்தாம் சார்லஸ் பார்த்துக் கொண்டே போரிடாமல் காலம் தாழ்த்தி வந்தார். சார்லஸ் ஜானை முன்னேறும்படி விடவே ஆங்கிலப் படைகள் பிகார்டியையும், ஷாம்பேயினையும் தாண்டி லூவார் ஆறுவரை சென்றன. பிரெஞ்சியர் அவர்களைப் பின் பற்றிச் சென்று அவர்களுக்கு வேண்டிய தளவாடங்கள் கிடைக்காமலும் தடுத்துவிட்டனர். ஐந்தாம் சார்லஸ் இருப்பினும் அவர் ஜானை எதிர்த்துப் போரிடவில்லை. பின்னர் பெர்ரி வரை படையெடுத்து வழி எல்லாம் கொள்ளையிட்டும், சூறையாடியும் போர்டோ நோக்கிச் சென்றனர். இத் தருணத்தில் குளிர்காலம் தொடங்கியது. போர்டோவை அடுத்த மலைப்பாங்கான பகுதிகளில் ஆங்கிலப்படையினர் சொல்லொணுத் துயருற்றனர். பெரும்பாலும் ஜானிடம் இருந்த குதிரைகள் அனைத்துய் தீனி இன்றி பட்டினியால் மாண்டு மடிந்தன. வழி நெடுகிலும் பலர் செத்து மடிந்தனர். தாங்கமுடியாத குளிரும் சோர்வும் பலருடைய உயிரைக் குடித்தன. இறுதியாக எஞ்சி இருந்தவர்கள் வாடித் தளர்ந்து வதங்கியவர்களாய்ப் போர்டோ

சென்று அடைந்தனர். மத்திய பிரான்ஸில் ஆங்கிலப் படைகள் குடியானவர்களுக்கு இழைத்த கொடுமைகள் பல; இருப்பினும் பிரான்ஸ் மன்னர் ஐந்தாம் சார்லஸ் அதைப் பொருட்படுத்தவே இல்லை. ஆங்கிலேயர்கள் அக்குவிடெயினின் வடதிசையில் தாங்கள் இழந்த நகரங்களில் ஒன்றையேனும் கைப்பற்ற முடியாமல் திணறினர்; திண்டாடினர். கி. பி. 1374ஆம் ஆண்டில் லங்காஸ்டர் பிரபு தம்மிடம் இருந்த எஞ்சியப் படையினருக்கு சம்பளம் கொடுக்க வழியற்றவராய், அப்படையையே கலைத்து விட்டு, இங்கிலாந்து திரும்பினர்.

மேற்கூறிய படையெடுப்பு சரியான முறையில் நடத்தப் படாமையால் தோல்வியில் முடிந்தது. கையென் (Guyenne) காஸ்கனி ஆகியவற்றின் பெரும் பகுதியை ஆங்கிலேயர் இழக்க வேண்டியவராயினர். இப் பகுதியில் வாழ்ந்த பொது மக்கள் ஆங்கிலேயரின் தோல்வியை அறிந்து கொண்டமையால், அவர்களுக்கு உதவி செய்ய முன்வரவில்லை. ஆங்கிலேயரின் கையிலிருந்த பிரெஞ்சுப் பகுதி மெதுவாக பிரெஞ்சியரிடம் சேரலாயிற்று. கி. பி. 1374 ஆம் ஆண்டின் இறுதியில் போர்டோ என்ற நகரமும், பயோன் (Bayonne) என்ற நகரமுமே ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. அத்துடன் காஸ்கனி கடற்கரை ஓரப் பகுதியும் ஆங்கிலேயரின் வசமிருந்தது. ஆயினும் உள்நாட்டுப் பகுதிகள் அனைத்தையும் பிரெஞ்சியர் கைப்பற்றிக் கொண்டனர். போர்டோ, கையென் என்ற துறைமுகப் பட்டினங்கள் ஆங்கிலேயரிடம் தங்கியிருக்கக் காரணமிருந்தது. அத் துறைமுகங்களிலிருந்து வாணிபத் தொடர்புகள் இங்கிலாந்துடன் நெருங்கியதாய் இருந்தமையே அதற்குக் காரணமாகும். மேலும் அந் நகரங்கள் இங்கிலாந்தில் இருப்பது போன்ற அரசாட்சி முறையால் அமைதியான வாழ்க்கையைக் கொண்டிருந்தன. பிரான்ஸ் மன்னரின் வசமாயிருந்தால் அவ்வளவு சுதந்திரம் கிட்டியிருக்காது. அவ்விரு நகரங்களும் இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்திலிருந்தே கடந்த 200 ஆண்டுகளாக ஆங்கிலேயரிடமே இருந்து வந்தன. அவ்விரு நகரங்களுக்கும் பிரெஞ்சிய குடும்பத்தோடு வரலாற்றுத் தொடர்புகள் கிடையா.

அக்குவிடெயினில் ஆங்கிலேயர் பெற்ற படுதோல்வியைக் கண்ணுற்றப்போது பிரான்ஸுடன் போர்நிறுத்தம் ஏற்பட்டது. இது கி. பி. 1375ஆம் ஆண்டு செய்யப்பட்டது. இதை மூன்றும் எட்வர்டின் அதிர்ஷ்டமே என்று கூற வேண்டும். தொடக்கத்தில் இப்போர் உடன்படிக்கை ஓராண்டு காலத்திற்கே செய்யப்பட்டாலும், அடுத்த ஆண்டும் அதைத் தொடர்ந்து உறுதி செய்து

கொண்டார்கள். கூறப்போனால் இப்போர் நிறுத்தம் எட்வர்டு அரசரின் ஆட்சிகாலம் முடிவுறும் வரை நீடித்தது.

பாராளுமன்றத்தில் இடர்ப்பாடுகள்:- படிப்படியாக அக்குவி டெயின் ஆங்கிலேயரைக் கைவிட்டுச் செல்லத் தொடங்கிய ஐந்தாண்டு காலத்தை ஆங்கில அரசியலமைப்பு வரலாற்றின் சிறப்பான காலம் என்று கூறலாம். பிரான்ஸுடன் நடந்த போரில் ஆங்கிலேயரின் தோல்வியால் பாராளுமன்றம் அதிருப்தி யுற்றிருந்ததை இவ்வைந்தாண்டு காலத்திலும் நம்மால் அறிய முடியும். கி. பி. 1371ஆம் ஆண்டில் பாராளுமன்றம் அரசருடைய அமைச்சருக்கெதிரான நடவடிக்கை அரசருக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே சச்சரவு ஏற்பட லாயிற்று. ஆங்கிலேயர் பிரான்சில் பெற்ற தோல்விக்கு இங்கி லாந்தின் நிர்வாகத்தை மேற்கொண்டிருந்த அமைச்சர்களைச் சார்ந்ததென்றும் கருதினர்கள். அமைச்சர்களின் கையாலாகாத தன்மையே இத்தோல்விக்குக் காரணம் என்று பாராளுமன்றம் கருதத் தொடங்கியது. அவர்களில் இருவர் சமயக்குருமார்கள் அவர்களில் ஒருவர் வின்செஸ்டரின் பிஷப்பான வைக்காமைச் சார்ந்த வில்லியம் (William of Wykham) என்பார் ஆவார். அவர் சான்சலராகப் பதவி வகித்திருந்தார். மற்ருருவர், எக்சிடாரின் பிஷப்பும் பிரான்டிங்ஹாமைச் சார்ந்தவருமான தாமஸ் என்பார். அவர் பொருள்காப்பாளராகப் பதவி வகித்திருந்தார். மேற்கூறிய இருவரும் திறமைசாலிகள். விருப்பு வெறுப்பற்றவர்கள். கட்டிட கலை நிபுணராயிருந்த வைக்காமின் திறமையால் கவரப்பெற்ற எட்வர்டு, அவர் தலைசிறந்த அரசியல் ஞானியெனக் கருதினர். வின்செஸ்டரில் இருந்த கல்லூரியையும் நிறுவியவர் அவரே யாவர். சான்ஸ்லரும் பொருள் காப்பாளரும் இங்கிலாந்தின் தோல்விக்குக்காரணமாம் என்றுகூறுவது சரியானதன்று. ஆங்கில படைகளை நடாத்திச் செல்லத் தகுதியும் திறமை வாய்ந்த படை தளபதியும் இல்லாததே அக்குவிடெயினை இங்கிலாந்து இழந்தது. வட பிரான்சின் மீது நடத்தப்பெற்ற ஆங்கிலப் படையெடுப்புகளில் ஆங்கிலேயர் பெரும் படைகளையும் எண்ணற்ற பொருள்களையும் வாரி இறைத்ததும் அறிவீனமான செயலாகும். ஆனால், பாராளு மன்றத்தினர் திருச்சபை ஊழியத்தில் இருந்தவர்களுக்குப் போர் முறைகள் தெரிந்திருக்க நியாயமில்லையெனக் கொண்டு வின் செஸ்டர், எக்சிடார் பிஷப்புகளின் திறமையின்மையே ஆங்கி லேயரின் தோல்விக்குக் காரணம் என்று நம்பினர். அவர்களைப் பதவியிலிருந்து விலக்கக்கோரி, பாராளுமன்றம் அரசரிடம் விண்ணப்பித்தது. அவர்களுக்குப் பதிலாக லௌகீகர்களைப் பதவி யில் அமர்த்துமாறும் அது கோரியது. எட்வர்டு பணிய வேண்டி

யவராயினர். சர் ராபர்ட் தோர்பே (Sir Robert Thorpe) என்பார் சான்சலராகவும், சர் ரிச்சர்டு ஸ்கோர்ப் (Sir Richard Scrope)என்பார் பொருள் காப்பாளராகவும் நியமிக்கப்பட்டனர். ஸ்கோர்ப் காண்ட் இளவரசர் ஜானின் நண்பர்.

லஞ்ச ஊழல் : புதிய நிர்வாகத்தினரின் ஆட்சி முந்தைய நிர்வாகத்தை விட மோசமாகக் காணப்பட்டது. காண்ட் இளவரசர் ஜான் இப்போது ஆட்சிப் பொறுப்பைக் கவனிக்க வேண்டியவரானர். அவருடைய மூத்த சகோதரரான கறுப்பு இளவரசர் நோயுற்றுப் படுத்த படுக்கையானர். அரசரும் மூப்புற்று மனத்தளர்ச்சியுற்றிருந்தார். அரசரின் நம்பிக்கைக்கு பாத்திர மான அவரது அன்பு மனைவி ஹைனுல்டு பிலிப்பா என்பார் கி. பி. 1369ஆம் ஆண்டில் காலமானர். அவருடைய மரணத்திற்குப் பிறகு டேம் அலிஸ் பெரார்ஸ் (Dame Alice Perrars) என்பாளின் கைப்பாவையானர் அரசர். அவளுடைய காதலுக்கு இரையான அரசர் நாட்டின் நிர்வாகத்தில் அவள் தலையிட்டு குறுக்கிடு வதையும் அனுமதிக்க வேண்டியவரானர். அரண்மனையில் தங்கள் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள எண்ணமிட்ட சுயநலமிகள் அவளுக்கு லஞ்சம் கொடுத்து தம் கைக்குள் போட்டுக் கொண்டனர். நீதித் துறையிலும் அவள் குறுக்கிட்டு நீதிபதிகளை அச்சுறுத்தியோ அல்லது லஞ்சம் கொடுத்தோ சரி செய்யத் திட்டமிட்டாள். காண்ட் இளவரசர் ஜான் தம் தந்தையாரை இந்த அரக்கியின் வசம் விட்டு விட்டு, வெளி நாட்டு விவகாரத்தில் முழுவதும் தம் கவனத்தைச் செலுத்தியிருந்தார். அக்குவிடெயினில் ஏற்பட்ட தோல்விக்கு முழுபொறுப்பும் காண்ட்இளவரசர் ஜானையே சாரும். கையென் கையை விட்டுப் போன பின்னர், ஜான் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென்று வற்புறுத்தப் பட்டார். இங்கிலாந்து பிரான்சுடன் நடத்திய போரில் இழந்த பொருள்களைப் பற்றியும் கைகூடிவந்த காரியங்கள் கைநழுவிச் சென்ற கதையினையும், பிரான்ஸ் நாட்டினர் கைப்பற்றிக் கொண்ட பகுதிகளைப் பற்றிய செய்திகளையும் அவர் பாராளுமன்றத்தில் விளக்க வேண்டியவரானர்.

நற் பாராளுமன்றம் (The Good Parliament):- கி. பி. 1376ஆம் ஆண்டில் கூடிய நற் பாராளுமன்றம் கடந்த மூன்று ஆண்டுகளாக இங்கிலாந்திற்கு ஏற்பட்ட தோல்விகளால் அதிருப்தியுற்று, லங்காஸ்டர் பிரபுவான ஜானைப் (காண்ட் ஜான்) பழி வாங்கியது. திறமையற்றவர் என்று அவர் பாராளுமன்றத்தில் தூற்றப்பட்டார். வேறு பல நியாயமற்ற குற்றச்சாட்டுகளையும் மக்கள் அவர் மீது தூவினர். தம் தந்தையின் மரணத்திற்குபின் கறுப்பு இளவரசரை

நீக்கி விட்டு அரியணையைக் கைப்பற்ற அவர் சதி செய்தார் என்றும், கறுப்பு இளவரசரின் ஒன்பது வயது பாலகன் ரிச்சர்டை யும் பதவிக்கு வராமல் தடுக்க முயன்றார் என்றும் மக்கள் ஜான்மீது குற்றஞ்சாடினர். பாலகன் ரிச்சர்டை நஞ்சிட்டுக் கொல்ல முயன்ற தாக வதந்திகள் உலாவின. ஜானின் உயர்ந்த பதவியின் காரண மாகப் பாராளுமன்றம் அவரை குறை கூறத் துணியவில்லை. ஆனால் அவருடைய நண்பர்களும், துணைவர்களும் கடுமையாகத் தாக்கப்பட்டு துன்புறுத்தப்பட்டனர். காமன்ஸ் சபையினரின் சபாநாயகரான பீட்டர்-டி-லாமேர் என்பார் அரசர் துயருற்று நிற்கும் அவ்வேளையில் அவருக்கு உதவி செய்ய நாட்டு மக்கள் ஆயத்தமாக இருக்கிறார்கள் என்றும், ஆனால் அரசரின் அவல நிலையை தம் சுயநலத்திற்கு பயன்படுத்திக் கொள்ளும் உலுத்தர் களை நீக்க வேண்டும் என்றும் துணிச்சலாகக் கூறினார். அரசரின் அரண்மனைக் காப்பாளரான வில்லியம் பிரபு லாட்டிமர், அரசரின் பொருள் காப்பாளரான ரிச்சர்டு லயான்ஸ், அரசரின் காமக் கிழத் தியான டேம் அலிஸ் பெரார்ஸ் ஆகிய மூவரையும் பாராளுமன்றம் குற்றவாளிகளாகக் கருதியது. முதலிருவரும் லஞ்ச ஊழல்களால் அரசருக்குப் பெரும் கடனை ஏற்படுத்தக் காரணமாயிருந்தவர்கள். அவர்கள் அரசரை ஏமாற்றி 13,300 பவுன் கடனுக்கு 20,000 பவுனுக எழுதி வாங்கிக்கொண்டதாகக் கூறப்பட்டது. இங்கிலாந் தின் நண்பரான பிரிட்டானியின் டியூக்கிடம் லாட்டிமர் லஞ்சம் வாங்கிக் கொண்டு பின்னர் அவருடைய கோட்டைகளான செயின்ட் சாவூரையும் பெச்ரீலையும் பிரெஞ்சுக்காரர்களுக்கு விற்று, அவருக்குத் துரோகம் செய்திருந்தார். இக் குற்றங்களுக் காக லாட்டிமரும், லயான்ஸும் காமன்ஸ் சபையால் துரோகக் குற்றம் சுமத்தப்பட்டனர். பிரபுக்கள் சபை விசாரணை செய்து அவ்விருவரையும் குற்றவாளிகள் என்று அறிவித்தது. அவர் களுக்கு அபராதம் விதித்துச் சிறையில் அடைத்தது. அவர் தம் பதவிகளைப் பறித்துக் கொள்ள ஆணையிட்டது. சாதாரணக் குற்றங்கள் புரிந்த வேறு சிலரையும் அதே சமயத்தில் பாராளு மன்றம் தண்டித்து நீதித்துறை விவகாரத்தில் பெண்கள் தலை யிடக் கூடாது என்ற சட்டத்தை மீறி அதில் குறுக்கிட்டவள் என்ற காரணத்திற்காக அலிஸ் பெரார்ஸ் நாடு கடத்தப்பட்டாள். அரசருக்கு அருகில் அவள் வரக் கூடாதென வாக்கு கொடுக்கும் படியும் பாராளுமன்றம் வற்புறுத்தி அவ்வாக்குறுதியைப் பெற்றது. எனினும் அவள் அதை வெகு விரைவில் மீறி விட்டாள்.

மேற்கூறிய விசாரணைகள் நடந்து கொண்டிருந்த போது கி.பி 1376ஆம் ஆண்டு ஜூன் மாதம் 8ஆம் நாள் கறுப்பு இளவரசர் என்று பெயர் பெற்றவரும் வேல்ஸ் இளவரசருமான எட்வர்டு

காலமானுர். உடனே பாராளுமன்றம் வேல்ஸ் இளவரசர் எட்வர்டின் மகனும், அரசர் மூன்றும் எட்வர்டின் பேரருமான ரிச்சர்டை அரச வாரிசென அறிவிக்க வேண்டுமென்றும், அரசாங்க நிர்வாகத்தைக் கண்காணிக்க நிலையான குழுவொன்று நியமிக்க வேண்டும் என்றும் விண்ணப்பித்தது. அரசர் எட்வர்டும் அரசாங்க நிர்வாகத்தைக் கவனிக்கும் நிலைமையில் இல்லாததாலும், காண்ட் இளவரசர் ஜான் அரச அதிகாரத்தைத் தம் கைக்குள் கைப்பற்றிக் கொள்ளாமல் தடுக்கவும், இவ்வேற்பாட்டை பாராளுமன்றம் வற்புறுத்தியது. அதன்படி அரசர் எட்வர்டு பாராளுமன்றக்கோரிக்கைக்கு இணங்கி ஒன்பது பேர் அடங்கிய குழுவொன்றைப் பாராளுமன்றம் நியமிக்க அனுமதித்து அதில் நால்வராவது அரசருடைய ஆட்களாக இருக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். அத்துடன் காமன்ஸ் சபையினர் நிர்வாகத் துறையில் காணப்பட்ட குறைகளைப் பட்டியலாக்கி 140 கோரிக்கைகளைகொண்டமனுவொன்றை அரசரிடம் சமர்ப்பித்தது. அவற்றிற்குப் பரிகாரம் கேட்டிருந்தனர். இம்மனுக்களில் இரண்டு மிக முக்கியமானதாகும். அவற்றில் ஒன்று பாராளுமன்றம் குறைந்தபட்சம் ஆண்டுக்கு ஒரு முறையாவது கூடவேண்டுமென கோரியது. மற்ருென்று, ஷயர்களிலிருந்த நைட்டு வீரர்களின் தேர்தல்களின் போது ஷெரிப்புகளும் ஏனைய அரச அதிகாரிகளும் தலையிடகூடாது என்றும் நாட்டு மக்கள் நியமிக்கும் உறுப்பினர்கள் வெற்றி பெறுவதைத் தடுக்கக் கூடாது என்றும் கோரியது.

**காண்ட் இளவரசர் ஜான் அதிகாரத்தைக் கைப்பற்றுதல்:** கி. பி. 1376ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6ஆம் நாள் பாராளுமன்றம் கலைந்தது. லங்காஸ்டர் பிரபுவான ஜானை அடக்கி விட்டதாகவும் நல்லரசுக்கு வழிவகுத்து விட்டதாகவும் கருதிக்கொண்டு அப் பாராளுமன்றம் கலைந்தது. பாராளுமன்றம் கலைந்தவுடனே காண்ட் இளவரசர் ஜான் பழிக்குப்பழி வாங்கத் தீர்மானித்தார். நோயுற்றுத் தளர்ந்து கிடந்த அரசர் எட்வர்டை ஜான் தம் கைக்குள் போட்டுக்கொண்டு, 'நற்பாராளுமன்றம்' ஒரு பாராளுமன்றமேயல்லவென்றும், அதனுல் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் சட்டவிரோதமானவை என்றும் அறிவிக்க வைத்தார். முன்னுள் சபாநாயகரான பீட்டர்-டிலாமேர் என்பாரைச் சிறையில் அடைந்தார். புதிதாக நியமிக்கப்பட்ட ஒன்பது பேர் கொண்ட குழுவையும் பதவியிலிருந்து நீக்கினுர்; லயான்ஸ் மற்றும் ஏனைய தண்டிக்கப் பெற்றிருந்த குற்றவாளிகளைச் சிறையிலிருந்து விடுதலை செய்தார். அலிஸ் பெரார்ஸையும் அரண்மனைக்கு திரும்பிவர அனுமதித்தார்.

புதியதொரு பாராளுமன்றம் கூடவேண்டுமென ஏற்பாடு நடைபெற்றது. அரசருடைய தனிச் சிறப்பதிகாரத்தை மானங்கெட்ட முறையில் பயன்படுத்தியும் வாக்காளர்களை அச்சுறுத்தியும் காண்ட் இளவரசரும் லங்காஸ்டர் பிரபுவான ஜான் தம்முடைய ஆதரவாளர்களைப் பெரும் அளவில் வெற்றி பெறச் செய்திருந்தார். கி. பி. 1377ஆண்டு ஜனவரி மாதம் இப் பாராளுமன்றம் கூடியது. மூன்றும் எட்வர்டு முடிசூட்டிக்கொண்டு ஐம்பது ஆண்டுகள் ஆன படியால், அதைக் கொண்டாட பொன்விழா ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. அவ்விழாவின் நிமித்தமாகச் சிறு குற்றங்கள் புரிந்தோர்களும் கடனுக்காகச் சிறையில் அடைபட்டுக் கிடந்தவர்களும் பொது மன்னிப்பு பெற்று விடுதலையானுர்கள். இவர்கள் விடுதலை உள்நாட்டுக் கலகத்திற்கு வழிவகுத்தன. சைமன்-டி-மான்ட்போர்ட் போன்றபிரபுக்களின் தலைவரோ அல்லது முதலாம் எட்வர்டு மன்னரை எதிர்த்த பிரபுக்கள் போன்றவர்களோ இருந்திருப்பின், லங்காஸ்டர் பிரபு ஜான் கலவரத்தால் வீழ்ச்சியடைந்திருக்கக் கூடும். ஆனல் இத்தருணத்தில் அத்தகைய புரட்சியோ, கலவரமோ நிகழவில்லை. அரசியலமைப்பின் அடிப்படையில் ஆட்சி அமைய வேண்டும் என்றவர்களின் கட்சித் தலைவராக இருந்த வைக்காம் பிஷப் வில்லியம் அமைதியையும், எச்சரிக்கையுணர்வையும் கொண்டவர். லௌகீகர்களின் தலைவராயிருந்த எல்லைப் பிரபு வயதில் இளையவர்; அவரும் ஒரு மிதவாதி. எனவே, ஜானுக்கெதிராக வெளிப்படையான எதிர்ப்பு தொடக்கத்தில் தென்படவில்லை. வைக்காம் பிஷப் வில்லியத்திற்கு எதிராகப் பொய்க் குற்றச்சாட்டு ஒன்றைச் சூட்டினுர் ஜான். அவர் பொதுப்பணத்தைக் கையாடியதாகக் குற்றம் சுமத்தி அவர் மீது நடவடிக்கை எடுக்கஜான் முயன்றபோதும் அவருக்கெதிராகக் கிளர்ச்சியொன்றும் மூளவில்லை. லாட்டிமரையும் லயான்ஸையும் துரோக குற்ற விசாரணையில் ஈடுபடுத்தியதை எதிர்த்தார் என்பதற்காக பிஷப் வில்லியத்தின் மீது அத்தகைய பொய்க் குற்றச்சாட்டு சுமத்தப்பட்டது.

லங்காஸ்டர் பிரபுவான ஜான் குறுகிய நோக்கமுள்ளதோர் அரசியல் வாதியேயென்றுலும், தம்முடைய நிலையைச் சீர்செய்து கொள்ளாவிடின் அவர் வீழ்ச்சியடைந்து தூக்கியெறியப்படுவார் என்பதையும் உணர்ந்திருந்தார். தம் பக்கம் பொது மக்களின் அனுதாபத்தைப் பெற வழியுள்ளதா என்று ஆய்ந்தார். போர் முரசு கொட்டி மக்களைத் தம் பக்கம் திருப்பலாம் எனக் கருதிய அவர் பிரான்சுடன் போர் செய்ய முடியாமல் இருப்பதைக் கண்டு அந்நோக்கத்தைக் கைவிட்டார். ஆனல் அவர் மற்றொரு துறையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்த முடியும் என்று

நம்பினர். திருச்சபையைத் தமக்குச் சாதகமாகத் திருப்ப அவர் எண்ணினர்.

**திருச்சபைக்கெதிரான உணர்ச்சி:** போப்பாண்டவருக்கு எதிரான இவ்வுணர்ச்சியைத் தமக்குச் சாதகமாக்கிக் கொள்ள ஜான் முயன்றார். நாட்டில் போப்பாண்டவருக்கு எதிரான உணர்ச்சி நிலவியது. அப்போது போப்பாண்டவர்கள் பிரான்ஸ் நாட்டில் அவிக்னன் என்ற நகரில் குடி பெயர்ந்திருந்தனர். போப்பாண்டவர் கேட்ட சொல்லொணு வரிகளும், கோரிக்கைகளும் தேசபக்த ஆங்கிலேயரை அவருக் கெதிராகக் கோபம் கொள்ளச் செய்தன. ஆனால் திருச்சபை ஊழியர்களில் பெரும்பாலோர் போப்பாண்டவரையே ஆதரித்து நின்றனர். இருந்தாலும் இத்தருணத்தில் ஆங்கில திருச்சபை யிலும், பல்வேறு முறைகேடுகளும், அவதூறுகளும் நிலவி வந்தன. பிஷப்புகள் தம் சமயப்பணிகளைக் கைவிட்டு நாட்டில் நடைபெற்ற போர்களிலும் அரசியல் பிரச்சனைகளிலும் தீவிரமாகப் பங்கு கொண்டனர். அத்தகைய பிஷப்புகள் எக்காலத்திலும் திருச்சபையில் இருந்தார்கள். எனினும் பதினான்காம் நூற்றாண்டில் அப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை மாபெரும் அளவுக்கு புல்கிப் பெருகியிருந்தது. இந்நூற்றாண்டில் பாரன் பிரபுக்கள் தம்முடைய பிள்ளைகளைத் திருச்சபைச் சேவகத்தில் ஈடுபடுமாறு செய்திருந்ததுடன், அவர்கள் எளிதில் முன்னேறி பதவியுயர்வு பெற வேண்டுமென்றும் கருதினர். பாரன் பிரபுக்களின் குடும்பத் தினர் முந்தைய நூற்றாண்டுகளில் திருச்சபை சேவகத்தில் நுழை வது அருமையிலும் அருமை. ஆனால் 14ஆம் நூற்றாண்டில் இது சர்வ சாதாரணமாய்க் காணப்பட்டது. கி. பி. 1348க்கும் 1400க்கும் இடைப்பட்ட காலத்தில் கான்டர்பரி ஆர்ச் பிஷப்பாய் இருந்த எழுவரில் மூவர் பிரபுக்களின் பிள்ளைகள் அல்லது சகோதரர்கள். இவர்கள் பதவி பெற்றதால் தூயஆன்மீக உணர்வும், உலகப் பந்த பாசங்களிலிருந்து விடுபட வேண்டுமென்ற நோக்கமும் வளர்ச்சி யுறவில்லை. திருச்சபை ஊழியத்தில் இருந்த பலர் தம் பதவிப் பொறுப்புகளைச் சரிவர கடைப்பிடிக்காதது மட்டுமின்றிப் பலர் கெட்ட வழிகளில் வாழ்க்கை நடத்தினர். மடாலயத் துறவிகளும் திரி துறவிகளும் மேலும் கேவலமான செயல்களில் ஈடுபட்டிருந் தனர். லௌகீகப் பாதிரிகளை விட, திருச்சபைப் பாதிரிகளும் மடாலயத் துறவிகளும் ஒழுக்கங்கெட்டவர்களாயும், அறவாழ்வில் பற்றற்றவர்களாயும் விளங்கினர். கடுங்கொள்ளை நோய்க்குப் பலியான திருச்சபை ஊழியர்களின் பதவிக்கு ஒழுக்கங்கெட்டவர் களும், வீணர்களும் நிரப்பப் பெற்றனர். எனினும் திருச்சபை முந்தைய நூற்றாண்டுகளைவிடச் செல்வக் கொழிப்பில் திளைத்தது.

நாட்டின் மூன்றிலொரு பங்கு நிலபுலன்களும் செல்வங்களும் திருச்சபையினரின் கைவசமாயிருந்தன என்பதிலிருந்து திருச் சபையின் செல்வாக்கை நன்கு உணரலாம். நாட்டின் தேவை களுக்கு அவ்வப்போது திருச்சபையினர் தாராளமான நன் கொடைகளை மானியமாக வழங்கினும், திருச்சபை நிலங்கள் படைமானிய வரிகளிலிருந்து விதி விலக்கு பெற்றிருந்ததைக் கண்டு மக்கள் அதிருப்தியுற்றனர். நாட்டின் கருவூலத்திற்குதிருச் சபையினர் கொடுத்த நிதி அவர்களின் நிலத்தின் பங்குக்கேற்ப அமைந்திருக்கவில்லை. இத் தருணத்தில்தான் இங்கிலாந்தில் ஜான் விக்லிஃப் (John Wycliffe) என்ற பெரியார் சமய சீர் திருத்தத்தின் அவசியத்தைப் பற்றிப் பேசி வந்தார். (அடுத்த அத்தியாயத்தில் 'விக்லிஃபும் திருச்சபையும்'-விரிவாகக் காண்க).

## (உ) பாராளுமன்றத்தில் ஏற்பட்ட மாறுதல்கள்

மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் கூடிய பாராளுமன்றங்கள் பொதுமக்களின் அதிகாரத்தை உறுதி செய்ததுடன், அவ் வதிகாரத்தைப் பயன்படுத்திக் கொள்வதற்கு அடிக்கடி வாய்ப்பு களையும் அளித்தன. அவர் நடத்திய போர்களின் விளைவாக ஏற்பட்ட ஏராளமான செலவுகளைத் தீர்ப்பதற்காக மக்களிட மிருந்து உதவியைத் தொடர்ந்து நாடவேண்டியிருந்ததால், மன்னரின் ஐம்பதாண்டு ஆட்சிக்காலத்தில் பாராளுமன்றம் நாற்பத்தெட்டு தடவைகள் கூடியது.

1330-ம் ஆண்டில் பாராளுமன்றம் ஆண்டுதோறும் கூட வேண்டும் என்றும் தேவையானால் அடிக்கடிகூட வேண்டுமென் றும், சட்டம் இயற்றப்பட்டது. ஆயினும் 1362ஆம் ஆண்டில் பல் வேறு குற்றங்களும், மனக்குறைகளும் நாள்தோறும் ஏற்படுவதால் அவைகளைக் களைவதற்கு ஆண்டுதோறும் பாராளுமன்றம் கூட வேண்டுமெனவும், சட்டம் விதிக்கப்பட்டுள்ளவாறு வேறொரு சமயமும் கூடவேண்டுமெனவும் ஏற்பட்டது.

**காமன்ஸ் சபையின் வளர்ச்சி:-** மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் பொதுமக்கள் அவர்களுடைய உரிமைகளில் மூன்றினை வற்புறுத்தினர்.

(1) பாராளுமன்றத்தின் சம்மதமின்றி விதிக்கப்படும் வரிகள் சட்டத்திற்கு முரணானவை.

(2) சட்டமியற்றுவதில் இரு சபைகளின் கருத்தொருமித்த சம்மதம் தேவையானது.

(3) ஆட்சியில் காணப்படும் குறைகளை விசாரணை செய்யவும் சீர்திருத்தம் செய்யவும் காமன்ஸ் சபையினருக்கு உரிமையுண்டு.

இவைகளின் வளர்ச்சியிலிருந்து பெறுவதாக காமன்ஸ்சபை முதன்முதலாக இரு உரிமைகளை அறிவித்தது (அ) மேலே குறிப்பிட்டுள்ள முதலாவது, மூன்றுவது பிரிவுகளில் தொடர்புள்ளபடி, பொதுத் துறைக்கணக்குகளைச்சோதனை செய்யவும், தொகைகளை ஒதுக்கவும் (ஆ) மூன்றுவது விதியின் கிளைத்தோற்றமாக மன்னருடைய அமைச்சர்களைக் குற்றநடவடிக்கைகளுக்காகக் குற்றஞ்சாட்டும் உரிமையுமாகும்.

**1. சம்மதமின்றி வரி விதித்தல் சட்ட விரோதமானது:-** மூன்றும் எட்வர்டு இடைவிடாமல் பல்வேறு வரிகளைத் தம் விருப்பப்படி விதித்துவந்தார். காமன்ஸ் சபையினர் இதைத்தொடர்ந்து மறுத்தும் எதிர்த்தும் வந்தனர். சிலசமயம் நிபந்தனையுடன் வரிகள் வழங்கப்பட்டன. சிலதடவை தாராளமாகவும் உதவியளித்தனர். உதவியை மன்னர் கோரியபோதெல்லாம் நேர்முகமான வரிவிதிப்பு செய்வதைக் கட்டுப்படுத்துவதில் காமன்ஸ் சபையினர் உரிமை பெற்றனர்.

1332ஆம் ஆண்டில் அயர்லாந்தில் தோன்றிய கலகத்தை அடக்க அரசர் வரி வேண்டினர். டல்லேஜ் வரியை வசூலிக்குமாறு அரசர் ஆணையிட்டார். ஆனல் ஷயரின் நைட்டுகள், பிரபுக்கள், ஏர்ல்கள், சமயகுருமார்கள் முதலியவர்களின் வேண்டுகோளின்படி அந்த உத்தரவு திரும்பப் பெறப்பட்டது.

1339ஆம் ஆண்டில் போட்ட வரிகளுக்கு நாட்டில் எதிர்ப்பு இருந்தது. அடுத்த ஆண்டில் கூடிய பாராளுமன்றம், மக்களின் சம்மதமின்றி எவ்விதத் தண்டத்தொகையோ அல்லது உதவித்தொகையோ விதிக்கப்படக்கூடாது எனச் சட்டம் வாயிலாக அறிவிக்கப்பட்டது.

1342, 1346, ஆகிய ஆண்டுகளிலும் அரசருக்கு பொருள் தேவைப்பட்டபோது பாராளுமன்றத்தின் சம்மதமின்றி வரி வாங்கக்கூடாதென்ற கருத்தை அரசர் ஒப்புக்கொண்ட பின்னரே வரி செலுத்தினர்.

1348ஆம் ஆண்டில் பொதுமக்கள் நிபந்தனையுடன் மானியமொன்றை அளித்தனர். மனக் குறைகளைத் தீர்ப்பதைப் பொறுத்தது உதவித்தொகை அளிப்பது என்னும் கோட்பாடும் பழக்கமும் தோன்றலாயின.

சம்மதமின்றி வரி விதிப்பதென்னும் நடவடிக்கை சட்ட விரோதமானது என்பதை ஏற்றுக்கொண்ட போதிலும், மூன்றும் எட்வர்டு, மிகத்தேவையாய் இருந்தபோதும் நாட்டைப் பாது

காப்பதற்கும் மக்கள் மீது வரி விதிப்பதற்கு ஒருவித நியாயமான உரிமை கொண்டாடினர் எனத் தோன்றுகிறது. இந்த உரிமை 1377ஆம் ஆண்டில் நடந்த அவருடைய கடைசிப் பாராளு மன்றத்திலும் வற்புறுத்தப் பட்டது.

வரிக் கணக்குகளைத் தணிக்கையிடல் : 1340ஆம் ஆண்டில் கடந்த உதவி மானியத் தொகையை வசூலித்தவர்களுடைய கணக்குகளைத் தணிக்கையிடுவதற்காகப் பாராளுமன்றத்தின் குழு நியமிக்கப்பட்டது. அடுத்த ஆண்டில் தணிக்கை கமிஷனர்களைப் பணிக்க மன்னர் உத்தரவிட்டார். வரி வசூலிப்போரின் கணக்கு களைச் சோதிப்பதென்பது மன்னரின் அமைச்சர்களால் செலவிடப் படும் பொருளைப் பற்றியும் சோதனை செய்வதற்கான நடவடிக்கை களுக்கு முதற்படியாகும்.

2. சட்டமியற்றுதல் :- மக்கள் வரியை மானியமாகக் கொடுக்கின்றனர்; மன்னர் சட்டத்தை இயற்றுகிறார் என்ற வழக் கத்தில் மாற்றம் ஏற்பட்டது. 1322ஆம் ஆண்டில் வெளியான யார்க் சட்டம் மதத்தலைவர், பிரபுக்கள், நாட்டுப் பொதுமக்கள் இவர்களைக் கொண்ட பாராளுமன்றத்தின் சம்மதம் மிகவும் முக்கியமான தேவை என்னும் கொள்கையை உறுதிப்படுத்தியது.

3. பாராளுமன்றமும் அரசாங்கமும் :- மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் இரு தடவைகளில் காமன்ஸ் சபையினர் அரசாங்க ஆட்சி விவகாரங்களில் மிக்க உறுதியுடன் தலையிட்டனர். 1341ஆம் ஆண்டு பாராளுமன்றத்தில் மன்னருடைய அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்களாகச் செய்தது. பாராளுமன்றம் அமைச்சர்களையும், நீதிபதிகளையும் நியமிக்க வேண்டும் என்ற கோரிக்கையை அரசர் வெறுத்தாலும் இறுதியில் ஏற்றுக் கொள்ள வேண்டியவரானார். அத்துடன் கணக்குகளைத் தணிக்கை செய்வது என்பதையும் இணைத்துப் பார்த்தால் அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர் கள் என்ற தன்மை உருவாகியது தெளிவாகப் புலப்படும்.

துரோகக் குற்ற விசாரணை : கி.பி. 1376ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றம் துரோகக் குற்ற விசாரணை முறையினைத் தோற்று வித்தது. மன்னருக்குத் தொண்டு செய்தவர்கள் மீது துரோகக் குற்ற விசாரணையை மங்கள் சபையினர் தொடர்ந்தனர். லாட்டிமர் நெவில் என்ற பிரபுக்கள் இருவரும், பொது மக்களின் பிரிவைச் சார்ந்த லயான்ஸ், எல்லிஸ், பீச்சி, ப்யூரி என்பவர்கள் மீதும் துரோகக் குற்ற விசாரணை தொடர்ந்தது. பிரபுக்கள் சபையினர் ப்யூரியைத் தவிர ஏனையோரை விசாரணை செய்து தண்டனை விதித்தனர்.

மூன்ரும் எட்வர்டின் ஆட்சியின் ஏறத்தாழ இறுதிக்காலத்தில் 1376ஆம் ஆண்டு கூடிய பாராளுமன்றத்தை 'நற் பாராளுமன்றம்' என்பர். இப் பாராளுமன்றத்தின் போது காமன்ஸ் சபையினர் தேசிய உரிமைகளைக் காக்கும் காவலர்களாயினர். இப் பாராளுமன்றத்தில் சீரிய பங்கேற்றவர்கள் ஷயரிலிருந்து நைட்டுகள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இப் பாராளுமன்றம் (1) லாட்டிமரையும், லயான்ஸையும் துரோகக் குற்ற விசாரணைக் காளாக்கித் தண்டித்தது. (2) போப்பாண்டவர் கேட்ட வரிகளையும், நூற்ருண்டுப் போரைச் சரியாக நடத்தாததைப் பற்றியும், சம்மதமின்றி வரிவிதிப்பையும் எதிர்த்தது. (3) ஆண்டுதோறும் பாராளுமன்றம் கூட்டப்பட வேண்டுமென்றும் வேண்டியது

மேற் கூறியவற்றிலிருந்து நாம் மூன்று முக்கிய விஷயங்களை அறிகிரேம். (1) தேசியக் கொள்கையை நிர்ணயிப்பதில் காமன்ஸ் சபையினர் முதன் முதலாக முன்னுக்கு வந்ததுடன், நாட்டின் நிர்வாகம் முழுவதையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு உண்டு என்றும் உரிமையை எழுப்பினர்; (2) துரோகக் குற்ற விசாரணையை முதன்முதலாக பயன்படுத்தத் தொடங்கியது. பிற்காலத்தில் இவ் வுரிமையைப் பயன்படுத்தி அரசரின் அமைச்சர்களில் பலர் தண்டனைக்குள்ளாஞர்கள். (3) பாராளுமன்றத்திற்கு அமைச்சர்கள் பொறுப்புடையவர்கள் என்பதை வலியுறுத்தி நிலை நாட்டியதாகும்.

**மூன்ரும் எட்வர்டின் மரணம்:** அரண்மனைக் கட்சிக்கும், அரசியலமைப்பின் அடிப்படையில் ஆட்சி நடத்தக்கோரிய கட்சிக்குமிடையே அரசியல் சச்சரவுகள் மேன்மேலும் முற்றிக் குழப்பமுற்ற இந்நிலையில் கி. பி. 1377 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 2ஆம்நாள் மூன்ரும் எட்வர்டு மன்னர் ஷீன் மாளிகையில் காலமாஞர். அரசரின் இறுதிக் காலம் நெருங்கிக் கொண்டிருக்கையில் அவருக்கருகிலிருந்த பணியாளர்கள் தம் கைகளுக்குக் கிடைத்ததை சுருட்டிக் கொண்டு ஓடினர். காமக்கிழத்தியான அலிஸ் பெரார்ஸ் அரசர் சித்த சுவாதீனமிழந்த நிலையில் அவருடைய கைகளில் அணியப் பெற்றிருந்த மோதிரங்களைக் கழற்றி கொண்டாள். அரசர் உயிரோடு இருந்த காலத்தில் அவரால் பயன் அடைந்தவர்கள் பலர். ஆயினும் அவர் இறுதிமூச்சு பிரிந்தபோது ஏழை பாதிரி மட்டும்தான் அவர் அருகில் இருந்தார். சுயநலத்தாலும், பேராசையாலும், இன்ப நுகர்ச்சியாலும் காலமெல்லாம் கழித்திருந்த மூன்ரும் எட்வர்டு மன்னரின் வாழ்க்கை சோகத்தில் முடிந்து மறைந்தது.

# 27. விக்லிஃபும் திருச்சபையும்

பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அரசாங்கம் செய்த இடையறாத போர்களினால் செல்வாக்கினை இழக்கத் தொடங்கியது. இப்போர்கள் நூறாண்டுப் போரினைச் சார்ந்தவையாம். இங்கிலாந்து மக்கள் போர்புரிவதில், வேடிக்கையாக சொல்லப் போனால், சலிப்பு கொள்ளாமல் துடிதுடிப்புடனேயே இக்கால கட்டத்தில் காணப்பட்டனர். எனினும், அவர்கள் அரசாங்கம் கேட்ட வரிகளைக் கொடுக்க மனம் சுளித்தார்கள். இதற்குக் காரணம் ஆங்கிலேயர் கொடுத்த வரிகளுக்கு ஏற்ப போர்களில் வெற்றி பெறாமல் தோல்வியுற்றமைதான். முதலீட்டுக்கேற்ற பலன் கிட்டாமையால் அவர்கள் ஏமாற்றமுற்றனர். அவ் வேமாற்றம் அரசாங்கத்தைக் குறை கூற வைத்தது.

அரசாங்கத்திற்கு அடுத்தபடியாக திருச்சபையும் செல்வாக்கினை இழக்கத் தொடங்கியது. இருப்பினும், திருச்சபை அப்போதும் கொழுத்த செல்வத்துடனும், சக்தி வாய்ந்ததாகவும் இருந்தது என்பதை மறக்கக் கூடாது. திருச்சபையின் செல்வத் திற்கெதிராக மக்கள் கூக்குரலிட்டனர். இது விஷயத்தில் காமன்ஸ் சபையினரும், காண்ட் பிரபு ஜானும், ஜான் விக்லிஃப் என்ற பெரியாரும் ஒத்த கருத்தினராய் இருந்தனர்.

இங்கிலாந்து மக்கள் போப்பாண்டவரை வெறுத்தனர். காரணம் என்ன? போப்பாண்டவர்கள் இந்நூற்றாண்டில் சற்றேக் குறைய எழுபதாண்டு காலம் ரோமாபுரியில் தங்காமல் பிரான்ஸ் நாட்டில் அவிக்னான் என்னும் ஊரில் தஞ்சம் புகுந்திருந்தனர். இதன் விளைவாக இங்கிலாந்தில் போப்பாண்டவரின் செல்வாக்கு பெரிதும் பாதிக்கப்பட்டது. போப்பாண்டவர்கள் அக்காலத்தில் பிரெஞ்சியராக இருந்தார்கள். அத்துடன் அவர்கள் பிரெஞ்சிய கொள்கைகளின் கருவிகளாய், ஓய்வுகாலத்தில் வாழ்வது போல அவிக்னானில் வாழ்ந்து வந்தார்கள். இங்கிலாந்தில் கூடிய 'நல்ல பாராளுமன்றத்தில்' இருந்த காமன்ஸ் சபை உறுப்பினர்கள் அவிக்னான் என்னும் பாவபுரியில் வாழ்ந்த போப்பாண்டவர்களுக் கெதிராக சீற்றங்கொண்டு உரையாற்றினர். இரண்டாம் ரிச்சர்டு மன்னரின் முதல் பாராளுமன்றம் போப்பாண்டவர்களுக்கு இங்கி

கிலாந்து செலுத்த வேண்டிய வரிப்பணத்தை நிறுத்தி வைக்கலாமா என்று தீவிரமாகச் சிந்தித்தது. போப்பாண்டவர்கள் அவிக்னனில் வாழ்ந்திருந்ததை பாபிலோனிய சிறைவாசம் (Babylonian Captivity, 1309—1378) என்று வேடிக்கையாகக் கூறுவர். இதனை அடுத்து திருச்சபையில் 'பெரும் பிளவு' ஒன்றும் நிகழ்ந்தது. அதுபோது போப்பாண்டவர்கள் எனத்தம்மைக்கூறிக் கொண்டு பிரெஞ்சுக்காரர்களும், இத்தாலியர்களும் போட்டியிட்டு கொண்டனர். ஏறத்தாழ நாற்பதாண்டுகள் இரண்டு போப்பாண்டவர்கள் கிறிஸ்து உலகிற்கு வழி காட்ட, போட்டி போட்டுக் கொண்ட அவலநிலையை எள்ளி நகையாடினர். ஐரோப்பியர்கள் அக்காலத்தில் ஒருவர் மற்றவரை கிறிஸ்து மதத்திற்குப் பகைவர் என்று குற்றஞ்சாட்டி ஒருவரைப் பின்பற்றும் சீடர்களை மற்றொருவர் மதப்பிரஷ்டம் (சமய விலக்கம்) செய்து குறைகூறிக் கொண்டிருந்தனர்.

போப்பாண்டவரின் கௌரவத்திற்கு இழுக்கேற்பட்ட இவ் வேளையில் திருச்சபையின் அதிகாரம் குறைந்து வருவதற்கான அறிகுறிகளும் பதினான்காம் நூற்றாண்டில் தோன்றின. திருச்சபையில் துறவிகளும் ஞானிகளும் செல்வாக்குற்றிருந்த காலம் மலையேறி விட்டது. சாதாரண கிறிஸ்தவர்களின் மதிப்பைக்கூட திருச்சபை இழக்கத் தொடங்கிய காலம் பதினான்காம் நூற்றாண்டாகும். நகரத்தில் வாழ்ந்த ஏழை சமய குருமாரைத்தான் சாசர் போன்ற அறிஞர்கள் புகழ்ந்துரைத்தார்கள்; மற்றவர்கள் ஏளனத்திற்கு ஆளானார்கள். நகரத் திருச்சபையின் சமய குருமாராய் இருந்தவர்கள் வறியவர்கள்; செல்வம் திருச்சபையின் மேல்மட்ட குருமார் வசம் சிக்கியிருந்தது. அதுபோல் மடாலயத் துறவிகளும் செல்வச் செருக்கில் உழன்ற போது மக்களின் குற்றச்சாட்டுகளுக்கு உயர் குருமார்களும் மடாலயத் துறவிகளும் ஆளானார்கள். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், திருச்சபையை எல்லோரும் பொதுவாகக் குறை கூறினர். துறவிகளின் மெத்தனத்தைக் குறை கூறிச்சாடிய சாசரின் கவிதைகளில் ஓரளவு உண்மையிருந்தது. சாசரின் கூற்றுக்களைக்கொண்டுஅக்கால உணர்ச்சியை ஒருவாறு கணிக்க இயலும்.

இங்கிலாந்து திருச்சபைக்குக் கொடுக்கப்பட்ட மானியங்களை நிறுத்தக்கோரும் கோரிக்கைகள் பாராளுமன்றத்தில் எழுப்பப் பெற்றன. கடந்த காலத்தில் திருச்சபைகளுக்கும் மடாலயங்களுக்கும் தூய்மையான பிரபுக்கள் கொடுத்துச்சென்ற நிலங்களை அவர் தம் சந்ததியினருக்குத் திருப்பித்தர வேண்டுமென வெளிப்படையாக கருத்துக்கள் வெளியாயின. திருச்சபையைக் குறை கூறித் தாக்கியவர்களுள் விக்லிஃப் என்ற பெரியார் தலையாயவர்

பிஷப்புக்களுக்கெதிராக எழுந்த போராட்டத்தின் போது கான்ட் பிரபுவும் ஏனையோரும் அவருக்குப் பேராதரவு காட்டியதும் அதனுல்தான். யார் இந்த விக்லிஃப்?

**ஜான் விக்லிஃப் 1320-1384:-** ஜான் விக்லிஃப் என்பார் யார்க்ஷயர்வாசி, ரிச்மாண்ட் என்னும் ஊருக்கருகில் கி. பி. 1120 ஆம் ஆண்டில் பிறந்தார். இளைஞராக ஆக்ஸ்போர்டுக்கு வந்துற்ற அவர் அங்கேயே பேராசிரியராக நிலைத்தார். ஆக்ஸ்போர்டில் தலைசிறந்த ஞானி என அவர் பெயரும் புகழும் பெற்றுர். பாலியால் கல்லூரியின் முதல்வராகவும் அவர் சிறிது காலம் பணியாற்றினுர். அவருக்கு ஐம்பது வயதானபோது இந்த ஆக்ஸ்போர்டு அறிஞர் திருச்சபையின் செல்வச் செருக்கினைக் கடுமையாகக் குறை கூறித் தாக்கத் தொடங்கினுர். அத்துடன் திருச்சபை குருமார்களின் நடைமுறைகளையும் பொதுவாக விக்லிஃப் தாக்கிப் பேசலானுர். ஆனுல் விக்லிஃபைக் குற்றம் புரியாதவர் என்றும் கருதக்கூடாது. இங்கிலாந்தில் பல பதவிகளுக்கு வருமானத்தைப் பெற்று அப் பதவிகளுக்குரிய பணியைப் புறக்கணித்து வாழ்ந்தவர்களில் அவரும் ஒருவர் எனில் மிகையாகாது. விக்லிஃப் திருச்சபையை இரு காரணங்களுக்காகக் குறை கூறினுர். முதலாவதாக, பிஷப்பு களும் மற்றும் திருச்சபை குருமார்களும் அரசியல் விவகாரங்களில் தலையிட்டு அரசாங்கப் பதவிகளை வகித்ததாகும். உண்மையில் அத்தகைய பதவிகளைச் சாதாரண கிறிஸ்தவர்களுக்கு அளிப்பது தான் நியாயம். இரண்டாவதாக திருச்சபை செல்வ வளத்தால் செழுமையுற்றுத் திகழ்ந்தது. இக்காலத்தில் அவர்கள் பெற்றிருந்த செல்வத்தை தொடக்ககால கிறிஸ்தவ பிரசாரகர்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க இயலாது. சமய குருமார்கள் எளிய வாழ்க்கை வாழ வேண்டுமென வற்புறுத்திய விக்லிஃப் தொடக்கத்தில் திரி துறவிகளைத் தாக்காமல் விட்டு வைத்தார். பின்னர் இத் திரிதுறவிகள் அவருடைய கொடும் பகைவர்களாயினர்.

**விக்லிஃப்பின் மீது விசாரணை:-** ஆக்ஸ்போர்டு அறிஞரான விக்லிஃப்பின் கடுந்தாக்குதலுக்குப் பிஷப்புகள் கீழ்ப்படிய ஒப்ப வில்லை. கி. பி. 1377ஆம் ஆண்டு அவர்கள் செயின்ட் பால் திருச் சபைக்கு அவரை வரவழைத்து விசாரிக்க முயன்ற முயற்சி படு தோல்வியுற்றது. ஆனுல் விக்லிஃப் தொடர்ந்து தாம் கூறிய குற்றச் சாட்டுகளை வலியுறுத்தவே, அதனைத் தடுத்து நிறுத்தும் நோக்குடன் போப்பாண்டவர் அவருக்கெதிராக ஆணை யொன்றினைப் பிறப்பித்தார். போப்பாண்டவரின் ஆணையின்படி பிஷப்புகள் மீண்டுமொருமுறை தங்களுக்கு முன்னுல் விக்லிஃப் விசாரணைக்கு வரவேண்டுமெனக் கோரினர். விசாரணையை

மறுத்த விக்லிஃப் ஆக்ஸ்போர்டில் தஞ்சம் புகுந்தார். ஆக்ஸ் போர்டின் சான்சலர் அவரைக் கைது செய்ய மறுத்து விட்டார். அவர் இறுதியாக இலண்டன் சென்றபோது அவர்மீது விசாரணை தொடரப்பட்டது. அவ் விசாரணை லாம்பத் என்னுமிடத்தில் தொடரப்பட்டது. செயிண்ட் பால் விசாரணையில் கேட்டுக் கொண்டதைப் போன்றே அவர் திருச்சபைக்கெதிராக பிரசாரம் செய்யக்கூடாதென அவர் கோரப்பட்டார். ஆனால் இம்முறையும் அவர் காப்பாற்றப்பட்டார். வேல்ஸ் இளவரசரின் தாயார் அவருக்குப் புகலிடம் கொடுத்து பிஷப்புகளின் தண்டனையிலிருந்து அவரைத் தப்புவித்தார். இலண்டன் பொது மக்கள் விசாரணை யின் போது குறுக்கிட்டு அவருக்கு ஆதரவாக, விசாரணையைச் சீர்குலைத்தனர் (1378).

**சமயக் கருத்துக்கெதிராக விக்லிஃப்பின் நிந்தனை:** தாம் பெற்ற மகத்தான இவ்வெற்றிக்கு ஈராண்டுகளுக்குப் பின்னர், விக்லிஃபின் சூழ்நிலை முழுதும் மாறிவிட்டது. அவருடைய கருத்துக்கள் சமய நிந்தனைக்கொப்பாகும் எனக் கருதி, அவர்தம் ஆதரவாளர்களும், பொது மக்களும் அவருக்கெதிராகக் கிளர்ந் தெழுந்தனர். இம் முறை விக்லிஃப்பின் திருச்சபை செல்வத்திற் கெதிராக தம் தாக்குதலைச் செய்யாமல், திருச்சபையின் அடிப் படைக் கோட்பாடுகளில் தலையாயது என்று கருதப்பட்ட ஒன்றினைக் குறை கூறிப் பேசினார். கிறிஸ்தவ சமயத்துறையில் திருக்கோயில் வழிபாட்டு அப்பமும் மதுவும் இயேசுநாதரின் திருவுடல் குருதிகளாக மாறிவிட்டதென்பதே அக்கோட்பாடாகும் (Transubstantiation). இது ஒரு கத்தோலிக்க சமய கோட்பாடு. அக்கோட்பாட்டைத் தம் சொந்த முக்கியத்துவத்தைப் பெருக்கிக் கொள்ள திருச்சபை குருமார்கள் கற்பித்துக் கொண்டதென அவர் அதைக் குறை கூறினார்.

**விக்லிஃப் சிறந்த நண்பர்களை இழத்தல்:** தொடக்கத்தில் அவருடைய வாதங்களை ஆதரித்த மக்கள், விக்லிஃபின் கோட் பாட்டைச் சமய நிந்தனை எனக் கருதினர். அதன் பயனாக விக்லிஃப் பிஷப்புகளின் கோபத்தோடு, திரிதுறவிகளின் கோபத் திற்கும் ஆளானார். மக்களிடையே மூடப் பழக்கவழக்கங்களை பரப்பும் முக்கிய தரகர்கள் என விக்லிஃப் அவர்களைத் தூற்றினார். அவருக்கு இதுநாள் வரை புகலிடம் கொடுத்து ஆதரவு காட்டிய பெருங்குடி மக்களையும் அவர் பகைத்துக்கொண்டார். அவருடைய புதிய கோட்பாட்டைக் கேட்ட அவர்கள் திடுக்குற்றனர். அத் தருணத்தில் ஏற்பட்ட குடியானவர் கலகத்தால் சிறிது காலம் அவரைப் பற்றி யாரும் அக்கறை காட்டவில்லை. ஆனால்

குடியானவர் கலகம் அடங்கியதும், லங்காஸ்டர் பிரபு ஆக்ஸ்ஃபோர்டுக்குச் சென்று, திருச்சபைக் கோட்பாட்டைக் குறைகூற வேண்டாமென அவரைப் பணித்தார். விக்லிஃப் ஏற்க மறுத்தார். அதன் விளைவாக லங்காஸ்டர் பிரபு அவருடன் தமக்கிருந்த தொடர்பினை அறுத்துக்கொண்டார்.

லோல்லார்டுகள் அல்லது ஏழைப் பிரசாரகர்கள்: இத் தருணத்தில் விக்லிஃப் மேற்கொண்ட இரு முயற்சிகள் சீரிய பலன்களைக் கொடுப்பதாய் அமைந்தன. கி. பி. 1380-க்கும் 1381-க்கும் இடைப்பட்ட காலத்தில் அவர் தம் சீடர்களில் சிலரை இங்கிலாந்து முழுதும் அனுப்பித் தம் கோட்பாடுகளைப் பிரசாரம் செய்யத் தொடங்கினர். இச் சீடர்களை ஏழைப் பிரசாரகர்கள் என்று அழைத்தனர். இவர்களையே லோல்லார்டுகள் என்றும் கூறினர். (லோல்லார்டு என்ற சொல் முணுமுணுத்தல் என்று பொருள்படும். விக்லிஃப்பின் கருத்துக்களை ஏற்றுக்கொண்டவர்கள் தாம் கூறிய பிரார்த்தனைகளை முணுமுணுத்தார்கள் என்ற காரணத்தால் அப் பெயர் வந்தது.) முதலில் வந்த லோல்லார்டுகளின் வழிவந்தோர் அடுத்த தலைமுறையில் கொடுமையான சமயப் புழுக்கத்திற்காளாயினர். முதலில் பிரசாரம் செய்யவந்த லோர்லார்டுகளில் பெரும்பாலோர் பல்கலைக்கழக உறுப்பினர்கள். அதனால் அவர்களின் கோட்பாடுகளுக்குப் பெருஞ் செல்வாக்கேற்பட்டதில் வியப்பில்லை. அவர்கள் விரதங்களால் கட்டுப்படுத்தப்படவில்லை. ஆனால் அவர்கள் நீண்ட பழுப்பு நிற அங்கிகளை—அவர்களின் பகைவர்களைப் போலவே—உடுத்துக்கொண்டனர். விக்லிஃப்பின் முதல் முயற்சி லோல்லார்டு இயக்கமாகும்.

விவிலியத்தை மொழிபெயர்த்தல் 1380: மேற்கூறிய பிரசாரத்தைத் தொடங்கியதோடல்லாமல், விக்லிஃப் பிறிதொரு பணியையும் செய்துமுடித்தார். 1380 ஆம் ஆண்டில் அவர் பைபில் என்னும் கிறிஸ்தவ வேதநூலை (விவிலியம்) இலத்தீன் மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். வேத மறையின் வார்த்தைகள் சாதாரண மக்களையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கத்தால் இப் பணியை விக்லிஃப் மேற்கொண்டார். இது விக்லிஃப்பின் இரண்டாம் முயற்சியாகும். திருச்சபையினர் இம் முயற்சியைக் கடுமையாகச் சாடினர். ரோமாபுரியில் துறவியரான வரலாற்றுக் குறிப்பேட்டாசிரியர்கள் 'வெளிநாடுகளில் வேதநூலின் முத்துக்கள் பன்றிகளால் மிதிக்கப்படுகின்றன' என்று அதனைக் குறிப்பிட்டார்கள்.

லோல்லார்டுகளின்மீது விசாரணை: 1382 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் கான்டர்பரி ஆர்ச்பிஷப், ஆக்ஸ்ஃபோர்டின்

சான்ஸ்சலருக்கு ஆணைவிடுத்து, பல்கலைக்கழகத்திலிருந்த சமய சிந்தனையாளர்கள் அனைவரையும் வெளியேற்ற வேண்டினார். அதன் பயனாக ஆக்ஸ்ஃபோர்டு இப் புதிய இயக்கத்தின் கேந்திர மாக இருக்கமுடியாமற் போயிற்று. விக்லிஃப்பின் சீடர்களில் பலர் விசாரணை செய்யப் பெற்றுத் தம் கருத்துக்களை மாற்றிக் கொள்ள வற்புறுத்தப்பட்டார்கள், இருப்பினும் இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சிக்காலத்தில் சமய ஒறுக்கம் கடுமையாக இருக்க வில்லை. அரசரும்,அவருடைய மனைவியான பொஹீமியாவைச் சார்ந்த ஆன் ராணியாரும் லோல்லார்டுகளை அன்புடன் நடத்தினர். ராணியாரின் அரண்மனைச் சேவகர்களின் வாயிலாக விக்லிஃபின் கருத்துக்கள் பொஹீமியாவுக்குக் கொண்டுசெல்லப் பட்டன. பின்னர் ஜான் ஹஸ் என்ற விக்லிஃப்பின் தலைசிறந்த சீடரின் மூலம் அந் நாடுமுழுவதும் பரவியது. ஜான் ஹஸ் தாம் மேற்கொண்ட கோட்பாடுகளுக்காக கி. பி. 1415 ஆம் ஆண்டில் உயிரோடு எரிக்கப்பட்டார்.

விக்லிஃப்பின் மரணம், 1384 : எனினும் விக்லிஃப் தாக்குத லின்றித் தப்பித்தது ஒரு சிறப்பாகும். அவர் தம் இறுதிக்காலத்தை அமைதியாக இருக்க முடியாமல் அலைக்கழித்தார். தம் வாழ் நாளின் கடைசி ஈராண்டுகளை லெஸ்டர்ஷயரிலுள்ள லட்டர் வொர்த் மடாலயத்தில் கழித்தார். அங்கு அவர் 1384ஆம் ஆண்டில் காலமானார். 1428 ஆம் ஆண்டுவாக்கில் லிங்கன் பிஷப்பான பிளமிங் என்பார் விக்லிஃப்பின் பூத உடலின் எலும்பு களைத் தோண்டி எடுத்து எரித்துச் சாம்பலை ஆற்றில் கரைத்து விட்டார்.

இடைக்காலத்தின் பிற்பகுதியில் வாழ்ந்த பேரறிஞர்களில் விக்லிஃப் சீரிய இடத்தைப் பெறுகிறார். அவர் தலைசிறந்த கல்விமான்; கூர்த்த மதியினர். அதை அவருடைய பகைவர்கள் கூட ஏற்றுக்கொண்டனர். அதைவிட மேலாகக் கருதப்படுவது ஒன்று இருக்குமானால், தம் கருத்தை ஒருசிறிதும் விடாமல்—எதிர்ப்புகளின் தன்மை எத்தன்மைத்தாயினும் அதற்கஞ்சாது—கொள்கையைக் காத்த குலமகனார் அவர். திருச்சபை அவரு டைய கருத்துக்களுக்குச் செவிமடுத்து, அவற்றைக் கண்டனஞ் செய்யாமலும், அவருடைய சீடர்களை ஒறுக்காமலும் ஏற்றுக் கொண்டிருக்குமாயின், சமயச் சீர்திருத்தம் உரிய காலத்தில் ஏற் பட்டு அதன் சீரும் சிறப்பும் சீர்குலையாமல் இருந்திருக்கக்கூடும். ஆனால் ஆங்கிலேயர் பழமை விரும்பிகள்; மாற்றத்தை ஏற்றுக் கொள்ளத் தயக்கம் காட்டியவர்கள். அதன் பயனாக, விக்லிஃப்பின் மரணத்திற்கு ஏறத்தாழ ஒன்றரை நூற்றாண்டு களுக்குப் பின்னர் இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தம் ஏற்பட்டது.

# 28. குடியானவர் கலகம்

## (அ) ஒரு நூற்றாண்டு குழப்பம்

இரண்டாம் ரிச்சர்டு பதவியேற்ற நான்காண்டு களுக்குப் பின்னர் இங்கிலாந்தில் ஏற்பட்ட தொழிலாளர் களின் கலகம் அதன் வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்த தாகும். ஃபிரெஞ்சியப் போர்களினால் ஏற்பட்ட தோல்வி களைக் கண்டு மக்கள் பொதுவாக அதிருப்தியுற்றிருந்த போதிலும், தொழிலாளர்கள் கிளர்ந்தெழ வேறு பல அடிப் படைக் காரணங்கள் இருந்தன. குடியானவர் கலகம் அடிப் படையில், அடிமைத்தனத்தை எதிர்த்து எழுந்த கலகமாகும். 1381ஆம் ஆண்டில் இக் குடியானவர் கலகம் தோன்றுவதற்குச் சற்றேறக் குறைய நூறு ஆண்டுகளுக்கு முன்னரே மேனர்ப் பண்ணை முறை சீர்குலையத் தொடங்கியது. இம் மாற்றத் திற்கு மூலகாரணமாயிருந்தது பணம்தான். நகரங்களும் வாணி பமும் முன்னேறியதிலிருந்து, பணம் வெகுவாகச் செலாவணியில் உழன்றது. சிக்கனத்தைக் கடைப்பிடித்த குடியானவர்கள் தாம் சாகுபடி செய்த பொருள்களை விற்றுப் பணத்தைச் சேமித்துக் கொண்டு, தம் ஆண்டானுக்கு நிலமானிய முறைப்படி ஆற்ற வேண்டிய உழைப்புப் பணிகளிலிருந்து மீட்டுக்கொள்ளப் பணத்தை விலையாகக் கொடுத்துவிட்டுச் சுதந்திரத்தைப் பெற்றனர். இம் முறையை உழைப்புக்குப் பண ஈடு செய்து மாற்றுதல் என்பர் (Commutation of labour). இம் முறையில் தாம் பெற்ற பணத்தைக் கொண்டு ஆண்டான்கள் கூலிக்குத் தொழிலாளர்களை வைத்துக்கொண்டனர். குடியானவர் களைக் கட்டாயப்படுத்திப் பழைய தொண்டுகளைக் கோருவதை விட இது எளிமையாகப் பட்டது. குடியானவர்களோ சுதந் திரத்தைக் கோரத் தொடங்கினர்.

கி. பி. 1381 ஆம் ஆண்டுவாக்கில் அடிமைத்தனம் கீழ்த்தர மான சமூக நிலை என்று எல்லோரும் கருதத்தலைப்பட்டனர். இவ் வாண்டிற்கு முன்னரே சில இடங்களில் தம் சுதந் திரத்தைக் கோரிய அடிமைகள் அதன்பொருட்டுச் சங்கங்களை அமைத்திருந்தனர். வில்லன்களின் நடத்தையைக் குறைகூறும் நாட்டுச்சட்டமொன்று 1377 ஆம் ஆண்டில் வெளியாயிற்று.

பழைய மேனர்ப் பண்ணைமுறை பலவீனமடைந்ததன் விளைவாக நாட்டில் இரண்டு வகையான குடியானவர்கள் உருவானதைக் காண்கிறோம். தினக் கூலியைப் பெற உழைத்த குடியானவர்கள் புதுவகையைச் சார்ந்தவர்கள். வில்லன்கள் பழைய வகையைச் சார்ந்த குடியானவர்கள். சுதந்திரத் தொழிலாளர்கள் தம்மிடையே நிலவிவந்ததை யறிந்த வில்லன்களும் தம் அடிமைத்தளைகளை அறுத்தெறியத் தூண்டப்பட்டார்கள். மேனர்ப் பண்ணை முறை சீர்குலையத் தொடங்கியதே குடியானவர் கலகத்திற்குக் காரணமாய் இருந்தது என்பதைவிட, மேனர்ப் பண்ணை முறையை எவ்வாறு வேகமாக ஒழிக்கமுடியும் என்பதே அக் கலகத்திற்கு மூலகாரணம் எனில் மிகையாகாது.

1349 ஆம் ஆண்டு வாக்கில் வந்த தொழிலாளர்கள் சட்டங்கள் கொடுத்த தண்டனைகள் பொதுவாக நாட்டில் நிலவிய அதிருப்தியை மேலும் வளர்க்கக் காரணமாயின. அதிகப் படியான கூலியைக் கோரிச் சுதந்திரத் தொழிலாளர்கள் நாடு நெடுகிலும் சுற்றி அலைந்தனர். அதிகப்படியான கூலியைக் கேட்டவர்களில் சிலர், ஆண்டான்கள் சட்டங்களைப் பயன் படுத்தி அவர்களைத் தண்டிக்க முயன்றபோது அதன் பிடியிலிருந்து தப்ப அவர்கள் காடுகளுக்கு ஓடிச்சென்றனர். அடிமைத் தளையின் தொல்லைகளைச் சகிக்க முடியாத வில்லன்களும் அங்கு அவர்களுடன் சேர்ந்துகொண்டனர். பல நூற்றுண்டுகள் பரம்பரையாகப் பாதுகாப்பளித்த பழைய மேனர்ப் பண்ணை முறை இப்போது புறக்கணிக்கப்பட்டது.

பதினான்காம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இங்கிலாந்து கலகத்தை எதிர்நோக்கியிருந்தது. இம் மாபெரும் கலகத்திற்கு அக்காலத்தில் காணப்பட்ட பல்வேறு மனக்குறைகளையும் காரணமாகக் கூறலாம். நாடெங்கிலும் காழ்ப்புணர்ச்சியும், அதிருப்தியும் கனல்விட்டு எரிந்தன. வில்லியம் லாங்லாந்து என்னும் கவிஞர் தம்முடைய கவிதைகளில் இக் குறைகளைச் சாடி. இங்கிலாந்தில் இக் குறைகள் விரைவில் ஒழிக்கப்பட வேண்டும் எனக் கனவுகண்டார். அக் கவிதைகளை 'பியர்ஸ் பிளெளமன்' என்னும் நூலில் காணலாம், அக் கவிதை நூலின் இரண்டாம் பதிப்பு 1377 ஆம் ஆண்டில் வெளியானபோது அது குடியானவர் கலகத்திற்குக் கட்டியம் கூறியது போல் இருந்தது.

குழப்பமான சூழ்நிலையில் அதனைத் தலைமைதாங்கும் தலைவர்கள் தோன்றுவார்கள் என்ற கருத்தும் பொய்க்கவில்லை. 1380 ஆம் ஆண்டுவாக்கில் இங்கிலாந்திலும் அத்தகைய தலைவர் ஒருவர் தலை தாங்கினர். மக்களின் தலைவராக வந்தவர்

களில் சிறப்பாகக் கருதப்பட்டவர் ஜான் பால் என்பவராவர். அவரைக் கென்டின் பைத்தியக்காரப் பாதிரி என்றும் கூறுவர். அவரே இங்கிலாந்தின் முதல் சமதர்மவாதி (சோஷியலிஸ்டு). அவர் தொழிலாளர்களுக்குப் பொதுவுடைமைக் கருத்துக்களைப் போதித்தார் என்று அக்காலப் பெரியார் ஒருவர் கூறினர்.

ஜான் பாலின் போதனைகள் : 'இனிய நண்பர்களே! இங்கிலாந்தின் நிலைமை சீர்படாது. அனைத்தும் அனைவருக்கும் பொதுவாகக் கருதப்படும் வரை நிலைமை சீர்படாது. ஆண்டான், அடிமை என்னும் வேறுபாடுகள் அனைத்தும் ஒழிக்கப்பட்டுச் சமமாகும் வரையிலும் நிலைமை சீர்படாது; பிரபுக்கள் நம்மைவிட எந்தவகையில் நமக்கு எஜமானர்கள்? ஆதாம் ஏவாள் என்ற அதே பெற்றோர்கள்தானே நமக்கும் மூதாதையர்கள். நாம் எவ்வகையில் ஆண்டான்களிலிருந்து வேறுபட்டவர்கள்?... அவர்கள் பட்டுத்துணிகளாலும் அழகிய உடுப்புகளாலும் அலங்கரித்துக் கொள்கிறார்கள்... ஆனல் நாம் எளிய உடைகளை உடுத்துக்கொள்ள வற்புறுத்தப்படுகிறோம். அவர்களுக்கு அழகான ஆசனங்களும், பண்ணைகளும் இருக்கின்றன. ஆனல் நாமோ கொளுத்தும் வெயிலிலும், கொட்டும் மழையிலும், சுழன்றடிக்கும் காற்றிலும் கழனிகளில் உழைத்து உழைத்து ஓடாகி நிற்கிறோம்.'

ஜான் பாலின் கருத்துக்கள் பொதுவுடைமைக் கொள்கைகளைக் குடியானவர்களிடையில் புகுத்தத் தவறியது இங்கிலாந்தின் அதிர்ஷ்டம்தான். குடியானவர்கள் அனைத்தையும் சமமாக்கும் கம்யூனிஸத்தைக் கோரவில்லை. அவர்கள் கோரியதெல்லாம்—தங்களின் வில்லனத்துவம் ஒழிய வேண்டுமென்பதும், கூலி உயர்வு கிட்டவேண்டுமென்பதும் சுதந்திரத்தொழிலாளியாக வேண்டுமென்பதும் மட்டுந்தான்.

## ஆ. குடியானவர் கலகம் (1381)

கி. பி. 1380-ஆம் ஆண்டுக் குளிர் காலத்தின்போது முக்கிய அமைச்சர்களாயிருந்தவர்கள் இருவர். அவர்களில் ஒருவர் சைமன் சட்பரி என்பார்; அவர் கான்டர்பரி ஆர்ச்பிஷப்பாகவும், சான்ஸலராகவும் பதவி வகித்தார். பிறிதொருவர் சர் இராபர்ட் ஹேல்ஸ்; அவர் கருவூலத்தலைவர்; பொருளாளர் (நிதியமைச்சர்). சட்பரி நல்ல மனிதராயினும் நாட்டில் எழ இருக்கும் பயங்கரப் புயலைக் கட்டுப்படுத்தும் திறனற்றவர். அவருடைய சகாவான ஹேல்ஸே குடியானவர் கலகத்தைத் தொடங்க உண்மையான காரணமாயிருந்தார் எனலாம். ஃபிரான்ஸுடன் நடைபெற்று

வந்த போருக்கான செலவுகளைச் சரிக்கட்டப் பாராளுமன்றம் தலைக்கு ஒரு ஷில்லிங்கு என்ற விகிதத்தில் தலைவரி யொன்றினை விதிக்கத் தீர்மானித்தது. நாட்டில் பதினைந்து வயது நிரம்பிய அனைவரிடமும் இவ் வரி வசூலிக்கப்பட வேண்டும். வரிவசூலித் ததற்கான முடிவுகள் தெரிந்தபோது, பலர் தவறான கணக்கு களைக் காட்டி வரியிலிருந்து தப்ப முயற்சி செய்திருந்தது வெளி யாயிற்று. வரி ஏய்ப்பினால் ஏமாற்றப்பட்ட அரசாங்கம் உண்மை நிலையை அறியக் குழுவொன்றினை நியமித்தது. அக் குழு நாடு முழுவதையும் சுற்றி விசாரணை செய்து, யாரேனும் வரி கட்டத் தவறியிருந்தால் அவர்களிடமிருந்து வரியைப்பெறவேண்டும் என் றும் ஏற்பாடாயிற்று. கி.பி. 1381 ஆம் ஆண்டு மேமாதவாக்கில் அத்தகைய குழுவொன்றின் ஆணையர் எஸ்ஸெக்ஸில் பிரண்ட்வுட் பகுதியில் பயணம் செய்தார். அப் பகுதியில் வாழ்ந்த குடியான வர்கள் அவரைச் சுற்றி வளைத்துப் பின்னர் நகரை விட்டே வெளியே துரத்தியடித்தனர். இதன் பயனாக விரைவில் எஸ்ஸெக்ஸ் முழுமையிலும் வெளிப்படையாகக் கலகம் மூண்டது. இதனைப் பற்றிய செய்தியைச் சுமந்து சென்றவர்கள் கிராமம் கிராமமாகச் சென்று குடியானவர்களைத் தூண்டி, ஆயிரக்கணக் கில் அவர்களைத் திரளும்படி ஏவினர். ஒரு வாரத்திற்குக் கலகம் பெரிய அளவில் மூண்டுவிட்டது. மேனர்ப் பண்ணையாரின் வீடு கள் சூறையாடப்பட்டன. வில்லன்களைப் பற்றிய விவரங்களும் அவர்களின் தொண்டுகளைப்பற்றிய குறிப்பேடுகளும் கைப்பற்றப் பட்டுத் தீக்கிரையாயின.

எஸ்ஸெக்ஸில் மூண்ட இக் கலகத்தைத் தடுத்து நிறுத்த அரசமன்றம் யாதொரு முயற்சியையும் செய்யவில்லை. இத் தருணத்தில் கென்டில் எஸ்ஸெக்ஸைவிட பயங்கரக் கலக மொன்று மூண்டது. கென்ட் கலகத்தையும், அத்துடன் ஏனைய கவுன்டிகளில் எழுந்த சிறுசிறு கலவரங்களையும் ஆராய்ந்து பார்த் தால் கலகம் முழுவதும் ஏற்கெனவே திட்டமிடப் பட்டிருந் ததை அறிய முடியும். கென்டில் கலகக்காரர்களின் படைவீரர்கள் பல்லாயிரவர்—ரோசெஸ்டர், மெயிட்ஸ்டோன், கான்டர்பரி ஆகிய ஊர்களில் நுழைந்தனர். மெயிட்ஸ்டோனில் அவர்கள் ஜான் பாலைச் சிறையிலிருந்து விடுவித்தனர்; அவர் ஏப்ரல் மாதத்திலிருந்தே சிறைப்படுத்தப்பட்டிருந்தார். சிறை மீண்ட ஜான் பால் இங்கிலாந்திலிருந்த கலகக்காரர்கள் அனைவருக்கும் தம் புகழ்மிக்க கடிதங்களை எழுதி அனுப்பினார். அக் கடித வாசகம் இதுதான் :

"ஜான் பால் உங்கள் அனைவரையும் வாழ்த்துகிறான்; அவன் உங்களுக்காக உங்கள் கோரிக்கைகளின் மணியை

அடித்து ஒலி எழுப்பி இருக்கிறன் என்பதை உணர்வீர்களாக. இப்போது வேண்டுவது உரிமையும் பலமும்தான்; திடசித்தமும் சாமர்த்தியமும்தான். நீங்கள் செய்யும் செயலை விரைவாகச் செய்யும்படி கர்த்தர் தூண்டுகிறார். காலம் அழைக்கிறது. தாய்மார்கள் தம் குமாரர்களையும், குமாரர்கள் தம் தந்தையர்களுடன் சேர்ந்து முத்திறத்தான் ஆன கர்த்தனின் ஆணைப்படி தொடங்கிய பணியை நல்ல முடிவுக்குக் கொணர்வீர்களாக. ஆமென்!

வாட் டைலர்: கென்டில் கலகக்காரர்களுக்கு வாட் டைலர் என்பார் தலைமை தாங்கினார். அவருக்குப் பொதுமக்களைத் தலைமைதாங்கி நடாத்திச் செல்லும் பண்பிருந்தது. அவர் தீரர்; திண்மையானவர்; பேச்சுத்திறன் படைத்தவர்; அத்துடன் கொண்ட கொள்கையில் ஆழ்ந்த பற்றுடையவர்.

கலகக்காரர்கள் இப்போது இலண்டன்மீது படையெடுத்தார்கள். 1381 ஜூன் மாதம் 12 ஆம் நாள் இரவிற்குள் கென்டிலிருந்து வந்த கலகக்காரர்கள் பிளாக்ஹீத்திலும், எஸ்ஸெக்ஸிலிருந்து வந்தவர்கள் மைல்எண்டிலும் நகரத்திற்குக் கிழக்கே முகாமிட்டார்கள். பிளாக்ஹீத்தில்தான் ஜான் பால் தம்முடைய சிறப்பான பிரசாரத்தைச் செய்தார். அடுத்த நாள் நகரத்திலிருந்த மக்கள் இலண்டன் பாலத்திலிருந்த தூக்குபாலத்தைக் கீழே இறக்கியபோது கலகக்காரர்கள் நகரத்திற்குள் பாய்ந்தார்கள். நகரச் சிறைக்கதவுகள் தகர்க்கப்பட்டன: சிறையில் அடைக்கப்பெற்றிருந்த எல்லா போக்கிரிகளும் இப்போது கலகக்காரர்களுடன் சேர்ந்துகொண்டு சூறையாடத்தொடங்கினர். இரண்டு நாட்களுக்கு இலண்டனில் அராஜகம் கோரத் தாண்டவமாடியது. இங்கிலாந்தின் செல்வத்தைச் சுரண்டியவர்களெனக் கருதப்பட்ட பிளமிய வாணிகர்கள் கலகக்காரர்களால் பெரிதும் தாக்கப்பட்டனர். அவர்களை அடுத்து ஜான்காண்டின் ஆதரவாளர்களும், வழக்குரைஞர்களும் கலகக்காரர்களால் தாக்கப்பட்டனர். நல்ல வேளையாக ஜான் காண்ட் அப்போது ஸ்காட்லாந்தி லிருந்தார். ஆனால் அவருடைய பணியாளர்கள் கண்ட விடத்திலேயே துண்டுதுண்டாக வெட்டப்பட்டுக் கொலையானார்கள். அவருடைய எழிலான மாளிகை தீக்கிரையாயிற்று. வழக்குரைஞர்களின் மையமான டெம்பிள் என்ற இடம் சீரழிக்கப்பட்டது; அங்கிருந்த நூல்நிலையமும் எரிந்து சாம்பலாயிற்று.

மைல் எண்ட் கலகம்: டவர் மாளிகைச் சாளரத்திலிருந்து அங்கு நடந்த திடுக்குறும் காட்சியை வருத்தத்தோடு பார்த்துக்

கொண்டிருந்தார் இளவயதினரான அரசர். இரவு வேளையில் சவாய் மாளிகை தீப்பற்றி எரிந்ததையும் அவர் கண்டார். அவருடன் அவருடைய தாயாரும், திறமையற்ற சான்சலர் சட்பரியும் கூட இருந்தனர். அரசருடைய கட்சியில் அப்போது வால்வொர்த் என்ற வீரர் ஒருவர் இருந்தார்; அவரே இலண்டனின் மேயரும் ஆவார். அன்று இரவு நடைபெற்ற கவுன்சில் கூட்டத்தில் அரசர் கலகக்காரர்களை மைல் எண்ட் என்னுமிடத்தில் சந்திக்க வேண்டுமென முடிவாயிற்று. அரசர் கலகக்காரர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும் சமயத்தில் சான்சலரும், நிதியாளரும் டவரிலிருந்து தப்பிவிட வேண்டுமென எதிர்பார்க்கப்பட்டது. ஏனெனில், கலகக்காரர்கள் அவ்விருவரையும் குறிப்பாக வெறுத்தார்கள். ஆனால், இம் முயற்சி படுதோல்வியுற்றது. டவரில் காவல் காத்த படைவீரர்கள் கலகக்காரர்களுக்கு உதவிசெய்தமையால் இம் முயற்சி தோல்வியுற்றிருக்கக் கூடும். டவர் கோட்டையும் கலகக்காரர்களால் தகர்க்கப்பட்டது. கலகக்காரர்கள் புற்றீசலெனப் பாய்ந்தார்கள். வெள்ளை டவரில் இருந்த திருக்கோயிலுக்குள் ஆர்ச்பிஷப் சட்பரியும் அவருடைய துணைவரான ஹேல்ஸும் தங்கியிருந்தனர். அவர்கள் இருவரும் மரணத்தை எதிர்நோக்கி நின்றனர். சட்பரி சான்சலர் பதவிக்குத் தகுதியற்றவராயிருக்கலாம்; அல்லது அவர் பலவீனமான ஆர்ச்பிஷப்பாக இருந்திருக்கலாம். ஆனால் ஆபத்து வந்தபோது அவர் அதை எதிர்க்க ஒரு சிறிதும் அஞ்சவில்லை. கலகக்காரர்களைச் சந்தித்த சட்பரி 'இதோ இங்கே இருக்கிறேன்! உங்களுடைய ஆர்ச்பிஷப் எனினும் நான் ஒரு துரோகியல்ல'' என்று கூறினார். ஆனால் கலகக்காரர்கள் அவரை வெளியே இழுத்துச்சென்று டவர்குன்றில் அவருடைய தலையை வெட்டிக் கொன்றார்கள் நிதியாளருக்கும் அதே கதி தான்!

அடுத்தநாள்; சனிக்கிழமை மாலை; ஜூன் 15 ஆம் நாள். மீண்டுமொரு முறை கலகக்காரர்களுடன் பேச்சுவார்த்தைகளைத் தொடங்க அரசர் தீர்மானித்தார். முதலில் அவர் வெஸ்ட்மினிஸ்டர் திருக்கோயிலுக்குச் சென்றபோது, அங்கிருந்த துறவிகள் வருத்தத்துடன் அணிவகுத்து வந்து அவரைச் சந்தித்தனர். குதிரைமீதிருந்து இறங்கிய அரசர் அவர்கள் சுமந்து வந்த சிலுவைக்கு முத்தமிட்டார். அரசருடைய கூட்டாளிகளும் திருச்கோயிலுக்குள் நுழைந்தனர். ரிச்சர்டு தாம் குழந்தைப் பருவத்தில் செய்த பாவங்களுக்கு மன்னிப்புக் கோரினார். பின்னர்க் குதிரையேறி அந்த நூற்றாண்டின் மாபெரும் நெருக்கடியை எதிர்நோக்கிப் புறப்பட்டுச்சென்றார். அவருக்கு அப்போது பதினைந்து வயதுகூட நிரம்பியிருக்கவில்லை,

ஸ்மித்பீல்டு சந்திப்பு: அரசரும் கலகக்காரர்களும் செயின்ட் பார்த்தலோமியோ ஆஸ்பத்திரிக்கு அருகிலிருந்த ஸ்மித்பீல்டு மார்க்கெட் சதுக்கத்தில் சந்தித்தனர். அச் சதுக்கத்தின் ஒருபுறம் கலகக்காரர்களும் அவர்களை நேருக்குநேர் சந்திக்கும் வகையாக அரசரும் அவருடைய பணியாளர்களின் சிறு கூட்டமும் மறுபுறம் நின்றார்கள். அரசருடைய பணியாட்களில் மேயர் வால்வொர்த் குறிப்பிடத்தக்கவர். கலகக்காரர்களின் சார்பாக வாட் டைலர் முன் வந்து நீண்ட சொற்பொழிவு ஒன்றினை நிகழ்த்தினார். பேச்சு முடிந்தவுடன் அரசருடைய காவலரில் ஒருவன்; கென்ட் கவுன்டியைச் சார்ந்தவன். வாட் டைலர் ஒரு திருடன் என்று அடையாளம் காட்டினான். இதைக் கேட்டவுடன் கோபங் கொண்ட டைலர் அரசருடைய படைவீரர்களுக்கிடையில் உருவிய வாளுடன் வந்துற்றார். வால்வொர்த்தைக் கொலை செய்ய டைலர் முயன்றபோது, மேயர் வால்வொர்த் தம் உடை வாளால் அவரை வெட்டிக் காயப்படுத்தினார். ஜான் சான்ட்விச் என்ற பெயர் கொண்ட வீரன் டைலரின்மீது பாய்ந்தான். கலகக்காரனான டைலர் தம் கட்சியுடன் சேர்ந்துகொள்ளத் தம் குதிரையைத் திருப்பினார். ஆனால் டைலர் சேணத்திலிருந்து உருண்டுவிழுந்து செத்தார்.

இக் காட்சியைக் கண்ட கலகக்காரர்கள் வில்லேந்தி அரசருடைய ஆள்களைக் கொல்லச் சித்தமாயினர். இத் தருணத்தில் இளஞ்சிங்கமான அரசர் தனியாக அவர்கள்முன் குதிரையேறிச் சென்று சிறிதும் அஞ்சாமல் கலகக்காரர்களை நேருக்குநேர் சந்தித்தார். 'என்னருமை மக்களே! உங்களுக்கு என்ன வேண்டும்? நீங்கள் கோருவதுதான் என்ன? உங்கள் அரசனை நீங்கள் சுட்டு வீழ்த்தாதீர்கள். நான் உங்களின் தலைவன்; உங்களைத் தலைமையேற்று நடத்துவேன்? என்னுடன் அங்கிருக்கும் வயல்வெளிக்கு வாருங்கள்! நீங்கள் விரும்பியதனைத்தும் உங்களுக்குக் கிட்டும்,' என்று கூறினார். தைரியத்தை இழக்காமல் அவர் கலகக்காரர்களை அழைத்துக் கொண்டு கிளர்கன்வெல் செயின்ட் ஜான் ஆஸ்பத்திரிக்கருகில் இருந்த வயல்வெளிக்கு அவர்களை அழைத்துச்சென்றார். அங்கிருந்த கட்டடங்களை அவர்கள் அழித்திருந்தார்கள்; கட்டடங்கள் சில அப்போதும் எரிந்து கொண்டிருந்தன.

கலகத்தில் இதுதான் திருப்புமையமாயிற்று. கிளர்க்கன் வெல்லில் கலகக்காரர்களுக்குச் சுதந்திர சாசனங்களை அரசர் வழங்கிக்கொண்டிருந்தபோது, வால்வொர்த்தும் அவருடைய நண்பர்களும் இலண்டனுக்கு ஓடிச் சென்று அரச விசுவாசமுள்ள

குடிமக்களைத் திரட்டினர். சிறு படையொன்று திரட்டப்பட்டு அது கிளார்க்கன்வெல்லை வந்துசேர்ந்தது. அங்கு கலகக் காரர்களை அப் படை சுற்றி வளைத்துக்கொண்டு அரசரை மீட்டது.

இரவு வந்தபோது ரிச்சர்டு அரண்மனைக்குள் திரும்ப நுழைந் தார். அழுத கண்ணீராய் அவருடைய தாயார் அவரை வாழ்த்தி வரவேற்றார். 'அன்பு மகனே! இன்று நான் பட்ட துன்பம் சொல்லி மாளாது' என்ற போது, 'ஆம் தாயே, எனக்கு அது நன்கு புரிந்தது. ஆனால் இன்று நாம் இழந்துபோன பாரம்பரி யத்தை மீண்டும் நிலைநாட்டி, இங்கிலாந்தின் புகழை மீட்டு விட்டேன்,' என்று ரிச்சர்டு மறுமொழி பகர்ந்தார். அது உண்மைதான். கலகம் முடிவுற்றது. அடுத்த நாள் நகரில் அமைதி நிலைநாட்டப்பட்டது. குடியானவர்கள் இலண்டனை விட்டுத் திரும்பிச் செல்லுமாறு தூண்டப்பட்டனர். அவர்கள் ஏமாளிகளாக, அரசர் கொடுத்த சுதந்திர சாசனங்களையும், மன்னிப்புகளையும் ஏற்றுக்கொண்டு திரும்பினர்.

எஸ்ஸெக்ஸிலும், கென்டிலும் தான் கலகம் தொடங்கியது; எனினும் கலகத்தின் தீச்சுடர்கள் கிழக்கு ஆங்கிலியாவில் அகோரமாகச் சுடர்விட்டு எரிந்தன. பியூரி செய்ன்ட் எட்மண்ட்ஸ் என்னும் ஊரில் கலகக்காரர்கள் மடாலயத்தைச் சார்ந்த சமயப் பணியாளரைச் சிரச்சேதம் செய்தனர். அப்போது பிரியூயில் தங்கியிருந்த இங்கிலாந்தின் பிரதம நீதிபதியும் கொலை செய்யப் பட்டார். துறவிகளை அச்சுறுத்தி அவர்கள் சுதந்திர சாசனங்களைப் பெற்றனர். செயின்ட் ஆல்பன்ஸ் நகரமக்கள் தம் ஆண்டானுக்கெதிராகவும், குருமாருக்கெதிராகவும் கிளர்ந் தெழுந்தனர். தாங்கள் கேட்ட கோரிக்கைகளை ஏற்க மறுத்தால் திருக்கோயில் இடிக்கப்படுமென்றும், துறவிகள் கொல்லப்படு வார்கள் என்றும் கலகக்காரர்கள் அச்சுறுத்தினர். அவர்களின் சுதந்திரத்தை அங்கீகரிக்கும் சாசனம் ஒன்றை அவர்கள் ஆபட் குருமாரிடம் பெற்றார்கள்.

நார்பக்கில் லிட்ஸ்டர்: நார்பக்கில் குடியானவர்களுக்குத் தலைவ ராக இருந்தவர் ஜியாப்ரே லிட்ஸ்டர் என்பார்; அவர் ஒரு சாயத் தொழிலாளி. அவரைச் 'சாமானிய மக்களின் அரசர்' என்று அவருடைய துணைவர்கள் துதிபாடினர். நார்பக்கில் கலகம் கொழுந்துவிட்டெரிந்தபோது, நார்விச்சில் ஜியாப்ரே அரசர் போன்று ஆட்சி நடத்தினான். அதிகாரிகள்கலகலத்துக் கல்லாய் நின்றிருந்த அத்தருணத்தில் ஹென்றி டிஸ்பென்சர் என்னும்

பெயர் கொண்ட நார்விச் பிஷப் உறுதியாகச் சிறுபடையொன்றுடன் கலகக்காரர்களை நார்த் வால்ஷாம் என்னுமிடத்தில் தோற்கடித்தார். கலகக்காரர்களின் தலைவன் பிடிபட்டான். சாமான்யமக்களின் அரசரான' அவர் உடனே தூக்கிலிடப்பட்டார். நார்பக் கலகம் அடங்கியது.

சாசனங்களைத் தள்ளுபடி செய்தல்: இதனிடையில் இலண்டன் நகரத்திலும் கலகம் முடிவுற்றது. தாம் கேட்ட கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டன என்று நம்பிக் கலகக்காரர்கள் கலைந்து சென்றனர். கலகக்காரர்களைத் தண்டிப்பதற்கான தருணம் வந்தது. டிரெஸிலியன் என்னும் பெயர் கொண்ட தலைமை நீதிபதி கலகத்தால் பாதிக்கப்பட்ட கவுன்டிகளில் விசாரணை நடத்தினார். அவருடன் அரசர் ரிச்சர்டும் கூடச் சென்றார். வாஸ்தாம் என்னுமிடத்தில் அவரைக் காணவந்த குடியானவர்களிடம் அவர்கள் கோரின சுதந்திர சாசனங்கள் எல்லாம் அபத்தமானவை என்று வெளிப்படையாக அவர் கூறினார் : 'நீங்கள் வில்லன்களாக இருக்கிறீர்கள்; இனியும் வில்லன்களாகவே நீடிப்பீர்கள்'. பாராளுமன்றத்தில் அக்காலத்தில் பெரும்பாலும் நிலம் படைத்த பிரபுக்களே உறுப்பினராய் இருந்தமையால், பிரபுக்களின் சொத்துக்களைத் திருப்பித் தரப் பாராளுமன்றம் தீர்மானித்தது. அதனால் அரசர் கொடுத்த வாக்குறுதிகள் அனைத்தும் பயனற்றவை; செல்லுபடியாக மாட்டா என்று அறிவித்தது. டிரெஸிலியன் கலகக்காரர்களைக் கடுமையாகத் தண்டித்தார். தமக்கு முன் பதவி வகித்த பிரதம நீதிபதியைக் கொன்ற கொலைகாரக் கலகக்காரர்களைப் பழிக்குப் பழிவாங்க அவர் துடித்ததில் வியப்பில்லை. கலகக்காரர்கள் தூக்கிலிடப்பட்டது தொடர்ந்து நடைபெற்று வந்தது.

செயின்ட் ஆல்பன்ஸில் கலகக்காரர்களின் தலைவராக இருந்த வில்லியம் கிரின்டிகோப்பி (Griedecobbe) என்பார் நம் கவனத்தைக் கவருகிறார். சாவும் முன் அவர் கூறியதாவது: 'நண்பர்களே! நீங்கள் சிறிது காலத்திற்காவது பெற்ற சுதந்திர மூச்சினை முடிந்தமட்டும் காத்துநில்லுங்கள். என்னைப் பற்றியோ எனக்கு எந்த விதமான ஆபத்து நேரப்போகிறதென்பது பற்றியோ கவலைப்படாதீர்கள். நான் சுதந்திரத்திற்காகச் செத்து மடிவதுதான் அவசியமென்றால், மகிழ்ச்சியுடன் தியாகியாக உயிரை முடித்துக் கொள்கிறேன்'.

குடியானவர் கலகத்தினால் ஏற்பட்ட விளைவுகள் : குருதி வெள்ளத்திற்கும், புறக்கணிக்கப்பட்ட உறுதிமொழிகளுக்கும் இடையே குடியானவர்களின் மாபெரும் கலகம் அடக்கி

யொடுக்கப்பட்டது. அடிமைத்தனை உடனடியாக மறையவில்லை. ஏனெனில் பிரபுக்கள் அடிமைத்தனையை மறையவிடவில்லை. அரசரும், பாராளுமன்றமும் காட்டிய வழியைப் பின்பற்றிப் பிரபுக்களும் தத்தம் உரிமைகளை மீண்டும் வலியுறுத்திக் கொண்டனர். எனினும் பழைய முறையில் நிலவிவந்த அடிமைத் தொழில் முறை இங்கிலாந்தில் அழியத் தொடங்கியது. கலகம் மூண்ட ஐம்பதாண்டுகளுக்குள் அடிமைத் தொழில் முறை முழுமையாக மறைந்துவிட்டது. கடந்த ஒரு நூற்றுண்டாக படிப்படியாக ஏற்பட்ட மாறுதல்களின் விளைவாக இம் முடிவு ஏற்பட்டதெனில் மிகையாகாது.

குடியானவர் கலகத்திற்குப் பிறகு அடிமைத்தனையைப் பாதுகாக்கவேண்டிய அவசியமும் பிரபுக்களுக்கு இருக்கவில்லை. நிலத்தைக் குடியானவருக்குக் குத்தகைக்கு விட்டுவிட்டுச் சுதந்திரக் கூலியாள்களின் மூலம் சாகுபடி செய்துகொள்வது சாலச் சிறந்ததென்ற கருத்து நீடித்து நிலவத் தொடங்கியதால் நிலச்சொந்தக்காரர்—குடியானவர்—உழுது பயிரிடும் தொழிலாளர் முறை வேளாண்மைத் துறையில் தொடங்கலாயிற்று. இம் முறையே இன்றும் நீடித்து நிற்கிறது. பதினைந்தாம் நூற்றுண்டில் சுதந்திரக் குடியானவர்கள் பெரும்பான்மையினராய் விட்டமையால் அடிமைத்தனை என்ற பேச்சுக்கே இடமில்லாமற் போய்விட்டது. இந்த விஷயத்தில் ஐரோப்பிய நாடுகளில் பலவற்றைவிட இங்கிலாந்து வெகுவாக முன்னேறி இருந்ததெனலாம். ஃபிரான்ஸில் அடிமைத்தனைகள் ஃபிரஞ்சுப் புரட்சிவரை தொடர்ந்தது. இரஷியாவில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைப்பகுதி வரை நீடித்தது என்பதை இத் தருணத்தில் நினைவுகொள்ளலாம்.

# 29. இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சி

## (1377-1399)

இளம்வயதுப் பாலகர்கள் தம் சொத்துகள், நிலபுலன்களை சிறு பிராயத்திலேயே பெறுவது இடைக்காலத்தில் வழக்கமாய் இருந்தது. தம்முடைய பதினைந்தாம் வயதில் இரண்டாம் ரிச்சர்டு பொஹீமியா நாட்டின் அரசரும், ரோமானியப் பேரரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தவருமான வென்செஸ்லாஸ் என்பாரின் சகோதரியான ஆன் இளவரசியை மணந்து கொண்டார். ரிச்சர்டு தம் பதினேழாம் வயதில் அரசாங்கத்தை நிருவகிக்கும் பொறுப்பைத் தாமே மேற்கொண்டு, தமக்கு விருப்பமானவர்களை அமைச்சர்களாகவும் நியமித்துக்கொண்டார்.

டி லா போலும், டி வீரும் (De La Pole and de Vere) ரிச்சர்டின் சான்சலராகப் பதவியேற்றவர் மைக்கேல் டி லா போல் என்பவராவர். அவர் மூன்றும் எட்வர்டின் பழைய ஊழியர்களில் ஒருவர். அவரை ரிச்சர்டு சப்ஃபோக் பிரபுவாக நியமித்தார். அவருடைய முக்கியமான ஆலோசகர்களில் மற்றொருவர் இராபார்ட் டி வீர் என்பார். அவர் ஆக்ஸ்ஃபோர்டு பிரபுவாக இருந்தார்; மன்னரைவிட ஒரு சில வயதுகள் அவர் மூத்தவர். இங்கிலாந்தில் நல் அரசாங்கம் நீடிக்க வேண்டுமாயின் குறிப்பாக ஃபிரான்ஸுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொள்வது இன்றியமையாத தேவை என்று சான்ஸலரான டிலாபோல் உறுதியாக நம்பியதோடு, அரசரை நம்பவைக்க அரும்பாடுபட்டார். பெரும் பிரபுக்கள் குறிப்பாக அரசருடைய உறவினர்களான அவருடைய மாமன் முறையினர் ஆகியோரின் பெரும் அதிகாரங்கள் அரசருடைய அதிகாரத்திற்குட்பட்டிருக்க வேண்டும் என்று அவர் நம்பினார். ஏதேச்சாதிகார உணர்வுகொண்ட ரிச்சர்டு, சான்சலர் டிலாபோலின் கருத்துக்களை பெரிதும் ஆதரித்தார்.

கிளஸ்டர் பிரபு: அரசருக்கு மாமன் முறையில் மூன்று நெருங்கிய உறவினர்கள் இருந்தார்கள். அவர்களில் மூத்தவரும், திறமை வாய்ந்தவருமான ஜான் காண்ட் கி.பி. 1386 முதல் 1389 ஆம் ஆண்டு வரையில் மூன்றுண்டுகாலம் இங்கிலாந்தைவிட்டு

வெளியே சென்றிருந்தார். ஸ்பெயின் நாட்டின் வாரிசுரிமையைப் பெறும் நோக்கத்துடன் அவர் ஸ்பெயினுக்கு புறப்பட்டுச்சென்ருர். அவர் காஸ்டைல் இளவரசி பிளான்ச் என்பாளைத் தம் இரண்டாம் தாரமாக மணந்திருந்தார். காஸ்டைன் இளவரசி கொடுங் கோலன் பெட்ரோவின் மகள். ஸ்பெயினில் மூண்டிருந்த வாரிசு ரிமைப் போரில் பங்கு கொள்ள அவர் ஸ்பெயினுக்குச் சென்ருர். எனினும் ஜான் காண்டின் ஆசைகளனைத்தும் பாழ்கனவாயின. எனினும் அவர் இங்கிலாந்தில் இல்லாத காலத்தில் அவருடைய இளைய சகோதரர் உட்ஸ்டாக் தாமஸ்-பதவியில் முன்னுக்கு வரப் பேராசை கொண்டிருந்தவர்—அந்த வாய்ப்பினை நன்கு பயன்படுத் திக் கொண்டார். அவரைக் கிளஸ்டர் பிரபு என்றும் கூறுவர். கிளஸ்டர் பிரபுவின் கடைசி சகோதரர் யார்க் பிரபுவான எட் மண்ட் ஓர் உதவாக்கரை. கிளஸ்டர் பிரபு தாமஸ் படுமோச மான மனிதர். அகங்காரம், திமிர், சுயநலம், சூழ்ச்சித்திறன் ஆகிய குணங்களின் இருப்பிடமானவர். இளவயதினரான ரிச்சர்டின் மீது சிறிதும் கருணை காட்டாமல் அரசாங்கத்தைக் கைப்பற்றிக் கொள்வதில் கிளஸ்டர் கண்ணுங் கருத்துமாய் இருந்தார்.

கிளஸ்டரின் கலகம் : காமன்ஸ் சபையுடன் ரிச்சர்டு சச்சர விட்டுக் கொண்டது கிளஸ்டர் பிரபுவுக்குச் சாதகமாய் அமைந் தது. அரசருக்கு எப்போதும் பொருளாதார நெருக்கடி இருந்து கொண்டேயிருந்தது. அரசின் தனிப்பட்ட செலவினங்கள் கட்டுக் கடங்காமலிருந்ததைப் பாராளுமன்றம் எப்போதும் குறையாகக் காட்டிக்கொண்டே இருந்தது. வழக்கத்திற்கு மாருகச் சண்டைக்கு ஆயத்தமாயிருந்த பாராளுமன்றமும் (1386), இங்கிலாந்தின் கடற்கரைப்பகுதியில் வர இருந்த ஃபிரெஞ்சியப் படையெடுப்பும் கிளஸ்டர் பிரபுவுக்கு அரிய வாய்ப்பினை அளித்தன. தம்முடைய தலைமையில் அமைக்கப்பட்ட ஆலோசனைக்குழுவொன்றின் பாது காப்பின்கீழ் அரசர் கட்டுப்படவேண்டுமென அவர் கோரினுர். அரச அதிகாரத்தைக் கட்டுப்படுத்தக் கிட்டிய அரும் வாய்ப் பெனக் கருதிய பாராளுமன்றம் கிளஸ்டரின் கோரிக்கைகளுக்கு மகிழ்ச்சியுடன் ஆதரவளித்தது. அதன் விளைவாக சான்சலர்மீது துரோகக் குற்றஞ் சாட்டப்பட்டது. கிளஸ்டர் பிரபு அரசர் இரண்டாம் ரிச்சர்டுடன் நேர்முக உரையாடல் செய்து கிளர்ச்சி யில் இறங்கினுர். அரசர்களைப் பதவி நீக்கம் செய்யமுடியும் என்று அச்சுறுத்தி அதற்கு எடுத்துக்காட்டாக இரண்டாம் எட்வர்டின் ஆட்சியையும் மேற்கோள் காட்டினுர் கிளஸ்டர் பிரபு. கடுங் கோபம் கொண்ட இளவயதினரான அரசர், இப் புயலுக்குப் பணிந்துபோனுர். ஆனுல் அவர் பணிந்தது ஒரு சில மணித்துளிகள் தாம். பாராளுமன்றம் கலைக்கப்பட்டவுடன் அரசர் தம் நண்பர்

களைக் கூட்டிக்கொண்டு, படைகளைத் திரட்டுமாறு அவர்களைத் தூண்டி உள்நாட்டுப் போருக்கு ஆயத்தமானுர். ஆனுல் கிளஸ்டரும் அவருடைய நண்பர்களும்கூடப் போருக்கு ஆயத்தமாயிருந்தனர். இந்த உள்நாட்டுப் போர் சிறிது காலமே நடைபெற்ருலும் கொடூரமானதாய்க் கருதப்பட்டது. டி வீர் அவர்களின் படை வீரர்களை கிளஸ்டரின் வீரர்கள் ரேட்காட் பாலம் என்னுமிடத்தில் சிதற அடித்தனர்; தோல்வியுற்ற டி வீர் ஃபிரான்சுக்கு ஓடிச் சென்ருர் (1387). கிளஸ்டரின் கட்சியினர் சான்சலர் டி விரின்மீதும் அவருடைய ஏனைய ஆலோசகர்களின்மீதும் துரோகக் குற்றஞ்சாட்டி மேல் முறையீடு செய்தனர். தம்முடைய கட்சி தோற்றுவிட்டதை அறிந்த ரிச்சர்டு, தம் மாமனுக்குக் கட்டுப்பட்டு நடக்க ஒப்புக்கொண்டார்.

வழக்காடும் பிரபுக்கள்: 1387: அரசருடைய நண்பர்களின்மீது துரோகக் குற்றம் சாட்டியவர்கள் தங்களை மேல் வழக்காடும் பிரபுக்கள் என்றழைத்துக்கொண்டு, அரசாங்க நிருவாகத்தைக் கட்டுபடுத்தத்தொடங்கினர். இந்த மேல்முறையீட்டுப் பிரபுக்களை யார் என்று நினைக்கிறீர்கள் — கிளஸ்டர் பிரபுவும், அவருடைய நண்பர்களாள அருண்டேல் பிரபுவும், வார்விக் பிரபுவுமேயாவர். அவர்களுக்குத் துணையாக இரு இளைஞர்களையும் சேர்த்துக் கொண்டனர்: அவர்களில் ஒருவர் ஜான்காண்டின் மகனுன டார்பி பிரபு ஹென்றி; மற்றவர் நாட்டிங்ஹாம் பிரபுவான தாமஸ் மௌபரே. தாமஸ் மௌபரே, ரிச்சர்டின் இளம் பருவத்து நண்பர்களில் ஒருவர்.

கருணையற்ற பாராளுமன்றம், 1388: கி. பி. 1388 ஆம் ஆண்டில் பாராளுமன்றம் கூடியது. அரசருடைய ஆதரவாளர்கள் அனைவரையும் வேட்டையாடி வீழ்த்தியதால் அப் பாராளுமன்றத்தைக் 'கருணையற்ற பாராளுமன்றம்' என்று பெயரிட்டழைத்தனர். குற்றமிழைத்தவர்களாகக் கருதப்பட்ட சப்ஃபோக் பிரபுவும், டிவீரும் ஃபிரான்ஸுக்குத் தப்பிச்சென்று உயிர்தப்பினர். பிரதம நீதிபதியான டிரெஸிலியன், இலண்டன் மேயர், மற்றும் ஏனைய சிறு குற்றவாளிகள் பலர் துரோகக் குற்றத்திற்கு ஆளாகி உயிர்துறந்தனர். அரசரின் ஆசிரியரான சர் சைமன் பர்லி என்பாரும் சிரச்சேதம் செய்யப்பட்டார். ரிச்சர்டு தம் நண்பர்களை நாடு கடத்தியும், கொன்றும் பழிவாங்கிய கொடுமையாளர்களை ஒருபோதும் மன்னிக்கவில்லை. கிளஸ்டர், அருண்டேல், வார்விக், நாட்டிங்ஹாம், டார்பி ஆகிய ஐவரையும் அழிக்காமல் விடுவதில்லை என அவர் சபதம் பூண்டார். டார்பி பிரபு ஒருவரைத் தவிர ஏனையோரை அவர்பின்னர் பழிதீர்த்துக் கொண்டார்.

மேல் வழக்காட்டுப் பிரபுக்களின் ஆட்சி ஓராண்டு காலமே நீடித்தது. கி.பி. 1389 ஆம் ஆண்டில் ஒரு நாள் ரிச்சர்டு கவுன்சில் சபைக்கு நடந்து போனார். அங்குத் தம் மாமனைப் பார்த்து தம்முடைய வயதென்ன என்று அவருக்குத் தெரியுமா? என வினவினார். அரசருக்கு இருபத்து மூன்று வயதாகிறதெனக் கூறினார் கிளஸ்டர். எனவே இனி அரசாங்கத்தைத் தாமே நிருவகிக்கும் வயது வந்து விட்டதென ரிச்சர்டு குறிப்பிட்டார். எதிர்ப்புக் காட்டாமல் கிளஸ்டர் மரியாதையாக ஒப்புக்கொண்டார் எனத் தெரிகிறது. அத்தருணத்தில் கிளஸ்டர் பிரபுவின் சகோதரர் ஜான் காண்ட் ஸ்பெயினிலிருந்து இங்கிலாந்து திரும்பிவந்திருந்தார். அவரை லங்காஸ்டர் பிரபு என்றும் அழைப்பர். லங்காஸ்டரின் வருகையால் கிளஸ்டரின் நிலைமை பலவீனமாயிருந்தது. தம் அண்ணார் லங்காஸ்டர் பிரபு ஜான் காண்டும், ரிச்சர்டும் இப்போது நெருங்கிய நண்பர்களாயிருந்ததும் கிளஸ்டரின் பிடி தளரக் காரணமாயின. அடுத்த எட்டாண்டுக் காலம் ரிச்சர்டு அமைதியாகவும் அருமையாகவும் ஆட்சி செய்தார்.

ரிச்சர்டு பதவியைத் தாமே கைப்பற்றிக்கொண்டு ஆட்சி நடத்தத் தொடங்கியதும் முதற்பணியாக ஃபிரான்சுடன் உடன்படிக்கை யொன்றினைச் செய்துகொண்டார். பின்னர் அது நிலையான சமாதான உடன்படிக்கையாக மாற்றப்பட்டது (1396). மக்கள் அதனைப் பெரிதும் விரும்பினர். உடன்படிக்கையின் அறிகுறியாக ரிச்சர்டு மன்னர் ஃபிரான்ஸ் அரசர் ஆறாம் சார்லஸின் எட்டு வயது மகள் இஸபெல்லாவைத் திருமணம் செய்து கொண்டார். இரண்டாண்டுகளுக்கு முன்னர்த்தான் அவருடைய முதல் மனைவியான ஆன் காலமாகியிருந்தார். அவள் பொஹீமியாவைச் சார்ந்தவள் என்பதையும்; அரசரின் அன்புக்குப் பாத்திரமாயிருந்தவள் என்பதையும் நினைவுகொள்க

கிளாஸ்டர் பிரபு கொலையாதல், 1397: அன்பு மனைவி காலமான பிறகு ரிச்சர்டின் நடத்தையில் பெரும் மாறுதலேற்பட்டது. ஆனின் மரணம் அவருடைய விநோதமான செயல்களுக்குக் காரணமாயிற்றா? என்று சொல்ல முடியாவிடினும், அவருடைய நடத்தையில் மாற்றம் ஏற்பட்டதென்னவோ உண்மைதான். நல்லாட்சி நடத்திய நல்லரசர் என்ற அமைதியான நிருவாகத்தைப் புறக்கணித்துவிட்டு அவர் வல்லாட்சி நடாத்த வழிவகை செய்தார். நல்லாட்சிக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய ரிச்சர்டு வல்லரசர் ஆனார். அவர் கொணர்ந்த பல்வேறு சட்டதிட்டங்கள் அவசரமாகவும், திடீரெனவும் நடைமுறைப்படுத்தப்பட்டன. கி.பி. 1397 ஆம் ஆண்டில் ரிச்சர்டு தம் பகைவர்களைத் திடீரெனத்

தாக்கினுர். தம் மாமன் கிளஸ்டர் பிரபுவை முதன்முதலில் தாக்க முடிவுசெய்தார் ரிச்சர்டு. தாமே நேரிடையாகச் சென்று கிளஸ்டர் பிரபுவை கைது செய்தார் அரசர். பாதுகாப்பற்ற முறையில் கிளஸ்டர் பிரபுவைக் கலே நகரில் சிறைவைத்தார். அங்கு அவர் 1397 ஆம் ஆண்டில் கொலைசெய்யப்பட்டார். மேல் வழக்காடும் பிரபுக்களாயிருந்த அருண்டேலையும், வார்விக்கையும் துரோகக் குற்றத்திற்காகக் கைது செய்தார். அவர்கள் பத்தாண்டுகளுக்கு முன்னர்ச் செய்த குற்றத்திற்கு ரிச்சர்டு இப்போது பழிக்குப்பழி வாங்கினுர். வார்விக்கின் உயிர் காப்பாற்றப்பட்ட போதிலும் அவருடைய சொத்துகள் அனைத்தும் பறிமுதலாக்கப்பட்டன. அருண்டேல் சிரச்சேதம் செய்யப்பட்டார். அவருடைய சகோதரர் ஆர்ச்பிஷப் அருண்டேல் என்பார் நாடு கடத்தப் பட்டார். நாட்டிங்ஹாம், டெர்பி ஆகியோரின்மீது அரசர் நடவடிக்கை எதையும் மேற்கொள்ளவில்லை. அவர்கள் அரசருக்கு உதவிசெய்தமையால் பதவி உயர்வு பெற்றனர். நாட்டிங்ஹாம் நார்பக் பிரபுவாகவும் டெர்பி ஹெரிபோர்டு பிரபுவாகவும் நியமிக்கப்பெற்றனர். ரிச்சர்டு தங்களை மறந்துவிட்டார், மன்னித்துவிட்டார் என்று அவர்கள் கற்பனைசெய்துகொண்டனர்.

ஹெரிபோர்டு நாடு கடத்தப்படல், 1398: அடுத்த இரண்டாண்டு களுக்கு ரிச்சர்டு தம் இச்சைப்படி ஆட்சி நடத்தினுர். நாட்டில் வேறு கொலைகளால் குருதி சிந்தப்படவில்லையாஞலும், அரசரின் நிலையற்ற உணர்ச்சிகளினுல் ஒருவரும் பாதுகாப்புடன் வாழ வில்லை என்பதையும் குறிப்பிடுவது அவசியம். நிர்வாகத்தை நடத்திய கட்சியை எதிர்க்கத் திறனற்ற நிலையில் பாராளுமன்றம் இருந்தமையால் அது அரசருக்குக் கீழ்ப்படிந்தே நின்றது. பாராளுமன்ற உறுப்பினர்கள் அரசரின் அடியாட்களைக் கொண்ட குழுவொன்றினிடம் எல்லா அதிகாரங்களையும் கொடுத்துவிட்டு ஒதுங்கி நின்றனர். அதன்படி, பாராளுமன்றத்தின் அதி காரங்களைப் பிரபுக்கள் பதின்மர், இரு பிஷப்புகள், ஆறு சாமானி யர்கள் ஆகியோரைக் கொண்ட நிலையான குழுவினிடம் கொடுத்து விடுமாறு பாராளுமன்றத்தையே கூற வைத் தார். இக் குழுமுறை நிர்வாகத்தால் பாராளுமன்றம் புறக் கணிக்கப்பட்டதெனில் மிகையன்று. அது அரசியல் அமைப்புக்கு விரோதமானதும் முறைபிசகானதும் ஆகும். எனினும் ரிச்சர்டு முறைகேடான வழியில் ஆட்சி நடத்தினுர் என்று குறை கூறுவதும் பொருந்தாது. மக்களைத் தம் பக்கம் வைத்துக்கொள்ள விழைந்த ரிச்சர்டு அடக்குமுறைகளைக் கட்டவிழ்த்து விடவில்லை. ஆனுல், பிரபுக்களில் பெரும்பாலோரை அரசர் பகைத்துக் கொண்டார். பிரபுக்களில் அஞ்சத்தக்கவர்கள் எனக் கருதப்பட்ட மேலும் இரு

வரை ஒழித்துக்கட்ட. ரிச்சர்டு கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டார். அவ் விருவரும் மேல் வழக்காட்டுப் பிரபுக்களில் எஞ்சியவர்கள். தாமஸ் நார்பக்கும், ஹெரிபோர்டு ஹென்றியும் சச்சரவிட்டுக் கொண்டனர். நார்பக் பிரபு ஹெரிபோர்டின்மீது துரோகக் குற்றம் சுமத்தினர். காவண்ட்ரி என்னுமிடத்தில் இருவரும் கைகலக்க முயன்றபோது ரிச்சர்டு குறுக்கிட்டுச் சண்டையை நிறுத்தியதுடன் இருவரையும் நாடு கடத்தினர். ஹெரிபோர்டு ஆறு ஆண்டுகளுக்கும், நார்பக் வாழ்நாள் முழுவதுக்கும், (1398) நாடு கடத்தப்பட்டனர். இப்போது அரசரைச் சுற்றியிருந்த ஆபத்துகள் அனைத்தும் நீங்கின. எனினும் அவர் அக்கறை காட்டாது ஆட்சி செய்ததென்னவோ நீடித்தது.

ஜான் காண்டின் மரணம், 1399: **1399 ஆம் ஆண்டு** பிப்ரவரி மாதத்தில் ஜான் காண்ட் காலமானர். ஜான் காண்டின் மகன் தான் நாடுகடத்தப்பட்ட லங்காஸ்டர் பிரபு ஹென்றி ஹெரிபோர்டு. ஜான் காண்ட் இறந்தவுடன் பிரச்சினையொன்றெழுந்தது. அவருடைய வாரிசாக லங்காஸ்டர் பிரபு ஹென்றியே நியாயப்படி பொறுப்பேற்றிருக்க வேண்டும். ஆனல் அவர் நாடு கடத்தப்பட்டதால் நியாயமாக அவருக்குச் சேரவேண்டிய பெரும் பண்ணைகளை ரிச்சர்டு அவருக்குக் கொடுக்க மறுத்துவிட்டார்; சொத்துக்களைத் தமதாக்கிக் கொண்டார் அரசர். ஹென்றியைத் துரோகியென்றே அல்லது அவருடைய குற்றங்களுக்குத் தண்டனையோ விதிக்கப்படாமையால் அவருக்குச் சொந்தமான சொத்துக்களைப் பறித்துக் கொண்டது எவ்வகையிலும் முறையாகாது. நாடுகடத்தப்பட்ட ஹென்றி, ரிச்சர்டின் இந்த நடவடிக்கையினல் அரசரின் கடும்பகைவரானர். ரிச்சர்டைப் பழிவாங்கத் தீர்மானித்து, ஹென்றி வாய்ப்பினை எதிர்நோக்கிக் காத்திருந்தார்.

ஹென்றி லங்காஸ்டர் இங்கிலாந்தின்மீது படையெடுத்தல்: ரிச்சர்டின் நடவடிக்கையினல் ஹென்றியின் சொத்துகள் பறிக்கப்பட்டதை அறிந்த பிரபுக்கள் அதை அநியாயமானதெனக் கருதி, நாடுகடத்தப்பட்டிருந்த ஹென்றியுடன் கடிதப் போக்குவரத்தினைக் கொள்ளத் தொடங்கினர். ஐந்து மாதங்கள் பொறுமையோடு காத்திருந்தார் அரசியல் ஞானம் கொண்ட ஹென்றி. உரிய காலம் வந்துவிட்டதெனக் கருதி அவர் இங்கிலாந்தின்மீது படையெடுத்தார்.

அயர்லாந்தின் துணைப் பிரபுவான லைல் பிரபு அங்கு நடைபெற்ற கைகலப்பொன்றில் அயர்லாந்து கலகக்காரரர்

களால் கொல்லப்பட்டார். அயர்லாந்தில் அமைதியை நிலைநாட்ட ரிச்சர்டு அவசரமாகப் புறப்பட்டுச் சென்றார். செயின்ட் ஜார்ஜ் கால்வாயைக் கடந்து அயர்லாந்தில் அரசர் இருந்தபோது ஹென்றி லங்காஸ்டர் யார்க்ஷயரிலிருக்கும் ரெவன்ஸ்பூர் என்னுமிடத்தில் இறங்கினார். உடனே அவருடன் வட பகுதிகளின் பெரும் பிரபுவாய்க் கருதப்பட்ட நார்த்தம்பர்லாந்து பிரபுவும், அவருடைய மகன் ஹேரி பெர்சியும் இணைந்துகொண்டனர். ஏனைய பிரபுக்களும் அவர்களைப் பின்பற்றி ஹென்றியுடன் சேர்ந்து கொண்டார்கள். அவர்களின் படைவீரர்களும் அவருக்கு உறுதுணையாக நிற்க ஹென்றியுடன் இணைந்துகொண்டனர்.

அரசர் அயர்லாந்திலிருந்து திரும்பி வேல்ஸில் வந்திறங்கினார். அங்கு அரசருக்கு ஆதரவு காட்டும் வகையாகப் படையொன்று திரட்டப்பட்டது; செஷயரிலும் அதைப்போல் பிறிதொரு படை திரண்டது. எனினும் தம்படைவீரர்களை ஹென்றிக்கு எதிராகத் திரட்ட ரிச்சர்டு முயற்சியொன்றையும் மேற்கொள்ளவில்லை. ஹென்றி லங்காஸ்டருக்கு இங்கிலாந்தில் பேராதரவு திரண்டிருக்கிறதென்ற செய்தியைக் கேட்க ரிச்சர்டு மனமயக்கமுற்றார். ரிச்சர்டைக் கரிய இருள் கவ்விக்கொண்டது. அதனை 'இரண்டாம் ரிச்சர்டு' என்னும் தம் நாடகத்தில் ஷேக்ஸ்பியர் அழகாகப் படம் பிடித்துக்காட்டி எழுதியுள்ளார்.

இரண்டாம் ரிச்சர்டு முடிதுறத்தல்: 1399: இறுதியில் ரிச்சர்டு கான்வேகோட்டைக்குத் திரும்பியபோது அங்கு அவர் ஹென்றிக்குச் சரண்அடைந்தார். இதுநாள் வரை தமக்கு ஆட்சியைக் கைப்பற்றும் எண்ணமில்லை என்றும், தம் சொத்துகளை உரிமை கொண்டாடவே தாம் வந்திருப்பதாகவும் கூறிக்கொண்டிருந்த வஞ்சகநெஞ்ச ஹென்றி, தாம்கூறிய போலி வாதங்களை உதறித்தள்ளிவிட்டு வெளிப்படையாகவே அரசுரிமையைப் பெற உரிமை கொண்டாடினார். சரணடைந்த இரண்டாம் ரிச்சர்டு மன்னர் இலண்டன் கொணரப்பட்டு, டவர் சிறையில் அடைக்கப்பட்டதுடன், முடிதுறக்க வேண்டுமெனவும் வற்புறுத்தப்பட்டார். பாராளுமன்றத்தின் இரு சபைகளும் கூட்டப்பட்டன. ரிச்சர்டு முடிதுறந்துவிட்டார் என்று பாராளுமன்றத்தில் படிக்கப்பட்டது. லங்காஸ்டர் பிரபு அரசமுடிக்கு உரிமை கொண்டாடி நான்காம் ஹென்றி என்ற பெயருடன் முடிசூட்டிக் கொண்டார்.

ஹென்றியின் பறிமுதல்: ஹென்றி இங்கிலாந்தின் அரசுரிமையைப் பறித்துக்கொண்டது வரலாற்றில் சிறப்பானதொரு இடத்தைப் பெறுகின்றது. அவருக்கு அரியணையேறும் உரிமை

பரம்பரையாக வந்ததன்று. ரிச்சர்டுக்குப் பின்னர் முறைப்படி அரசராக வேண்டியவர் எல்லைப்புறப் பிரபுவான ரோஜர் என்பாரவர். அவர் மூன்றும் எட்வர்டு மன்னரின் மூன்றும் மகன் லையனலின் வழிவந்தவர். பட்டத்திற்கு வந்த லங்காஸ்டர் பிரபுவைத் 'தேர்ந்தெடுக்கப்பட்ட அரசர்' எனக் கொள்ளவேண்டும். எனவே அவரைத் தெய்வீக உரிமைப்படியாக வந்த அரசர் எனக் கொள்ள முடியாது. ரிச்சர்டின் நிலையற்ற கொள்கைகளினால் சலிப்படைந்த நாட்டுமக்கள் ஹென்றிக்கு ஆதரவு காட்டி அரசராக்கியதில் வியப்பில்லையன்றோ! பாராளுமன்றத்தின் இரு சபைகளின் ஆதரவைப்பெற்று, குறிப்பாக அவர் அரசராக்கப்பட்டார் என்பதை அறிந்துகொள்வோமாக. இவ் வாதரவிற்காகப் புது அரசர் தாம் பெற்ற பேரதிகாரத்தைப் பாராளுமன்றத்துடன் பங்கிட்டுக்கொள்ள வேண்டியவரானார்.

**இரண்டாம் ரிச்சர்டு கொலையாதல் 1400:** ஆட்சியை இழந்த இரண்டாம் ரிச்சர்டு இலண்டனிலிருந்தும் நண்பர்களிடமிருந்தும் பிரிக்கப்பட்டு பாம்ஃபிரட் கோட்டையில் சிறைவைக்கப்பட்டார். அடுத்த ஆண்டில் அவர் ஹென்றியின் ஆணைப்படி கொலை செய்யப்பட்டார் (1400).

அவருடைய குணவியல்புகள் ஒருவகையில் புரியாத புதிராக இருந்தன. நான்காம் ஹென்றியை விடவும், கிளஸ்டர் பிரபுவை விடவும் ரிச்சர்டு சிறந்த அறிவுடையவர். தம்மால் திறமையாக ஆட்சி செய்ய முடியுமென்பதை எட்டாண்டுகள் (1389-97) நல்லாட்சி புரிந்து நிரூபித்துக் காட்டியவர் அவர். ஆனால் அவர் உறுதியான கொள்கைப் பிடிப்பில்லாதவர். கண்டதே காட்சி; கொண்டதே கோலம் என்ற திடச்சித்தமற்றவர். கிளஸ்டர் ஆட்சியை வெற்றிகண்டதால் அவருக்குத் தலைக்கனம் ஏற்பட்டது போலும். அவருடைய ஈராண்டு வல்லாட்சியால் நாட்டு மக்கள் அனைவரையும் அவர் பகைத்துக் கொண்டார். ஆனால் அரசர் அதை உணர்ந்துகொள்ளவோ அல்லது அக்கறைப்பட்டதாகவோ காட்டிக்கொள்ளவில்லை. இறுதியாகத் திடீரென அவர் வீழ்ச்சியுற்றார். 'பரமண்டலத்தில் கர்த்தர் ரிச்சர்டுக்குச் சீரிய தேவதூதன் பதவியை அளிப்பார்' என்று அவர் வாயிலாக ஷேக்ஸ்பியர் 'இரண்டாம் ரிச்சர்டு' என்னும் தம் நாடகத்தில் கூறவைக்கிறார்.

ரிச்சர்டு காட்சியிலிருந்து விடுபடுகிறார். அவருடைய இடத்தில் அவரைவிடக் கூர்த்தமதியினரான நான்காம் ஹென்றி அமருகிறார். எனினும் அவரை நல்லவரெனக் கூறமுடியாது.

பதவி துறத்தல்: இரண்டாம் எட்வர்க்கும் இரண்டாம் ரிச்சர்டுக்கும் ஓர் ஒப்புமை :

இரண்டாம் எட்வர்டு 1307 முதல் 1327 வரை இங்கிலாந்தின் அரசராக ஆண்டார். இரண்டாம் ரிச்சர்டு 1377 முதல் 1399 வரை அரசாண்டார். இருவரும் அரசப்பதவியிலிருந்து முடி துறந்து கொலைசெய்யப்பட்டு மாண்டவர்கள்.

இரண்டாம் எட்வர்டுக்கு அவருடைய மனைவியே பகையாளுள். அவருடைய ஆட்சியால் அதிருப்தியுற்றவர்கள் அனைவரும் அரசரின் எதிரிகளுடன் சேர்ந்துகொண்டனர். 1327 ஆம் ஆண்டில் கூடிய பாராளுமன்றம் இரண்டாம் எட்வர்டு மன்னரை அரசப் பதவிக்குத் தகுதியற்றவர் என்று தீர்மானித்து அரசப் பதவியைத் தமது மகனுக்குக் கொடுக்க வேண்டுமெனத் தீர்மானித்தது. ஆனுல் இரண்டாம் ரிச்சர்டு ஆட்சியின் இறுதிக் காலத்தில் தம்மை எதிர்த்த ஹென்றிலங்காஸ்டருக்குத் சரண் அடைந்தார். ஹென்றி லங்காஸ்டர் அரசரின் நேரிடையான வாரிசுரிமை பெற்றவர் அல்லர்.

இரண்டு அரசர்களும் சிறையில் அடைக்கப்பட்டுப் பின்னர்க் கொலை செய்யப்பட்டனர். இரு அரசர்களின் முடி துறத்தலையும் பாராளுமன்றம் ஏற்று அங்கீகரித்தது.

இரண்டாம் எட்வர்டுக்குப் பின்னர் அரசுரிமையை அவருடைய மகனுக்குக் கொடுத்தது பாராளுமன்றம். அதில் வாரிசுரிமை நியாயமான வழிமுறையைப் பின்பற்றி இருந்தது. ஆனுல் இரண்டாம் ரிச்சர்டின் அரசுரிமை ஹென்றி லங்காஸ்டரால் பறிக்கப்பட்டது. அவர் நேரிடையான வாரிசல்லர். எனினும் பாராளுமன்றம் அதையும் அங்கீகரித்தது. யார் பதவியிலிருந்தனரோ அவர்களைப் பாராளுமன்றம் அங்கீகரித்தது என்பதை உணரவேண்டும்.

தமக்கு எதிர்ப்பு வந்ததை அறிந்த இரண்டு அரசர்களும் போரிடாமல் சரணடைந்ததும் குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் எட்வர்டு தம்மை ஆதரிக்க ஒருவரும் இல்லை என்பதை உணர்ந்து சிறையிலிருந்து தப்பி ஓடினுர். அவரையும், அவருடைய நண்பர்களையும் வேல்ஸ் எல்லைப்புறத்தில் கைது

செய்தனர். அவர் பெர்க்லி கோட்டையில் சித்திரவதை செய்து கொல்லப் பட்டார். இரண்டாம் ரிச்சர்டு தப்பியோட முயற்சி செய்யவில்லை. அவரும் சிறை வைக்கப்பட்டுப் கொல்லப் பட்டார்.

இரு மன்னர்களின் முடிதுறத்தலிலும் ஓர் ஒப்புமையைக் காணலாம். இருவரையும் பதவி துறந்தவர்கள் என்று பாராளு மன்றம் அங்கீகரித்தது. இதில் சிறப்பென்னவென்றால் பதவியில் இருந்தோர் பாராளுமன்ற அங்கீகாரத்தை அவசியம் என்று கருதியதுதான். பாராளுமன்ற அதிகாரம் படிப்படியாகப் பெருக லாயிற்று என்பது உண்மையாயினும், அதனிடம் சட்டங்களைச் செயல்படுத்தும் திறமை இருக்கவில்லை,

# பிரிட்டன் வரலாற்றில் முக்கிய தேதிகள்

(இங்கிலாந்து, ஐரோப்பா, கீழ்த்திசை நாடுகள் ஆகியவற்றில் சமகால நிகழ்ச்சிகள்)

### கி.மு. முதல் நூற்றாண்டு

| | |
|---|---|
| 55 — 54 | பிரிட்டனில் ஜூலியஸ் சீசர் |
| 44 | சீசர் கொலையாதல் |
| | உள்நாட்டுப் போர்கள் |
| கி.மு. 30 முதல் கி.பி 14 வரை | பேரரசர் அகஸ்டஸ் |

### கி.பி. முதல் நூற்றாண்டு

| | |
|---|---|
| 43 | பிரிட்டனை கிளாடியஸ் வெற்றிகாணல் |
| 61 | பொடீசியாவின் கலகம் |
| 77 — 85 | அக்ரிகோலா |
| 84 | மோன்ஸ் கிராபியஸ் போர் |

### கி.பி. இரண்டாம் நூற்றாண்டு

| | |
|---|---|
| 96 — 180 | ரோமாபுரியில் பொற்காலம் |
| 121 | ஹேட்ரியன் பிரிட்டன் வருகை |
| 140 | ஸ்காட்லாந்தில் அந்தோனியன் சுவர் |

### மூன்றாம் நூற்றாண்டு

ரோமாபுரியின் வீழ்ச்சி : கோதியப் போர்கள்

| | |
|---|---|
| 211 | யார்க் நகரில் பேரரசர் செவிரஸ் காலமாதல் |
| 287 — 94 | பிரிட்டனில் கராசியஸ் |

### நான்காம் நூற்றாண்டு

கிறிஸ்தவப் பேரரசு

| | |
|---|---|
| 304 | செயின்ட் ஆல்பன் உயிர்த்தியாகம் |
| 306 | பேரரசர் கான்ஸ்டன்டியஸ் யார்க்கில் காலமாதல் |

| | |
|---|---|
| 313 | மிலான் ஆணை வெளியிடப்படல் (Edict of Milan) |
| 325 | கான்ஸ்டான்டிநோபில் நிலைநாட்டப்படல் |
| 395 | அலரிக் என்பாரின் தலைமையில் கோத்துகளின் கலகம் |

## ஐந்தாம் நூற்றாண்டு

### ரோமானியப் பேரரசு மேலும் வீழ்ச்சியுறல்

| | |
|---|---|
| 410 | கோத்துகள் ரோமாபுரியைச் சூறையாடல் |
| 429 | ஹாலுலியாவின் வெற்றி |
| 446 | அயிடியஸுக்கு வேண்டுகோள் |
| 449 | ஹெஞ்சிஸ்டு மற்றும் ஹோர்சா இங்கிலாந்து சேரல் |
| 450 — 500 | ஆங்கில - சாக்சானிய குடியேற்றம் |
| 455 | ரோமாபுரியை வாண்டல்கள் சூறையாடல் |
| 460 | செயின்ட் பாட்ரிக் காலமாதல் |

## ஆறாம் நூற்றாண்டு

| | |
|---|---|
| 527 — 65 | பேரரசர் ஜஸ்டீனியன் |
| 540 | கில்தாஸ் |
| 543 | செயின் பெனிடிக்ட் காலமாதல் |
| 563 | அயோனாவில் செயின்ட் கொலம்பா |
| 560 — 616 | கென்டில் எதெல்பர்ட்டின் ஆட்சி |
| 577 | டியோர்ஹாம் போர் |
| 590 — 604 | போப்பாண்டவர் மகா கிரகிரி |
| 597 | கென்டில் செயின்ட் அகஸ்டின் |

## ஏழாம் நூற்றாண்டு

### நார்த்தம்பிரியாவின் ஆதிக்கம்

| | |
|---|---|
| 613 | செஸ்டர் பிடிபடல் |
| 617 — 33 | நார்த்தம்பிரியாவில் எட்வினின் ஆட்சி |
| 626 — 55 | மெர்சியாவில் பெண்டாவின் ஆட்சி |
| 632 | நபிகள் நாயகம் காலமாதல் |
| 635 | நார்த்தம்பிரியாவில் அய்டான் |
| 664 | விட்பி திருச்சபைக் கூட்டம் |

| | |
|---|---|
| 668 — 90 | ஆர்ச்பிஷப் தியோடார் |

## எட்டாம் நூற்றுண்டு

### மெர்சியாவின் ஆதிக்கம்.

| | |
|---|---|
| 711 | ஸ்பெயினில் முஸ்லிம்கள் நுழைதல் |
| 716 — 57 | மெர்சியாவில் எதல்பால்டின் ஆட்சி |
| 735 | செயிண்ட் பீடு பெருமகனர் காலமாதல் ஆஃபாவின் அகழி மேலைச் சாக்சானியர் சாமர்செட்டையும் டெவனையும் வெற்றி காணல் |
| 757 — 96 | மெர்சியாவில் ஆஃபாவின் ஆட்சி |
| 786 — 809 | ஹருன்-அல்-ரஷீது (அரேபிய இரவுக்கதைகள்) |
| 787 | டேனியரின் முதல் படையெடுப்புகள் |
| 800 | சார்லிமேன் என்ற ரோமானியப் பேரரசர் முடிசூட்டப்படல் |

## ஒன்பதாம் நூற்றுண்டு

### வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம்

| | |
|---|---|
| 802 — 39 | வெஸ்ஸெக்ஸில் எக்பர்ட்டின் ஆட்சி |
| 825 | எல்லன்டன் போர் |
| 844 | கென்னத் மாக் ஆல்பின் - ஸ்காட்லாந்தின் முதல் அரசர் |
| 851 | இங்கிலாந்தில் டேனியக் குளிர்காலம் |
| 870 | செயின்ட் எட்மண்ட் உயிர்த்தியாகம் |
| 871 — 899 | மகா ஆல்பிரெட்டின் ஆட்சி |
| 878 | எத்தண்டன் போரும் வெட்போர் உடன் படிக்கையும் |
| 885 | பாரிஸ் நகரை வைக்கிங்குகள் கைப்பற்றல் |

## பத்தாம் நூற்றுண்டு

| | |
|---|---|
| 900 — 25 | மூத்த எட்வர்டின் ஆட்சி |
| 910 — | க்ளுனிய மறுமலர்ச்சி |
| 910 | நார்மண்டி டச்சி உருப்பெறல் |
| 925 — 40 | அதெல்ஸ்டனின் ஆட்சி |
| 937 | புருனன்பர்க் போர் |

| | |
|---|---|
| 959 — 75 | அமைதிக் காவலர் எட்காரின் ஆட்சி |
| 960 — 88 | ஆர்ச்பிஷப் டன்ஸ்டன் |
| 978 — 1016 | எதெல்ரெட் அன்ரெடியின் ஆட்சி |
| 980 | டேனியப் படையெடுப்புகள் தொடங்குதல் |

## பதினோரும் நூற்றாண்டு

| | |
|---|---|
| 1002 | செயின்ட் பிரைஸ் திருநாளில் படுகொலை |
| 1016 | எட்மண்ட் அயர்ன்சைடு காலமாதல் |
| 1016 — 35 | கான்யூட்டின் ஆட்சி |
| 1035 — 87 | நார்மண்டி டியூக் வில்லியம் |
| 1042 — 66 | எட்வர்டு அதிபத்தரின் ஆட்சி |
| 1051 | குட்வின் பிரபு நாடு கடத்தப்படல் |
| 1066 | ஹெரால்டு |
| 1066 | நார்மானிய வெற்றி |

## நார்மானியரின் ஆட்சி (11, 12,ஆம் நூற்றாண்டுகள்)

(1066 — 1154)

முதலாம் வில்லியம்

| | |
|---|---|
| 1057 — 93 | ஸ்காட்லாந்தில் மூன்றும் மால்கம் ஆட்சி |
| 1066 | ஹேஸ்டிங்ஸ் போர் |
| 1066 | வடதிசையின்மீது படையெடுப்பு |
| 1072 | ஈலி கைப்பற்றப்படல் |
| 1073 — 85 | போப்பாண்டவர் ஹில்டி பிராண்ட் எனப் படும் ஏழாம் கிரகிரி |
| 1076 | துருக்கியர் ஜெருசலத்தைக் கைப்பற்றல் |
| 1085 | டூம்ஸ்டே நூல் |
| 1086 | சாலிஸ்பரி சபதம் |
| 1086 | கார்த்தூசியர் நிறுவனம் அமைக்கப்படல் |
| 1087 | முதலாம் வில்லியம் காலமாதல் |

## வெற்றி வீரரின் மக்கள்

| | |
|---|---|
| 1087 — 1100 | இரண்டாம் வில்லியம் |
| 1090 | பெம்ப்ரோக் கோட்டை கட்டப்படல் |

| | |
|---|---|
| 1092 | இரண்டாம் வில்லியம் கார்லைல் கோட்டையைக் கட்டுதல் |
| 1093 | ஆர்ச்பிஷப் ஆன்ஸ்லம் |
| 1096 — 99 | முதல் சிலுவைப்போர் |
| 1098 | சிஸ்டர்சிய நிறுவனம் அமைக்கப்படல் |
| 1100 — 35 | முதலாம் ஹென்றியின் ஆட்சி |
| 1106 | டிஞ்சிப்ராய் போர் |
| 1118 | நைட்ஸ் டெம்ப்லர்ஸ் உருவாக்கப்படல் |
| 1120 | இளவரசர் வில்லியம் காலமாதல் |
| 1124 — 53 | ஸ்காட்லாந்தில் முதலாம் டேவிட்டின் ஆட்சி |
| 1125 | பேரரசர் ஐந்தாம் ஹென்றி காலமாதல் |

## ஸ்டீபன்

| | |
|---|---|
| 1135 | ஸ்டீபன் அரசராகத் தேர்ந்தெடுக்கப்படல் |
| 1141 | லிங்கன் போர் |
| 1147 | இரண்டாம் சிலுவைப் போர் |
| 1151 | ஆஞ்சு ஜியாப்ரே காலமாதல் |
| 1153 | வாலிங் போர்டு உடன்படிக்கை |
| 1153 | செயின்ட் பர்னார்டு காலமாதல் |
| 1154 | ஸ்டீபன் காலமாதல் |

## அஞ்சுவின அரசர்கள் 12, 13 ஆம் நூற்றுண்டு (1154 1272)

## இரண்டாம் ஹென்றி (1154-89)

| | |
|---|---|
| 1152 — 91 | பேரரசர் பிரடரிக் பார்பரோசாவின் ஆட்சி |
| 1154 | ஆஞ்சுவின் ஹென்றி அரசராதல்<br>பெக்கெட் சான்சலராதல் |
| 1162 | பெக்கெட் ஆர்ச்பிஷப்பாதல் |
| 1164 | கிளாரண்டன் சட்டதிட்டங்கள் |
| 1166 | கிளாரண்டன் அஸ்ஸைஸ் |
| 1164 — 70 | பெக்கெட் நாடுகடத்தப்படல் |
| 1170 | பெக்கெட் கொலையாதல்<br>அயர்லாந்தில் ஸ்ட்ராங்போ |
| 1171 | ஈகிப்திய சுல்தானக சலாடின் ஆட்சியேற்றல் |
| 1173 — 4 | ஹென்றியின் மக்களின் முதற் கலகம் |

1187 சலாடின் ஜெருசலத்தைக் கைப்பற்றல்
1188 ஹென்றியின் மக்களின் இரண்டாம் கலகம் சலாடின் வரி

## முதலாம் ரிச்சர்டின் ஆட்சி, 1189-99

1189 — 91 மூன்றும் சிலுவைப் போர்
1192 ராம்லே உடன்படிக்கை
1193 ரிச்சர்டு சிறையாதல்
1194 வேல்ஸ் இளவரசர் மகா லெவலின்

## ஜான் மன்னர், 1199-1216

1198 — 1216 போப்பாண்டவர் மூன்றும் இன்னொசன்ட்
1203 ஆர்தர் கொலையாதல்
1204 நார்மண்டியை இழத்தல்
1205 கான்டர்பரி ஆர்ச்பிஷப் தேர்தல்
1209 ஜான் சமய விலக்கம் செய்யப்படல்
1213 போப்பாண்டவருக்கு ஜான் அடங்குதல்
1214 பொவைன்ஸ் போர்
1215 மகா சாசனம்
1216 டாமினிகன் நிறுவனம் அமைக்கப்பெறல்

## மூன்றும் ஹென்றி, 1216—72

1215-50 பேரரசர் இரண்டாம் பிரடரிக்
1225 செயின்ட் தாமஸ் அக்குவினஸ் பிறப்பு
1226 செயின்ட் பிரான்ஸிஸ் மரணம்
1226 — 70 பிரான்ஸில் ஒன்பதாம் லூயியின் ஆட்சி
1232 ஹுபர்ட் டிபர்க்கின் வீழ்ச்சி
1236 ஹென்றி புரோவன்ஸ் எலியனுரை மணந்து கொள்ளல்
1240 மகா லெவலினின் மரணம்
1254 வேல்ஸ் இளவரசர் இரண்டாம் லெவலின்
1258 ஆக்ஸ்போர்டு கவுன்சில் கூட்டம்
1264 லூவிஸ் போர்
1265 சைமன் டி மாண்ட்போர்டின் பாராளு மன்றம்

1265 தாந்தேயின் பிறப்பு
1265 ஈவ்ஷாம் போர்
1272 மூன்றும் ஹென்றியின் மரணம்

## மூன்று எட்வர்டு மன்னர்கள் - (13,14)ஆம் நூற்றுண்டுகள் 1272-1377

### முதலாம் எட்வர்டு, 1272-1307

1275 முதல் பாராளுமன்றம்
வெஸ்ட்மினிஸ்டர் நாட்டுச்சட்டம்
1276 — 7 முதல் வேல்ஸிய போர்
1277 கான்வே உடன்படிக்கை
1278 கிளஸ்டர் நாட்டுச் சட்டம்
1279 மார்ட்மெயின் நாட்டுச் சட்டம்
1282 — 3 இரண்டாம் வேல்ஸிய போர்
1284 ருட்லான் நாட்டுச்சட்டம்
1285 வின்செஸ்டர் நாட்டுச்சட்டம் I
1285 வெஸ்ட்மின்ஸ்டர் நாட்டுச்சட்டம் II
1286 ஸ்காட்லாந்து அரசர் மூன்றும் அலெக்சாந்தர் காலமாதல்
1290 யூதர்கள் வெளியேற்றப்படல்
1292 ஸ்காட்லாந்து அரசர் ஜான் பால்யால்
1294 ரோஜர் பேகன் மரணம்
1295 மாதிரிப் பாராளுமன்றம்
1296 டன்பார் போர்
1297 சாசனம் உறுதியாக்கப்படல்
1297 ஸ்டர்லிங் பாலப் போர்
1301 வேல்ஸ் இளவரசர் எட்வர்டு
1305 வாலஸ் பிடிபடல்
1306 ஸ்காட்டிய அரசராக ராபர்ட் புரூஸ்

### இரண்டாம் எட்வர்டு 1307-27

1311 — 22 ஆர்டெய்னர்ங் பிரபுக்கள்
1312 கேவஸ்டன் கொலையுறல்
1314 பானக்பர்ன் போர்

1322 லங்காஸ்டர் பிரபு சிரச்சேதம் செய்யப் படல்
1327 இரண்டாம் எட்வர்டு பதவி நீக்கம் செய்யப் படுதல்

## மூன்றும் எட்வர்டு 1327-77

1328 நார்த்தம்ப்டன் உடன்படிக்கை
1328 — 50 பிரான்ஸ் மன்னர் ஆறும் பிலிப்
1330 மார்ட்டிமரின் வீழ்ச்சி
1333 ஹலிடான் குன்றுப் போர்
1338 நூறுண்டுப் போரின் தொடக்கம்
1340 சாசரின் பிறப்பு
1340 ஸ்லூயிஸ் போர்
1346 கிரேசி போர்
1348 — 9 கருங்கொள்ளை நோய்
1349 — 60 தொழிலாளர்களுக்கான நாட்டுச் சட்டங்கள்
1356 பாயிட்டியர்ஸ் போர்
1360 பிரெடிக்னி உடன்படிக்கை
1371 — 90 ஸ்காட்லாந்தில் இரண்டாம் இராபர்ட்டின் ஆட்சி.
1372 — 77 ஜான் காண்ட் அதிகாரம் வகித்தல்
1372 பிரான்ஸிலிருந்து கறுப்பு இளவரசர் திரும்புதல்
1376 நல்ல பாராளுமன்றம்

## இரண்டாம் ரிச்சர்டு. 1377-1399

1378 பாபிலோனிய சிறைவாசத்தின் முடிவு
1378 — 1415 திருச்சபையில் பெரும் பிளவு
1380 விக்லிஃப் பைபிலை மொழிபெயர்த்தல்
1381 குடியானவர் கலகம்
1382 ஆக்ஸ்போர்டிலிருந்து லோலார்டுகள் நீக்கப்படல்
1384 விக்லிஃப்பின் மரணம்
1387 மேல் வழக்காடும் பிரபுக்களின் ஆட்சி

| | |
|---|---|
| 1387 | கிளஸ்டரின் கலகம் |
| 1387 | ரேட்காட் பாலப் போர் |
| 1389 — 99 | இரண்டாம் ரிச்சர்டு மன்னரின் தன்னாட்சி |
| 1396 | பிரான்ஸுடன் சமாதான உடன்படிக்கை |
| 1397 | கிளஸ்டர் பிரபுவின் கொலை |
| 1398 | ஹெரிபோர்டு பிரபு நாடுகடத்தப்படல் |
| 1399 | ஜான் காண்ட் காலமாதல் |
| 1399 | லங்காஸ்டர் பிரபுவின் கலகம் |
| 1399 | இரண்டாம் ரிச்சர்டு பதவியிறக்கம் |
| 1400 | இரண்டாம் ரிச்சர்டின் கொலை |

# மரபுமுறை விளக்கப் பட்டியல்

## 1. நார்த்தம்பிரியாவின் ஆதிக்கம்




## 2. மெர்சியாவின் அரசர்கள்



## 3. வெஸ்ஸெக்ஸின் ஆதிக்கம்



## 4. டேனியரும் நார்மானியரும்

ரிச்சர்டு நார்மண்டி டியூக் (இற.996)

இரண்டாம் ரிச்சர்டு

மூன்றும் ரிச்சர்டு

முதலாம் ராபர்ட் (இற.1035)

வெற்றி வீரர் வில்லியம் 1066—87

இரண்டாம் = எம்மா எதெல்ரெட் (1) 978—1016 (இங்கி. அரசர்)

எட்வர்டு கன்பெசர் 1042—66 (இங்கி. அரசர்) = எடித்

ஹெரால்டு (நீலப்பல்லர்) டென்மார்க் அரசர்

ஸ்வெயின் ஃபோர்க்பியர்டு (இற. 1014)

(2) = கான்யூட் = எல்ஜிபு

ஹார்த்தா கான்யூட் 1040—42

ஹெரால்டு 1035—40

எஸ்டிரித் = உலப்

ஸ்வெயின்எஸ்டிரித்சன் (இற. 1074)

தோர் கிலஸ்

கித்தா = காட்வின்

ஸ்வெயின் கிர்த் டாஸ்டிக் லியோப்வென் ஹெரால்டு 1066

## 5. நார்மானியரும் ஆஞ்சுவினரும்

ராபர்ட் நார்மண்டி டியூக்
(இற. 1035)
|
வெற்றிவீரர் வில்லியம் (இற. 1087) = பிளாண்டர் மாடில்டா
|
ராபர்ட்
| வில்லியம் கிளிட்டோ

வில்லியம் ரூபஸ் (இற. 1100)

அடிலா = பிளாய் ஸ்டீபன்
| ஸ்டீபன் (இற. 1154)

முதலாம் ஹென்றி (இற. 1135) = எடித் (ஸ்காட்டிய அரசி மார்கரெட்டின் மகள்)
| மாடில்டா பேரரசி = ஆஞ்சு ஜியாபரே
| இரண்டாம் ஹென்றி (இற. 1189) = அக்குவிடெயினின் எலியனூர்

இரண்டாம் ஹென்றியின் மக்கள்:

ஹென்றி இளையவர் (இற. 1183)

மாடில்டா = சிங்க நெஞ்சர் ஹென்றி
| பேரரசர் நான்காம் ஆட்டோ

முதலாம் ரிச்சர்டு (இற. 1199)

ஜியாபரே = பிரிட்டானியின் ஜான் கான்ஸ்டன்ஸ் (இற. 1216)
| ஆர்தர்

ஜோன் = சிசிலி இரண்டாம் வில்லியம்

எலியனூர் = காஸ்டைல் அரசன் ஒன்பதாம் ஆல்பான்ஸோ

ஜான் கான்ஸ்டன்ஸின் மக்கள்:

மூன்றாம் ஹென்றி (இற. 1272)

கார்ன்வால் பிரபு ரிச்சர்டு

ஜோன் = ஸ்காட்டிய அரசர் இரண்டாம் அலெக்சாந்தர்

இஸபெல்லா = பேரரசர் இரண்டாம் ஃபிரடெரிக்

எலியனூர் = சைமன் டி மாண்ட்ஃபோர்ட்

## 6. பிளான்டாஜெனட்டுகள்

ஜான் 1199-1216 = அங்குலீம் இஸபெல்லா

மூன்றாம் ஹென்றி = புரோவென்ஸ் இளவரசி எலியனர்.

முதலாம் எட்வர்டு 1272—1307 = (1) காஸ்டில் எலியனர்
(2) ஃபிரான்ஸ் இளவரசி மார்கரெட்

கிரௌச்பாக் எட்மண்ட் லங்காஸ்டிரர் ஏர்ல்

ஜோன் = கில்பர்ட் கிளஸ்டர் பிரபு

கென்ட ஏர்ல் எட்மண்டு (இற. 1330)

இரண்டாம் எட்வர்டு = ஃபிரான்ஸ் இளவரசி இஸபெல்லா
1307 - 27

தாமஸ் லங்காஸ்டிரர் (இற. 1322)

ஹென்றி

கென்ட் ஜான்

மூன்றாம் எட்வர்டு = ஹைனால்டு பிலிப்பா
1327—77

ஹென்றி லங்காஸ்டிரர் முதல் டியூக்

கறுப்பு இளவரசர் = கென்ட் ஜோன்

லயனல் = எலிசபெத் கிளாரென்ஸ் டியூக்

தாமஸ் = போகன் கிளஸ்டர் (கூட்டு டியூக் வாரிசு)

எட்மண்ட் யார்க் டியூக்

காண்ட்ஜான் = பிளான்ச்சி

இரண்டாம் ரிச்சர்டு 1377—1399

நான்காம் ஹென்றி (கூட்டு வாரிசு)

# கலைச்சொற்கள்

## A

Abbey — மடாலயம்
Abbot — மடாலயத் தலைவர்
Accession — அரசெய்தல், பதவி ஏற்றல்
Administration — ஆட்சி, நிர்வாகம்
Aid — உதவிப் பணம்
Aliens — அந்நியர்
Alliance — உடன்படிக்கை
Anarchy — குழப்பம், அராஜகம்
Angevins — ஆஞ்சுவினர்
Angles — ஆங்கிலேயர், ஆங்கிலர்
Anglo Saxon Chronicle — ஆங்கில சாக்சானிய வரலாற்றுக் குறிப்புகள்
Anglo Saxons — ஆங்கில - சாக்சானியர்
Annates — முதலாண்டு வருவாய்
Appeal — முறையீடு
Archaeology — தொல்பொருள் ஆராய்ச்சி
Archbishop — ஆர்ச்பிஷப்
Army Act — படைச் சட்டம்
Assizes — சட்டங்கள் (அஸ்ஸைஸஸ்)
Attainder — அரசத் துரோகக் குற்றம்
Autocracy — வல்லாட்சி
Authority — அதிகாரம், ஆணை

## B

Balance of power — வல்லமைச் சமநிலை
Barbarians — காட்டுமிராண்டிகள்
Baron — பாரன் பிரபு, பிரபு
Beljae — பெல்ஜேக்கள்
Benevolence — கட்டாய நன்கொடை
Bible — பைபிள், வேதநூல், விவிலியம்
Bill — மசோதா
Bishop — பிஷப்

Black-death — கருங்கொள்ளைநோய்
Black Prince — கறுப்பு இளவரசர்; கருங்கவச இளவரசர்
Borough — பரோ
Bronze Age — வெண்கலக் காலம்
Bull — போப்பாண்டவர் ஆணை
Burgess — பர்கெஸ்; நகரவாசி

C

Calvinism — கால்வினியக் கோட்பாடு
Canon Law — திருச்சபை விதிகள்; திருச்சபைச் சட்டம்
Cardinal — போப்பாண்டவரின் பிரதிநிதி; கார்டினல்
Catholicism — கத்தோலிக்க சமயம்
Chancellor — சான்சலர்
Chapter — கோயிற் குருமார்
Charter — உரிமைப் பத்திரம்
Church — திருச்சபை
Civil Service — சிவில் அலுவலகத் துறை
Civil War — உள்நாட்டுப் போர்
Clergy — திருச்சபைக் குருமார்
Coalition — கூட்டு, கூட்டமான
Code — சட்டத் தொகுப்பு
Commendation — முறைப்படுத்திக்கொள்ளல்
Compurgators — நல்லொழுக்கச் சான்று புகர்வோர்
Commentary — விளக்கவுரை
Common Law — பொதுச் சட்டம்
Confirmation Cartarum — சாசன ஊர்ஜிதம்
Conqueror — வெற்றிவீரர்
Constitution — அரசியல் அமைப்பு
Convocation — திருச்சபைக் கூட்டம், மாநாடு
Court of Exchequer — நிதி வழக்கு மன்றம்
Court of Common Pleas — பொது வழக்குமன்றம்
Council — ஆலோசனை சபை
Council of North — வட கவுன்சில்
County — கவுன்டி
Crusade — சிலுவைப் போர்

## D

Danelaw — டேன்லா
Danes — டேனியர்
Dark Age — இருண்ட காலம்
Demesne Land — தனி உரிமை நிலம்
Despotism — கொடுங்கோலாட்சி
Doomsday Book — டூம்ஸ்டே புத்தகம்; டூம்ஸ்டே நூல்
Druids — ட்ருயிடுகள்
Duke — ட்யூக்; பிரபு; கோமகன்
Diplomacy — அரசியல் தந்திரம்
Divine Right — தெய்வீக உரிமை

## E

Earl — பிரபு; ஏர்ல்
Ecclesiastical History — திருச்சபை வரலாறு
Empire — பேரரசு
Emperor — பேரரசர்
Estuary — கழிமுகம்
Exchequer — கருவூலம்
Excommunication — மதப்பிரஷ்டம், சமய விலக்கம், சமய நீக்கம்
Exile — நாடு கடத்தல்; நாடு கடத்தப் பட்டவர்
Edict — ஆணை; கட்டளை
Escheat — அரசியலாருக்குச் சேரும் சொத்து
Estremists — தீவிரவாதிகள்
Executive — நிர்வாகத்துறை

## F

Felory — கொடுங்குற்றம்
Fealty — அன்பு; விசுவாசம்
Feudalism — நிலமானியத் திட்டம்; படைமானியத் திட்டம்
Folk land — பொது மக்கள் நிலம்
Franks — பிராங்கியர்
Friars — திரிதுறவியர்
Fyrd — பியர்டு என்னும் குடிமக்கள் படை

## G

Gauls — காலியர்
General Will — பொதுமக்கள் விருப்பம்
Good Parliament — நற் பாராளுமன்றம்
Goths — கோத்துகள்
Grammar Schools — இலக்கணப் பள்ளிக்கூடங்கள்; இலத்தின்-கிரேக்க மொழிப் பள்ளிக்கூடங்கள்
Great Council — பேரவை; ஆலோசனை சபை
Greeks — கிரேக்கர்

## H

Heptarchy — ஏழரசு
Hereditary Privilege — பரம்பரையாக வரும் சிறப்புரிமை
Heretic — சமய நிந்தனையாளர்; தெய்வ நிந்தனையாளர்
History — வரலாறு; சரித்திரம்
Holy Roman Empire — புனித ரோமானியப் பேரரசு
Homage — இறைவணக்கம்; விசுவாசத் தொண்டு
House of Commons — காமன்ஸ் சபை; சாமானியர் சபை
Hundred Court — நூற்றுவர் மன்றம்; ஹன்டிரடு மன்றம்
Hundred Years War — நூறாண்டுப் போர்
Huguenots — ஹியூகனேக்கள்
Huns — ஹூணர்கள்
Humanism — மானிட தத்துவம்

## I

Illegitimate — முறைபிசகான, முறையற்ற
Impeachment — துரோகக் குற்ற விசாரணை
Indulgence — பாபமன்னிப்பு
Inheritance — வழியுரிமையாகப் பெறுதல்; பரம்பரை உரிமையாகப் பெறுதல்
Invasion — படையெடுப்பு
Interdict — திருச்சபைச் சாபம்
Investiture Ceremony — பதவிச் சின்னமேற்புச் சடங்கு
Iron Age — இரும்புக் காலம்

## J

| | | |
|---|---|---|
| Jesuits | — | ஏசு சங்கத்தினர்; ஜெஸ்யூட்டுகள் |
| Jews | — | யூதர் |
| Jury | — | ஜூரி |
| Justices of the Peace | — | அமைதிக் காவலர் |
| Jutes | — | ஜூட்டுகள் |
| Jurisdiction | — | அதிகார வரம்பு |

## K

| | | |
|---|---|---|
| King | — | அரசன்; மன்னன்; வேந்தன் |
| Kingdom | — | அரசு |
| King's Council | — | அரச மன்றம் |
| King - maker | — | அரசராக்குவோன் |
| King's bench | — | அரச நீதி மன்றம் |
| Knight | — | நைட் வீரர்; நைட்டுகள் |

## L

| | | |
|---|---|---|
| Laity | — | லௌகிகர் |
| Lancastrians | — | லங்காஸ்டிரியர்கள் |
| Law and Order | — | சட்டமும் அமைதியும் |
| Local Government | — | தல ஆட்சிமுறை; தல அரசாங்கம் |
| Lord Protector | — | காப்பாளர் பிரபு; தலைமைக் காப்பாளர் |
| Lollards | — | லோல்லார்டுகள் |
| Lords Marches | — | எல்லைப் பிரபுக்கள் |
| Lords Spiritual | — | சமயப் பிரபுக்கள் |
| Lords Temporal | — | லௌகிகப் பிரபுக்கள் |
| Lord, Duke, Baron, Nobleman | — | பிரபு, டியூக், பாரன் பிரபு, பிரபு |

## M

| | | |
|---|---|---|
| Magna Carta | — | மாக சாசனம் |
| Manor | — | மேனர்ப் பண்ணை |
| Manorial System | — | மேனர்ப் பண்ணை முறை |
| Martial Law | — | இராணுவச் சட்டம் |
| Martyr | — | தியாகி, தியாகசீலர் |
| Mass | — | தொழுகை; பொதுத் தொழுகை; வழிபாடு |
| Mayor | — | மேயர்; மாநகரத் தலைவர் |

Merciless Parliament — கருணையற்ற பாராளுமன்றம்
Mercenary — கூலிப் பட்டாளம்
Monarchy — முடியாட்சி
Moderates — மிதவாதிகள்
Monastery — மடாலயம்
Monk — மடாலயத் துறவி; துறவி
Mortmain — மரித்த மான்யம்; மார்ட் மெயின்
Missionaries — சமயப் பிரசாரகர்கள்
Mystery plays — மர்ம நாடகங்கள்

N

Navigation Act — நாவாய்ச் சட்டம்
Nationalism — தேசியம்; தேசிய உணர்ச்சி
Normans — நார்மானியர்
Negotiation — உடன்படிக்கை ஏற்பாடுகள், பேச்சு வார்த்தைகள்
Nunnery — கன்னிமாடம்; கன்னியர் மடம்
Norsemen — நார்ஸ் மக்கள்; வடவர்

O

Oath — உறுதிமொழி
Oath of allegiance — விசுவாச உறுதி மொழி
Oath of Fealty — விசுவாச வாக்குறுதி
Office — அலுவலகம்; பதவி
Opposition — எதிர்ப்பு; எதிர்க்கட்சி
Openfield system — வேலியடைப்பில்லா வேளாண்மை முறை
Organisation — இயக்கம், அமைப்பு, சங்கம்
Ordinance — தலையாணை; அவசரச் சட்டம்
Outlaw — நாடுகடத்தப் பட்டவன்
Overlordship — ஆதிபத்தியம்

P

Popal Bull — போப்பாண்டவர் ஆணை
Parish — திருச்சபை வட்டம்: பாரிஷ் திருச்சபை
Parliament — பாராளுமன்றம், நாடாளு மன்றம்
Peace settlement — சமாதான உடன்படிக்கை

Peasants Revolt — குடியானவர் கலகம்
Peer — பிரபு
Picts — பிக்டுகள்
Pilgrimage — புனித யாத்திரை
Piracy — கடற்கொள்ளை; கப்பற் கொள்ளை
Policy — கொள்கை
Poll tax — தலை வரி
Pope — போப்பாண்டவர்
Poundage — பவுண்டேஜ் வரி
Prayer Book — வழிபாட்டு நூல்
Precedent — முன்நிகழ்வு; மேற்கோள்
Pre Historic Period — வரலாற்றுக்கு முற்பட்ட காலம்
Priests — பாதிரிகள்; குருமார்கள்
Primogeniture — மூத்த மகன் சொத்துரிமைச் சட்டம்
Proclamation — பேரறிக்கை
Protestant — பிராடஸ்டெண்டு
Provisions of Oxford — ஆக்ஸ்ஃபோர்டு ஏற்பாடுகள்
Praemunire — புரேமுனைர்
Provisors Act — புரோவிஸர்ஸ் சட்டம்
Puritan — ப்யூரிட்டன்; தூயவர்
Privilege — தனிச் சிறப்புரிமை
Prelate — தலைமைக் குரு

## Q

Quo warranto — க்வ ர் வர்ரன்ட்டோ — எத் தகுதிபற்றி

## R

Race — இனம்; மக்களினம்
Radicals — தீவிரவாதிகள்
Ransom — மீட்சிப் பணம்
Re-action — எதிர்விளைவு
Rebellion — கலகம்
Reformation — சமயச் சீர்திருத்தம்
Representative — பிரதிநிதி
Regent — காப்பாளர்; ரீஜன்ட்
Relics — சமய எச்சங்கள்

Renaissance — மறுமலர்ச்சி இயக்கம்
Revolution — புரட்சி
Resignation — பதவி விலகல்; பதவி நீக்கம்; ராஜிநாமா
Romans — ரோமனியர்
Rule of Law — சட்ட நீதி

S

Sanctuary — திருக்கோயில்
Saracens — சாரசனியர்
Saxons — சாக்சானியர்
Schism — சமயப் பிளவு
Scots — ஸ்காட்டியர்; ஸ்காட்டுகள்
Scutage — ஸ்கூட்டேஜ் வரி
Serf — அடிமை; தொண்டன்
Shire — ஷயர்
Sheriff — ஷெரீஃப்
Speaker — சபாநாயகர்; அவைத் தலைவர்
State — அரசு; இராச்சியம்
Statue — நாட்டுச் சட்டம்
Supremacy — ஆதிக்கம்

T

Tenants in Chief — பிரதம மானியதாரர்கள்
Teutons — டியூடானியர்கள்
Thegns — தேனர்கள்
Tolls — சுங்க வரிகள்
Tomb — கல்லறை, சமாதி
Tonnage — டன்னேஜ் வரி
Transubstantiation — பொருள் மாற்றக் கோட்பாடு
Tradition — மரபு; பரம்பரை வழக்கு
Treasury — கருவூலம்
Tudor — டியூடர்
Tyranny — கொடுங்கோலாட்சி

V

Vassal — அடிமை
Venerable — போற்றுதற்குரிய; வணக்கத்திற்குரிய
Veto — ரத்து அதிகாரம்
Villani — வில்லன்கள்

## W

| | | |
|---|---|---|
| Wapentakes | — | வேப்பன்டேக்குகள் |
| Wardship | — | பாதுகாப்புரிமை; பொறுப்புரிமை |
| Wars of Succession | — | வாரிசுரிமைப் போர்கள் |
| Wars of Roses | — | ரோஜாச் சின்னப் போர்கள் |
| Witan | — | விட்டான் சபை; அறிஞர்சபை |
| Writ | — | ஆணை; அழைப்பாணை |

## Y

| | | |
|---|---|---|
| Young Pretender | — | இளைய போலி |
| Yorkists | — | யார்க்கியர் |